வெற்றி!

தவத்திரு. சித்ரமுத்து அடிகள்

திருவாய் மலர்ந்து அருளிய



# "அருளொளி"



**இரண்டாம் பதிப்பு**

**1985**

முதற்பதிப்பு - 1954.

இரண்டாம்பதிப்பு - 1985.

தவத்திரு. சித்ரமுத்து அடிகள்-
திருவாய் மலர்ந்து அருளிய
**"அருளொளி"**

வெளியீடு:

ஆத்மசாந்தி நிலையம்,
பனைக்குளம் அஞ்சல்,
இராமநாதபுரம் மாவட்டம்.
தமிழ்நாடு - 623 522.

விலை ரூ. 25-00.

அச்சிட்டோர்:

அமுதம் அச்சகம்,
அவிநாசி - 638 654.
கோவை மாவட்டம்.

வெற்றி !

# நமது இலட்சியம்



ஆழிசூழ் உலக மெல்லாம் அமைதிமேவ
ஆகாத பகையொழிந்து அன்புண்டாக
ஆராத கவலை பிணி அகன்று போக
ஆக்கமொடு மக்கள் குலம் அழகாய் வாழ
ஆண்டவனை வேண்டுதல் செய்து அருளைநாடி
ஆனந்தத் தவநிலையை அணுகுவோமே!

* * *

# அருட்ஜோதி வணக்கம்.

ஜோதி ஜோதி ஜோதி ஜோதி
ஜோதியே ஜெக ஜோதியே
ஆதி ஆதி ஆதி ஆதி
ஆதியே அருள் ஆதியே!

நீதி நிழலில் அன்று மின்றும்
நின்றிலங்கும் ஜோதியே
நிமல வடிவில் உலக முழுதும்
நிறைந்த எங்கள் ஜோதியே!

விண்ணுலகமும் மண்ணுயிர்களும்
வேத விதியும் ஜோதியே
கண்ணுளாடும் மணியும் ஒளியும்
கருணை வடிவும் ஜோதியே!

அன்பு மயமும் அறிவிலுயர்வும்
ஆன்ம ஞானமும் ஜோதியே
அரிய தபசு புரிய நமதுள்
எரியும் ஜோதி ஜோதியே!

திரு பெருகிய அருளொளி மயத்
தீப ஜோதி ஜோதியே
கிருபை பெருகி குருவருள் பெற
வருக வருக ஜோதியே!

கணபதியொடு முருகனும்
கலைவாணியும் பரஞ்ஜோதியே
கதிர் மதியொடு உலகளாவிய
காரணப் பொருள் ஜோதியே! (ஜோதி)

வெற்றி !

# ஆத்மசாந்திநிலைய முகப்புத்தோற்றம்.




தில்லை அம்பலத் திருச்சபையில் மெய்ஞானச்
செல்வம் புதைந்து கிடக்கிறது — நல்லவர்கள்
உள்ளே புகுந்து உளமகிழக் கண்டெடுத்து
கள்ளமின்றி வாழக் கடவீர்.

—தவத்திரு. சித்ரமுத்து அடிகள்.

தவத்திரு. சித்ரமுத்து அடிகள் அவர்களின் சற்குருநாதர்



ஸ்ரீ ஜெகந்நாத முனிவர்

அருள்வடிவிற்கு அடிகள்



தவத்திரு. சித்ரமுத்து அடிகள்

வெற்றி!

# நான்முகம்

எமது மனமலர்களாகிய மக்களே!

நெடிய கடல் சூழ்ந்த இந்நில உலகின்கண் உருப் பொருளாகத்தோன்றிய யாவிலும் உட்பொருளாக இயங்கா நிற்கும் இயற்கையழகை அகக்கண் திறந்து காண முயற் சித்து அருந்தவ மியற்றிய காலேயில் நமது உள்ளத்திலிருந்து அவ்வப்போது உதயமாகிய மதிமொழிகளேச் சிறிதளவேனும் சிதறவிடாது சேகரித்து அறப்பண்புணர்ந்த அன்பர்கள் சுவடி வடிவிலாக்கி மக்கட்கு உதவியுள்ளனர். அத்தகைய குறுஞ் சுவடிகளில் பொதிந்து கிடக்கும் வரிவடிவங்களைக் கற்க முனைந்த அறிஞர் பலரில் ஆன்ம மெய்ஞ்ஞானம் சிலரிட மேனும் அணுகி ஆக்கமளிக்கும் என்பதில் ஐயம் கிடையா.

நாமருளிய பன்னூற்களையும் திரட்டி ஒரு நன்னூற் சுவடி யாக ஆக்கி ''அருளொளி'' என்ற மகுடம் புனைந்து வெளியீடு செய்துள்ளபடியால் இதனுள் அடங்கிய உண்மைகள் நமது அனுபவமென்பது சாட்சி. வாசித்து வன்மை பெற்றுய்ய நமது வாழ்த்து.

**சித்ரமுத்தன்**

வெற்றி!

# உள்ளுறை

# மதிப்புரை

தலைப்பட்ட சற்குருவின் சந்நிதியிலல்லால்
வலைப்பட்டமானதுவேயாம். [ஔவையார்]

அன்பர்களே !

மாண்டு பிறந்துழலும் மாப்பிணியை நீக்குதற்கு வேண்டும் பொருள் எமது ஞானத்தந்தை ஸ்ரீ சத். சித்ரமுத்தடிகளிடத்துண்டென்பதை அவரின் இவ் ''அருளொளி'' எனும் நூலே காட்டுகிறது.

அன்னார் ''நீ மறுபடியும் பிறக்காது போனல் பரலோக ராச்சியத்துக்காளாக மாட்டாய்'' என்ற ஜீவரெட்சகராம் ஏசு நாதரின் வாக்கியத்துக்கியையமாற்றிப் பிறந்த இருபிறப்பாளன் பார்ப்பாரில் பெரிய பார்ப்பான்-விட்ட குறைவந்து தொட்டு விதியின் எழுத்தைக் கிழித்த உத்தமன், ஐவேடர் ஆட்டத்தில் ஆனந்தம் கொண்டு, மெய்வேடரானவரை மறந்து, ஆணவம் கன்மம் மாயையெனும் மும்மலங்களுட் சிக்கி, அவைகளால் மூடுண்டு ஆன்ம விடுதலையடைய வழியறியாது கேவல நிலையிலிருக்கும் மக்களைத் தடுத்தாட்கொள்ள அங்கிங்கெனுதபடி யெங்கும் பிரகாசமாயுள்ள அப்பரம்பொருளே மானிடயாக்கைதாங்கி வந்தாரென்று இப்பெரியாரைக் கூறுதல் மிகையாகாது.

மக்கள் எவ்வுயிரையுந் தம்முயிர்போல் நேசித்து, சாதி குலம்பிறப்பெனும் வேற்றுமைகளற்று, ஒருதாய்ப் பிள்ளைகள் போலொற்றுமையாய் வாழ்ந்து, எள்ளுக்குள் எண்ணெய்போலெங்கும் நிறைந்த பொருளை தம்முள் தாமாக உணர வைக்கும் ஆற்றலுடையது இந்நூல். இதை நாம் சந்தேக விபரீத மறக் கற்று, தெரியாதவைகளை அப்பெரியாரிடங் கேட்டுத் தெளிந்து திருவருட் சக்தியாகிய அன்னை அருளொளி மாதாவைப் போற்றி, ஜீவன் முக்திக்குரிய வித்தகர்களாகத் துலங்குவோமாக! அன்பினுல் அகில மக்கள் யாபேரையும் அருளொளி மாதாவின் பிள்ளைகளாக்கிச் சகோதரபான்மையுடன் வாழ்வோமாக!

இங்ஙனம்,
மெய்யடியார்க் கடியவன்,
**ச. கார்த்திகேசு,**
கொழும்பு அருளொளி நிலையத் தலைவர்.

10—8—1954

வெற்றி !

# மதிப்புரை

மோனநிலை பெற்றுயரும் முத்திதனை ஈந்தருளும்
ஞானகுரு சித்ரமுத்தர் நல்கியதோர்—தேனூர்
'அருளொளி'யைக் கற்றோர் அருளொளி மாதா
திருவருளைச் சார்வர் தெளிந்து.

ஆன்மாக்களுக்கு சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி என்னும் மோனநிலையை நல்கி முக்தியை ஈந்தருளும் சக்தி வாய்ந்தது அருளொளி. சர்வ வல்லமையுள்ள எமது அருட்குரு சித்ரமுத்தர் நல்கிய தெவிட்டாத தேனமுதே அருளொளி.

அருளொளியை அகம் ஒன்றிக் கற்றவர்கள் மாயையிலிருந்து விலகி தத்துவஞானத்தில் தெளிந்து அருளொளி மாதாவின் அருளைப் பெற்றுய்வர்.

யோகம் தியானம் உரிய தவமுயற்சி
ஆகமங்கள் சொன்ன அறவுரைகள்—வாகாய்
தெருளொளியை நல்குரு சித்ரமுத்தர் ஈந்த
'அருளொளி'நூல் ஒன்றால் அறி.

ஞானச்சுடர், தத்துவத்தின் பெட்டகம், தவத்தின் திருவுருவம் சற்குரு சித்ரமுத்தர் அருளிய ஞானநூல் அருளொளி. தியானம், யோகம், தவமுயற்சிகளில் பல்காலும் தோய்ந்து, ஆகமங்கள் விதித்த ஆன்ம ஒழுக்கத்தை விடாது பின்பற்றி முக்தி பெறுவதற்குரிய தெளிவான வழிகாட்டும் திவ்யநூல் அருளொளி.

எல்லா உயிர்களும் ஆன்ம நேயத்தில் திளைக்க வேண்டி அருளப்பெற்ற அமுதமே அருளொளி நூல்.

அன்பன்,

**பெ. இராமையா,**
திருக்குறள் தசாவதானி,
கோவில்பட்டி.

வெற்றி!

# வாழ்க்கை விளக்கம்.

## முன்னுரை

உடல் பெற்றபயனை உள்ளமுணர்ந்தபின் உண்மையை நாட விழையு மென்பதற்கு இணங்க, அடியேன் இவ்வுடல் தாங்கி வளர்ந்து அனுபவித்த வரலாறுகளை மக்கள் அறிய விரும்பியபடியால், நமது இளமைப்பருவத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் இயம்பத் துணியலாயினோம். ஆதலால், உடல் பெற்றோர் பிழையற்றோரெனக் கூற முன்வர முடியாத வாறு பின்வரும் வரலாறுகளை வாசித்து, குற்றமகற்றி நமது நற்றவ வழியைப் பின்பற்றுவீர்களாக!

## வரலாறு

வையகம் புகழும் வைகை நதிதீரம் பெருக்கெடுத்து இரவி திசை யோடிக் கடலில் கலக்கின்ற பாண்டிய நாட்டில் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த மானுங்குடி யென்னும் கிராமத்தில், நாடார்குல வர்க்கத்தில் அவதரித்த தில்லை யென்பவருக்கும், வாத்தீயான் பேத்திக் கும் தவப்புதல்வர்களாக உதித்த அறுவரில் இளையாளாகிய கருப்பாயம் மாளென்ற எமது அன்னைக்கும், பனைக்குளமென்ற கிராமத்தில் மரிக் கோவிலென்னும் சிற்றூரில் வாழ்ந்து வந்த கருப்பண்ண நாடாரின் புதல்வர்கள் ஐவரில், தனுக்கோடி நாடாராகிய எமது தந்தைக்கும், வாழ்க்கை ஒப்பந்தம் நிறைவேறி அன்றுமுதல் எமது அன்னை பிதா கூடிக்கலந்து அனுபவித்த அன்பின் பெருக்காலமைந்த அடியேன், ஜெனித்தது முதல் வளர்ந்து அனுபவித்த, வாழ்க்கை விளக்கத்தைக் கூறத் துணிந்துள்ளோம்.

## மக்களை ஈன்ற மாதா மகிழ்வு

வித்திலிருந்து விருட்சம் வெளியாகிற தன்மை போன்று, எமது மாதாவிற்கு மணமாகி ஓராண்டு முடிவுருமுன்னம் நமது தமக்கையராகிய பெண்மகவொன்றையீன்று பெருமகிழ்வெய்தி, இராமாயம்மாளென்ற நற்பெயரிட்டு வளர்த்து வருகையில் வயது ஐந்தாகி ஓடி விளையாடிய காலத்தில், அடியேனுடைய உடலும் அன்னையின் உதிரத்திலிருந்து திரண்டு உருவாகிப் புவியிற்பிறந்து ஆசாபாசச் சுவாசத்தைப் பருகி வளரத் தொடங்கிற்று.

## ஆரம்ப அவதி.

பிள்ளையைக் காண பெரும் தபசிருந்த நமது அன்னையார் பிரசவ காலப் பரிகாரத்திற்கெனத் தமது தாய்வீடேகி பழி பாதகம் மிகுந்த கலிகால உலகில் எம்மை ஈன்ற மாதா கர்ப்ப வேதனைக்கு ஆட்பட்டு, சென்ற சார்வரி வருடம் சித்திரை மாதம் (1900ம் வருடம் ஏப்ரல் மாதம்) சிசுவடிவாகிய நாம் தலைகீழாகத் தரணியில் தோன்றிய தருணம், இவ்வுட லுருவை உடனே எடுத்து இடம் மாறிச் சென்றுவிடு என்பதற்கு ஒப்ப அடியேன் பிறந்த இல்லக் குடிசையை அக்கினி பகவான் பற்றி அதி விரைவில் சாம்பலாக்கத் துணிந்துவிட்டான்!

## பட்டப் பெயரிட்டழைத்தல்.

பிறப்பு இறப்பற்ற பெருமான் நெருப்பு மயமாக உளான் என இந்நில மக்கள் உணர வேண்டிய அன்றையக் காட்சியைக் கண்ட நமது மாதா, சிசுவாகிய எம்மை வெகு வேகமாகத் தூக்கி வெளியேறிச் சென்று பந்துக்கள் இல்லத்தில் சில நாள் தங்கி, தனது இல்லம் அமைந்த மரிக்கோவில் என்னும் ஊருக்குத் தானும் தனது தமையனுருமாக நம்மை எடுத்தேகும்போது, அவ்வூரிலுள்ள தோட்டிகளுடைய குடிசைகள் அனைத்தும் தீப்பற்றி எரியலானதோடு, தந்தை வளர்த்த வெள்ளாடு ஒன்றும் அன்று ஓநாய் கடித்து இறந்து போயிற்றும். இச்சம்பவங்களைக் கண்ட யாவரும் நம்மை ''சித்திரைச் சுழியன்'' எனக் கூவியழைக்க முற்பட்டார்கள்.

## தாயிட்டழைத்த திருநாமம்.

ஆண்மகவாகிய எமக்கு அழகிய நாமமிட்டு அழைக்கக் கருதியிருந்த அன்னையார் பட்டப் பெயரிட்டு அழைத்தலைச் சகிக்கொணுது தடுத்து, ஆபாசப் பெயர் எமதரும் புதல்வனுக்கு ஆகாதெனச் சொல்லி, சித்திரையில் ஈன்றமுத்தாகிய படியால், இன்று முதல் முத்தென அழையுங்கள் என கட்டளையிட்டு அன்றுதொட்டு அனைவரும் முத்தென்று அழைத்தனர். முடிவில் எமது குருபிரானின் திருவாக்கியப்படி சித்ரமுத்து எனப் பலரும் அறியப் பகர நேர்ந்துளது.

## அன்னையார் மறைவு

இம் மாயா உலகச் சுகபோகத்தை நீத்து, காயாபுரிக் கோட் டையை வேண்டாமெனவும் வெறுத்து, விண்ணுலகப் பேரின்பத்தைச் சேயாகிய எமக்கு அறிவித்துத் திருவிளையாடல் புரியக் கருதியோ, அல்லது அசத்திய உலகச் சுழலில் அகப்படாத வண்ணம் அழியாப் பதவி நிழலில் கலக்கக் கருதியோ, எட்டு மாதச் சேயாகிய எம்மை விட்டுக் கார்த்திகை மாதம் பூர்த்தியாகுமுன் அரிய தவம் புரிந்து ஈன்ற

நமது அன்னையார் பரிபூரண சைதன்ய வெளியுள் ஒளியாகிப் பூதவுடலை விட்டு அகன்று மறையலாயினர்.

## ஞானப் பாலுண்ணல்

தூய மனதுடைய தாயமுதம் உண்ணக் கிடையாத சேயாகிய யாம் படும்பாடு கண்டு ஆட்டுப் பாலூட்டி வளர்த்ததோடு, சில சமயங்களில் துள்ளித் துடித்து அழுமிடத்து அறுபது வயதிற்கு மேலான பாட்டியார் குமராயம்மாள், எம்மை ஏந்தி எடுத்து மடிமீது இருத்தி எமது தந்தைக்கு அமுதமளித்த தனபாரத்தை மழலை வடிவை உடைய அடியேனின் திரு வாயுள் தந்து தாலாட்டி வருகிற வழக்கமாதலால், சின்னாட்களில் அருளருவி மடை திறந்தவாறு பாலமுதம் மிதமிஞ்சிப் பொங்கி வழியத் தலைப்பட்டது.

## பாட்டி புகட்டிய உபதேசம்

எமது பசி தணியத்தக்க பாலமுதம் ஊட்டி வளர்க்கும் போதெல்லாம் பாட்டியார் பழைய உடைகளை எடுத்து எமது சிறிய இடையில் வரிந்து கட்டி, கைகளை உயர்த்தி விரல்களை விரித்து, வீரப் பார்வையாகப் பார்த்து 'சுந்தரக்கணபதியே நமோ நமோ' எனப்பாடி கால்தூக்கி ஆடும்படியாகவும் கற்பித்து வந்துள்ளார்கள். அன்று தொட்டு எமது உள்ளத்தில் வீர உணர்வொன்று பிரகாசித்து, விளையாட்டிலும்கூட பிள்ளைகளோடு கூடி வெற்றி காண்பதில் எமக்கு மிக மகிழ்ச்சியுண்டு.

## வீரத்தைக் காண்பித்தல்.

அறிவுமுதிராத அக்காலங்களில் அடியேனுக்கு வயது ஐந்து இருக் கலாம், அதுவரை எமது பாட்டிக்கு பாலூறல் நிற்றலோ, யாம் அமுதம் அருந்தாதிருத்தலோ கிடையா, அப்போது எமது வலது கெண்டைக் காலில் ஒரு சிறிய சிரங்கு இருக்கக்கண்டு முதியாள் தித்திப்புப் பதார்த் தங்களைத் தின்னலாகாதெனக் கடிந்துரைத்தனள். அவை செவியுற்றதும் வீராவேசங் கொண்டு எழுந்து, கருப்பட்டி கொடு இல்லையேல் இதோ பாரெனக்கூறி தென்னை ஈர்க்கை கையிலெடுத்துக் காலிலுள்ள சிரங்கில் ஓங்கிக்குத்தி இரத்தம் பீறிட்டு வடிய பாதி ஈர்க்கு சதையுள் முறிந்து இரண்டு மாத காலம்வரை வெகு துன்புற்று பின் குணமடையப் பெற்றேம்.

## அபூர்வ தரிசனம்.

சிறிய வயதிலிருந்தே அன்னை ஜெகன் மாதாவின் அருளொளி அடியேனுடன் உறவாடத் தொடர்ந்துள்ளபடியால், இரவு பகல் நேரங்

களில் நித்திரை செய்யக் கண்களைமூடினால் கலகலவென ஒரு மணியோசை கேட்க ஆரம்பிக்கும், அதன்பின் ஒளிவடிவு நம்மைச் சுற்றிச் சுழன்று அந்தர மார்க்கமாகத் தூக்கிச் செல்லும். அவைகண்டு, பதறி எழுந்து படுக்கையை விட்டகன்று விடுவதுமாகப் பல வருடகாலமிருந்து அக் காட்சியும் மறைந்துளது.

## மண் சீனியாகிய மகத்துவம்.

வஞ்சகமற்ற நெஞ்சமுடைய பால்ய வயதில் எமது பாட்டியார் பின் தொடர்ந்து, பனைக்குளம் கடைத் தெருவிற்குச் செல்லும்போது, தெரு வீதியில் ஒரு முஸ்லீம் சிறுமி (வயது பத்திருக்கலாம்) மண்ணை அள்ளித் தேங்காய்ச் சிரட்டையுள் இட்டு விளையாடிக் கொண்டிருக்கக் கண்டயாம் ஓடோடியும் சென்று, அச்சிறுமியிடம் சீனி கொடென்று கரம் நீட்டிக் கேட்டோம். அப்பெண் எமக்குத் தந்த மண் கரம் தங்கியபோது சீனி யாகியது கண்டு களிப்புற்று உண்டபின் பாட்டியாரைத் தொடர்ந்து செல்லலானோம்.

## சைதன்யக் காட்சி.

பந்தபாசத் திரைகள் வந்து எம்மை மூடிக்கொள்ளாத காலத்தே, கண்ட காட்சிகளில் ஒன்றைக் கூறத் துணிந்துளோம்.—நமது பாட்டியார் இல்லத்திலிருந்து உத்தர திசை திரும்பி அருகில் அமைந்துள்ள அங்களா தேவியம்மன் சந்நிதியை நோக்கும்போது, யாவும் பரவெளியாகி ஒன்றி லிருந்து ஒன்று ஊடுருவிப் பரஞ்ஜோதி மயமாகத் தோற்றமளித்தன. அவைகண்ட எமது கண்கள் இமையாமல் நின்று அமையாத ஆனந்தத் தைப் பருகலாயின.

## பால்ய சமாதி.

அவயவம் ஒடுங்க வகையறியாத காலந் தொட்டு அடியேன் சகச சமாதி வந்து பொருந்தி, உலகை மறந்து உடல் பூமியில் விழுந்து விடுவது வழக்கம். அதுகண்டு அனைவரும் துக்கத்தில் ஆழ்ந்து அழுது புலம்பிய சில நிமிடங்களில் எழுந்து விளையாடச் சென்று விடுவோம். ஓர் நாள் இரவில் யாவரும் அன்னம் அருந்திக் கொண்டிருக்கையில் கூழ் உணவு தானிருக்கிறது சாப்பிடலாம் வாவெனக் கூப்பிட்டார்கள். கூழ் வேண்டாமெனச் சொல்லியழும் பொழுது அழாதே இதோ! சாதம் இருக்கிறது எனக் கூறக் கேட்டதும், நெல்லுக் கஞ்சி கிட்ட இருக்கு, சவ்வாசு ஒப்புக்கொள்ளெனச் சொல்லி, சுமார் பதினாறடி வெளியைத் தாண்டி பாட்டியார் முதல் அனைவரும் அதிசயிக்கத்தக்கதாகப் போய் உட்கார்ந்துள்ளோம்.

## பாட்டியார் மறைவு.

அடியேனுக்கு வயது ஆறு நடக்கையில் அன்னை போன்று எம்மை வளர்த்த பாட்டியார் தமது பூத உடலை மண்ணுலகைவிட்டு அகற்றி ஆன்ம ஒருமையுள் கலந்து ஐக்யமாகினார். அது முதல் எமது தந்தை யாரின் இளைய சகோதரியாகிய சீனியாயி எனும் எமது அத்தையார், இவ்வூன உடலை வளர்த்து ஒப்பிப்பதாகக்கூறி ஓலைப்பாய் முடைந்துவிற்று எம்மைக் காப்பாற்றி வந்தார்கள்.

## பால்யத்தில் பாடலுதயம்.

பெற்ற தாயற்ற பிறகு எமது தந்தையார் நமதுமீது கவனமில்லாத படியால், வறுமையின் கொடுமையைச் சகிக்க முடியாமல் அத்தையார் வீட்டைவிட்டு தமக்கையார் இல்லத்திற்குச் செல்லலாகினோம். அங்கு சிலகாலம் தங்கி அவர்கள் இட்ட கட்டளைகளுக்கு இணங்கி ஆடுமாடுகள் மேய்த்து வரலானோம். அக்காலத்தில் ஒரு நாள் இந்து மகா சமுத்திரக் கரையோரமாயுள்ள சின்ன வலங்காபுரி என்னுந் தோப்பில், பனம்பழம் பொறுக்கி எடுத்து வரச்செல்லும்போது சூரியன் உதயத்தைக் கண்டு ஆனந்தம் மேலிட கூடையைத் தலையிற் கவிழ்த்தியவண்ணம், மெல்லிய நடையில் கள்ளமில்லாத நமது உள்ளத்திலிருந்து அன்றுதான் கீழ்வரும் பாடலொன்று உதயமானது.

> மண்ணூழிப் பாம்புதானே மறையவர்க் கெதிரேநின்று
> செய்ததோர் பாவதோசம் சிறப்புடன் சொல்லிநிற்க
> அப்போது சித்தரெல்லாம் அருமையாய் எடுத்துரைத்தார்
> பாய்வது பல்லிதானே படுக்கையிற் பாம்புதானே
> கூறுவ தேதிப்போது குழந்தைநீ தெய்வந்தானே.

மேற்கூறிய பாடல் அன்றுமுதல் அனவரதமும் நமது இதயத்தில் உதய மாகிய வண்ணம் இருந்து வந்தது.

## இளமையில் வறுமை.

அடியேனுக்கு வயது ஏழிருக்கலாம், எமது சகோதரியாரின் இல்ல மும் மிக ஏழ்மையாகிய படியால் அவ்வப்போது அன்னபானாதிகள் கிடைக்காது பன்முறை பசிநோயால் வாடித் துன்புறுவதுண்டு. ஒருநாள் நமது தமக்கையின் புருடனாகிய அத்தான் பதனீர் இறக்கி வந்து சாப் பிடும்போது அருகிற் சென்று அவர்களின் கரத்தைப் பிடித்திழுத்துத் தனக்கும் சிறிதளவு பதனீர் தருமாறு கோரித்துன்புறுத்தினோம். உடனே சினம் மேலிட்டு எச்சிற்பட்டையை மாறித் தலைமீதடித்து ஓடிப்போவென ஏசி, வெளியே விரட்டிவிட்டனர். இந்தத் துன்புறுத்தல் சகிக்க முடியாமல்

அழுது அங்கிருந்து ஐந்து மைல் தூரத்திலுள்ள தில்லங்குண்டு என்கிற ஊரிற்குச் சென்றோம்.

## கிடுகு முடைந்து ஜீவித்தல்.

'உழைக்கப் பசி குளித்துப் புசி' என்பதற்கிணங்க மேற்கூறிய தில்லங்குண்டிற்கு அருகாமையிலுள்ள பொன்னுச்சாமி தோப்பில் தென்னங் கிடுகுகள் முடைந்து சில காலம் வயிறு வளர்த்து வருகையில், தந்தை மலேசியா தேசத்திற்கு ஏக உத்தேசித்து நம்மை வந்து அழைத்தேகிச் சித்தார் கோட்டைக்கு அடுத்த முடிவீரன் பட்டினத்தில், திண்ணைப் பள்ளிக் கூடத்தில் மண்ணைக் குவித்து எழுதிக் கற்பிக்கின்ற உபாத்தியாயரிடம் எமக்குக் கல்விபோதிக்குமாறு ஏற்பாடு செய்து சென்று விட்டார்கள்.

## சிற்றன்னையின் கொடுமை.

எமது பிதா பிறதேசம் செல்லும்போது எம் சிற்றன்னையாருக்கு முத்துநாச்சி என்ற ஒரு பெண் மகவு இருந்ததால், நம்மை மாற்றுந் தாய் பிள்ளையெனக் கருதி பராமுகமாய்ப் பள்ளிக்கூடமும் செல்ல முடியாதபடி பல இன்னல்கள் விளைத்தனர்.

## கல்வியின் முடிவு.

உழல் நிலை உலக வாழ்வினை ஏற்கப் போதிய கலைகளை ஓதிக் கற்க முடியாமல் எண்சுவடி படிப்போடு நிறுத்தி, அத்தியூத்து என்னும் ஊரில் உள்ள கள்ளுக்கடைக்கு எம்மை மதுபானக் குடம் சுமக்கும்படியாக ஏற்படுத்தினார்கள். உடலில் திடனற்ற சிறியேன் சில சமயங்களில் சுமை தாங்க முடியாமல் கள்ளுக் குடத்தை கீழே போட்டு உடைத்து விடுவதும் உண்டு. அதனால் அவர்களிடம் தாங்கொணாத உதைகள் பட்டு சஞ்சலப் படுவதுமுண்டு. இவையறிந்து அவ்வூரிலுள்ள ஆண் பெண் அனைவரும் தாயில்லாப் பிள்ளையாகிய யான் படும்பாடு மிகப் பரிதாபமெனப் பேசிக் கொள்வார்கள்.

## அன்னம் திருடி உண்ணல்.

எள்ளளவேனும் ஈகை இரக்கமில்லாத எமது சிற்றன்னையார் பசி தீர உணவு அளியாமலும், பாம்பு கடிப்பாய், பதறி விழுவாய் எனத் திட்டியும் அடித்தும் பல இடையூறுகள் செய்து வந்துள்ளபடியால், சில சமயங்களில் பசி நோயின் கொடுமையை அடக்க முடியாமல் வீட்டில் ஒருவரும் இல்லாத தருணம் பார்த்து, கூரை மீதேறிக் குதித்து சாதத்தைத் திருடி உண்டு வெளியே யாரும் அறியாவண்ணம் இருந்து விடுவதும் உண்டு.

## சர்ப்பஞ் சிரசிலேறுதல்.

தனம் தேடி தனது இல்லத்தை நடாத்தக் கருதிப் பிறதேசம் சென்ற தந்தையார், தாய்நாடு திரும்பச் சில வருடங்களாகின. அப்போது எமக்கு பால்யங்கடந்து பருவ வயது பனிரெண்டிருக்கலாம். சிற்றன்னை யாரின் உத்திரவிற்கிணங்க பனை மரமேறிப் பழகிப் பதனீர் இறக்கும் தருவாயில், மேலிருந்து கீழே தவறி விழுந்து வலது முழங்கால் முறிந்து ஒரு வருட காலமாகத் துன்புற்று, முடிவில் நமது அத்தையார் தூக்கி வந்து குணப்படுத்தி மீண்டும் தமக்கையார் இல்லத்திற்கே அனுப்பி வைத்தார்கள். அவ்விடத்திலிருந்து ஆடுமாடுகள் மேய்த்துக்கொண்டிருக் கையில் எமக்கு வயிற்று நோய் உண்டாகி, நாகநாத தலத்திற்கு நேர்த்திக் கடன் வைத்து சிரசில் முடி சடையோடு இருந்த சமயம், சதா காலமும் ஒரு ஜோதிடருக்கு சமையல் செய்ய விறகும், சாப்பிடுவதற்கு ஏற்ற பனை ஓலையுங் கொண்டு வந்து கொடுத்து சிறிதளவு அன்னம் வாங்கி உண்பது வழக்கம். ஒரு நாள் தமக்கையாருக்குத் தெரியாமல் இல்லத்திலுள்ள கொல்லைப் புறத் திண்ணை வழியாகச் சென்று ஓலையை எடுத்து ஒருவரும் அறியாமற் கொண்டு சென்றோம். அத்தருணம் அடி யேனின் சிரசில் ஒரு சர்ப்பமானது படம் விரித்தாடியவண்ணம் இருந்து இருக்கிறது. யாருமறியாமல் தமக்கையாருக்கு அஞ்சி ஓலையை எடுத் தேகும்போது, நிகழ்கால நிலையிலிருந்து நமது எதிர்கால இன்பத்தைக் குறிப்பிட்டு நின்றுடிய சர்ப்பத்தைக் கண்ட எம் தமக்கையார் கூக்குர லிட்டார். அது கண்ட நாகமும் நழுவிக் கீழே விழுந்து ஓடிவிட்டது.

## வாலிப சேட்டை.

ஆடுமாடுகள் மேய்ப்பினும் அன்ன பானுதிகள், போதிய அளவு கிடையாதிருப்பினும், வாலிப காலத்தில் (வயது பதினறிருக்கலாம்) அடி யேன் புரிந்த அபசாரங்கள் அனந்தம். அவை கண்ட பந்துக்கள் பலரும் இகழ்வதை உணர்ந்து, எமது தாய் மாமனர் மகள் ஆராயம்மாள் என்ற பெண்ணை மணம்புரியலாமெனக் கருதி உசாவியபோது, ஏழையடியேனு டைய வறுமைத்தனத்தை உரைத்து உமக்கு பெண் தரமாட்டோம் எனக் கூறி மறுத்துவிட்டார்கள்.

## அந்நிய தேசத்திற்கேகுதல்

யாவும் இறையருள்தான் என உணரும் ஆற்றலின்றி மனமாறுதல் அடைந்து, இரண்டுவருடகாலமாக மரிக்கோவில் என்னும் சிற்றூரில் மரமேறி வாழ்க்கைநடத்திவருகையில் மேற்கூறிய எமது அத்தான் 1922ம் ஆண்டில் மலேசியா நாட்டிற்கு அழைத்து ஏகினர். அங்குள்ள கோலக்கங்சார் என்ற நகரில் தொழில்செய்து மமதை உருவாகிய உட

லானது உலகில் உலவி முடிவில் மடியுமெனக்கண்டு ஆராய முடியாத படியால், பங்கம் அடைகின்ற அங்கங்களில் தங்க நகைகளை அழகுற அணிந்து ஆடம்பர வாழ்வை மேற்கொண்டு வீண்காலம்கடத்தி, தாய் நாட்டிற்கு 1928ம் ஆண்டில் பத்துருபாய்நோட்டு ஒன்றுடன் திரும்பி தமக்கையார் இல்லத்திற்கு வந்துசேர்ந்தோம்.

## மாயப் பாசாங்கு.

இல்லற விவகாரக் கயிற்றை கழுத்தில் சுருக்கிட்டு மாட்டிக் கொள்ளக் கருதிய கடைமதியுடைய அடியேன், சிலகாலம் கடந்து அழகன்குளம் கிராமத்தில் அத்தையும் தானுமாக வந்து குடியேறி, இவ்வூன உடலை வெகு ஒய்யாரமாகச் சிங்காரித்து ஆடை ஆபரணங்களையும் அணிந்து மெத்தை பாய் விரித்து பட்டுத் தலையணையிட்டுப் படுத்துப் பாசாங்கு செய்யத் தொடங்கி, வில்லாபுரத்து மரகதம் பிள்ளையின் சரித்திர வரலாறுகளைத் தெம்மாங்கு இசையில் பாடுகிறதைப் பார்த்த ஒரு சிலர், ஆறு வருட காலமாக அந்நிய தேசத்திலிருந்து வந்துள்ளபடியால் பையனிடம் பணம் மிகுதி இருக்கலாமெனக் கருதி, பெண் கொடுக்கலாம் என முன் வந்தார்கள். ஏமாளித்தனமாகிய பெண்கள் இருப்பார்களென எண்ணிக் கோமாளி வேடம் புனைந்த எமது வாழ்க்கை ஒப்பந்தக் கண்ணிக்குள் அகப்படச் சில கல்வியறிவில்லாத பெண்கள் காத்திருந்தனர்.

## திருமண ஒப்பந்தம்.

கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்குத்தான் என்பதற்கு இணங்க எமது ஏமாற்று வித்தைகளெல்லாம் மூன்று மாதத்திற்குள் முழுவதும் வெளியாகி விட்டபடியால், எதிர்பார்த்திருந்த பெண் வீட்டார்களெல்லாம் எமது பெண்ணை உமக்கு மாங்கல்ய தாரணம் செய்து தரமாட்டோம் என மறுத்துவிட்டார்கள். நாம் மனந்தளர்ந்து மாயா உலகையே சிந்தித் திருக்கையில், அவ்வூர் காளையப்ப நாடார் தம் புதல்விகள் நால்வரில் இளையாளாகிய ''சிவகாமி அம்மை'' என்னும் பெண்ணை எமக்கு மணம் புரிந்து தர இசைந்து, 1929-ம் ஆண்டு சுக்கில வருடம் ஆவணி மாதம் 29உ ஞாயிற்றுக்கிழமை பகல் நாழிகை 25க்குமேல், சந்தன தாம்பூலம் வழங்கி சிக்கனமாகிய செலவில் அடியேனுக்குத் திருமணமும் நிறை வேறியது.

## துரோகச் செய்கை.

இல்லற வாழ்வென்னும் தொல்லையை வருக வருக என வரவேற்ற அடியேனை இடைவிடாத கவலைகள் வந்து சூழ்ந்துகொண்டன. ஆகவே

ஊதியம் கருதி அமர்ந்த மதுபானக் கடையில் பங்காளிகள் அறியாமலே சிறிது சில்லறைகளைத் திருடி மாமிசம் முதலிய அறுசுவைப் பதார்த்தங் களோடு உண்ணச் செலவிடுவதும் கண்மூடித்தனமாக கஞ்சா லேகியங் களை உட்கொள்வதும், மதுபானங்களைக் குடிப்பதும், மனையாளை அடிப் பதும், சட்டி பானைகளைத் தூக்கி எறிந்து உடைப்பதுமாகிய அட்டூழியச் செயல்களைச் செய்தோம்.

## அளவிடாக் கவலை.

சென்ற பிரமோதூத வருடம் வைகாசி மாதம் நமது இல்லக் கிழத் தியார் கருப்பவேதனையுற்றுப் பல பரிகாரங்கள் செய்தும் பயனில்லாமல், இராமநாதபுரம் அரசினர் மருத்துவ நிலயத்திற்கு அழைத்தேகி, மருத் துவப் பெண்களின் பெருந்துணையினால் எத்தகைய இன்னலுமின்றி ஆண் குழந்தை பிறந்து மூன்று நாளிருந்து இறந்து போயிற்று. அது தருணம் அடியேனுடைய கையில் ஒரு காசுமின்றி, அவ்விடத்தில் கடன் கொடுப் பவர்களுமின்றி அழகன்குளம் வந்து அய்யாவு செட்டியார் என்ற பெரிய வரிடம் எமது வறுமை நிலையைக் கூறி, ரூ. 100—00 வட்டிக்குக் கடன் வாங்கி இல்லாளை அழைத்து வந்து அவர்கள் தாய் வீட்டில் விட்டு மீண்டும் மலேசியா தேசம் சென்றோம்.

## சாஸ்திர ஆராய்ச்சி.

வளங்குன்றிய வாழ்க்கைக் கடலில் அகப்படகு ஓட்டமுடியாதபடியால் அடியேன் தைப்பிங் நகரில் ஸ்ரீபன் ரோட்டில் 22ம் எண்ணுள்ள இல்லத் தில் தங்கி, மதுபான மரமேறி கஷ்டஜீவனம்செய்து காலங்கழித்து வரு கையில், அங்கு வசித்து வந்த தென்காசி ரங்கூன் சடகோபால் ஆச் சாரியாரின் பிரதம சீடரும், சிங்கப்பூரில் பலவருடங்களாக தமிழ்ப் பாட்சாலையில் போதகாசிரியருமாக இருந்துவந்தவருமான இருசப்ப முதலியார் என்ற பெரியாரிடம், நட்சத்திரகாண்டம் முதல் சாமுத்திரிகா லட்சணங்கள் அடங்கிய சில நன்னூற்களையும் நன்கு கற்று, ஜோதிடம் என்னும் உட்பொருளாகிய ஆத்மீக சக்தியை முத்தி முடிவெனவும் உணரப் பெற்றோம்.

## சற்குரு தீட்சை.

தெய்வீக ஒளியுள் ஒளியாகி உலவி, முக்காலமும் உணர்ந்த பெரியார் ஸ்ரீ ஜெகந்நாத சுவாமிகளை குருவாகக் கொண்டு, அன்னவர்களுக்கு அடியேனுடைய அன்புமலரைச்சதா காணிக்கையாகச் சமர்ப்பித்து, ஆத் மீக சக்திக்குரிய அந்தரார்த்தங்களை வினவி உணர்ந்து திருவருட் தீட்சை

யுந் தரப்பெற்று, சாதன விசேஷ இரகசியங்களையும் நடைமுறையில் அனுஷ்டித்து வருகையில், அடியேனுடைய உடலுக்கு இடையூறுகள் வரவிருப்பதை யாம் கற்ற ஜோதிடம்மூலம் உணர்ந்து, உடனடியாகக்கட மையை விட்டு விலகிக் கப்பலேறித் தாய்நாடு திரும்பி எதிர்கால இன்னல் களை யாவருக்கும் எடுத்தியம்பி இறையருள் அளிக்கும் இன்ப துன்பங் களையும் ஏற்கச் சித்தத் திடங்கொண்டு, இனிது உலக வாழ்க்கையில் ஈடு பட்டோம்.

## புத்திர உற்பத்தி.

இறைதரும் இன்பம் இல்லற வாழ்வெனக் கண்டு பரனடி தொழும் அடியார்களுக்கு அடியேனாகிய எம் வாழ்க்கைப் படலத்தின் முடிவை முன் னிட்டு, இயற்கை வடிவொரு குழவியெனத் திரண்டு உருவாகி நமது மனையாளின் கருப்பத்திலிருந்து தோன்றியது கண்கள் களிகூர்ந்தெடுத்து மடிமீது இருத்தி முத்திட்டு, சிற்றின்பம் விட்டுப் பேரின்பந் தொட்டு இணை சேர்ந்து வாழ மனைபெரியதாக்கி வாழ்ந்து வந்தோம்.

## ஒளி இழந்த கண்கள்.

பலகால் அரிய தவம் புரிந்து பரம்பொருள் அடியினை அணுகிய பெரி யார்கள் அடைந்த உடலிடையூறுகளிற் சில ஏழை அடியேனையும் தொ டர்ந்து, உழல் நிலையுள் தள்ள ஆரம்பித்து உல்லாசமாக நடமாடி வந்த இப்பூத ஜடம் திடீரெனக் கொடிய நோய்வாய்க்கு அகப்பட்டு, கரியவிழி கள் இரண்டிலும் ஒளி காண முடியாதபடி தடவித் தடி ஊன்றித் தள்ளாடி நடக்கவுமாகி, வஞ்சகமற்றிருந்து வந்த வாழ்க்கைத் துணைவியும் கொஞ்சி வளர்த்தமைந்தனும், மற்றுமுள்ள உறவினர்களும் பகைவர்களாகி, அன்ன பானாதிகள்கூடக் கொடுக்க மறுத்து எம்மை அனைவரும் கைவிட்டனர்.

## தற்கொலை செய்துகொள்ள முடிவு.

அவனியில் அடாது புரிந்து கொடிய விளையாடலில் ஆடிய இவ்வுடலா னது ஆரோக்கிய வாழ்வையும் இழந்து, பலர் பரிகசிக்கத்தக்கதாக அடி யேன் இடையில் அணியப் போதிய உடை கிடையாமல் பரதவித்து, பாழான பசிநோயினுக்கு அடிமையாகி கூழுணவுகூடக் கிடைக்காமல் கொட்டாவி விட்டு ஏங்கி, உயிர்வாழ்வதைக் காட்டிலும் மடிவதே மேல் என மனந்துணிந்து கதறியழுது கண்ணீர் சொரிந்து, திண்ணையின்மீது சாய்ந்து நெடுநேரமாகச் சோகமுற்று நடுநிசிவரை தூக்கம் பிடிக்காமற் படுத்திருந்தோம்.

### கனவில் முனிவர் கொடுத்த கனி.

உத்தமமான வாழ்வும், உறுதுணையாகிய உறவினர்களும் கிடைக்கப் பெருத இவ்வூன உடலை மடியச் செய்வதே சீரென உத்தேசித்து, உறுதி பூண்டுள்ள ஏழை அடியேனின் அகவிழி ஒளியின் வழியாக ஒரு பெரியார் சடைமுடிகளோடு தோன்றி எமது அருகாமையில் வந்து நின்று புன்னகை புரிந்து, கரத்தைப் பிடித்து இழுத்து ஒரு எலுமிச்சங் கனியைந் தந்து வட திசையை நாடிச் செல்லக் கண்டோம். திடீரென்று எழுந்து உட்கார்ந்து யாம் கண்ட காட்சி கனவோ நனவோ என சிந்திக்கையில் மாயக்கனியும் மறைந்தது. அடியேனுடைய மரண முடிவும் கலைவுற்றது.

### வெறுமை மிகுந்து வெளியேறல்.

அடியேனை உடல் நோயோடு கொடிய மன நோயும் கூடித்துன்புறுத் தியபடியால், எங்கேனும் ஓடிப் பிச்சையெடுத்துத் திரிந்து மடிதல் நலமெ னினும் கண்தெரியாத பாவியாக இருக்கின்றேமெனத் துக்கித்து, இராம நாதபுரம் ஆஸ்பத்திரிக்குச் சென்று சிறிது நாளிருந்து வெளியேறிவிடலா மென உத்தேசித்து, எமது உறவினர்களில் ஒருவராகிய உலகாயம்மாளி டம் ரூபாய் இரண்டு கடன் தருமாறு மன்ருடி நின்று பெற்றுக் கொண்டு, கபோதியாகிய நாம் நடையாக நடந்து உள் ஒளி நிதானமாக வாலாந் தரவை ஸ்டேஷனுக்குச் சென்று ஆங்கமர்ந்துஇருக்கையில், யாரோ ஒரு நண்பர் எம்மைக் கண்டு பரிதாபமாக உரையாடி எம்மிடமிருந்த ரூபாய் இரண்டில் ஒன்றை வாங்கி இராமநாதபுரம் செல்ல டிக்கெட்டும் காப்பி யும் வாங்கிக் கொடுத்து, மீதிச் சில்லறையை நாம் இடையில் அணிந் திருந்த உடையில் ஒரு மூலையில் முடிந்து சுகமாகிப்போம் மகிழ்வுடன் போய் வாருமெனக் கூறிச் சென்றுவிட்டார்.

### திருட்டுப் பட்டம்.

நித்தியானந்த பதவியை நாடிய எவர்க்கும் இத்தகைய பரிசோதனை கள் சூழ்ந்து தலையீடு செய்து போராடி வருவது இயல்புதான் என மனந் தேர்ந்து, உள்ளுறுதியை மட்டிலும் தளராதபடி வைத்து இனி வருவதை யும் கண்டு ஆராய்வோமென சிந்தித்திருக்கையில், சென்னைப்பட்டினம் செல்லக்கூடிய எக்ஸ்பிரஸ் தனுஷ்கோடியிலிருந்து இரவு மணி எட்ட ரைக்கு வாலாந்தரவை ஸ்டேஷனில் வந்து நின்றது. நிதானமாக வண் டியிலேறி இராமநாதபுரத்தில் இறங்கி பிளாட்பாரத்தை விட்டு அன்று இரவு நேரத்தை ஸ்டேஷனில் கழித்துச் செல்லலாமெனக் கருதி, கீழே தலை சாய்ந்து படுப்பதற்காக நினைந்து அருகினில் ஆட்களுளார்களோ என எமது கரங்களால் தடவிப்பார்க்கையில், ஆங்கு ஆபரணங்களை அணிந்து படித்திருந்த ஒரு பெண்பால் மீது பாவியாகிய எமது கைகள்

பட்டுவிட்டன. உடனே அவ்வம்மையார் எமது கரத்தைப் பிடித்துக் கொண்டு திருடன் திருடனெனக் கூவி சப்தமிட்டனர்.

## கிராம முன்சீப் ஆதரவு.

எம வாதனைகளோடு கூடிய உடல் இடையூறுகளைச் சகிக்க இயலாது, துன்பப்படுகிற இச்சிறு ஜீவனை இறையின் திருவிளையாடல்களில் ஒரு விளையாடலாகிய சோதனைகளும் சூழ்ந்து கொண்டு, எம்மைத் திருடன் எனக் கூவிச் சப்தமிடும் பொழுது எம்மிடமுள்ள அற்பத் திடமும், அறிவும் உறுதியும் கூடப் பறந்தோடி கை கால்களெல்லாம் பதறி யாதும் புகல முடியாமல் உணர்வற்று நிற்கும்போது ''அவனை அடியாமல் இங்கு கொண்டுவாருங்கள்'' என ஒரு சப்தம் பிறந்தது. ஏழையாகிய எம்மை அவரிடம் கொண்டுபோய் ஒப்படைத்தனர். அவர்தான் அவ்வூர் கிராம முன்சீப் சுப்பையாபிள்ளை எனத் தெரியவந்தது. அன்னவர் நமது கரத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு ஆதியோடு அந்தமாக எமது வரலாறுகளையெல்லாம் கேட்டு, இதயம்இளகி இவன் யதார்த்தவாதி திருடனில்லையென ஆங்குள்ளோர்க்கு உரைத்து, அன்புடன் எம்மைத் தமது இல்லத்திற்கு அழைத்தேகினர்.

## இரந்து உண்ணல்.

இளமையில் வறுமையும் நோயும் பீடித்த எளியேனை, மேற்கூறிய பெரியார் தமது இல்லத்தின் அருகே தெருவாயிலில் உட்கார்ந்திரு எனக் கூறி உட்சென்றுவிட்டார். அது தருணம் பசியாகிய பாதகன் வரவைத் தாங்கொணது வறுமையெனும் கொடியோன் கையில் அகப்பட்ட பித்தனாகிய யாம், அவ்வீட்டின் அருகாமையிலுள்ள பாதையின் வழியேசெல்லும் மக்களைக் கூவியழைத்து, எமது தாய்மார்களே! தந்தைமார்களே! கண்கெட்டுக் கொடிய பிறவிக்கு ஆளாகிய கடைகெட்ட இந்த ஏழைக்குக் கொஞ்சம் உணவு தந்து ஆதரியுங்கள் எனக் கண்ணீர் சொரிந்த வண்ணம் நெடுநேரமாகப் புலம்பிக் கொண்டிருக்கையில், அம்மையார் ஒருவர் மண் பாத்திரத்தில் சிறிதளவு சாதத்தைத் தந்து, உண்டு முடிந்ததும் படுத்துக் கொள்வதற்கு எங்கேனும் சென்றுவிட வேண்டும் என வெகு கடுமையாக எச்சரித்துச் சென்றார்கள்.

## இடையூறின்மேல் இடையூறு.

அரன் அருளற்ற ஜென்மங்களை நரக வேதனைக்கு ஆளாக்குவது உண்மைதான் என உணரும் பொருட்டு, எம்மை அவ்வம்மையார் நீ இவ்விடத்தில் இரவு நேரம் தங்கலாகாது எனக் கடிந்து விரட்டவும், கண் தெரியாத பாவியாகிய நான் எங்கு செல்வேனெனச் சொல்லி அழுதும்

கேளாதபடியால், இனி யாது செய்யலாமென எண்ணி ஏங்கி வருவன யாவையும் வரவேற்கலாம் எனக் கருதி இருந்தாலும், சாதனை முதிர்ச்சியில் போதிய பக்குவம் அடையாத மனதைக் கட்டுப் படுத்தவும் வகை தெரி யாதபடியால், திக்குத் திசை தெரியாமல் திகைத்து தட்டுத் தடுமாறி நடந்து செல்கையில், யாரோ ஒருவர் எமது கையைப் பிடித்து அழைத் தேகி இது இறைச்சி வியாபாரம் செய்யக்கூடிய இடமாகையால் இங்கு நீ படுத்திருக்கலாம் எனக் கூறி சென்று விட்டார்.

## உணிகளின் உபத்திரவம்.

விழிகள் நன்கிருந்தும் ஒளிமங்கிய கண்கள் உறங்கி விழிக்க விரும்பிய தற்கிசைந்து, அழுக்குபடிந்த துணியைத் தரையில் விரித்துப் படுத்துப் புரண்டு எழுந்திருக்கலாமென எண்ணி உடல் சாய்ந்தபோது, மண்ணில் இருந்து உற்பத்தியாகிற உணிகள் திரண்டு பொய்யாயெடுத்த இப்பூத சடலத்தை மொய்க்க ஆரம்பித்தன. அதுசமயம் எழுந்து வேறிடமும் ஏக முடியாதபடி அடிவயிறு வீங்கி வலி மிகுதியாகி அன்றிரவு முழுவதும் அடியேனுடைய உயிர் எம வாதனைக்குட்பட்டு, மீண்டும் திரும்பி ஊன உடலோடு உறவாட ஆரம்பித்தன.

## பேருபகாரரின் ஆதரவு.

திக்கற்ற எமக்கு ஒரு திடம் சொல்லத்தக்கவர்கள் யாருமில்லாதிருக் கையில், மேற்கூறிய பேருபகாரப் புனிதவானாகிய கிராம முன்சீப் எம்மை அழைத்து வரச்சொல்லி, ஒரு பெரியாரிடம் ஒப்புவித்து சில நாட்களில் எமது இமையை சுத்தம் செய்து விடும்படியாகக் கட்டளையிட்டு அனுப்பி வைத்தார். இவை செவியுற்ற எமது இதயம் புளகாங்கிதமடைந்து கைவச மிருந்த சில்லறைக் காசைக் கொடுக்க முற்பட்டோம். காசு ஒன்றும் வேண்டாம் என மறுத்து, அப்பெரியார் ஒரு பச்சிலை மூலிகையைக் கசக்கித்தந்து உண்ணச் செய்து, உணவும் அளித்து உனது இருப்பிடம் போய்ச் சேர், சகல நோய்களும் குணமாகிவிடும் எனக் கூறி அனுப்பி விட்டார்.

## புத்துயிர்பெற்ற கண்கள்.

மண்ணாய் மடிகிற உடல்தாங்கிய அடியேனின் இதயம் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிப் புண்ணாகி, ஏங்கி அழுது எங்கு செல்லலாம் எனச்சிறிது ஆலோசித்து, இல்லக்கிழத்தியார் இருப்பிடம் ஏகவும் மனமில் லாமல் தமக்கையார் இல்லத்திற்குச் சென்றோம். அங்குள்ள நமது பந்துக் களின் ஆதரவு சிறிதளவேனும் இன்றியபடியால், மீண்டும் அழகன்குளம் சென்று தங்கியிருக்கையில், ஒரு நாளிரவு மணி பன்னிரெண்டிற்கு,

இரண்டரை வருடகாலமாக ஒளி இழந்திருந்த விழிகள் பளீர் பளீரெனக் காட்சி தந்து சூரியனைக் கண்ட பனி நீங்கியவாறு எம்மைச் சூழ்ந்திருந்த துக்க இருள்கள் ஓடி மறையலாயின.

## கஷ்டத்திற்கு அஞ்சிக் கப்பலேறுதல்.

அட்டதரித்திரமும் முட்டத்தொடர்ந்து அடியேனைச் சற்றும் விட்டு விலகாதபடியால், அன்றாட ஜீவனம்சம் செய்ய முடியாமல் திண்டாடி, இனத்தார்களும் பகைத்து இடையூறுகள் செய்ய முற்பட்டனர். பொறுக்க முடியாமல் பொறுமை இழந்து இந்நாட்டை விட்டு ஓடிவிடலாமென முடிவு செய்து, மேற்கூறிய அய்யாவு செட்டியார் அவர்களிடம் அடகு வைத்திருந்த நமது ஆடம்பரகால ஆபரணங்களை எல்லாம் விற்று, அன்னவர் கடன் தொகை போக, மீதியாகத் தந்த பணத்தைப் பெற்று அந்நிய நாடே கதிஎனக் கப்பலேறிச் சென்றோம்.

## விமோசனகாலம்.

தவ வழியை நாடிய அடியேனுக்கு படமுடியாத இடையூறுகளைத் தந்து பல பரிசோதனைகள் நடந்த முடிவில், நமது அன்னை ஜெகன்மாதாவின் அருட்பிரசாதச்சம்பத்தை எமக்கு அளிக்க முயன்று 1940 முதல் ஆயாசம் அகன்று அடியேன் இடையில் காயாசம் அணிந்து சன்யாசம் என்பதை உணர்ந்து சன்மார்க்க போதனைகள் புரிந்து, மக்களின் மனமாச கற்ற வேண்டுமெனத் துணிந்து, பணம் காசை கரத்தால் தீண்டோம் எனப் பாரதமாதா மீது ஆணையிட்டு, நேதாஜிபோஸாகிய வீரன் வகுத்த இந்திய தேசீய சேனையிற் கலந்து சிலகாலம் பணியாற்றி, மலேசியாவில் வதியும் நமது மாணவ திலகங்களின் அனுமதி பெற்றுத் தாய்நாடு திரும்பி, 1947-ல் அடியேனின் இல்லம் வந்து இறங்கி மனையாளையும், மைந்தனையும் அழைத்து தவநெறி தழுவச்செய்து, அருளொளி மடம் என இல்லக் குடிசைக்கு இறைதிரு மகுடம் சூட்டினோம்.

## ஆரம்பக் கடமை.

வறுமை குடிகொண்டு இன்பமிழந்து துன்பத்துட் துன்பம் விழைதலாகிய நம் தமிழ் நாட்டில், இராமநாதபுரம் ஜில்லாவிற் குட்பட்ட பல கிராமங்களில், குறிப்பாக அடியேன் பிறந்த கிராமம் முதல் மற்றெல்லா கிராமங்களுக்குஞ் சென்று, ஜீவகாருண்யத்தை சன்மார்க்க உபன்யாசங்களால் புகட்டி; போதிய மதி வளராத மக்கட்கு சாபல்ய வழிகளையும் அருளலாம் என உத்தேசித்து, மானங்குடி கிராமத்தில் கடுக்காய் வலசை என்னும் சிற்றூரில் வினைதீர்த்தாள் ஆலயமாகிய தெய்வ ஸ்தலத்தில் பண்டைக்காலம் முதல் இதுவரை உயிர்ப்பலியிடுகின்ற கொடிய சதிச் செயலைத் தலையீடு செய்து அன்பு கூர்ந்து அறிவுறுத்தி நிறுத்திய பிறகு, ஆங்காங்கு ஆன்மஞான போதனைகளை உபதேசிக்கலாமெனத் தேர்ந்து

சில அறிஞர்களையும் உறுதுணையாக்கிக்கொண்டு இரண்டுவருடகாலம் வெகுபிரயாசைப்பட்டும் பயனிலாதபடியால் மனங்குன்றித்திரும்பினோம்.

## அறியாமை அகல ஆராய்ச்சி.

ஆராய்ந்து உணர்ந்து ஒழுகவியலாத மக்களை மிகுதியாகப் பெற்ற நமது நாடு சீர்குலைந்து பெருமை இழந்து வாழ்க்கை விருட்சம் வாடி வதங்கி வலுவிழந்து சுழன்ருடுகின்றபடியால், அவை அகன்று, அருள் குடிகொண்டு மக்கள் மக்களாக வசிக்கத் தக்க வழி யாதென சில காலமாக எமது இதய வெளியுள் ஆராயத் தொடங்கி, சித்தத் திடமும், திரேக ஆரோக்கியமும், புலனொடுக்கமும், புத்தி சாதுரியமும், புனித மொழிகளும் அறப்பணியாற்றலும் சிறப்பைத் தருமெனக் கண்டு, நேர்மை தவறி விடாதபடி நின்று ஆன்ம ஞானத்தை அனைவரும் அனுஷ்டிக்கும் முறையில் அடியேன் மெய்யுபதேச ஊழியனாகி தருமோபதேசம் புரிய முற்பட்டு வீர வைராக்கிய விரதமும் பூணலாயினோம்.

## மோசச் சந்நியாசிகளின் முணுமுணுப்பு.

ஆண்டி முதலாக அரசியல் வாதிகள் வரை கொடிய இழிவான கீழ்த்தர செய்கையை ஒழித்து, அறநெறியிலும் அன்புப் பாதையிலும் செல்க என்று அறைகூவிப் பறைசாற்றி பலரும் உணரச் செய்கிறபடியால், தாடி வளர்த்துத் தனந்தேடிக் குவிக்கிற சந்நியாசிகளும், தடவிக்கொடுத்துத் தாலியை அறுக்கிற மட்டரகமான மதியுடைய மக்களும் கூடி, நமது அருளொளி மார்க்கத்திற்கு எதிர்மறையாக துர்ப்பிரசாரம் செய்யத் தொடங்கினர் நமது குருமதிமாலை கையேட்டுப் பிரதியைக் கண்ணுற்று அதனுள் அடங்கிய கபடசந்நியாச அத்தியாயத்தை அச்சிட்டு உதவுதல் கூடாதென மறுத்துரைத்தனர். அவை ஒருபோதும் பலிதமாகாதெனக் கூறி சில மாத காலமாக மதுரை மாநகரிலுள்ள சில வித்வான்களோடு வாதிட்டு, அன்னவர்களின் ஆதரவோடு சன்மார்க்க சங்கத் தலைவர்களிடமும் சிறப்புரைகள் பெற்று, அரசியலாரின் வழக்கறிஞர்களிடமும் நன்மதிப்புவாங்கி, நமது அனுபவ மொழிகள் பொதிந்த நன்னூற்கள் வெளிவர ஆரம்பித்தன.

## நூல் வெளியீடு.

அறிவுக் களஞ்சியத் திறவுகோலெனக் கருதப்படுகிற நன்னூற்களை நமது நாட்டிற்களித்த பெரியார்களின் திருநாமம் மறைவுருதிருக்கிற தன்மைக்கேற்ப, அடியேனுடைய வாழ்க்கை அனுபவத்தின் முடிவிலுணர்ந்த நலந்தீது இரண்டின் பலாபலன்களை சுருதி வாயிலாகத் தந்தருள வேண்டுமென, நமது மாணவ மாணவிகளெல்லாம் விரும்பியதற்கு இசைந்து, அருள் பெற்ற நூலெனப் புகழ்பெற்ற நமது குருமதிமாலை முதலாக திருப்புகழ்திரவியம், பேரின்பக்குறள், மௌனானந்த மொழிகள், மரணசிந்தனை, ஞானபண்டிதன், நிறைநெறி மொழிகள், சீர்திருந்து மனிதா!, கருணைக் கண்ணீர், கிருபைப்பிரகாசப் பொக்கிஷம், காந்திஜியின் திருவருட் புலம்பல், அருளொளிமலர் என எளிய நடையில் சிலநூல்கள் எழுதியுள்ளோம்.

## சூழ்ச்சியுடையோர்கள் வீழ்ச்சி.

பொருமைச் சேற்றிற் கிடந்து சதா புரண்டு எழுகிற மக்களிற் சிலர் மறைமுகமாக இருந்து நமக்கு பல சூழ்ச்சிகள் செய்ய முனைந்தும், அவை யாவும் நமது அருளொளிச் சுடரில் அகப்பட்டு அழிந்ததோடு, அடாத விளையாட்டின் கபட நாடகக் கடமைகளும் சிதறிச் சிதைந்து சீர்கேடு அடைந்து தமது மனச் சான்றின் தண்டனைக்கு ஆட்பட்டுள் ளதுகண்டு இரக்கமுற்று, நமது அருமைப் பாலர்களின் அறியாமையைப் போக்கி, பக்தர்களுக்குப் பகைவர்கள் இல்லையெனப் பகுத்தறிந்துவசிக்க பாரதமாதா பரிபூரண அருளை அளிப்பாளென வேண்டிநின்றனம்.

## ஞானசபைகள் அமைப்பு.

புவிப் பொருளற்ற அடியேன் புகழ் இகழ் இரண்டையும் ஏற்று அறப்பணியாற்றத் துணிந்து, மதுரை, திருச்சி, (புதுச்சேரிக்கு அடுத்த) கம்பளிக்காரங் குப்பம், மலேசியா, பினங் போன்ற இடங்களில் அரு ளொளி ஞான சபைகள் அமைத்து, ஆத்மீகத் துறையில் இறங்கிக் கடமையை இடைவிடாது புரிந்து, ஏழை மக்களின் மனது கோழை படாதபடி வீர மொழிகளை அள்ளி விசிறி, தாரக மந்திரமாகிய திடசக் தியை ஆடவர் பெண்டிர் இதயத்திலிருந்து உதயமாகி ஒளிர்வதுகண்டு ஆனந்தமுறலாமெனவும் அவாவுற்று, கடமை முடிவில் அடியேனுடைய உடலானது மறையினும் உலகெலாம் அருளொளிவிளக்கு அணையாமல் நின்று ஒளிவீசவும், ஆன்மஞான உபதேசிகள் அவதார புருடர்களாகத் தோன்றி மக்கட்கு தருமோபதேசங்கள் புரியவுமாகக்கோரி, சித்ரமுத்து என்னும் அடியேனுடைய ஜீவான்ம சக்தி அனைத்தையும் பரிபூரண பரா சக்தியினிடம் சமர்ப்பிக்கின்றோம்.

## நமது இலட்சியம்.

ஏழையடியேன் இவ்வவனியில் உடல்தாங்கி அவதரித்து பாவச் செயல் அனந்தம் புரிந்தோம் எனினும், அவை யாவும் அறிவு வளராது இருந்த மதியீனச்செய்கை என மக்கள் மன்னிக்கவும், அரிய குருபிரா னின் திருவடி நமது சிரமிசைப்பட்ட அன்றுமுதற்கொண்டு அனுபவித்த நமது வாழ்க்கை வரலாறுகளிலிருந்து, உண்மையை உணர்ந்து மக்கள் மனம்தேறவும், இன்பத்திற்கு எதிர்மறையாகிய துன்பத்தைத் துணிவு டன் ஏற்றுச் செயலாற்ற அறப்பணியில் ஈடுபட்டு உழைக்கவும், மக்கள் அனைவரும் நேர்மைதவருது இருந்து அனைத்து உயிரையும் நேசிக்கவும், அருளொளி வீசிய அகண்டாகார சைதன்ய சக்தியே சாட்சிமாத்திரமாகி நிலைநிறுத்தட்டும் எனக்கூறி, தெய்வீக ஒளியுள் அடங்கிய மக்கள் அனை வர்க்கும் அடியேன் மெய்யுபதேச ஊழியனுகி மேற்கூறிய நமது அமுத மொழிகளையும் அருளலாயினேம்.

---

# குருமதிமாலை

## சாற்றுக் கவி

நேரிசை வெண்பா.

சித்திர முத்துவெனும் சீரார் சிவஞானி
முத்திநலம் எய்திநிலம் முற்படவே - பத்தி
குருமதி மாலைதனைக் கூறினரால் மாந்தர்
திருமதி கூறவருட் செய்து.

மருவும் அடியார்கள் மனதில் விளையாடும் மரகதமயூரப் பெருமானின் திருவருளால் நமது பாரத பூமியில் சிறப்பாகத் தமிழகத்தில் பல பல ஆன்றோர்கள் அவதரித்து அவ்வப் போது அறநெறியை நிலைநிறுத்தியருளினார்கள்.

முத்திநெறி நான்கு. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவற்றுள் மூன்றாவதுபடி யோகம்.

யோக அங்கங்கள் எட்டு. இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன.

இவற்றுள் மூன்றாவது அங்கம் ஆசனம். ஆசனங்கள் அறுபத்து நான்கு. இவற்றுள் இன்றியமையாத ஆசனங்கள் இருபத்தொன்றையும் ஞானநெறிகளையும் மிகவும் அழகிய கவிகளால் அமைத்து ஸ்ரீசத் சித்ரமுத்து சுவாமிகள் திருவாய் மலர்ந்து அருளிச் செய்தனர்.

இந்நூலுக்கு ''குருமதிமாலை'' என்ற பெயர் மிகப் பொருத்தமானது.

இதனை அனைவரும் போற்றிப் படித்து வானோரும் எய்தாத அருள் நலங்களை எய்தி இன்புறுவீர்களாக!

அன்பன்,
கிருபானந்தவாரி,
27—3—1949.

முற்கால ஞான முறையின் நெறிதவறித்
தற்கால மக்கள் தடுமாறி — பிற்போக்காய்ப்
போகாத வாறு புகல்வோம் புனிதமொழி
வாகாகப் பின்பற்றி வாழ்.

— தவத்திரு. சித்ரமுத்து அடிகள்.



"கருணை நிறைந்த உள்ளம் - கடவுள் வசிக்கும் இல்லம்"

வெற்றி!

# அருளொளி.



## 1. குருமதிமாலை.

பல்லவி.

தந்தனத் தனன தன
தந்தனத் தனன தன
தந்தனத் தனன தனன—தனனதன
தந்தனத் தனன தானனு.

### கணபதி காப்பு.

1. கந்தனுக்கு முந்தினவா
எந்தனுக்குனதருளைத்
தந்தருள் செய்வாய் கணேசனே—மதிமாலையுன்
சந்ததிக்கருள் செய் ஈசனே.

(கருத்துரை) முருகபிரானுக்கு முன்னவனுகிய மூஷிகவாகனு! உனது அற்புத அருட்பிரகாசத்தை அடியேனுக்கு அருளி உனது சந்ததிகள் அனைத்தும் ஈடேற இக் குருமதிமாலையைப் பாடியளிக்க பரிபூரணமாகக் கிருபை பாலிப்பாயாக!

## கலைமகள் துதி.

2. வாணியை வணங்கி நலம்
பேணியே கலையறிவுதான்
இனிதென்றோதுவதிலே—நடமிடுவாள்
நானிலர் நன்நாநுனியிலே.

(க—ரை) அன்னை வாணியின் பதமலரைப் போற்றி, அறிவுநூலை ஓத முற்படும் நானில மக்களின் புலமைத்திற னுற நாவின் நுனியிலே சதா நடமிடுவாள் என்பது உண்மை.

## திருமகள் வணக்கம்.

3. குருமதி பாமாலைபாடத்
திருமகளருள்நின்றாட
வறுமைநோயகன்று ஓடுமே—கற்பகமெனுந்
தருவுமங்கு பொங்கியோங்குமே.

(க—ரை) இவை சிறிய நூலே ஆயினும், பேரின்பத்தைத் தரத்தக்கதால், இக் குருமதிமாலையைப் பாடி, இதில் அடங்கி யுள்ள உண்மையை அறிந்து உணர்வோர் கவலை, வறுமை, பிணிகளற்று மிக்க மேலான கற்பகத் தருவென வாழ்வாங்கு வாழ்ந்து திருமகள் கடாட்சம்பெற்று உய்வார்கள் என்பது உறுதி.

## பெரியார் பதம் துதி.

4. திங்களும் கதிர் விண்மீனும்
எங்கும் நின்றிலங்குதல்போல்
தங்கியே தவஞ்செய்வோர்களே—பிழைபொறுப்பீர்
உங்களருளின் கவிகளே.

(க—ரை) இரவிமதி ஓரிடமிருந்தும், உலகெலாம் பிரகா சிப்பன போன்று தன்நிலை தவருமல் நின்று உயரிய தவமியற் றும் பெரியோர்களே! நமது அன்னையின் அருளால் இயம்பிய இக்கவிகளில் பிழைகள் காணப்பெறின், உங்களருட்கவிகளில் இவையும் ஓர் அங்கமாய் அமைந்துள்ளதெனப் பொறுத்து ஆசி கூறுவீர்களாக!

5. நற்றமிழறிஞ ரெல்லாங்
குற்றங்களிருப்பினிதைச்
சற்றும் மிகையெண்ணிடாரையா—சாம்பவி நம்மை
பெற்றவளருளுரையையா.

(க—ரை) தமிழிலக்கண ஆராய்ச்சிகளில் வல்லமைமிக்க அறிஞர்களே! எவற்றிலும் குற்றம் தென்படுவது இயல்பே. ஆயினும் இச்சிறு நூலையும் நீங்கள் கண்ணுறுங்கால் பிழை காணின் இவையொரு மிகையாகாதெனக் கருதி உண்மையை உட்கொண்டு நன்மையுறுவது நலம்.

## நூற்பயன்.

6. மருதநில மக்களுக்குக்
குருமதிமாலைக்கு ளொரு
திருவெனும் பொருளிருக்குது—படிப்பவர்க்கு
அருளொளி யருகிருக்குது.

(க—ரை) மருதநிலமக்களே! (மருதம்-வயலும் வயல் சார்ந்த இடமும்) இந்நூலாகிய மதிமாலையைக் கற்று தெளிவுற்ருல், இலக்குமி கடாட்சமுண்டாகுவதோடு, அருள்ஞானப் பிரகாசமும் உங்கள் அருகிருந்து நீங்கள் உயர்கதியடைய சன்மார்க்க வழிகளையும் உணர்த்தும் என்பது வெளிப்படை.

7. நெய்தல் நில மக்களுக்குச்
செய்தொழிலெல்லாஞ் சிறந்து
தெய்வநிலையை நிறுத்துமே—இந்நூல் படித்து
எய்தலாமிறைவன் பாதமே.

(க—ரை) நெய்தல் நிலஞ்சார்ந்த மக்களே! (நெய்தல்-கடலும் கடல்சார்ந்த நிலமும்) உங்கட்கு இந்நூலின் வாயிலாக இயம்பிய உபதேச மொழிகளைப் பின்பற்றி உண்மையோடு ஒழுகிவருவீர்களாயின், நீங்கள் செய்தொழில் விருத்தியும், தெய்வீகசக்தியும் எய்தப்பெற்று அருளிறைவன் திருவடிநிழலுக்கு ஆளாகுவீர்கள். இவை பெரிதும் உண்மை.

8. முல்லைநில மக்களுக்கு
அல்லலையகற்றி யொரு
நல்லருள் செல்வமருளுமே—இறையிதயத்
தில்லையில் நடம்புரியுமே.

(க—ரை) முல்லைநிலமக்களே! (முல்லை - காடும் காடு சார்ந்த நிலமும்) உங்கள் துன்பமகன்று சிறப்புற வேண்டின், இங்கருளிய சன்மார்க்க வழிகளைக் கருத்தூன்றிக்கற்று, கற்ற படி ஒழுக முற்படுவீர்களாயின், இதய கமலாசனத்தில் இறைவன் திருநடம்புரிய எழுந்தருளுவான்.

9. குறிஞ்சிநில மக்களுக்கு
திரிந்துயிர் வதைத்திடாமற்
பரிந்து காருண்யமருளுமே—மதிமாலையை
உரிமையோடுரைத்த யார்க்குமே.

(க—ரை) குறிஞ்சி நில மக்களே! (குறிஞ்சி - மலையும் மலைசார்ந்த நிலமும்) நீங்கள் ஜீவகாருண்யச்செல்வர்களாகப் பிரகாசித்து, உயிர்வதை செய்யும் தொழிலுக்கு ஆளாகாமல் உயரிய பதவியை நாடி, சீரிய முறையில் தவம் இயற்றத்தக்க இரகசியங்களும் மிக்க விபரமாக இந்நூலில் பொதிந்துள்ள படியால் கண்ணுற்று அவசியம் கடைத்தேறுவதோடு, இம்மதி மாலையின் மகத்துவத்தை மற்றவர்களுக்கும் எடுத்துரைத்து இன்புறுவீர்களாக!

## நூல்.

10. ஆதியை யருகிருக்குஞ்
ஜோதியைத் துலக்கமாக
ஓதிடப் பிரணவமொழி—உறுதியிது
நீதியாய்த் திறக்குமேசுழி

(க—ரை) ஒருமொழியாகிய பிரணவத்தை உயர் குருவினால் ஓதப்பெற்று உண்மையை உணர்ந்து அதன் நிலைநிற்பாயாகில் சுழிமுனை திறந்து, ஆதிபரம்பொருளாகிய ஜோதி உன்னைச் சூழ்ந்து ஆனந்தமுறச்செய்யும் என்பது பெரிதும் உறுதி.

11. முத்து முகப்புக்குளொரு
குத்துவிளக்கிருக்கென
எத்தனையோ நூலெழுதியும்—அதையறிய
சத்தியின்றி யேனலையணும்.

(க—ரை) முத்துமுகப்பாகிய திரிபுடை ஸ்தானத்தில் குத்துவிளக்கு எரிவதுபோல் உனது ஆத்மதீபம் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது எனத் தெளிவுற அளவுகடந்த நூற்களில் எழுதியும், அதன் உண்மையை உணரும் ஆற்றலின்றி உழல்கின்ருயே! அதிவிரைவில் உண்மையை அறிய முற்படுவாயாக!

12. ஊனக்கண்ணை நீ மறந்து
ஞானக்கண்ணையே திறந்தால்
காணலாம் மௌன குருவை—மதியிழந்த
வீணரறியாத அருவை.

(க—ரை) உருவஉலகில் கிடந்து உழலும் ஊனக்கண்ணை மாற்றியமைத்து, ஞானக்கண்ணைத் திறந்தாலன்றே மௌன குருவாய் இலங்கும் சைதன்யப் பிரகாசத்தை அறிய இயலும். அவ்வாறு இல்லாது, அந்தகாரம் நிறைந்துள்ள கண்ணுக்கு உண்மை எங்ஙனம் புலப்படும்? என்பதை உணர்வாயாக!

13. எங்குமே நிறைந்தொளிபோல்
கங்குகரையின்றி யொரு
பங்கமற்றிருக்கின்றதையா—அதேபிரமம்
தங்கிடுமுனதுளத்தையா

(க—ரை) எங்கும் நிறைந்து கங்குகரையின்றி விபுவாய் (பரவெளியாய்) வியாபித்து பங்கமுருது சதா உனது அருகில் காட்சியளிப்பது எதுவோ, அதே பிரம்ம சைதன்யம் எனப் படும். சகல ஜீவராசிகளின் இருதய சிதாகாயத்தில் நிறைந் துள்ளதும் அதுவே என்று அறிவாயாக!

14. அந்தரங்கமான தொரு
மந்திரமிருக்குயர்ந்த
கண்திறந்த பின்னறியலாம்—வினையுலகில்
வந்தவகையுந் தெரியலாம்.

(க—ரை) அற்புதமாகிய மேற்கூறிய இரகசிய வெளியில் ஆடிய மாயா சக்திகளை அறிய அகக்கண் திறந்து ஞானம் பிரகாசிக்கவேண்டும். அதற்கு அந்தரங்கமாகிய இடம்ஒன்று இருக்கிறது. அதையே மந்திரஸ்தானமென்று சொல்லப்படும் அவ்வுயரியவழி திறக்கப்படுமாயின் நீ வினையுலகிற்கு விளையாடவந்த விபரமும் தெற்றெனத் தெளியலாம்.

15. தொட்டதைக் காட்டாவிடிலோ
கெட்டவுன் மனக்குரங்கைத்
திட்டவுமுரிமை யில்லையே—கயிறெடுத்து
கட்டவும் பெரிய தொல்லையே.

(க—ரை) புருவமத்தி என்னும் பூட்டைத் திறந்து, உழன்று அலையும் உனது மனம் ஒடுங்க சத்குருவால் உபநயனம் செய்யாவிடில், கெடுமதிகொண்ட உனது வாழ்க்கையைத் திட்டவோ, அளவுகடந்து ஆடி அழியும் உனது மேற்கூறிய மனத்தைக் கட்டவோ உரிமை கிடையாதென்று அறிவாயாக.

16. சத்தியமென்ற பதியில்
நித்தியம் வசிப்பினுயர்
முத்தொளியலைபுரளுமே—முதுகுரவர்
சித்துருவதிலுருளுமே.

(க—ரை) தன்னிலை என்னும் உயரிய லலாடவெளியில் சதா தரிசனம் கண்டு ஆனந்தம் அடைவாயாயின் நவரத்தின பிரகாசத்திவலைகள் அலையலையாய்ப் புரண்டு வருவதும் அதனுள் ஜீவன் முத்தர்கள் சித்துருவங்களும் தோன்றி ஒளிர்வதையும் மிகமகிழ்வுடன் அறியலாம்.

17. உடலெதற் கெடுத்தது
கடவுளடிகாணவே
தடபுடலாயேனலையுருய்—தவம்புரிந்து
நடமிடும்நாதனைக்காணுவாய்.

(க—ரை) இம்மாயா உலகில் மனித ஜனனம் எடுத்தது எதற்கென்ருல், நித்தியமாய் நிலைநின்ருேங்கும் பரம்பொருளின் பதமலரடி பெறவேயன்ருே? அதன்றி மனம்போன போக்கெல்லாம் திரிந்து உழல்வது தகுதியாகுமா? நீ அருந் தவம் இயற்றி அரனருள் சேர அவசியம் முயல்வாயாக!

18. மாநிலத்திலே மனிதன்
ஏனினிப்பிறந்திருந்தும்
வீணிலேயிறந்து போகணும்—எனச்சதாவும்
பேணியுன்னை நீயுணரணும்.

(க—ரை) பகுத்தறிவுற்ற மனிதப்பிறவியே மேம்பாடுடையது என இப்புகழ்பெற்ற பூமியிற் பிறந்து, அழிவுறும் தன்மையாகிய வீண் பிரயோஜனங்களைக்கருதி சிலகாலம் வசித்து, ஏதோ சிறிது பயனடைந்து, இறுதியில் ஏன் மடிந்துபோக வேண்டும்? எனச் சதா உன் பேரறிவைச்செலுத்தி ஆத்மசிந்தனையில் ஈடுபடுவாயாக!

19. மாண்டு மண்ணுய்ப் போவதற்குள்
ஆண்டவனருளொளியைக்
கூண்டினுள்குலாவு நீயையா—பவக்கடலைத்
தாண்டிமேலே போகலாமையா.

(க—ரை) காணும் சடப்பொருள் யாவும் மாய்கையாய் மறைவதுபோன்று, உன் உடலும் அழிந்து ஒழியுமுன் அருளுலகிற்கு ஏகும் வழியை அறிந்து, அற்ப உலக ஆசையைக் கடந்து கடைத்தேறி, இறைவனை உனது சிதாகாயத்தின் உள்ளே அகக்கண்ணுற் கண்டு உணர்வுறக் கூடிக்கொள்ளல் மிகவும் நலமே ஆகும்.

20. ஓடியுங் கோடி பொருளைத்
தேடியும் பயனில்லையோர்
நாடிபோய் முடிந்தயிடமே—அதற்குளுனைக்
கூடிடிற் குணமுண்டாகுமே

(க—ரை) திரைகடலோடித் திரவியம் தேடினும், ஆத்ம ஞானத்திற்கு அப்பொருள் அணுமாத்திரமேயாம். ஆகவே நீ பிரம்மநாடி போய்முடிந்த இடத்தை சற்குருவால் உணர்த்த அறிந்து, அந் நடுநாடியினூடு சென்று இறையைக் கூடிக் குலாவிக்கொள்வாயாக!

21. கள்ளமின்றியே வசிப்போ
ருள்ளமதிலே யிறைவன்
வல்லமைதனைத் தருமையா—அல்லாதபேரைக்
கொல்லயெமனுய் வருமையா.

(க—ரை) கள்ளங்கபடமற்ற காருண்யவான்களின் உள்ளத்தில் இறைவன் பரிபூரண உணர்வோடு அமர்ந்து, வேண்டுவனவற்றைக் கடாட்சித்து அருள் புரிகின்ருர். மாசுற்ற கெட்ட மனதுடைய துஷ்டர்களின் உயிரை வாட்டி உடலை விட்டேக நமது அண்ணலே கூற்றுவனுகத் தோன்றுவான் என்பதை அறிவாயாக!

22. பாழுமா படுகுழியில்
வீழுமுன்னமே பகவான்
ருளினைப் பிடித்துக் கொள்ளையா—அழைப்பிற்சிறு
நாழிகைக்குளேகலாமையா.

(க—ரை) உலகப் பாசமாகிய பாழான படுகுழியில் வீழ்ந்து உழன்று அவதியுறுவதற்கு முன், எங்கும் வியாபித்திருக்கும் இறைவனது பாத மலரடியைப் பற்றிப் பிடித்துக் கொள். உனது அன்பை அறிந்து, அப்பன் அழைப்புவந்தால் நீ நொடிப்பொழுதில் பொன்னுலகம் போய்ச் சேர்ந்து கொள்ளலாம்.

23. நெற்றிநிலைநின்று தவ
வெற்றியுறவே யுலகைச்
சுற்றியும் உண்மையறிந்திலை—குருவல்லாது
மற்றவரினுற் பயனிலை.

(க—ரை) நிருவிகல்ப சமாதிநிலையாகிய திரிபுடை ஸ்தானத்தினுள் உன் அருவ தெரிசனத்தில் ஆழ்ந்து அதுமயமாக, ஆக அவாவுற்று உலகெலாம் அலைந்து திரிந்தாலும் பயன் படாது. ஆதலால் உயர்குரு ஒருவரை நாடி, உண்மையை உணர்ந்துகொளல் மேன்மை. குருவிலாச் சாதனை கைகூடாது என்பது பெரிதும் உறுதி.

24. இந்நிலவுலகில்மாந்த
ரென்னுடையதென்பதென்ன
தன்னுயிரையாவுடலையா—அதன்விபர
மின்னதென நீயறியையா.

(க—ரை) இம் மாயா உலகிற்பிறந்த மானிடரெல்லாம் எப்பொருளையும் என்னுடையது எனச் சொந்தம் பாராட்டுகின்றனர்களே. எனது என்று உரிமையோடு சொல்லும் வஸ்து எது? உயிரைச் சார்ந்ததா அல்லது உடலைச் சேர்ந்ததா என நீ சற்று நிதானித்துப்பார்.

25. பெண்டுபிள்ளை சுற்றமெனக்
கண்டுநீ களிப்பதெல்லாம்
நின்றுனை நிலைநிறுத்துமா—நமனெறியுங்
குண்டுதான் விலகிப் போகுமா.

(க—ரை) உலகில் மக்கள், பெண்டீர், உறவு, தனம், தான்யம் என்பவற்றைக் கண்ணுற்கண்டு களிப்புறும் காட்சிகளுள் கூற்றுவன் கொடிய பாசக்கயிற்றை வீசும்பொழுது, எவை உனது முன்னின்று உதவிபுரியும்? இவை அனைத்தும் அநித்தியம் என நிச்சயித்து, சத்தியத்தை விடாது பின்பற்றுவாயாக!

26. உண்டது முறங்கினதும்
மாண்டதுமல்லாது வேறு
கண்டபலனென்றுமில்லையே—குருமகானின்
தொண்டனாயிருந்தாயில்லையே.

(க—ரை) அறுசுவையுடன் உண்டு, உறங்கி, சுகித்துப் பின் மடிந்துபோவதல்லாமல் வேறு ஏதேனும் ஓர் நற்கதி அடைய மார்க்கம் எதுவும் நீ அறிந்தாயில்லையே! ஆனால் இனிமேலும் வீண்காலம் கடத்தாது ஒரு குருமகானையடுத்துத் தொண்டுபுரிந்து உண்மையை உணர்ந்து கொள்வாயாக!

27. எத்தனை வயதிருந்துஞ்
செத்திடுவோமென்றுனது
பித்தின்னுந் தெளியவில்லையே—எமதருமை
உத்தமா நீயின்னுங்கேளையா.

(க—ரை) ஆண்டுபலவாக ஜீவித்திருப்பினும் ஒரு நாள் மடிந்து போவது உண்மையாதலால் இம்மாயா விநோத உலகில் உன்னை நீங்காத பித்தாகிய சந்தேகம் இன்னும் தெளியவில்லையா? நமது அன்பில் உயரிய உத்தமனே! நமதரிய உரையைக் கற்று அதன்வழி நிற்கக் கடவாயாக!

28. ஆடையுமத்தர் பன்னீரு
வாடையுமணிந்துபல
சாடைபேச வேண்டாமையனே—உடல்சுமக்கும்
பாடையொன்றிருக்குதையனே.

(க—ரை) உன்னதமாகிய உடுப்புகளை உடுத்தி, வாசனைத்திரவியங்களை நாற்ற உடலில் அணிந்து, நவநாகரீகமான பாதாளப் படியில் இறங்குதல் தகாதென ஒழித்து, இறுதியில் இகவாழ்வைக் கடந்து பாடையில் ஏறி இடுகாடேகும் உடலை சிறிது சிந்தித்து, ஆடம்பரமின்றி நடுநிலையாக வாழ்க்கை நடாத்தல் உன்போன்றவர்களுக்கு அழகல்லவா?

29. காசு காசு வென்பதாலுன்
மாசுமறுவற்றவுள்ளம்
தூசுபடிந்தாகி விட்டதே—அதனாலுனக்கு
ஈசுரகிருபையற்றதே.

(க—ரை) இக்காசினியில் பேராசை மிகுதியால் கட்டுண்ட மனிதனுக்கு காசாசை என்ற பேயும் கணக்கின்றிப் பிடித்து, உள்ளம் கறை படிந்துளதால் ஈசனின் கிருபையாகிய பேரொளிமங்கி அடியோடு மறையலாயின. ஆகவே நீயேனும் அருளை விரும்பி அருந்தவம் புரிவாயாக!

30. கடுக்கனோடு மோதிர
முடுக்கநல்ல சோமனும்
படுத்துறங்கும் பஞ்சணையுமே—அதுமட்டுமா
அடுக்குமாளிகையும் மாயுமே.

(க—ரை) காதில் வைரக்கடுக்கன், விரல்களில் கற்கட்டுக் கணையாழி, இடையில் அணிவது கனக பீதாம்பரம், சயனம் செய்வது அம்சதூளிகாமஞ்சம், இந்த ஆடம்பரத்திற்கு ஏற்ற உயர்ந்த உப்பரிகை, இறுதியில் இவைகள் யாவும் அழிந்து ஒழியும் என்பதை நீ உனது அகக்கண் திறந்து நினைப்பின் வெளிப்படை.

31. பீடியுஞ் சுருட்டு முந்தன்
நாடியைத் தளர்த்திமிகத்
தேடிவரும் நோய்கள் பலவே—உடலுருகி
ஓடியேகுமாவிமெல்லவே.

(க—ரை) பீடி, சுருட்டு, கஞ்சா, அபினி முதலிய லாகிரிப் பொருள்களை உபயோகித்தால், அதன்மூலம் உனது நாடி ஓட்டமும் குன்றி, நரம்புகள் தளர்ந்து, தீயனவாகிய பலவித நோய்களும் பீடித்து, ஆவியும் குறுகி, உடலும் சீக்கிரம் அழிந்துபோகும் என்பதை ஆராய்ந்து, ஆரோக்கிய வழிகளை அவசியம் கடைப்பிடித்து ஒழுகு.

32. ஆபத்தைப் பரிசளிக்கும்
கோபத்தை அடுத்திருந்தால்
சாபத்துக்குனையழைக்குமே—விலங்கினங்கள்
ரூபத்திலுயிர் போய்புக்குமே.

(க—ரை) கோபத்தையே கூட்டாளியெனக்கருதிய ஆசாமிகளுக்குக் கைம்மாறு எவையென நீ அறிய உரைப்போம். அதாவது பெரியார்கள்சாபமும், பிறவிப்பிணிமிகுந்த பாவமும் ஒருங்கே சேர்ந்து, ஆபத்தைத் தருவதோடு, கோரத்தனமான மிருக உடலில் உயிர்போய்ப் புக்கி, மேலும் உலகில் ஜனனம் எடுக்கவும் ஏதுவாகும் என்பதை அறிந்து அடங்குவாயாக!

33. சாத்திரச் சுவடிகளை
மாத்திரம் படித்துனது
ஆத்திரங்கள் தீரவில்லையே—பாடலிலுள்ள
சூத்திரமறிந்தா யில்லையே.

(க—ரை) நட்சத்திரகாண்டம்முதல் பல நன்னூற்களையெல்லாம் புரட்டிப்படிக்கின்ற வேலையேயல்லாது, உன்னோடு உறவாடிப் பார்க்குங்கால், உனது அதிகார மமதைகள் இன்னும் ஒழிந்தபாடில்லையே! காரணம் யாதெனக் காண்கின், எட்டுப் பிரதிகளில் எழுதிய உட்கருத்தை அறியும் ஆற்றல் இன்றி, அசத்தைக் கிரகித்து சத்தை விட்டொழித்த கதை போன்று இருக்கிறது. அப்படியல்லாது உண்மையை நாட முற்படுவாயாக!

34 திண்ணையிலிருந்து வுந்தன்
கண்ணது தெருவிலாட
என்னென்னமோ கீதம்பாடுறாய்—பலவிதமா
யுன்மனங்கொண்டேதோ நாடுறாய்.

(க—ரை) தெருத் திண்ணைகளில் எதேச்சையாயிருந்து ஏதேதோ மனதில் உதயமாகும் வீண்பாடல்களைக் கடவுள் மீது பாடுவதுபோல் பாசாங்குசெய்து, கண்ணும், மனமும் வீதிகளில் எதையோ காண்கிறதாகத் தோற்றமளிக்கின்றதே! ஈதென்ன விந்தை!! இவ்வாறு இல்லாது நீ இறைவனை ஒரு மனதுடன் அடைய முற்படு.

35. கஞ்சாவபின் கள்சாராயம்
அஞ்சாமற் குடிப்பவர்க்கு
பஞ்சமாபாதகஞ் சூழுமே—அவற்றிஞெடு
எஞ்சியவுயிர் போய்வீழுமே

(க—ரை) உலகினில் கொடியனவாகிய கஞ்சா, கள், சாராயம்,அபினி, இன்னும் பலவிதமான லாகிரிவஸ்த்துக்களை சாப்பிடுவதனல், பஞ்சமாபாதகமாகிய வினைகளும் சூழ்ந்து, இறைவன் அருளற்று, அத்துடன் நாளுக்குநாள் உயிரும் குன்றி, உடல் வீழ்ச்சியுறும் என்பதை உணர்ந்து தீமை அகற்றி, நன்மையைப் பற்றுவாயாக!

36. சட்டமுந் தவிர்த்திறைவன்
கட்டளைகடந்து கூடாத்
துட்டரோடுகூடி யாடுருய்—வயோதிகத்தில்
கெட்டலைந்து மாண்டுபோகுவாய்.

(க—ரை) இறைவன் இட்ட கட்டளைகளையும் உனக்கு இயல்பாய் உள்ள விதிகளையும் தவிர்த்துக் கயவர்களோடு கூடினல், நீ தள்ளாடிய காலத்தில் தட்டுத்தடுமாறிக் கெட்டு அழிந்துபோகுவாய் என்பதை உணர்ந்து, உத்தமர்களைக் கண்டு உறவாடு!

37. வெறுமைகள கன்றுன்னுள்ளம்
நறுமணங் கமழ்ந்திடப்
பொறுமை யென்றபூஷணமணி—சாந்தியுலவி
மறுமையில் பயனுறுவாய்நீ.

(க—ரை) நீ வெறுமைகள் அற்று, வேற்றுமை பாராட்டாது உனது உள்ளம் நறுமணம் வீசிப் பறந்து, மேலும் பொறுமையை ஆபரணமாகப் பூண்டுகொள்வாயானல், இம்மைப்பயனேடு மறுமைப்பயனும் பெற்று இன்புறுவாய்!

38. சோம்பல்குடி கொண்டுவெகு
டாம்பீகம தாயலைந்து
வீம்புபேசுதல் தவறையா—சடலமெலாஞ்
சாம்பலாகிப் போகும்பாரையா.

(க—ரை)சோம்பலைமேற்கொண்டு வெளியிற் சிங்காரித்து வீண்வம்புகள்பேசி வாதாடி முறையில்லாத மார்க்கத்தில் நீ பிரவேசித்து காலம் கடத்தி, இறுதியில் கெட்டழிந்து போகா முன் ஆத்மஞானத்தை அறிய முற்படுவாயாக!

39. பேயென்றும் பிசாசென்றுமே
வாயினால் வழுத்துவது
நோயிலாதபோது இல்லையே—கடன்கழிக்க
தாயினாலனுப்பும் தொல்லையே.

(க—ரை) இப்பயங்கர உலகில்பேய், பிசாசு, பில்லி சூனியம் என அறியாமையால் பிதற்றுவது நோய்வாய்ப்பட்டு உழலாதகாலத்தில் கிடையாதே! எனினும் இவையாவும் அன்னையின்ஏவலால் கொடிய பாவச் சேவகனாகிய நோயை அவரவர் தேடிய வினைவசத்தை வசூலிக்க அனுப்புகிறாள் என்று நீ உணர்வாயாக!

40. காட்டிலே மலையும் நல்ல
நாட்டிலே கலையியற்கைக்
கூட்டிலே உயிர்வசிக்குமே—குடும்பமென்ற
வீட்டிலே கவலையார்க்குமே.

(க—ரை) காட்டிலே மலைகளும், நல்அறிஞர்கள் கூடிய நாட்டிலே உயரிய கலைகளும், உலகிலுள்ள ஸ்தூல உடல்களுக்கு உயிர்களும் அமைந்துள்ளதுபோல, குடும்பமாகிய இல்லத்திலே கவலை இருப்பது யாவர்க்கும் இயற்கையே. இதை உணர்ந்து இல்லறத் துன்பங்களில் ஈடுபட்டு உன்மனதை மாசுறச் செய்யாதே!

41. கவலையென்ற வாழ்விலோர்
திவலையேனும் சிக்கினல்
பவமதிகம் சூழ்ந்துகொள்ளுமே—எமவலைக்கு
ளெவரையுமழைத்து யேகுமே.

(க—ரை) கவலையென்ற மேற்கூறிய கொடிய வினையில் ஓர் அணுவளவேனும் சிக்கிக்கொண்டால், அதன்மூலம் பாவங்கள் உன்னைப் பீடிப்பதோடல்லாமல் எமபாசத்திற்குள்ளும் உன்னை அழைத்துக்கொண்டு செல்லும். ஆகவே கவலை என்னும் காலன் மிகக் கொடியது என்று எண்ணி, அதை அகற்றுவாயாக!

42. அகமுகமாய் நாடினல்
சகமுகமங்கில்லை நற்
சுகமுனக் குதயமாகுமே—கவலையெலாங்
ககனவழியோடிப் போகுமே.

(க—ரை) உனது கவலைகள் எல்லாம் ஒழிந்து, நற்சுகம் உண்டாகி, அகமகிழ்வுறுவதற்கான ஒரு மார்க்கம் உளது. அதாவது குரங்குபோல் அங்குமிங்கும் ஓடியாடி விளையாடும் உனது மனதை தியானுனுபவத்தோடு ககன மார்க்கமாகிய பிரமத்தில் ஐக்கியம் அடையச் செய்தால் ஜெகத்துன்பம் அற்றிருக்கலாம்!

43. தேசிகன்மீதாசை யற்று
தாசிகள்மே லிச்சையுற்று
காசினியெலா மலைவதேன்—இறையருளின்
ஆசியை மறந்தழிவதேன்.

(க—ரை) இறைவனிடத்தில் நீ அடையக்கூடிய பேரின் பத்திலிச்சையற்று, கெடுமதிகொண்ட விலைமகளின் மேலுள்ள அழிந்து போகக்கூடிய அற்ப இன்பத்திற்காக அவளுடன் உறவாடி மதிமயக்குற்று அலைந்து, பலரும் சண்டாளன் என இகழும்படியாக உலகெலாம் சுற்றி அவமே கெட்டு அழிந்து போகாது காலாகாலத்திலே கடவுளின் அருளைப் பெற்று ஆனந்தமுடன் இருப்பாயாக!

44. பெண்களைக் கண்டாற்கொடிய
கண்களை யடக்கிடாதுன்
எண்ணிலாத் தவம்நிலைக்குமா—உயர்கதியை
நண்ணிடவருள் சுரக்குமா

(க—ரை) விலைமாதராகிய விஷத்தை அமுதமெனக்கண்ணளாவிப் பார்த்துக் கெடுபவர்களுக்கு, அரிய தவமும் மோட்சவீட்டின் கதவும் மூடிக்கொள்ளும் என்னும் உண்மையை நீ உணர்ந்து, தன்தாரமின்றிப் பிறமாதரை நோக்குதல் தகாத பேராபத்து என்பதை மனதில் இருத்திக் கொள்வாயாக!

45. வேசையர்கள் மீதிலேவீ
ணாசைகள் வைத்தேயுழன்றுன்
காசையுமழித்தல் தகுமா—சதா நீசெய்யும்
பூசையை மறக்கலாகுமா.

(க—ரை) மதிகெட்ட கன்னிகளாகிய தாசிகளின் பேரில் வீணான அற்பஆசை கொண்டு உன்னுடைய பணம் காசுகளைச் செலவிட்டு (அதன்மூலம் பற்பல ரோகங்களுக்கும் ஆளாகி) கெட்டலைந்து போகுதல் உனக்குத் தகுமா? மேலும், இறைவனின் திருத்தாள்களுக்கு நீ செய்யும் பூஜையையும் மறந்துவிட்டாயே, இது ஆகுமா? ஆகவே இனிமேல் நல்வழி ஒழுகுதல் நலமாகும்.

46. மண்ணொடு மண்ணாகிடும்பொய்
பெண்ணுடலில் மோகமுற்றுக்
கண்ணிழந்த பாவியார்க்குமே—ஒவ்வாதுயர்ந்த
விண்ணுலகில் வாழ்வதற்குமே.

(க—ரை) இப்புண்ணிய பூமியாகிய மண்ணிலே ஜனித்த பெண்மணிகளின் அங்க லட்சணங்களைக் கண்டு காமுற்று, அருவலோகப் பார்வையை இழந்தவர்கள் யாராயிருப்பினும் அன்னவர்கள் மேலாம் பதவியென்னும் விண்ணுலகத்தின் அதிசயம் காணும், கண்ணை இழந்து பரமபத வாழ்க்கையை எய்தப்பெறார்கள் என்பதை நீ நன்குணர்ந்துகொள்வாயாக!

47. கவிதைகளைப் பாடவும்
செவிகளினுற் கேட்கவும்
சிவிகையேறி சுற்றல் வீணைய்யா—பாழானமனங்
குவியயேதுங் கற்றுணரையா.

(க—ரை) உயர்வாகிய சிவிகைகளில் ஏறிக் கொண்டு ஊர் ஊராய் அலைந்து வீண் பாடல்களைப் பாடித் திரிந்தும், அற்பமான கதை, புராண விஷயங்களைக் கேட்டும், காலங் கடத்திச் செல்லாமல், பந்தபாசத்தில் ஈடுபட்டு பரதவிக்கும் உனது பாழான மனங்குவிந்து ஒருங்குடன் நிலை நிற்பதற் கான மார்க்கத்தை நீ அதிவிரைவில் கற்றுத் தெளிந்துஅகம் குவிந்திருப்பாயாக!

48. சிந்தையலையா திருந்து
விந்தையாய்த் தவம்புரிந்தால்
தந்தையுமுதய மாகுவர்—உனதுளத்தில்
வந்துநல் வரமருளுவர்.

(க—ரை) உனது மனோவாக்குக் காயங்கள் ஒன்றுபட்டு ஓர் நிலை நின்று உயரிய பயபக்தியுடன் இறைவனை நாடி, விசேஷமாய்த் தவம்புரிவாயேல், நமது தந்தையாகிய பர மனும் உளமகிழ்ந்து, நீ கோரும் வரப்பிரசாதங்களைத் தந்து, உனக்கு வேண்டிய அருட்காட்சிகளையும் காட்டி, உன்னை ஆனந்தமுறச் செய்வார்.

49. பாழ்மனமடங்கியுந்தன்
ஊழ்வினைகளைந்தெறிய
ஆழ்ந்ததோர் தியானம் வேண்டுமே—நித்யலோகம்
வாழ்ந்திருக்க உன்னைத் தூண்டுமே.

(க—ரை) பாழானவழியிற் பறந்தோடித் திரியும் உனது மனதைத் திருத்தி, ஒருநிலையில் நின்று இறைவனை நாடி, உன்னை மறந்து, ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்திருந்தால், இதுவரை உன்னைப் பீடித்துள்ள ஊழ்வினைகளெல்லாம் சிதறிப் பறந்தேகிப் போவதோடு, நித்தியலோகத்தின் ஆனந்தத்தில் மூழ்கி, அங்கு சதா வீற்றிருக்கச் செய்யும்.

50. அண்ட உச்சியேறிகற்ப
முண்டவர்களுக்கல்லாது
உண்டுமோ மௌனசாகரம்—மனக்கண்ணுலே
கண்டல்லோ சாகாமற் சாகணும்.

(க—ரை) சாதனமின்னதெனச் சற்குருவினுல் அறிந்து அனுஷ்டித்து, அண்ட உச்சியென்ற பிரம்மவெளியிற் சென்று, மேலே நீலமேகனுட்புக்கி சொக்கியிருப்பவர்களுக்கின்றி மற்ற வர்களுக்கு மௌனசாகரம் என்னும் மேலான நிலேயில் இன்பங் கிட்டுமா? அது கிட்டுவதற்கென்ருல், உனது அறிவுக் கண் கொண்டு, அவனடி சார்ந்து, சாகாமற் சாகவேண்டும்!

51. அடக்கத்தோடுன் ஐம்புலன்
திடம்படச் செய்திச் சையைக்
கடத்தினுல் வழிதுலங்குமே—கமலாசன
இடத்திலுமிருக்கலாகுமே.

(க—ரை) சகலவற்றிற்கும், மேலான அடக்கத்தை நீ மேற்கொண்டு ஒழுகி வந்தால் உனது ஐம்புல சேஷ்டைகள் எல்லாம் ஒடுங்கி, மனத்திடமுண்டாகி, இதய சிதாகாயத்தில் குடியிருக்க நேர்வழி துலங்கி, அவ்விடத்தே சாதுவாய் அமர்ந் திருக்கலாம் என்பதை நீ உறுதியாகக் கொள்ளல் சீர்மை!

52. போஜன விதிதவரு
தாசனம் பயின்ருலொரு
மோசமில்லே யுன்னுடலுக்கு—சித்ரமுத்து
நேசமுடன் சொன்னேனுனக்கு.

(க—ரை) போஜன விதியென்னும் சைவ உணவை உட் கொண்டு பின்வரும் அத்தியாயத்திற் கூறிய யோகாசனங்களே முறைப்படி செய்து ஒழுகி வருவாயாகில் துர்நோய்கள் உன்னேத் துன்புறுத்தா வண்ணம் பாதுகாக்கலாம். ஆதலால் அன்னேயின் அருளே வேண்டியமட்டும் பெற்று இன்புற அருள் வடிவிற்கு அடியனுன யாம், உனக்கு உரிமையோடு உரைத்த அருள்வாக்கென நம்பி அவை பின்பற்றி ஒழுகுவாயாக!

53. நுண்ணறிவதோவுனது
கண்ணெதிரிலேயுளது
தன்னறிவிலும் சிறந்தது—அதுவேயாதி
பன்னெடு நாளாகவுள்ளது.

(க—ரை) நுண்ணறிவாகிய சைதன்யசாகரம், பன்னெடு நாட்களாக உனது கண்முன்னாலேயே காட்சியளிக்கிறது. அதுவே அனாதி காலமாக எங்கும் நிறைந்திருக்கப்பட்டது. அது உனது இயற்கை அறிவையும் கடந்து நிற்கும் பொருளென்று நீ அறிவாயாக!

54. மங்களகுணாகரனை
யெங்குமே உணரவொரு
சங்கதியிருக்கு சொல்லவா—அதிதுரித
கங்கையை மறிப்பாய் வல்லவா.

(க—ரை) மங்களமாக எங்கும் ஒளிபோல் நிறைந்திருக்கும் இறைவனின் திருமலரடியை அறியும் பொருட்டாக ஒருநெறிகாட்ட விருப்பம். அதென்னவெனில் உன்னுள்ளிருந்து அதி துரிதமாய் ஓடிவரும் சிவகங்கையை (அமரியை) உனது கரத்தால் மாற்றிப் பிடித்துக் கொள்ளுவாயாக!

55. சொல்லினோ முனக்கதனை
நல்லவிதியுற்றிருந்தால்
சல்தியுண்பாய் மூலகற்பமே—உண்டாலுனது
வல்வினையகன்றுயேகுமே.

(க—ரை) உனக்கு நல்லவிதி இருக்குங்கால், நாம்சொல்லிய மும்மூலகற்பத்தைக் காலாகாலத்திலே கண்டு அறிந்து உண்டு, அதன் சக்தி அறிந்தாயானால் உனது வெவ்விய வினைகளும் உன்னைவிட்டகன்று, மேலாம்பதவிக்குரிய வழிகளையுங் காட்டப்பெற்று நீ நற்சுகம் பெறுவாய்!

56. எட்டுரெண்டுமென்றதுவுன்
கிட்டவேயிருக்கின்றது
வெட்டவெளியாகச் சொல்லலாம்—மறைபொருளைக்
கெட்டதென துட்டர்தள்ளலாம்.

(க—ரை) அகார உகார கற்பசாதனத்தை எங்கும் அலைந்து தேடவேண்டாம். அவ்வஸ்துக்கள் உன்னுள்ளே தான் இருக்கிறது. இறையருளால் இயன்ற அளவு வெளிப் படையாகச் சொல்லியிருக்கின்றோம். எனினும் இக்கலியுக மக்களைப்போல நீயும் அற்பமானதென்று தள்ளிவிடாமல், மாற்றிப் பிடித்துக் கொள்ளுவாயாக!

57. கற்பசாதனம் புரிந்தால்
விற்பனவிவேகனாய் நீ
அற்பலோக வாழ்வைவெல்லலாம்—அதிவிரைவில்
பொற்பதவிண்காட்சி காணலாம்.

(க—ரை) நீ வெகு அடக்கத்தோடு உனக்கு அருளிய சாதனமுறைகளை அனுஷ்டித்துவருவாயானால்,உனது விவேக அறிவு மிகுதியாய்ப் பிரகாசித்து, அநித்திய வாழ்க்கையில் பற்றற்று, விண்ணுலக அதிசயங்களைக் கண்டு களிப்பதோடு இறைவன் திருமலரடியை எய்தும் பாக்கியத்தையும் பெற்று இன்புறுவாய்!

58. கற்பகாயகற்பமிதை
அற்பமென்றிகழ்பவரைத்
தற்பரை தலையிலுதைப்பாள்—அவருடலை
மற்பொருதிமாளயிழுப்பாள்.

(க—ரை) மேற்கூறிவந்த கற்பசாதனங்களை எவரேனும் இகழ்ந்து தாழ்வாகக் கருதுவார்களாயின் அன்னை சாம்பவி தலையில் உதைத்து தரணியில் உருட்டி, அவர் உடலையும் கிழித்து குடலை மாலையாகச்சூடி தாண்டவம் புரிவாள் என் பது உறுதி. ஆகவே அஞ்சி ஒடுங்கி, மிக அடக்கத்தோடு சஞ் சீவியெனக் கொள்ளல் சீர்மை!

59. நஞ்சுண்ணும் நரமனிதர்
சஞ்சீவிதனைவெறுத்து
துஞ்சுவர் வலியிழந்துமே—எமன்வரும்போ
தஞ்சுவர் துணையிழந்துமே.

(க—ரை) விஷம்போன்ற அசத்தை அருந்தி, சத்தை வெறுக்கும் மதியிழந்த மக்கள் இறுதியில் பலவினைகளால் பீடிக்கப்பட்டு உழன்று துன்புறும்பொழுது, இறைவன் துணை இழந்து எமனின் நிஷ்டூரங்களுக்கு ஆட்பட வேண்டும்!

60. காகங்கள் கரைவதுபோ
லாகமங்களைப்படித்தும்
யோகமின்னதென்றறிந்திலை—வழியறிந்து
போகவுந்திறனுனக்கில்லை.

(க—ரை) காகங்கள் கூடி கா, காவெனக் கரைவதுபோல் பலரோடு கூடி ஆகமங்களை ஆராய்ந்து அறிந்தும் யோக மார்க்கம் இன்னதென்று இன்னும் நீ உணராதிருக்கின்றாயே! இனிமேலாகிலும் யோகத்தின் தன்மையின் உண்மையை உணர்ந்து அறிந்துகொள்வாயாக!

61. சாதுவாக நீயினிமேல்
வாதுகள் புரிந்திடாது
தாதுநடு நாடியூடவே—பிராணனதை
ஊதுவாய்சிரசிலேறவே.

(க—ரை) தெய்வீகப் பரம்பொருளைப்பற்றி உண்டு, இல்லையென்று, சம்பிரதாயங்கள் பேசாமல், நடுநாடியை குருவால் உணர்த்த அறிந்து, ஆன்மாவைக் கபாலத்தில் ஏறுமாறு நீ சதா ஊதிவருவாயாக!

62. நாக்கைமேல்மடித்துவச
மாக்கிட வன்மையுண்டானுல்
தாக்கலாம்சுவாசமதனைக்—கபாலத்திலுண்
டாக்கலாம் பிரகாசநாதனை.

(க—ரை) அண்ணுக்கை உள்நாக்கோடு ஏற்றி கபால வெளியை அடைக்குந்திறமை உனக்கு உண்டாகப்பெறின், சுவாசத்தைக் கபாலத்தில் தாக்கி, பிரகாசனுகிய பரமனை ஆங்கு அறிந்து உண்மை காணலாம். நீ அவ்வழியை சதா பின்பற்றுவாயாக!

63. மூலமதை மேலேயெக்கிக்
காலதைப்பிடித்தடைத்தால்
ஆலமுண்டோனையறியலாம்—அவனருமை
பாலனுயுலகில் வாழலாம்.

(க—ரை) சதாகாலமும் அபானத்தை மேலே எக்கி நிறுத்தப் பழகுவதோடு சுவாசத்தை மார்க்கபந்தனஞ் செய்து அப்பியாசித்தால் விஷமுண்ட கண்டனுகிய சிவபெருமானை அறிவதோடு அவனுடைய அருமைப்பாலனுகவும் திகழலாம் என்பது உறுதி.

64. நாவினைமடித்துயர்த்தி
ஆவியை நிறுத்தியூதத்
தேவியுன்னைத்தேடுவாளையா—அவளொளியில்
தாவிவிளையாடலாமையா.

(க—ரை) உனது நாவை மேலேமடித்து, கபாலவெளியை அடைத்து, நடு நாடியை சதா ஊதிப்பழகிவருவாயானுல் அன்னை சாம்பவி அதிவிரைவில் இறங்கி வந்து உன்னை ஆட்கொள்வதோடு, அவள் அருளொளி நிழலில் நின்று நீ விளையாடலாம்.

65. மூச்சு இழுத்துள்ளடைத்துப்
போச்சுதுயிரென்றுசொல்லி
பேச்சதாயிருக்கிறதையா—இப்படிப்பட்ட
கூச்சலுமுலகில் வீணேய்யா.

(க—ரை) நாசியின் வழியாய் வாசியை இழுத்து வயிற்றின் உள்ளடைத்து, அதேதருணம் உயிர்போய்விட்டதென்று பலரும் பல திக்குகளிலும் பேசக்கூடிய வீணன கூச்சலுக்கு நீ ஆளாகாது, மேற்கூறிய மார்க்கங்களே ஆசான் அருகிருந்து உணர்த்த அவை பின்பற்றி உனது பிறவிப்பிணியை வேரறுத்து வெற்றிபெறுவாயாக!

66. பாரினிலனுதினமோர்
சூரியனுதிப்பதுபோல்
நாரிபங்கனுள்ளிருக்கின்ருர்—தவமியற்ருர்
யாரிதையறியப் போகின்ருர்.

(க—ரை) பாரினில் பகலோன் தோன்றி மறைவது போன்று பரமேஸ்வரனும் மன்பதைகளிடம் சதாதோன்றி ஒடுங்கும் மாயத்தை, உபாயத்தோடு உயரிய தவமியற்ருதார், எவர்தான் கண்டு களிப்புற இயலும்?

67. தவமெனுஞ்சுவாலேயில்
பவமெரிந்துபொன்றிடும்
சிவனருள்சுரந்து தோன்றுமே—அல்லாதவர்கள்
சவம்போலிருப்பரென்றுமே.

(க—ரை) மகத்துவமிக்க தவத்தைப்பெருக்கி பிரகாசிக்கச்செய்பவர்கள் எவர்களோ, அவர்கள் அறியாமல்தேடிய ஊழ்வினேகள் அனேத்தும் நசுக்கப்பெற்று ஆனந்தமுடன் திகழ்வார்கள். தவம்புரிவது தகாதெனக் கருதும் இக்கலிகாலத்தில், மக்கள் ஜீவனேடிருந்தும் செத்தவர்களுக்கு ஒப்பாய்க் கருதப் படுகிருர்கள்.

68. வாக்கிலே மனம் பொருமை
போக்கிலே புலம்புகின்றோர்
நாக்கிலொரு வுண்மையில்லையே—இதற்குரிமை
சீக்கிரங் கிடைக்கும் தொல்லையே.

(க—ரை) மனோவாக்கு காயங்கள் வெவ்வேறுபட்டு, பொருமை உட்கொண்டு புலம்புகின்றவர்கள் நாவில் ஓர் உண்மை காண்பது அரிதாகின்றதே! அன்னவர்களுக்குக் கூடியவிரைவில் துர்ப்பலனாகிய இன்னல் வந்து உறும் எனக் கண்டு அஞ்சி, நீ நீதிதவறாது உரையாடுவாயாக!

69. சாக்கடையிலே படுக்கும்
மாக்களைப் போலுள்ள சிலர்
வாக்கினால் சிநேகமாகுவர்—மதிமயங்கின்
சீக்கிரமே கேடுபுரிவர்.

(க—ரை) அதிக நாற்றமுடைய சாக்கடையில் புரளும் விலங்கினங்களுக்கு ஒப்பான பேர்வழிகள், நல்ல உத்தமமான சாதுக்கள்போன்று நடித்து, இனிய உரைகளுமாடி உன்னை ஏமாற்றக் கருதும் கயவர்களைக் கண்டு, அவர்கள் சுபாவம் முற்றும் உணராது இடங்கொடுத்தால், நீ பல தொல்லை களுக்கு ஆளாகுவாய்.

70. கக்கலையுண்ட கடைபோல்
மக்களைக் கண்டாற்கொடிய
உக்கிரமதாகப் பேசுவர்—பொருளதனை
சிக்கியே கொண்டேகிச் செல்லுவர்.

(க—ரை) உண்டு உமிழ்ந்த அன்னத்தை அருந்தும் ஞமலியை, மற்றோர் ஞமலிபற்றிக் கொள்ளுவதுபோல, பல கட்சிக்காரர்களும் மக்களுக்குக் கடமை புரிவதாக வீராண்மை பேசி, பொருள்கள் ஏதேனும் தங்கள் வசம் சிக்கினால் நயவஞ் சகமுடையவர் நழுவிவிடுவது தற்காலக் காட்சியென நீகண்டு, தொண்டுபுரிவது எவ்வாறென அறிந்து கொள்வாயாக.




71. நாசிரெண்டி லொன்றைமூடி
வாசியோகம் செய்து நாங்கள்
காசிசென்று வந்தோமென்பரே—கபடநீறு
பூசிவேடம் போடும்வம்பரே.

(க—ரை) நாசியை அடைத்து வாசியோகம் செய்து வன்மை பெற்று, காசி முதலிய முக்கிய ஸ்தலங்கள் சென்று வந்தோம், எங்களால் ஆகாதது உலகில் ஒன்றுமில்லை என்று கபடமாகத் திருநீற்றை அணியும் கயவர்களைக் கண்டு, அவர்களை நம்பி மோசம்போய்விடாதே!

72. தாடியுஞ் சடையும்வெகு
மோடியாய்ப்புனைந்து உனைத்
தேடிடும் வாயாடி நிரம்பவே—அவர்களுடன்
கூடிடிற் குற்றங்கள் நிரம்பவே.

(க—ரை) தாடி தாழ, சடையும் நெளிந்து சுருள் சுருளாய்த் தொங்க, வெகு பயங்கரத் தோற்றத்துடன் பின்னால் இரண்டொரு சிஷ்யர்களையும் அழைத்துக்கொண்டு, உன்னைப் பார்க்கவருகின்ற பாமர நடிகர்களைக்கண்டு ஏமாந்து போனால், அவர்கள்மூலம் நீ பல துன்பத்திற்கு ஆளாகுவாய்.

73. அரகரா கோவிந்தாவென்னும்
முரசொலி துறவதல்ல
பரமனருளற்ற பாவிகள்—மௌனிஎன்போர்
பிரமஞானசீர் சஞ்சீவிகள்.

(க—ரை) அரகரா என்று ஓலமிடுவது முரசுபோல் ஒலிக்க ஆடிப்பாடி வரும் கும்பல்களைத் துறவிகள் எனச்சொல்வது எவ்வாறு பொருந்தும்? பரமன் அருளைப்பெற நெறிமுறை உணர்ந்து கொள்ளாத பாவிகளாகிறார்கள். எனினும் ஒருசிலரே இவ்வுலகில் மௌன ஞானியாய் இருந்து இறைவன் அடிகண்டு சிறப்புற்றுத் திகழ்கிறார்கள் என்பதை நீ அறிவாயாக!

74. ஞானமோன மென்றுமனம்
போனவாறு சொல்வதல்லால்
வானருள் சுரந்தோரில்லையே—இப்படிப்பட்ட
வீணராரெல்லார்க்கும் தொல்லையே.

(க—ரை) ஞானம், யோகம், மௌனம் என்றெல்லாம் மனம் போன போக்கில் புலம்புகின்ருர்களேயன்றி அன்னையின் அருள் பெற்ருேர் இல்லையே! இப்படிப்பட்ட கள்ளக் கயவர் ஒருவர்க்குத் தீங்கு செய்ய மக்கள் உண்மையானவர்களையும் உதாசீனஞ் செய்கின்ருர்களே. இது தகுமாவென உணர்ந்து, கயவர்களைக் கண்டு திருத்த முற்படு.

75. காரணக் குருக்களென்று
தோரணப் பெயர்களிட்டுப்
பூரணப்பொய் சொல்லும் பாவிகள்—புழுபுழுத்து
நாறணுமப்பச்சைநாவிகள்.

(க—ரை) காரணக் குருக்கள் எனப் பெயர்களை அழகாகச் சூட்டிக்கொண்டு மக்களை ஏமாற்றும் சண்டாளர்கள் பொருள் ஈட்டக் கருதி பொய்யும் புரளியும்பேசி இறுதியில் நரக வாதனையுற்று இறப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

76. ஓதியு முணர்ந்தும் பல
நீதிகளறிந்தோ மென்பர்
சாதிபேதம் பேசுவதுமேன்—அவர்களுக்கு
போதிய மதியிலாததுதான்.

(க—ரை) கற்றுத் தெளிந்த கலாவல்லுநர்களும்கூட நீதிதவறி ஜாதிபேதத்தை இன்னும் உச்சரிக்கின்ருர்களே! காரணம் இவர்கள் கற்ற கல்விக்கேற்ப ஆராயுந்தன்மை கிடையாதென்பது அங்கைக் கனிபோல் தெளிவுறுத்துகிறதன்ருே! ஆனல் நீ அனைவரையும் உனது இனத்தாரெனக் கருதுவாயாக!

77. மன்மதத்தினாலே தாயார்
தன்வயிற்றிலே பிறந்தோம்
என்மதமொன் றெங்கிருப்பது—இனிமேலதை
எண்ணினால் பிசகிருக்குது.

(க—ரை) மன்மதமென்னும் (பூசாரச் சத்துள்ள) அப்பனுக்கு உடந்தைப்பட்ட அன்னையின் வயிற்றில் ஜீவன் அனைத்தும் ஊழ்வினை வசத்தால் உற்பவிக்கின்றன. இதை உணராது என்மதம், உன்மதமென்று போரிட்டு மடிதல் மிகவுந் தவறு என்பதை நீ அறிவாயாக.

78. அண்டை அயலென்றுலகில்
சண்டைகள் பிடித்தறிஞர்
விண்டதை மறுத்துரைக்கிறார்—முதுமொழியைக்
கொண்டிடாப் பிளவுண்டாக்குறார்.

(க—ரை) தானே உயர்ந்த ஜாதியென்றும், மற்றோர் எல்லாம் தாழ்ந்த ஜாதியென்றும் மதத் துவேஷங்கொண்டு வீணான சண்டை சச்சரவு விளைவித்து, தவமிக்க அறிஞர்கள் சொல்லும் அரிய திருவுரைகளையும் மறுத்து, பாமர மக்களுள் பல பிரிவினைகளை உண்டாக்கும் மானிடர்கள் இம்மகிதல உத்தமராக மாட்டார்கள்.

79. ஒற்றுமை களற்றுலகில்
வேற்றுமை குடிகொண்டதால்
கூற்றுவன் குருதியுண்கிறான்—உயிர்பிடிக்க
சாற்றொணாத்துயருளாழ்கிறான்.

(க—ரை) இம்மாயா உலகிலே ஒற்றுமைகள் அற்று, வேற்றுமை வேரூன்றியதால் ஒருவர்க் கொருவர் அநீதமாகச் சண்டைகளியற்ற, அதுவே பெரும் நெருப்பாக, உலகம் அழிந்து போகும்படியாகக் கூற்றுவன் இரத்தங் குடிப்பதோடு, அன்னவர்களின் உயிர்களை ஓடிப்பிடிக்கவும் ஓய்ந்து போகின்றானே.

80. இப்படிப்பட்ட மடமைக்
கெப்படித்தான் நல்லறிவைச்
செப்பிடினும் வீணதாகுதே—அவர்கள் வாழ்வு
தப்பிதமதாகி வீழ்குதே.

(க—ரை) மக்களை மடமைக்கு உட்படுத்தும் மதிகடன் கொடுத்தவர்களுக்கு, பெரியோர்களின் நல்லுபதேசங்களை நயக்கத்தக்க மார்க்கத்திலெடுத்து ஓதிய போதிலும், அவ் வார்த்தைகள் பயனற்று வீணுகின்றன. அத்துடன் அவர்கள் தங்கள் கெடுமதிக் குணங்களால் கெட்டு அலைந்து இறுதியில் பல இன்னல்களுக்கு ஆளாகிருர்கள்.

81. ஒழுக்கமே வுயர்வெனத்
தளுக்கில்லாமற் பேசியுள்
அழுக்ககன்றிடாத பேர்களை—நரகத்திற்கு
இழுப்பரன்றி வீடவர்க்கில்லை.

(க—ரை) ஒழுக்கமே சிறப்பென உத்தமர்போன்று வாய் வேதாந்தம்பேசி, அழுக்காகிய தளுக்கை அகத்தில் நிறையப் பூண்டு மக்களை ஏமாற்றும் கபடர்களுக்கு மோட்ச சாம்ராச் சியத்தின் இன்பப்பேறற்று, இன்னலாகிய நரகந்தான் கிட்டும்.

82. குச்சுவீடெல்லாம் கொளுத்தி
மச்சுவீட்டிலேயிருந்தூர்
மெச்சுமாறு வாழ்ந்த பாவியின்—பூதவுடலைப்
பிச்சுண்ணக்கழுகுகூடுமே.

(க—ரை) எளியமக்களைத் துன்புறுத்தி அடிமைகளாக்கி, பல தொல்லைகள் விளைவித்து அடக்கி ஆளும் அதிகார மமதை உடையவர்கள் எவர்களாய் இருப்பினும் அவர்கள் வாழ்க்கை அதிசீக்கிரத்தில் வீழ்ச்சியுற்று, உயரிய மாடமாளி கையில் உன்னதமாக வசித்த உடலும், கழுகு காகங்களுக்கு இறுதியில் இரையாகும் எனக் கருதுவாயாக!

83. வேட்டைநாய் போலோடி மலைக்
காட்டிலே திரிந்துசிலர்
கூட்டமாயலைகுருரையா—குடும்பங்கெட்டு
ஓட்டையெடுத்தேந்தல் வீணையா.

(க—ரை) இறைவனை நாடி அவனருள் பெறும்பொருட்டு உலகிலுள்ள சிலர் கூட்டங்கூட்டமாய்க்கூடி, காடு மலைகளெல்லாம் ஓடி அலைந்து, குடும்ப வாழ்க்கையையுந் துறந்து இறுதியில் யாதொருபயனுமுருது திருவோடு கையில் ஏந்தித்திரிந்து அவமே கெடுகின்ருர்களே!

84. அருளைநாடிப் பாடுவர்
பொருளைத் தேடி யோடுவர்
மருளுலக மாய்கை போகுமா—ஒருநிலையி
லிருவெனச் சொன்னுலும்ஆகுமா.

(க—ரை) தற்கால பக்திமார்க்கத்தைப் பார்க்குங்கால் அருள்ததும்பிய பாடலைப் பாடிக்கொண்டிருக்கும்போதே அநித்தியப் பொருள்களிலேயும் நாட்டங்கொள்கின்ருர்களே. இவை எவர் குற்றமென நோக்கின், மருளுற்ற மாயாஉலகின் மருட்சியே அல்லவா? ஏதேனும் ஒருவழியில் நில் என்ருல் உழல்மனம் கேட்குமா? நீ ஒரு வழியாகிய இறையருளைப் பின்பற்றி ஒழுகுவாயாக.

85. மற்றவர்களுக்குப்பல
குற்றங்கள் சுமத்தநெறி
கற்றறிந்த பேர்களுண்டையா—தனதுகுறை
சற்றுமெண்ணிப் பார்த்திடாரையா.

(க—ரை) பிறர் செய்யும் அற்ப குற்றங்களுக்கும் நியாய நெறியின்றிப் பெரும்பழி சுமத்தும் மார்க்கங்களில் கை தேர்ந்த பேர்வழிகள், தாங்கள் புரியும் பெருங் குற்றங்களைச் சற்று நேரம் உற்றுச் சிந்திக்கும் திறமை அற்றவர்களாக அல்லவா இருக்கிருர்கள். இவ்வாறிருக்கும் உலகம் இறுதியில் எவ்வாறு உயர்வை அடையும்?

86. வஞ்சகமகன்றவர்கள்
நெஞ்சகமிறையுறங்கும்
பஞ்சணையென்றெண்ணிடாரையா—கருணையின்றி
மிஞ்சவுயிர் கொல்லின் வீணையா.

(க—ரை) வஞ்சகமற்ற உண்மையாளர்கள் இதயபீடத்தில், ஆதியந்தமற்ற அப்பன் அழகிய துயில்கொள்ளும் மாயத்தை அறிந்து உணர்ந்து கொள்ளும் ஆத்மீகத் தன்மையற்றவர்கள், மதிமயக்குற்று, வீணாக உயிர்ப்பிராணிகளை அளவிலாமற் கொன்று, அவமே தன்னைத்தானே கெடுத்துக் கொள்கின்றார்களே.

87. கோவிலில் பலிகொடுக்குங்
கூவின சேவல்களாடு
ஆவிகள் துடித்து ஓடுதே—அறிவிழந்த
பாவியென்றே சாபமிடுதே.

(க—ரை) ஆலயம் இன்னதென ஆராய்ந்தறியும் தன்மையற்ற மக்கள், விக்கிரகங்களின் முன்னால் வாய்விடாப் பிராணிகளாகிய ஆடு, கோழிகளைக் கிள்ளுக்கீரையென மதித்து துள்ளத்துடிக்கப் பலிகொடுக்கிறார்களே! அப்பிராணிகளின் உயிர் கோரச்செயல்களால் பிரியும்போது, அறிவற்ற அன்னவர்களுக்கு சாபமிடும் என்பதை அறிவார்களா? ஆகவே, ஆலய வழிபாடு அதுஅல்ல என நீ அறிவாயாக!

88. அஞ்சுதே சன்னதி நின்று
கெஞ்சுதே ஐயயோ வென்று
கொஞ்சமுமிரக்கமில்லையே—கொடுஞ்செயலை
நஞ்சென வெறுப்பாரில்லையே.

(க—ரை) நெஞ்சம் பதறி, விழிகலங்கி சன்னதிமுன் நின்று அபயம் கேட்பதுபோன்று அலறும் உயிர்ப்பிராணிகளை சிறிதளவேனும், கருணையில்லாமல் பலியிடும் அடாத காரியத்தை நஞ்சென வெறுப்பவர்கள் நாட்டில் மிகுதியும் இல்லையே!

89. மச்சங்களையும் பறக்கும்
பட்சிகளையும் வதைக்கு
மிச்சடலமென்ன நிலையா—அபாயமது
நிச்சயமதாயிருக்கையா.

(க—ரை) உலகில் உயிர் மயங்கொண்டு உலவும் ஜீவன் களாகிய பட்சிமுதல் மச்சங்கள் அனைத்தையும் வதைத்து உண்டு வாழ்க்கை நடத்தும் இச்சடமென்ன நிலையாகுமா? உயிரை வதைத்து உண்டு உயிர்சுமந்து திரிவதென்ன மேன் மையா? இவ்வூன உடலுக்கும் அருகில் அபாயம் உண்டென சிறிது உணர்ந்து ஜீவ வதையற்று இருத்தல் நலம்.

90. நாகைநாதனைக்காணணும்
ஆகையாலினிமேலேனும்
ஈகையோடிருப்பீர்களையா—வெற்றிமேல் வெற்றி
வாகைசூடி வாழ்கலாமையா.

(க—ரை) அன்புமயமான ஆதிபரம்பொருளை அறிவ தற்கு உலகில் எவரும் உரிமையுடையவர்களே ஆதலால், வினையுலக வாழ்க்கைக்கடலை நீந்தி கரையேறுவதற்கு உரிய மார்க்கம் எவையெனின், சீவகாருண்ணியம் பெற்றுத் திகழ்வது ஒன்றேயாம்.

91. அத்தனையறிந்தஜீவ
முத்தர்களுமிவ்வுலகில்
பித்தரைப்போலுந்திரிவரே—அவர்கள்சதா
நித்யலோகத்தில் வசிப்பரே.

(க—ரை) பசுபதிபரமனாகிய இறைவனை நேரிலுணர்ந்த நின்மலமாகிய ஜீவன்முக்தர்கள் பூதஜடத்தோடு அவர்கள் தோற்றம் அளிப்பினும், அறிவுச்சுடராகிய அவர்கள் ஆன்மா நித்யலோகத்தில் சதா ஆனந்தப் பரவசமடைந்துகொண்டி ருக்கும் என்பதை இவ்வநித்திய உலகில் யார் அறிவார்கள்?

92. செத்தசவம் போன்றிருந்து
நித்தியந்தவம்செய்யாது
சித்துவிளையாடல்மோசமே—இதுபெரிய
சுத்தமுழுமூடர்வேடமே.

(க—ரை) தயாபரன் அருளைநாடித் தவமியற்றி பலன் எய்த வேண்டுவதிருக்க, செப்படி வித்தைக்காரர்கள்போன்று மக்கள் அறிந்து மகிழ்வுறத்தக்க சித்துக்களை விளையாடி இறுதியில் சீரழிந்து உழல்கிறார்களே! சித்து விளையாடல் முத்திக்குத் தடையென்ற முதுமொழிகளை உணராத இவர்கள் கதி அதோகதியாம்!

93. ஐயனே யெனதருமை
மெய்யனேயில்லறமக்கள்
ஐயமிடவேண்டுமென்பரே—செயலளவிற்
செய்திடவெண்ணுதுவுண்பரே.

(க—ரை) இப்பொய்யுலகில் வாழும், புகழுடம்பு எய்தாத மக்கள், தான தருமங்களைப்பற்றி வானளாவப் புகழ்ந்து வெற்றுரையாடுகின்றார்களே தவிர, செயலளவில் அன்னமிடுவது ஒன்றுதானில்லை. அவ்வாறில்லாது இயன்ற அளவு பசியென்பவருக்கு பரிந்து அன்னமளிக்க நீயேனும் முற்படுவாயாக!

94. அன்னதானம் செய்பவர்க்கு
பொன்னுலகமேபொருந்தும்
உன்னியமுன்கூடிவருமே—தருமதேவி
தன்னிடங்குடியிருக்குமே.

(க—ரை) தானத்திற் சிறந்தவை அன்னதானமே என்பதை உணர்ந்து, பசியென வருபவர்களுக்கு இல்லையெனக் கடிந்து உரையாடாது கூழ் அமுதேனுங் குணமுடன் வார்த்து இன்னுரை பகர்ந்து அனுப்பும் புண்ணியவான்களுக்கு தரும லட்சுமி அருகில் இருந்து வேண்டுவனவற்றை ஈந்து இறுதியில் பொன்னுலகமுங் கிடைக்கச் செய்வாள்.

95. இல்லறதருமமென
எல்லவருமிப்புவியில்
சொல்லளவிலே புகழ்கிருர்—பசியென்ருலோ
நில்லாதே செல்சல்தியென்குருர்.

(க—ரை) இல்லற தர்மத்தின் தன்மையை உணராதோர் அனேவரும் உண்டு சுகித்து உல்லாசமாயிருக்கும் பொழுது ''ஐயமிட்டுண்'' என்ற நம் பிராட்டியார் அருளிய முதுமொழி ஞாபகத்திற்கு வந்துவிடும்போலும். அச்சமயத்தில் அன்ன தானத்தின் தோற்றம் அன்னவர்கள் கண்முன்னுல் காட்சி யளிப்பதும், மறுகணத்தில் யாரேனும் அன்னங் கேட்டால் அதட்டித் துரத்துவதுமாகச் செய்யும் இச் செய்கை தருமம் ஆகுமா?

96. பசித்தவர்கள் பார்த்திருக்க
புசித்திருக்கும் பாவிகட்கு
விசித்திரவீடெங்கிருக்கையா—நமனுலகில்
வசித்திருக்கச்சொல்வது பொய்யா.

(க—ரை) பசியினுல்வாடி பரிதாபகரமான நிலேயில் இருப்பவர்களேக் கண்ணுற்றும் அணுவளவேனும் இரக்க மின்றி மனேவி மக்களோடு உண்டு சுகிக்கின்ருர்களே! இவர் களுக்கு இறுதியில் என்ன கைம்மாறு கிடைக்குந் தெரியுமா? நரகலோகத்தில் முதல் வீடு கிடைக்கும் இதுதான் உண்மை.

97. அறிவெனும் விளக்கொளிக்
குறிசிரமிருக்கின்றதைத்
தெரிவதுமுனக்குரிமையே—ஒழுக்கமதைப்
பிரிந்திடாதிருத்தல் நன்மையே.

(க—ரை) அருளொளி நின்று விளேயாடும் இடத்திற்கு அடையாளமாக சிரசே சீவன்கள் அனேத்திற்கும் அமைக்கப் பட்டிருக்கின்றது. அவற்றின் மர்மத்தை ஒழுக்கமான நெறி யில் கற்று உணர்ந்துகொள்ளின் உனது அறிவு பிரகாசிக்கப் பெற்று ஆனந்தமுறலாம்.

98. வல்லினமெல்லினமாக
கல்விகள் பயின்றும்பல
சொல்லியும்பயனொன்றில்லையே—கல்விக்கழகு
நல்லவருரையின் கேள்வியே.

(க—ரை) தமிழ் என்னும் இனிமை மிக்க மொழியை இலக்கண இலக்கிய ரீதியாகக் கற்றிருக்கிறோம் என்று இறுமாந்திருந்தல் தகாது. கற்ற நற் கல்விகளை மற்றோர் பயனுறத்தக்க மார்க்கங்களில் புகழுறப்புகட்டல் வேண்டும். அத்துடன் அனுபவம்மிகுந்த பெரியார்களின் உரைகளையும் கேட்டு அதன்வழியும் நிற்றல் வேண்டும்.

99. இக்கலியுலகினிலே
மக்களைப்பெறுவதிலும்
மிக்கநல்விவேகமூட்டணும்—பெரியார்கட்கு
தக்கமரியாதைகாட்டணும்.

(க—ரை) சுருதி முடிவை மறந்த இறுதியான இக்கலி காலத்தில் பல குழந்தைகளைப்பெற்றுப் பெருக்குவதில் ஒரு பயனும் கிடையா. ஆனால் ஒன்று அல்லது இரண்டு சற்புத்திரர்களைப் பெற்று, கல்வியறிவைப் போதித்து, விவேகவழிபற்றிச் செல்லச்செய்யின் அரியதவமும் அன்புததும்பிய பெரியார்களின் ஆசியும் பெற்று புகழுடம்பு எய்தி மிக்க மரியாதையுடன் வாழ்க்கை நடத்தலாம்.

100. தந்தைதாய்பெரியவர்க்கு
வந்தனைகள் செய்திடாது
நிந்தனைபுரிதல்தகுமா—அவர்கள்மனம்
நொந்திடில் வினைகள் போகுமா?

(க—ரை) ஈன்று, வளர்த்து, வேண்டிய கடமைகள் புரிந்த பெற்றோர்களையும், கல்வி அறிவுகளைப் புகட்டி உன்சீவன் கடைத்தேற வழிகாட்டிய மற்ற பெரியார்களையும் உனது அங்கமொடுங்க வணக்கம் அறிவித்து அவர்களிடம் ஆசிபெற வேண்டுவதிருக்க, அதற்கு எதிரிடையாக மனம் நோகுமாறு நிந்தித்தும், கடமைகளினின்றும் தவறுதல் நீதியாகுமா?

101. மாந்தருள்மகிமையுற்ற
வேந்தனுயிருப்பினும்சீர்
சாந்தமே சிறப்புற்றோங்கணும்—குடிகளிடம்
பாந்தமாகவே பழகணும்.

(க—ரை) இம்மகிதல மக்களில் மிக்க பெருமையுடன் தேர்ந்தெடுத்துக்கொண்டாடுகின்ற மன்னர்களாயிருப்பினும் சாந்தம் எனும் பொறுமையைப் பூஷணமாகப்பூண்டு, குடிகளிடம் நட்புரிமையோடு பழகி நேசித்து நீதியோடு ஆட்சி புரிதல் வேண்டும்.

102. இல்லையேல்பலவிதத்தில்
தொல்லைகள் விளைத்தரசை
எல்லவரும்கொள்ளைகொள்வரே—அரசுடையர்
வல்லமையுங்குன்றி வீழ்வரே.

(க—ரை) மேற்கூறியவாறு அல்லாது மக்களைப் பல அல்லல்களுக்கு ஆளாக்கினுல் அவ்வரசும் இடருற்று வல்லமைகுன்றி பிறர் வசமாகும் என்பது மிகையாகாது. ''குடிகள் திரண்டால் கொற்றவன் ஏது'' என்பதற்கு ஒப்பாய் முடியும் அல்லவா? ஆதலால் நிதானம் தவறினுல் எவையிலும் நிலை தவறி நிற்க நேரிடும் என்பதை அறிதல் நலம்.

103. விண்மழைபொழிந்துலகில்
மண்ணுயிர் பிழைப்பதெல்லாம்
புண்ணியபயனின்றுகுமே—தருமமென்ற
நண்ணியதவத்தின் தியாகமே.

(க—ரை) அரிய பெரியார்கள் புரியும் தவ மேன்மையாலும், கருணையுள்ளம் உடையோர்கள் சிலர் இயற்றிய சிறந்த புண்ணியத்தினுலும் (தருமத்தினுலும்) விண்ணின்று மழை வருஷிக்க மண்ணுயிர்கள் அனைத்தும் மகிழ்வுடன் வாழ்க்கை நடத்துகின்றன.

104. மாரியென்பதற்றுமக்கள்
பாரினில் பரதவித்தல்
சீரியதவமில்லாததும்—அசனமிடும்
நேரியதருமமற்றதும்.

(க—ரை) அதர்மம் மிகுதியுற்று அன்னதான தருமங்கள் குன்றியபடியால், உலகில் மாரியானது காலாகாலங்களிலே பெய்து களிப்புறச் செய்யாது மக்களைப் பல இன்னல்களுக்கு ஆளாக்குகின்றதல்லவா? காரணம் மானிடர் செய்யும் அக்கிரமச் செயல்களுக்குத் தக்கபடி இறைவனால் விளைவிக்கப் படும் தண்டனைகளில் இவையே முதன்மையாகும்!

105. பெண்ணவர் தனதுகற்பைக்
கண்ணெனக்கருதிவரின்
விண்ணவர் புகழும்சாதகி—கற்பையிழந்தால்
மண்ணிலோர் கொடிய பாதகி.

(க—ரை) மானிட உருக்கொண்டு அவதரித்த மாது சிரோன்மணிகள், தங்கள் கற்பைக் கண் இமை போன்று பாதுகாத்து, அதனின்று அணுவளவேனும் தவறிடாமல் நடப் பார்களாகில் விண்ணுலகாதியர்களால் போற்றப்பட்டு, நற் புண்ணியவதிகளென இப்புவியில் வாழ்த்தப்படுவார்கள். இல்லையேல், மாபெருங்கொடிய பாதகிகளென எல்லோ ராலும் இகழப்படுவார்கள்.

106. மாதர்களுமாதவத்தின்
சாதனம்புரிந்துயர்ந்த
ஆதவன்போலே திகழணும்—உலகிலுங்கள்
சோதரரெல்லாம் புகழணும்.

(க—ரை) புண்ணியபூமியில் அவதரித்துள்ள புனிதத்தாய் மார்களே! உயரிய தவத்திற்கு வேண்டிய சாதனம் அனைத் தும் புரிந்து, ஆதவனைப் போன்று பிரகாசித்து, அவனியை நல்வழிப்படுத்த ஆடவர்களுக்கு முன்னணியில் நிற்பீர்களாக!

107. அங்கிருக்கு திங்கிருக்கென்
றுங்களுக்குச் சொன்னதைநா
மிங்கெடுத்துரைத்திருக்கின்றோம்—மதிமாலையை
தங்கம்போல் மதிக்கச் சொல்கின்றோம்.

(க—ரை) பற்பலவாறு சிதறிக்கிடந்த இரகசியங்களை எல்லாம் ஒன்றுசேர்த்து, மிகத்தெளிவுடன் சுருக்கமாகப் பாமரர்முதல் அறியும்பொருட்டு எளியநடையில் எடுத்து இயம்பியிருக்கின்றோம். அருளுக்குரிய குழந்தைகளாகிய அனைவரும் இந்நூலை பசும்பொன் பதிந்துளது என மதித்து, பாதுகாத்துப்படித்து அதன்படி ஒழுகி இன்புறுவீர்களாக!

108. சாதனை செய்தால் மனது
வாதனையடங்குமெனப்
போதனைகளைத்தான் சொல்லலாம்-முன்னூழ்வினையின்
சோதனைக்கு என்ன செய்யலாம்.

(க—ரை) ஞானமார்க்க சாதனையில் ஒரேநிலையாய் நின்றால், உனது மனவேதனை அகன்று பிறவிப்பிணியையும் வெல்வதற்கான வல்லமை உண்டாகுமென அதற்கான உயரிய சன்மார்க்கப் போதனைகளைத்தான் எடுத்துப் புகட்டலாம். ஆனால் அவரவர் ஊழ்வினைவசம் முன்னின்று போராடுகையில் நாமென்ன செய்யலாம்!

109. மொத்தமாய் நூற்றெட்டு நல்ல
ரத்தினமணிபொறுக்கிக்
கொத்துமாச்சரப்பளிசெய்து—கொடுத்துதவும்
சித்திர முத்தன்பணியிது.

(க—ரை) நாட்டு மக்களுக்கு ஏற்றவாறு நவமணிகள் போல நூற்றெட்டுப்பாடல்களை சரப்பளி போலாக்கி, அருள் வடிவிற்கு அடியன் சித்ரமுத்தன், சிவஞானச் செல்வர்களாகத்திகழவிரும்பிய நல் அடியார்களுக்கு அளித்த முதற் பணியாம்!

110. மூவரும் முனிபுங்கவர்
தேவருந் திருமகளும்
ஜீவராசிவாழ்க வாழ்கவே!—இந்நூல் படிப்பர்
யாவரும் கேட்போரும் வாழ்கவே!!

(க—ரை) அரிபிரம்மருத்திராதிகளாகிய மூவரும், முனிசிரேஷ்டர்களும், திருமகளோடு தேவரனைவரும், மண்ணுலக ஜீவராசிகளனைத்தும் வாழ்க! வாழ்க!! இந்நூலை பக்தி வினையத்துடன் படிப்பவர்களும், சிரத்தையுடன் கேட்டுச் சிந்திப்போர்களும், நல்வழியொழுகி, இறையருள்கூடிப் புகழுடம் பெய்தி நீடுழிவாழ்வீர்களாக!

எமது அருந்தவத்தால் கிடைக்கப்பெற்ற மாணவா! இதுவரையிலும் லௌகீக விவகாரங்களோடு அரிய பரமார்த்திகத் திருவருளை நாடி நற்றவம்புரியும் சன்மார்க்கங்களையும் நூற்றிப்பத்து (110) பாடல்களில் பரவசமுற உனக்குக் கூறியிருக்கின்றோம், நீ இவைகளை உன் பூஷணமெனப் போற்றி அதன்படி ஒழுகி வருவாயாக!



மனிதரென்று பிறப்பமைந்த மக்கள் தங்கள்
மனவலிமை தளராம லிருக்க வேண்டும்
தனிமைதனி லமர்ந்துசில நிமிட மேனும்
தனதுபுல னமைதியுறப் பழக வேண்டும்
இனியசுக வாழ்வு தாழ்வெல்லாம் வல்ல
இறைவனருட் செயலென்று உணர வேண்டும்
புனிதமுள அருளொளியைத் துதிசெய் துங்கள்
புகழ்பரவப் புவிவாழ்வு வாழ வேண்டும்.



வெற்றி !

# 2. திருப்புகழ் திரவியம்.

## ஜெகன்மாதா துதி.

கைத்தல நிறைகனி என்ற இசை.

தந்தன தன தன
தந்தன தன தன
தந்தன தன தன......தனதான.

ஜெய ஜெய மென பொது
வருளொளி சபை மிக
விமரிசை யுற புக......ழதுகியாதி.

ஆதிபரம் பொருளின்
ஜோதியறிவைத் தெய்வ
வீதிவெளியில் கலந்......துறவாடி

சாதிசமரச மென்
ரோதிய திலுள நன்
நீதி நிழலை விட்டு......விலகாதே

இத்ததி தனிலுயர்
சத்திய நெறியுள
உத்தம ருயர் பெயர்......புகழோங்க.

நித்தியம் பரனடி
முத்திகள் தருமென
பக்தி செய்யற நிலை......மயமாக

ஒப்பில்லா மனிதர்கள்
தப்பிதங்க ளொழிய
எப்பொழுதுங் கடமை......வழுவாதே

நற்றவ உயர்வழி
கற்றவர் கட னென
பற்றறப் பணிபுரிங்......திடவாரீர்

அப்படியாயின் ஜெக
சுப்பம்ம தேவி வெகு
செப்ப முட னருளை......யருள்வாளே (ஜெய)

வேறு சந்தம்.

தத்தத்தன தத்தத்தன
தத்தத்தன தத்தத்தன
தத்தத்தன தத்தத்தன......தனதான.

அட்டப்பர வெட்டத்துரி
நெட்டத்தரை கிட்டக்குறி
சுட்டத்திரி இட்டத்தொளி......பளீராக

நிட்டைக்குயர் பட்டப்பகல்
திட்டப்படின் கெட்டிப்படும்
மட்டித்தனப் பட்டிப்பயல்......மனதாரும்

எட்டுக்கயி றிட்டுப்புவிக்
கட்டுக்குனே மட்டுப்பட
விட்டுக்கொடின் துட்டுப்பெரு......துனதாவி

கக்கக்கலி பக்கப்பல
மக்கட்கெனத் தக்கத்துணே
புக்கப்பொருள் மிக்கத்தர......நினையாதே

இக்கட்டினை சுக்கெட்டென
துக்கக்கடல் சிக்கச்செயின்
எக்கெக்கென சொக்கச்செயு......மிறைபாதம்

நச்சப்பட வச்சப்படு
பச்சத்தொடு விச்சத்தினை
நிச்சத்திய வுச்சிக்குயர்......வெளியாக

தச்செட்டடி வச்சுட்டுள
மச்சுப்படி குச்சுக்குளே
சுச்சைப்பிடி பச்சைப்புரு......நடமாடும்

பத்திப்பவ தத்தித்தடு
மத்தித்திடல் சுத்திச்சுடு
புத்திக்கிது முத்திக்குறை......விடமாகும்

எப்பப்பனே தப்பித்துயி
ரொப்பிப்பது முப்பாழிடம்
செப்பச்செய லப்பாகெதி......கிடையாது

குற்றத்தினை சற்றுற்றுனை
சுற்றிச்சுழ லற்றுற்றமர்
பற்றற்றடி பெற்றின்புறு......தவயோகம்

தொந்தந்தென வந்தெந்தனை
பந்தங்களை வெந்துந்தெழ
உந்தன்துணை தந்தாதரி......உயர்தேவா

அய்யாஜெக மெய்யாவருள்
துய்யாபவஞ் செய்யாமலே
பொய்யாதவ முய்வாய்பக......வதிதாயே

அண்டம்புவி பிண்டங்களை
தொண்டன்சதா கண்டன்புளங்
கொண்டுன்பதஞ் செண்டாயெனக்...கருள்நீதா

நெஞ்சந்தனில் கொஞ்சும்படி
விஞ்சைமொழி மிஞ்சின்புலன்
கெஞ்சும்பதி துஞ்சாதுயர்......பதமோனம்

அங்கங்களின் பங்கங்களைந்
துங்கங்கழல் தங்கந்தர
மங்காதருள் சிங்காரமெய்......வரந்தாராய்

தும்பம்புரி வம்பர்விடு
மம்பாலுடல் வெம்பாதுற
எம்பாலுளங் கும்பாதிறை......துணையாமே

நல்லல்லவர் கல்லாதவர்
அல்லல்பல பொல்லாதுற
இல்லாதது சொல்லாதொழி......இறைவா நீ

---

பேரறிவுடைய செல்வர்களே! பின்வரும் பாடல்களை, இலக்கண ரீதியில் எதுகைமோனை கிடையாதே எனக் கருதி விடாமல், அருணகிரிநாதர், பதஞ்சலி முனிவர், திருப்புகழுக்கு ஒப்பாய் ஆனந்தக் களிப்புடன் பாடிப் பொருளை உணர்ந்து புண்ணிய பிராப்திக்கு ஆளாகுங்கள்.

— பல்லவி —

தனன தன தனன தன
தனன தன தனன தன
தனன தன தனன தன - தனதான

## நலனுற்ற நாட்டின் அமைப்பு.

பிழையகல மழைபொழிய
விளைவதிக முயர் பெரிய
மனிதருள தவநாடு...நாடாகும்.

(க--ரை) காலமழை பெய்து கழனி விளைவுற்று குற்றஞ் சிதைந்து, நற்றவம் உயர்ந்து, அறிஞர்கள் மிகுந்து உலவும் நாடுதான் நன்னுடாகும். இல்லையேல், அந்நாடு காடெனவே கருதப்படும்.

அரசரிய மதியூகி
யதியுன்னத படைகுடிக
ளுயர்நீதி வழுவாத...ததுதேசம்.

(க—ரை) கடமை வழுவாத நியதியும், மடமை இருளற்ற மக்களும், வீரசுவர்க்கம் விரும்பிய படைகளும், விவேகம் மிகுந்த அமைச்சரும், அரனருள் பெற்ற அரசனும், அமைந்த தேசமே சிறப்புடையதாகும்.

புவிமுழுது முழுதுபயி
ரிடுவதினு லுலகமனு
பசியணுகி யலைந்துலகில்...மடியாது.

(க—ரை) தஞ்சம் புகுந்துள்ள பஞ்சத்தை அஞ்சி ஓடச் செய்ய உழவுத் தொழில் உயரவேண்டும். நஞ்சை புஞ்சை அனைத்தையும் தரிசு கிடவாமல் சாகுபடி செய்தால் பசி நோய் அணுகி மன்பதைகளைத் துன்புறுத்தமாட்டா.

உழையுலக நலனுனது
நலனெனவே சளையாது
பழமைபுதி ரெனபுவியில்...புகழோங்க.

(க—ரை) பழையன மறைந்து, புதியன புவியிற் புகழ் ஓங்கக் கருதிச் சற்றேனும் பின்னடையாமல், கடமையை உனது கண்ணிமை போன்று கருதி ஆக்கந்தரும் வரை ஊக் கமுடன் உழைக்க முற்படு.

பெயரளவி லுனதுபுகழ்
அழகுறுதல் பயனிலநற்
செயலளவிற் பணிபுரித...லழகாகும்.

(க—ரை) உத்தமர்கள் போற்றத்தக்க உயரிய கடமை களைச் செய்கையிற் செய்து சிறப்பிக்க வேண்டுவதிருக்க, பெருமையாகப் பெயரளவிற் பேசி வாயளவில் இடம்ப மடித்துத் திரிவதில் என்ன பயனுளது? அரும்பணி புரிதலே அழகெனத்தகும்.

## இல்லற நெறியின் இயல்பு.

சதிபதிக ளிருவர்களு
மொருமையுட னறநெறியை
குறையறவே புரிவதுதா...னிகமாகும்.

(க—ரை) ஆக்கமளிக்கும் அறநெறியாகிய தருமத்தைப் பிழையறப் புரிய ஒருமையுடன் ஒன்றுபட்டுள்ள மனைவி மணாளனிருப்பிடம் எதுவோ, அஃதே திருவுற்ற மனையெனப் போற்றப்படும்.

சினமிகுதி பெருகியுயர்
குணங்குறுகி பணங்குவிய
திருவருளி லாதகுடி...குடியாமோ.

(க—ரை) மதி இழந்து மாயச் செல்வங்களைத் தேடிக் குவிக்க மனம் இசைந்து, கோபஞ்செறிந்து குணங் குறைந்து இலட்சுமி கடாட்சமற்ற இல்லம் ஓர் இல்லமாகுமா?

திதியுபய ராசிகண
மிகினுமண மகள்மகனு
மதிலொருவர் குணமிலெனி...னிகமாகா

(க—ரை) நாம நட்சத்திரங்களைப் பார்த்துப் பொருத்தம் சரியெனப் பெண்பேசி, ஆடம்பரமாக விவாகச் சடங்குகளை நிறைவேற்றினும், மணமக்களில் ஒருமைக் குறைவு இருப் பின் சுணங்கனும் களிச்சட்டியும் போன்று, இல்லறம் அல்ல லுற்று அழிந்துபோகும்.

புதல்வர்பல பெறுவதினு
லதிலதிக விசனமுள
சிலதனய ருயர்மதியால்...புகழோங்கும்

(க—ரை) ஆகாத பிள்ளைகளை அளவுகடந்து பெற்று அல்லலுறுவதைப் பார்க்கினும், ஒரு சில மக்களை ஈன்று உன்னதமார்க்கம் அறிவித்து நற்கதி அடையச் செய்தலே பெருமையாகும்.

பசிதணிய உணவுமுத
லுடைகள் கொடையளியதனுல்
நசியுமுன தகங்கார...மொடுபாவம்

(க—ரை) இடு கொடுவென்ற உண்மை உணர்ந்து, உண்ண உணவும், உடுக்க உடையும் நிதானமறிந்து பரிச ளிப்பாயானுல், அரன் அருள் ஓங்கி, அறியாமையாற் செய்த பிழை நீங்கப்பெற்றுப் பசியாறிச் சென்ற மக்களின் வாயுரை வாழ்த்துக்கும் உரித்தாகுவாய்.

பொறுமைதனை யிழந்தரிய
குருவுரையின் வழிதவறி
வறுமைகுடிகொண்டலைவர்...வெகுகோடி

(க—ரை) புவிப்பற்றற்ற குருபிரானுணர்த்திய நல்வழி தவறி பொறுமையிழந்து, பொருமையுற்று ஏழ்மை குடி கொண்டு இல்லக்கிழத்தியோடலைபவர்கள் அனந்தகோடி.

கலியுலக மிதனில்நடு
நிலைமையொடு வாழ்பவர்கள்
கவலைபிணி யணுகியுழல்...நிலையாகார்

(க—ரை) இன்ப துன்பம் இரண்டையும் நண்பனாகக் கருதி, நடுநிலையாக வாழ்பவர்கள் இக்கலியுலக உழல் நிலை சூழ்ந்து பெரிதும் பாதிக்கப்படமாட்டார்கள்.

## ஆரோக்கிய சரீரம் அவசியம்.

உணவுபசி வரவுதெரிந்
ததனினிய சுவையுணரா
தருந்திவரப் பழகுதவப்...படியாகும்

(க—ரை) பசியறிந்து உண்ணத்தக்க பதார்த்தங்களைச் சுத்தங்கண்டு சுவைகாணாதிருத்தலே, தீனியாசையை ஒழித்துச் சிவாம்சம் பெறத்தகுந்த உயர்வழியாகும்.

அதிகாலை விரைவிலெழுந்
தரியவுன துடலைமிக
விதியொடுநற் சாதனைகள்...புரிவாயே

(க—ரை) இயற்கை அன்னையினருளால் கிடைத்தற்கரிய நினது உடலை, நோயாகிய பேய்வாய்ப்பட்டு உழலாவண்ணம், காப்பாற்றும்பொருட்டு அதிகாலைதோறும் நம் மூதாதைகள் வகுத்த யோகாசனங்களைப்புரிந்து சுயசேவையைப் பூர்த்திசெய்துகொள்.

நவவழி செலாதுனது
சுழிமுனையி லுயிர்பரவத்
தெளிவுறச்செய் சிவராஜ...நடுயோகம்

(க—ரை) உந்தியிலிருந்து உதயமாகி உச்சி நிலைவரை பரவியுள்ள சூட்சநரம்பாகிய நடுநாடி அந்தரார்த்த முணர்ந்து, பிராணனை வெளிச் செல்ல விடாது உள்ளே ஊதிச் சிவராஜ யோகம் பயிலப் பழகு.

உரமாகி வுயரமடி
யுறநாவு சகரநிலே
சரமேவி யருகிலுட...லழியாது

(க—ரை) அண்ணுக்கை உண்ணுக்கோடு ஏற்றி மடித்து மேல்வாசலே அடைத்தால், சுவாசமானது கபால வெளியாகிய சகஸ்திரஸ்தல நிலேயை ஊடுருவிப்பரவி, ஆயுள்விருத்தியைத் தருவதோடு உடலேயும் திடனுறச் செய்யும்.

அளவெதிலு மிகுதியுறின்
பலசிதைவு தொடருமுடல்
கெடவழிக ளதிலுளது...சமமாய்நில்

(க—ரை) மிஞ்சின அமுதமும் நஞ்செனக் கருதி உடலேக் கெடுத்து உயிரைப் பாதிக்கும்படியாக, எச்செயலேயும் மிதமிஞ்சிடாது நடுநிலே கண்டு அளவோடு சாதித்து நிற்றல் நலந்தரும்.

## அனுபவப் பெரியார் தொடர்பு.

வயதிலதி முதிய பொதி
யுடலிலொரு பயனிலநல்
லறிவிலுய ருடையவரோ...டுறவாடு

(க—ரை) அந்தி பகலாக அறுசுவை உணவுகளே அருந்தித் தொந்தி பெருத்த பூதஜடலங்களேக் கண்டு, அறிவுமிகுதி இருக்குமெனக் கருதிவிடாமல் சிறிய உடலேயாயினும் அறிவிலுயர்வும் அனுபவ முதிர்ச்சியுங் கண்டு கலந்து உறவாடு.

அறிவிலுய ருடையவர்க
ளெவரெனினும் பெரியவரே
சிறுமதியோ ரடவிவளர்...மரமாகும்

(க—ரை) பேரறிவுடைய பெரியார்கள் எவரும் மரியாதைக்குரிய மகத்துவம் உடையோராகும். பகுத்தறிவற்ற பாமரர் எவரும் வனத்திற் பெருத்த மரத்திற்கு ஒப்பிடப்படுவர்.

இறுதிவரை யுறுதியுள
பெரியதகை யுடையவர்கள்
பருதிமதியது போலிறை...யடிசேர்வர்

(க—ரை) நற்றவ வழியிற் சற்றும் பின்னடையாத பொறுமைக் கடலுக்கொப்பாகிய புண்ணியவான்கள், இறுதி எல்லையை அணுகும்வரை நின்ற நிலை பெயராது அரியதவம் புரிந்து இறையடி சேர்வர்.

வழிதவறி வாழ்வதுயிர்
விழுவதென வேகருதி
மனதுணர்வு பெறுமவரே...மனிதாம்சம்

(க—ரை) ஆக்க வேலைகளில் ஊக்கஞ் செலுத்தி, உணர்ச்சியோடு ஆவனசெய்ய முனைந்த அறிஞர் எவரும், திரிகரண சுத்தியின்றி நெறிதவறி வாழ்வதை, சவவாழ்வென எண்ணி வெறுப்பர். அவரே உயரிய மனிதாம்சம் உடையவர்.

எதுவரினு மதுநமது
பொதுவிதிக ளெனவுணரின்
சதியணுகிச் சுழல்வலையுள்...வீழார்கள்

(க—ரை) வருஞ் சுகமனைத்தையும் வரவேற்று இன்புற்றுத் துக்கத்தை வெறுப்பது வெட்கத்துக்கு இடந்தருமென மதித்துச், சமபாவனையோடு இருப்பவர்களைச் சதியாகிய சண்டாளன் அணுகி அவர்கள் மதியைக் கலக்குறச் செய்யான்.

கலைபயில முயலுவதி
லுயர்பதவி யெவையெனிலுன்
னலைமனது நிலையுறுவ...திறைபாதம்

(க—ரை) ஓடியாடி உழலும் மனதை அடக்கி அருளானந்தக் களஞ்சியத்துள் பதுங்கியிருக்கச் செய்தலே, கலையாதி ஞான போதனைகளைக் கற்பதாலும் கேட்பதாலும் அடைய வேண்டியது. உத்தியோகத் தோரணையில் உயரிய பட்டம் பதவிகள் பெறவன்று.

## தேசப்பணியே சிறந்தது.

கலகநிலை யுலகமிதில்
நலமெதென வுனதறிவா
லகவெளியி லுணர்வதுயர்...கடனாகும்

(க—ரை) கட்சிப்பிளவுகள் மிகுந்த தற்கால நிலையை உணர்ந்து, அகவிழி திறந்து ஆராய்ந்து, ஆவனசெய்ய முனைந்து ஒழுக்கம் காத்துப் புவிப்பணிபுரியப் புறப்படு. அவையே நினது கடன்.

கடமை புரிவதிலுறுதி
திடநிலையை யுடையவரே
மடமையிருள் நீங்கினநல்...லதிதீரர்

(க—ரை) அறியாமை அந்தகம் நீங்கிய தீர புருடரே, திடவைராக்கிய வாளாயுதம்தாங்கி ஏற்றகடமையைச்சிறிதும் வழுவாது ஒருநிலை நின்று செய்துமுடிப்பர். மற்றவர் திறன் அற்றவர்.

உதயாதி முதலுனது
இதயாதி கமலமலர்
சிதையாத விதமுணர்கண்...மனதார

(க—ரை) அல்லும் பகலுமாக இயற்றத் துணிந்த கடமையின்கண், இலட்சியக் குறிவைத்து முடிக்கவேண்டும். அப்படி அல்லாது, உலகப் பராக்கில் உழன்று இதய சிதாகாய உறுதியைத் தளரச்செய்துகொள்ளாதே.

எதிருலகி லுறுமிளைஞ
ரதிகமதி யுடையவராய்
விதியுள நற்கடமைகொள...வரவேணும்

(க—ரை) விஷ விருட்சத்தை வேரறக் களைந்து, நீதி விதையை விதைக்கப் பல அவதார புருஷர்களை இறைவன் அவனியில் ஏவி வருங்காலப் படலத்தை மாற்றியமைப்பின், அப்பொழுதுதான் அறநெறிகாக்கும் மனிதன் தன்கடமையை உணர்ந்து ஏற்றுக்கொள்ளுவான்.

அழகு தருகுவ துனது
வரியகடன் முடிவுமுக
மலர்வுமகப் பொலிவுமிதற்...கிணையேது.

(க—ரை) மாசற்ற நெஞ்சமும், மலரிதழ்போன்ற முகமும், மங்காப் புகழ் தரும் மொழியுமே, நித்திய சிங்காரமாகத் திகழ்ந்து, உடலோடிருந்து உறுதுணைபுரிந்து கடமைசெய்யத் தூண்டுவதல்லாது, வீணான செயற்கையமைப்பில் அழகேது?

## நீதிவழியே புகழ் தரும்.

பிறவியெனுங் கருவிலுரு
பெறப்பெரிய படுகுழியில்
கரணமிட யினியொருகால்...நினையாதே.

(க—ரை) பிறவி ஒழிக்க வந்த நீ, மீண்டும் கருக்குழியைக் கருதிக் கட்டுண்டு, பிறவிப் பிணி உடலையும் போர்த்துப், பந்தபாசமாகிய கயிற்றைச் சுருக்கிட்டுக் கழுத்தில் மாட்டிக் கொள்ளும்படியாய், வந்தவழியாகிய அந்தகாரக்குழியுள் பாய நினைக்காதே.

மமதையுரு வளரவழி
யெதெனின் மதன் கொடிய கணை
யுனையுருவிப் பாயும்விழி...வழியாக.

(க—ரை) அகங்கார மமதைகள் வளரவும், ஆசை உருவாகி ஆபாசப்பள்ளத்தில் தள்ளிவிடவும், மன்மதன் எறியும் மலர்க்கணைகள் மார்புருவிப் பாயவும், காரணமாக நிற்பது இரு கரிய விழிகள்தான் எனக்கண்டு அடக்க முற்படல் வேண்டும்.

திரை மறைவிலொருவர் குறை
பறையறைய பலரிகழக்
கறைபடிய உனதுபெய...ருலவாதே.

(க—ரை) மகத்துவமிக்க மானிடயாக்கை தரித்து, மாதா பிதா சூடிய திருநாமங்களோடு அவனியில் உலவும்போது, பிறர் குறை கண்டுபிடிக்க முயன்று தன் குறைகளை மறைத்துக் கோளுரை கூறிப் பறைசாற்றிப் புறம்பேசித் திரிந்து நற்பெயர் கெடுமாறு நாட்டில் உலவாதே.

திடுமெனவே கடுமொழிக
ளொருவர் மனம் வடுவுறநீ
கொடுமையுட னதிவிரைவி...லேசாதே.

(க—ரை) எவரிடமும் இனிய மொழிகளை உரையாடி, அன்புகூர்ந்து அவனியில் வசிக்கவேண்டுவதிருக்க, எத்தகையோரின் மனதையும் புண்படுமாறு கோபாவேசக் குறியுடன் பேசாதிருக்கப் பழகல் நலன் பலதரும்.

கிளிமயிலு கழுகுபுலி
பறவைவிலங் கினங்களைநீ
கலங்கிடக்கல் கவணெறிந்து...வதையாதே.

(க—ரை) இச்சக ஜீவ சிருஷ்டி அமைப்பிலுள்ள மன் பதைகள் யாவையும், இறைவன் எழுந்தருளிய ஆலயமென மதித்து எக்காரணங்கொண்டும் இம்சை செய்யாதிருத்தலே காருண்ணியக் கண்திறக்க ஏதுவாகும்.

தாய்முதல் பிதாவுனது
சோதர ரோடாசிரியர்
மாசற நன்மன மகிழத்...தயைநாடு.

(க—ரை) பெற்று வளர்த்த பிதா மாதாவுக்கும், கற்றுக் கடைத்தேற மார்க்கம் அருளிய சற்குருநாதனுக்கும், தொண்டுபுரிந்து, அவர்கள் அகமகிழ்ந்து கூறும் நல்லாசியை எதிர்பார்த்திருப்பவனே சற்புத்திரன்.

இதயமதி லுதயமுள
புதையலருள் மொழிகளென
சிதைவுற வொணுதுதின...மிகப்பேணு.

(க—ரை) குற்றமற்ற உனது உள்ளத்திலிருந்து உதித்து எழும் அமுத மொழிகளை, மறதியாகிய பிச்சைக்காரனுக்குப் பரிசளித்துவிடாமல், தினசரிக் குறிப்பில் பதியவைத்துப் பாது காத்துவந்தால் பிறிதொருகால் பெரிதும் நன்மை பயக்கும்.

ஒரு சோதி யுலகிலிறை
யலதேது சாதிமுறை
யெனப்போதி யதுநீதி...நிறையாகும்.

(க—ரை) ஆதிபரம்பொருள் ஒன்றைத் துணையாகப்பற்றித், தெய்வீக உறவாட விரும்பிய நீ, சமயபேதப் பூசல்களைப் பேசும் பூதங்களுக்கு இடங்கொடாமல், அருவ சைதன்ய சோதியை அறிந்துய்யும் படியான தருமோபதேசங்களைப் புரிவாயாக.

## மாக்களறிவுடையோர் இயல்பு.

கரியநிறை யிருளெனவே
நரிகபட குணமுடைய
நரமனித ரெவரெனினு...மிருகாம்சம்.

(க—ரை) நான்கு கால் விலங்கினங்களில் ஒன்ருகிய நரியைப் போன்று, வஞ்சகம், பொருமை மிகுந்து, குணங் கெட்டுக் கபட உரைகளாடி, இம்சை புரியுந் தொழிலேத் தோழனுகக் கருதியுலவும் மனிதாம்சத் தோற்றமுடைய எவரும் மாக்களினத்தைச் சார்ந்தவர்களேயாம்.

இதுதகுதி யிதுதகுதி
எனமிகுதி வுயிர்வதைகள்
தொகுதியுறப் புரிபவர்கள்...படுபாவி.

(க—ரை) அஹிம்சை என்பது அங்க அமைப்பில் அணுவேனுமின்றி, தகாதவைகளேயெல்லாம் தகும் தகுமென மதித்து, ஆங்காங்கு ஜீவ வதை புரியும் அறிவிலிகளேப் படுபாவிகளெனப் பலரும் இகழ்வார்கள்

பலிபலது புரிவதினு
லறநெறிகள் தவறிமழை
யவனிதனில் குறையயக...விலேயேறும்.

(க—ரை) நச்சுக் கொடிபோன்ற பாவிகள் மிகுந்து, சத்தியப் பூஞ்செடியைச் சூழ்ந்து வளர்ந்து ஓங்கச் செய்யாதபடியால், பெரியார்கள் கூறும் அறவழிகளேயுந் தாண்டி ஆங்காங்கு பலிகள் பரவி விண்ணமுதமின்றி, விளேவற்று பஞ்சமணுகி அகவிலேயேறி, அகதிகளாக மக்கள் அலேகின்றனர்.

சதிபரவி நிதிகுவியப்
பலதொழிலே யதிவிரைவில்
நலதுபிழை யுணர்வதிலே...நிகழ்காலம்.

(க—ரை) நன்று தீது உணர முற்படின் பெண்டு பிள்ளேகள் பிழைக்க வழிகிடையாதெனக் கருதி, சதித் தொழிலாக இருப்பினும், நிதிக்குவியல் கிடைத்தால் போதுமானதென எண்ணிக்கண்மூடி உழைத்து வருகின்ற காலமே கலிகாலமெனப்படும்.

முதுகுரவ ருளபொழுது
புவியிலொரு குறையணுகி
நரகவதை யுறுபவர்கள்...கிடையாது.

(க—ரை) வாழ்க்கை வழி வகுத்த மூதாதைகள், ஆண்டு சென்றகாலக் கணிதத்தைக் கணக்கெடுக்குங்கால் அறநெறி தவறி அழிந்து ஒழிகின்ற மக்கள் மிகுந்து, இவ்வாறு கொடிய சூழ்வினைத் துன்பங்களை அனுபவித்தவர்கள் கிடையாதெனக் காணக்கிடக்கின்றது.

மரணமறதிகள் பெருகி
யரனருளை யொருதினமுந்
திரனுடனே துதியாது...மடிவார்கள்.

(க—ரை) மேற்கூறிய சண்டாளர்கள், அத்தன் அருளைப் பெற்றுய்யும் ஆற்றலின்றி, சித்தத்திடனையும் இழந்து ஜென்ம சாபல்ய வழியும் உணராமல் உடலைச் சதமெனக் கருதிக் கண்டவிடமெல்லாம் அலைந்து அழிந்துபோகிறுர்கள்.

அவயவ மதனையொடுங்கச்
சிவயநமவெனும் பொருளைக்
கயவரறிந் துணர்வதெனி...லியலாது.

(க—ரை) ஜீவான்மாவை இயக்கிப் பரமான்மாவிடம் சேர்ப்பிக்கத் தகுந்த சிவயநம என்னும் உட்பொருளை, உபாயமாக அறிய இயலாமல் நாஸ்திகம் பேசும் நயவஞ்சகக் கயவர்கள், சற்றுநேரமேனும் புலனெடுங்கிப் புவியில் உலவ முடியாது.

கொலைகளவு முதிரவிலை
மகளதிக மாகிவுயர்
தவமழிய உலகழியு...மிதுகாணீர்.

(க—ரை) தவமழிய உலகழியுமென ஆன்றோர் உரைத்த திருவசனமொப்ப, விபசாரம் பெருகிக் கொள்ளையுங் கொலையுந் தாண்டவமாடித் தற்கால உலகு தலைகீழாகச் சுழல்வதைக் கண்கூடாகக் காணுங்கள்.

தலைவனெவ னவனிதனி
லலைகடலின் முதலையெனப்
பவனிவரும் மனிதனென...நினையாதே.

(க—ரை) கருங்கடலில் வசிக்கும் முதலைபோன்று, முற்கூறிய மோசம் புரியும் ஆசார பூசிதர்கள், நாடோறும் சுற்றி பேரறிவாளர்களைப் போன்று நடித்து, மக்களை ஏமாற்றிப் பொருளீட்டத் திரிந்து அலைகின்றனர். அவர்களைச் சன்மார்க்கத் தலைவர்களெனக் கருதி மயங்கிவிடாதே.

**தீட்சை பெற்று அருளைச் சேகரி.**

இறுதிமுடிவ திலுனது
நாதஒலிநீ யெனவே
சுருதிமுடிவது புகல்வர்.. குருவாகும்.

(க—ரை) நாதமும் விந்துவும் நாமேதான் எனக் கூறிச் சுருதி முடிவான பொருளைச் சுட்டிக் காட்டிச் சொல்லாமலே சொல்லி உன்னை உனக்கு உணர்த்துபவர்தான் உனது ஆன்ம குருநாதர். அதற்கு அடையாளம் அவர்மீது உனக்கு ஆனந்தமேலீடு அதிகமுண்டு!

ஜெகமுழுது மொருகணமுள்
ளகமதனி லறிகுருவை
நிகரிலிறை யெனவேதுதி...புரிவோமே.

(க—ரை) இமைக்குமுன் இகபரம் இரண்டையும் ஒளியுலககாட்சி வடிவாகக் கண்டு உறவாடி, உலகில் உலவும் உத்தமக் குருதேவனை, இறைவன் அவதாரமெனக் கருதி சதா அவர் பொன்னடி தொழுது பூஜிக்கலாம்.

மவுனமணி மொழிகளையே
செவியுணவுபெற பெரிதும்
மனமகிழ உரைசெய்குவ...ருபன்யாசம்.

(க—ரை) செவிக்கு உணவாகத் தித்திக்கத் தக்க அமுத மொழிகளைச் சதா மனமகிழ்வுடன் மவுன சைதன்ய வீடுற்ற ஆசான் உபன்யாசம் செய்தவண்ணமாகவே இருப்பார்.

ஒருமுறை நல்லமுதமொழி
புகலினதை மிகவெளிதாய்
செவிகுளிர உணர்பவர்தா...னுயர்மாணர்.

(க—ரை) சன்மார்க்க போதனை முதல் சாதன சதுட்டய உபதேசங்களைக் குருபிரான் திருவாக்கிலிருந்து உதயமாகு முன் எளிதாய் உணர்ந்து, சிந்தித்து, தெளிந்து, தெளிந்த நிலையில் நிற்கும் திறனுடையவரே உத்தம மாணக்கராவர்.

ஜெயமுருகனருள் பெருக
குருவருக வருகவென
இருளகலப் பொருளுணர்த...லுயர்வாகும்.

(க—ரை) அரன் அருள் பெற உயர்வழிகாட்டிய சற்குரு பெருமானைக் கண்டால், ஆனந்தமுடன் வரவேற்றுப் பணி விடைபுரிந்து, பாதபூசித நீராடி வாழ்த்துரை பெற்று, உண் மைப் பொருளை உணர்ந்தறிந்து, பொன்னுலக நாட்டமுறு வதுதான் இறுதிமுடிவான இன்பம்.

**பருவத்தில் அருவத்தை உணரு.**

அழபுதல்வருனை யேசக்
கிழவடிவுதிரை நரைகள்
வருமுனமே குருபணிசெய்...விரைவாக.

(க—ரை) நற்றவம் புரிந்து பெற்றுவளர்த்த புதல்வர் களும் திட்டி இகழுமாறு திரை, நரை, பிணிகள் அணுகி கிழ வடிவுற்று மடியுமுன், பருவதசையிலேயே ஓர் உயரிய குரு பிரானை அடுத்துத் தொண்டுபுரிந்து நற்பதவி நாட்டத்தைப் பெற்றுக்கொள்.

கரசிரமோடுடல் வளைய
அடியவர்களடி தொழுது
படியின் மிடியகலநல்ல...வழிகேளு.

(க—ரை) பற்றற்ற பரமசாதுக்களாகிய ஜீவன் முத்தர் களைக் கண்டால், அவர்கள் திருவடி போற்றித் துதித்து அங் கம் ஒடுங்க ஆவனசெய்து, இம்மாயா உலக மயக்கை ஒழிக்க மார்க்கமுளதா எனக் கேட்டுத் தெரிந்து கொள்.

மயிரிழை போலுயிர்குறுகி
வயிறுபொருமி யிருமியுடல்
மடியுமது தருணமதி...லெதுவாகும்.

(க—ரை) ஜீவான்மா சிறுத்துச், சேட்டுவ மிழுத்துக், கோழையடைத்து வயிறு ஊதி உயிர் பிரியுந்தறுவாயில் எக் காரியங்களையும் சிந்திக்கவோ செய்யவோ,முடியாது போகும்.

அடியிவனை பிடியிடையி
லிடியெனவே யெமபடையர்
தடியோடவ ரெதிரோடி...வரும்நாளில்.

(க—ரை) தான் தேடிய நன்று தீதிற்கு ஏற்றவாறு அடி, பிடி, வெட்டு, குத்து, கட்டு, இழுவென எமதூதரென்னும் பவசாகரம் எதிரோடி நின்று வழிமறிக்கையில், யாதும் அறி யாமல் திகைக்க நேரிடும்.

தொழுதுவிழி யழுதிறையை
பழுதுபட பவமகல
வரமதனைப் பெறுவதெனின் ..முடியாது.

(க—ரை) அரியதவம் புரியும் பருவம் தவறி மடியுந் தரு ணத்தில், பரமனை நாடிப் பவசாகரக் கடலைத் தாண்ட வரப் பிரசாதங்களைத் தாவெனக் கூவி அழுவதினால், யாதொரு பயனும் பெற இயலாது போம்.

கடமிதனை யுடனழியு
மெனமனது திடமுடனே
வடதிசை யிலுறை செய்வது...தவமாகும்.

(க—ரை) தக்க பருவமாகிய இத்தருணத்தில், ஊன உடலை நிலையற்றதெனக் கருதி, உருவத்திற்கு உத்தரதிசை யாகிய திரிபுடையில் மனதை நிறுத்தி, அமைதியுற்று அரிய தவம் செய்ய வேண்டுவது அவசியம்.

குயிலினும் நல்லினியதொனி
யுறபரனைக் குரலெழ நீ
கூவியொருகண மெனினுங்...துதிபாடு.

(க—ரை) உனது இனிமையாகிய நல்லிசையெழ உலக ரட்சகனைக் கூவி அழைத்து, உள்ளம் சிலிர்க்க ஒவ்வொரு நாளும் அன்புடன் சிறிது துதிபாடித் தொழப் பழகு.

**ஆனந்தம் அமைதியில் உளது.**

பலவுயிரு மொருவனென
உலகுதனி லொளிமயமா
யிரவுபகலற வுளதோர்...பொருளாகும்.

(க—ரை) பகல் இரவற்ற பரமபிதாவாய், ஜீவன் அனைத்திலும் சின்மய வடிவாய், ஒன்ருய், பலவாய், உலகமுதல் வனாய், ஒளிக்குள் ஒளியாய் நின்ற நிலையில் என்றுமுளதாய், எது உளதோ! அதுவே அழியாத மெய்ப்பொருளாகுமெனக் காண்.

பரவெளியில் நடனமிட
வருவதரு ளொளியெனினும்
திருவருளி லாதவர்க...ளறிவாரோ?

(க—ரை) பரமண்டலமாகிய விண்ணுலகவெளியில், சதா திருவிளையாடல், புரியும் அருளன்னையாகிய தன்னைத்தான் உணரும் சூட்சத்தை, மோட்சசாம்ராஜ்ய விருப்பமற்ற வீணர்கள் அறிவதெனில் சாமான்யமா?

அனவரத மெதுவுளதோ
அதுநியதி யதுநியதி
யதுசோதி யழியாத...பரஞ்ஜோதி.

(க—ரை) அம்பரம், பரம் பராபரமாக வியாபித்துள்ள செம்பொருளொன்றே நம்பத்தகுந்த பொருளாய்ச் சிரஞ்சீவிச் செல்வமாய்க் காட்சியளித்துக் கருணைவடிவாகப் புவியை ஆட்சி புரிகின்றது.

அழிவதெலா முருவமலா
லருவமதி லொருபோதும்
மருவுறுதல் கிடையாதென்...றுணர்வாயே.

(க—ரை) சந்தேகமற்ற சைதன்ய நிழலில், இவ்வுருவ உலகம் தோன்றி ஒடுங்குவதல்லாது, நித்திய சோதியாகிய நின் மலவடிவில் மாசுற்று மங்கிக் குறைய யாதொரு காரணமும் கிடையாதென உணர்.

அகவெளியில் சுகமுணரக்
ககனவழி கெஜகரண
மதுபுரிய மவுனமது...மிகமூடும்.

(க—ரை) ககனக் கண்ணுகிய கமலாசன மேடையிலேறி அந்தர்முகமாகிய அன்ன ஊஞ்சலிலேதாவி, அமைதியாகிய மலரணையின் மீது சாய்ந்து நினைப்பு மறப்பற்ற நித்திரை புரிந்தால் ஆனந்தமென்ற மௌனம் அடங்காச் சுகத்துள் ஆழ்த்திவிடும்.

நிலைநில்லதில் நிலைநில்லதில்
நிலைநில்லதில் நீயாகி
நினைவு மறதிகளற நீ...நீயாய்நில்.

(க—ரை) புண்ணிய பூமிக்கு உரியவர்களாகிய மக்களே வரும் மேற்கூறிய அன்னியமற்ற அருவநிலையில், நிட்களங்கமாக நிட்டை கூடிப் பற்றற்றுப் பரவடிவமாய்த்தானே தானுகி நிற்பரேல், அதுவே பரமபதம்.

**மாசற யோசனைசெய்து உணர்.**

கடவுளுள ரிலையென்பர்
பலபிளவு ட்டமனித
ரிடறியிழி குழிவிழுத...லறிவீனம்.

(க—ரை) உலகைப் படைத்தவர் உண்டா இல்லையா எனச்சதா சச்சரவுகள் பெருகி, வளம்பெற்ற தாய்நாட்டை கலங்குற்று உழலப் பல பிளவுண்டாக்கி, வீண்வாது புரிந்து, பள்ளாங்குழியெனக் கருதிப் படு குழியில் வீழ்ந்து உழல்வது பகுத்தறிவற்ற பாமரத் தன்மையே அல்லாது வேறன்று.

கடவுளறி வெனவுமது
கடமுளுள தறிகுவீரென்
றுபநிடத மொழிபுகன்றுர்... தாயுமானுர்.

(க—ரை) மாயச்சூதாடிய மேடையை நிகர்த்த இம்மகிதலத்தில், சேயையணைத்து அமுதூட்டிய தாயை நிகர் தயாபரத்தவயோகத் தாயுமானுர், அறிவே கடவுளெனவும், அந்த மெய்ப்பொருள் உள்ளத்தில் உறைந்துள்ளதெனவும், உபநிடதமெழுதியும், புகன்றும் போந்துள்ளாரென்பது உணர்க.

விதைமுதலா மரமுதலா
யிதிலெதுதான் முதலெனநன்
மதிசதியி லுழலுவது...பரிதாபம்.

(க—ரை) காட்சியமைந்த மெல்லியசுருள், இயந்திரத்தில் சுழலும்வரை திரைப்படம் ஆடுவதுபோன்று, அறுசுவையாக உண்ட உணவு அஜீர்ணமாகும்பொருட்டு, குறுகியகால அளவின் குண பேதக ஆராய்ச்சியிலுள்ள மக்கள் மரம் முந்தினதா விதை முந்தினதா எனத் தேட முனைந்து மூளையைக் கோளாருக்கிக் கொள்வதைக் காணுங்கால் பரிதாபமே!

இருகரிய விழியிலெவை
பெரியவொளி தருவதெனச்
சிறிதுணர்வு பெறினதுவே...புலனுகும்.

(க—ரை) ஆகம நியதியோடு தேக அமைப்பையும் உற்று நோக்கி, இருவிழிகளும் ஒரு பார்வைக்கு இடந்தந்தது என்னவென நோட்டமிடின் உண்மை பளிச்சிடும்; ஆராய்வதற்கு ஆற்றல் இயலுவதில்லை யென்ருலும் முடிவுற நிற்பதில்லை. இரண்டற்ற ஒன்றை அறிவது எளிதல்ல; வித்தும் விருட்சமும் சத்தாயுள்ளது எனக் காண்.

கலியுலகங் கலியுலகங்
கபடநடிகர் களுலவ
யிடமிகுதி யுளகொடிய...யுகமாகும்.

(க—ரை) உத்தமர்களைத் தூஷிக்கவும், உதாசீனர்களை நேசிக்கவும், ஆக்கவேலைகளை அழிக்கவும் அழிக்கும் சக்திகளைப் பெருக்கவும், சன்மார்க்கத்தை வெறுக்கவும், துன் மார்க்கத்தை வரவேற்கவும் கற்றுத்தேர்ந்த கபட நடிகர் களுக்கு இடமிகுந்தபடியால், இயற்கையுலகைக் கலியுல கெனக் கழலலாயிற்று.

### திருப்புகழ் திரவியம் வாழ்க!

ஜடவுலக கெடுமதிகள்
படயிறைவ னருளொளிமா
மடமதிலித் திருப்புகழை...மிகவோது.

(க—ரை) துரியபூமிக்கு துணைவியாகிய நமதன்னை சாம்பவியின் அருள்பெற்ற மடாலயங்களில், மக்களின் அறி யாமை நீங்கி அருள் குடிகொள்ளுமாறு நமது திருப்புகழ் திரவியமாகிய இவ்வரிய நூலை, மிக இன்னிசையுடன் பாடிப் பதம்பிரித்துரைப்பீர்களாக!

திரவியமி தரனருளின்
பிரணவமு மொளிர்கநிலம்
பரவிநம திறைவிதுணை...புரிவாளே.

(க—ரை) அழியாப் பொருளாய்க் குறையாச் செல்வ மாய், துகளற்ற மணியாய்த் தேடாத் திரவியமாய்க் கிடைத்து அருளுருத் திரண்ட பொன்மொழிகளை, ஆங்காங்கும் அருட் பிரகாசச் சுடரொளி வீசுமாறு பலரும் உணர்ந்து, பாரில் பரவ நமது பரிபூரண ஜெகன்மாதா துணைபுரிவாளாக.

சதுரகிரி மதுரபுவி
தனில்வளரும் நமதுகவி
மகிமையது ஒளிர்வதொரு...சிலநாளில்.

(க—ரை) முத்தமிழ் ஓங்கிய ஜெகதல மதுரையம்பதி நாட்டின்கண், புதியமுறையில் உதயமாகிய நமது அருள் மொழிப்பாக்கள், மக்கள் இதயத்தில் மாணிக்கமாகத் தோன்றி உணர்ச்சிப் பிரவாகத்தில் குதித்துவிளையாடச் செய்யும் நந்நாள் அண்மையில் உள்ளது.

திருமகளுக் கடிமையுள
அடியனுறை நகரழகங்
குளமெனயிப் புவிபுகழ...மிகைகூறு.

(க—ரை) தண்டாமரையாளின் தாளடி வருடி, அன்ருட வாழ்வையும் அவளுக்கே அர்ப்பணித்து குன்ருக் குணமலே சார்ந்த சான்ஞேர்க்கு உடல் வணங்கி, உண்மை புகன்று புவிப்பொருளற்ற அடியேன் இருப்பிடம், அழகேசராஜன் ஆட்சி புரிந்த அதிஉன்னத அழக நகரெனப் பெயர் பெறும்.

தனன தன தனன தன
எனநல்லிசை தனிலிதனே
தனேயுணர்பவர்கள் படிப்ப...தழகாகும்.

(க—ரை) தன்னே உணர்ந்து தானே தானுகி நிற்கத் தகுந்த பேரின்பப் பிரியர்களே! ஆனந்தமுடன் அருளிய, இத் திருப்புகழை இன்னிசையெழுப்பி அழகுடன்பாடி அருளருவி சிந்தி அரன்அருளே அடைவீர்களாக!

நமதரிய பரதபுவி
வளமுறவல் வினேயகல
வழிதொடர்வ ரடிதொழுவ...னடியேனும்.

(க—ரை) நமது புண்ணிய பூமியில் பொல்லாதது போக்கி, நல்லது ஆக்கிப் பழமுதிர் சோலேயாய் வளம்பெற்று லகில் புகழ்பெற்று உயர்கடனுற்றிட, வழிபற்றிய வருங்கால வாலிபர்களுக்கும் எதிர்கால இளேஞர்களுக்கும், அடியேன் கரசிரம் ஒடுங்கிய வணக்கம் உரித்தாகுக! ஏற்று இன் புறுங்கள்!!

## மிருக மனிதர் செய்கை.

''செந்தில் வடிவேலவன் மேல்''—என்ற இசை.

1. நற்றவஞ்செய் திறையருள்தனை
நாளும்நாடி நம்பிக் கெட்டுப்
பாழாய்ப்போன கும்பி வளர்த்
தேங்கிமனது வெம்பி உலகலைந்து
திரிந்து மடிந்தபேர்கள்
ரொம்ப உண்டு தம்பி......நற்.

2. காவியுடையு மணியுமணிந்து
கபடவேடமாய்க் காசி வரை
திரிந்தலைபவன் தோசி யவன்
பரம்பரைப் பரதேசி யரனருளில்
மனதை ஐக்யஞ் செய்பவ
ரவர்கள்தான் சன்யாசி......நற்.

3. பாடல்பலதும் பாடிமக்களை
பசப்புகின்றவன் பன்றி உயிர்
கொலைபுரிகிற சண்டி அவன்
வெகுபெயர்களை யண்டி காசு
நகைகளை யபகரித்ததுமுட
னேறிவிடுவான் வண்டி......நற்.

4. பாவிகள் ஜெகஜாலவலையுள்
பாமரராகப் பட்டு பதந்
தொழுதுகொடுப்பர் துட்டு
அவமானமுழுதுங் கெட்டு பின்ன
ரழுதுபுலம்பி ஐயோவென்றிடில்
தெரியுமவர்கள் குட்டு......நற்.

5. புத்திரரையும் புணரக்கருதும்
போக்கிரிகளினாலே காமக்
கடல்கடந்து மப்பாலே செல்ல
மனதடங்கி டாதாலே இந்த
கலியுலகினில் உழல்நிலைகளும்
கவியுதுபார் கண்ணாலே......நற்.

6. அனுபவமுள்ள பேரறிஞரை
அறிந்து தெரிந்து நத்து அவர்
மொழிவதி லுண்டுசத்து ஜெக
முழுதும் சத்தியவித்து விதை
விதைப்பவர்களைக் காண்பதரிது
என்றேன் சித்திரமுத்து......நற்.

வெற்றி !

# 3. பேரின்பக் குறள்.

## இயற்கை

1. உலககுரு ஒருவன் இறைவன் அவனருளால்
பலபொருளும் பாரில் உள.

(கருத்துரை) இச்சக ஜீவராசிகள் அனைத்திற்கும், தானே தலைவனெனத் தமது திருவடி நிழலில் யாவையுந்தோற்றி, ஒடுங்கச் செய்கிற இறைவன் ஒருவனே குருபிரானுகும்.

2. கடல்மலைகள் ஆறு கதிர்மதியும் விண்பூமி
உடனெருங்கு சேர்ந்தது உலகு.

(க—ரை) கடல், மலை, ஆறு, சூரியன், சந்திரன், ஆகாயம் பூமியாகிய எழுவித இயற்கையைக் கொண்டு இவ்வுலக சிருஷ்டி அமைந்துள்ளதெனக் காண்க.

3. நீர்நெருப்பு மண்வெளியோடாவி இவையைந்தும்
சேர்ந்துளது இவ் வூனவுடல்.

(க—ரை) தண்ணீரும், மண்ணும், காற்றும், நெருப்பும், வெளியோடு அமைந்து எண்ணற்ற ஊனுருவங்கள்தோன்றி தொழில் புரிகிறதென உணர்க.

4. புணர்ச்சியின்பம் பார்வை கேள்விகட்கு இவ்வூனுட
உணர்ச்சிதந்து நிற்கும் உயிர். [லில்

(க—ரை) புகழ், இகழ், புலனுகர்ச்சிகட்கெல்லாம், ஆதாரமாகிய உயிர் உடலிற் கலந்து உறவாடி உணர்ச்சிமயமாக நிற்கின்றது என உணர்க.

5. பாதாதி கேசம் பரவும் பரம்பொருள் தான்
வேதாந்த விண்ணின் விளக்கு.

(க—ரை) ஆதியந்தமற்ற அறிவுச்சுடர் அகமும் புறமும் பரவி அழியாமல் எங்கும் என்றும் பிரகாசிக்கின்றது. அது ஒன்றே பொதுவாகிய கடவுள்.

## கல்வி

6. மலையளவு செல்வம் பெறினும் புகழ்தருதல்
 கலையறிவிற்கு ஏதுநிகர்.

(க—ரை) குன்றினளவு குபேர சம்பத்திருப்பினும் கல்வி அறிவிற்கு இணையாகாது எனக்கண்டு, நன்னூற்களைக் கற்று அதன்வழி ஒழுகுதல் நலம்.

7. படிமிசையிற் சிறந்த கல்வி மிகப்பயின்று
 குடியரசைக் காப்பாற்றுக.

(க—ரை) புவியினில் உயரிய கலைகளை உணர்ந்து புகழொடு பணிகளாற்றி, நாட்டிற்கு நலன்செய நன்மை பயக்குமென உணர்க.

8. தற்கால மாணவ மாணவிகாள் நீங்கள் கலை
 கற்றவழி நிற்றல் நலம்.

(க—ரை) நிகழ்கால மாணவ, மாணவிகளாகிய நீங்கள், கலைகளைப் பயின்று கொள்வது பெரிதல்ல; கற்றவாறு ஒழுகிக் கடமை புரிதலே புகழைத் தரும்.

9. நன்னூல் பலநாடிக் கற்று உயர்தபசு
 பண்ணுதலே கல்விக்கு அழகு.

(க—ரை) காமாந்தகாரங்களை விளைவிக்கக்கூடிய கட்டுக் கதைகளைக் கற்க முயலாமல், நீதிநூல்களை வாசித்து நிமலன் அருள்சேர விழைதல் நியதியாகும்.

10. உபயோகமற்ற உரையாற்றிப் பிறர் பொருளை
 அபகரிப்போன் ஆகாதவன்.

(க—ரை) எல்லாம் அறிந்தவன் போன்று பிதற்றி ஏழை மக்களை ஏமாற்றிப் பொருளைக் கவர்பவன் பொல்லாதவனாகும்.

## கடமை

11. உடலுருவம்பெற்ற எவரும் திடமுடனே
 கடமையறிந்து ஆற்றிவருக.

(க—ரை) உடல் பெற்ற பயனை உணரச்செயலற்றிருந்து விடாமல், ஒவ்வொருவரும் திடசக்தியோடு செய்வனவற்றைச் செம்மையாகச் செய்து ஜெயம் பெறுக.

12. ஊக்கமொடு பணிகள்செய்து வருபவர்கள்
 ஏக்கமுறஏழ்மை புரியார்.

(க—ரை) உறுதிபூண்டு உலக நலனுக்கு உழைக்க முன்வந்தவர்கள், எக்காலத்தும் இதயந் தளர்ந்து ஏற்ற பணியைக் கைவிடத்துணிய மாட்டார்கள்.

13. செய்கடமையாவுஞ் ஜெயமாகும் என்று உனது
 மெய்யைமிக நம்பிநட.

(க—ரை) செய்யத் துணிந்த கருமம் வெற்றி தருமென எண்ணி தளராத தன்னம்பிக்கையுற்று, முயற்சி வழுவா திருப்பின் விரைவினில் பயன் பெறலாம்.

14. கடமை கடமையெனப் பேசி பயனென்றில
 திடனுறுதி பெற்று உழை.

(க—ரை) சொல்லளவிலுள்ள கடமை பயன் தராதெனக் கண்டு செயலளவில் இறங்கித் தீவிரமாக உழைத்து மனித ராகப் பிறந்த மாண்பை மாநிலமறியச் செய்க.

15. சொற்திறமையாளன் சுகம்தனக்கென் றெண்ணுதான்
 வெற்றிமிகக் காண விழைவன்.

(க—ரை) பயன்பட்ட மொழிகளைப் பகர்ந்து, சுயசுகம் வெறுத்த தொண்டன் ஒருவனே வீரப் பணியாற்றி வெற்றி யைத் தேடித் தரத் தக்கவனுவான்.

## ஆண்மை

16. சித்தத்திடமுடைமை யின்றேல் அவரிருந்தும்
செத்தபிண மாகப்படும்.

(க—ரை) அஞ்சாத நெஞ்சமும், அதிதீவிர பக்குவமும் இல்லாதவர்களால் என்ன பயன்? அன்னவர்கள் உடல் இருந்தும் இறந்ததாகவே கருதப்படும்.

17. ஏழைகளாய் வாழலாம் இப்புவியில் கூடாது
கோழைகளா யுள்ளமனிதர்.

(க—ரை) பரம ஏழைகளாயிருப்பினும் மனமாசற்ற பாட்டாளி மக்களுக்கு எதிர்கால உலகில் இடமிகுதி கிடைக்கும். ஆனல், கோழைகளுக்கு ஆங்கு இடங் கிடையா.

18. வனத்திருந்து வேங்கை பாய்ந்தாலும் அஞ்சாத
மனத்திடனே மந்திரமதாம்.

(க—ரை) உடலும் மனதும் திடனுற்ற உத்தமர்களே, கானக வேங்கைகளும் பாய அஞ்சுமென்பதில் ஐயமில்லே. மனத்திடம் மந்திர சக்தியிலும் சிறந்ததெனக் காண்க.

19. சிங்கத்திற் கொப்பான தீரம் சிதையாமல்
அங்கவுணர் வுள்ளவரே ஆண்.

(க—ரை) உணர்வு மிகுந்த உடலுடன், அஞ்சாத வீரம் அணுவும் அகலாமல் கடமையாற்றத் தக்கவர்கள்தான் ஆடவராகும்.

20. வீரமொடு மக்கள் திகழ்ந்தால் உலகாட்சி
தாரகமாய் நிற்க விரும்பும்.

(க—ரை) ஆண், பெண் அனேவரும் வீரமுடையவர்களாகப் பிரகாசிக்கின்ற காலத்தே, உலக சுயாட்சி உறுதியாகி அசையா நிலே பெற்றிருக்கும் என்பதாம்.

21. நேர்மை கலேயறிவு நெஞ்சூக்கம் இத்தகைய
ஓர்மையுள்ள தொண்டன் உயர்வு

(க—ரை) தகுமான கல்வியும், தளராத உள்ளமும் உடையவன் ஆற்றும் பணி போற்றத் தக்கதாகும் எனக் காண்க.

## பெண்மை

22. அல்லி திலகவதிக்கு ஒப்பாய் அரியதவச்
செல்விகளும் சிறந்துமிளிர்க.

(க—ரை) அல்லிஅரசாணி, திலகவதியம்மை போன்று, சிறந்த புகழ் தாங்கி புவிவாழ்வு நடாத்தத் தகுந்த பெண் மணிகளாகத் திகழவேண்டும்.

23. விற்பன விவேகமுற மக்கள் தமைவளர்த்தல்
கற்புடைய மாதர்கடன்.

(க—ரை) தாம் ஈன்ற மக்களை விவேக வைராக்கிய சீலர் களாகுமாறு வீரப்பாலூட்டி வளர்த்து, சன்மார்க்க நன்மதி களைப் புகட்டுவதே கற்புடைய தாய்மார்களின் கடமை.

24. இகக்கடமையுங் கணவர் தொண்டும் அறப்பணியோடு
அகத்தூய்மை பெண்டிர்க்கு அழகு.

(க—ரை) கணவனைத் தமது கண்ணொளியெனக் கருதி இகத்தருமத்தை ஏற்றுத் தொண்டாற்றி, கற்பை உயிரெனக் காப்பதே பெண்களுக்கு அழகு தரும்.

25. அந்தமிகு பெண்கள் அரியபணி செய்துபுகழ்
தந்ததுநம் தாய்நாடிது.

(க—ரை) கற்பழகு வாய்ந்த தாய்மார்கள் தேசப்பணி பல செய்து சிறப்புற்று வாழ்ந்து, புகழ்தாங்கி நின்றது தாய் நாடெனில் மிகையாகாதன்றோ!

26. வல்லமையும் நன்னடையும் குன்ற வளமாக்கும்
இல்லறத் தாய்க்கேது இணை.

(க—ரை) ஒழுக்க நிறையும், உயர்ந்த சக்தியும் பெருக்க மாக்கி இல்லத்தைக் காக்கும் பெண்களுக்கிணை கிடையாது.

## இல்லறம்

27. பூதேவி போன்று பொறுமையுளார் இல்லமதில்
சீதேவி தங்கிவசிப்பள்.

(க—ரை) அசுத்தாசுத்தங்களை ஆதரித்து ஏற்றுக் கொள்ளும் பூமாதேவி போன்று, இகழ், புகழ் அனைத்தையும் ஏற்று இன்புறுவார் இல்லமே இளையாளின் இருப்பிடமாகும்.

28. மலர்ந்தமுகமும் சிறந்த கற்பும் எதிர்பேசாக்
குலமகளே நற்றுணைவியாம்.

(க—ரை) நற்குல நங்கையர்கள், நாதனின் மனம் நோகச் செய்யாதவர்களாக, தாமரை மலர்போன்ற வதனமுடைய அரிய துணைவியாகி வாழ்க்கை நடாத்துவர்.

29. இல்லக்கிழத்தியோடு இணை சேர்ந்து வாழ்வதுதான்
செல்வமதிலும் சிறந்தசீர்.

(க—ரை) மனைவி மணாளர்கள் இருவர் இதயமும் ஒரு பகலோன் ஒளிபோன்று, இல்லறம் நடாத்தி வருவரேல் அளவிறந்த சிறப்பு அதன்பாலுளது.

30. நற்றவத்தினால் ஈன்ற மக்கள் அறந்தழுவின்
பெற்றவர்கள் பெற்றபெருமை.

(க—ரை) மேற்கூறியவாறு இல்லறமியற்றி இணை சேர்ந்தீன்ற புதல்வர்கள் அரிய தவம் புரிய முனைவரேல், அன்னை தந்தையர் திருநாமங்கள் கறைபடியாது பெருமை தரும்.

## மணம்

31. மணமக்களை அகலாமாண்பும் இருவருயர்
குணமுடமைகண்டு செயல்.

(க—ரை) வடிவான உடல்களைக் கண்டு வாழ்க்கை ஒப் பந்தம் செய்வது நலன்தராது. மணமக்களது குணஉயர்வு கண்டு செய்வது நற்பயனளிக்கும்.

32. குலநலனைப் பேணிக் குவலயத்தில் வாழ்வாங்கு
நலனறிந்து கொள்ளல் மணம்.

(க—ரை) உறவின் முறைகளை உணர்ந்து நன்கு ஆராய்ந்து, மாங்கல்யதாரணம் செய்வித்தால் அவர்கள் வாழ்வு மங்களகரமாகக் காட்சியளிக்கும்.

33. சிக்கனமாய் நற்செலவு செய்து திருப்பூட்டி
மக்கள்பெற வாழ்த்தலுயர்வு

(க—ரை) ஆடம்பரச் செலவை ஒழித்து சிக்கனமுறையில் திருமணச் சடங்கை நிறைவேற்றி, சற்புத்திரரை ஈன்று வாழ்கவென வாழ்த்துதல் சிறந்ததாகும்.

34. சந்தனந்தாம்பூலம் சபைசிறக்கும் மற்றவைகள்
அந்தமுறச் செய்யாதவாம்.

(க—ரை) விவாக வைபவத்திற்கு உகந்தது சந்தனமும், தாம்பூலமுமேதவிர, அறுசுவையோடு உண்டு பலவித ஊர்தி களில் வலம்வருவது சிறந்ததாகாது.

## யாக்கை

35. யோகாசனம் பயின்று உடலைத் திடமாக்கிச்
சோகமின்றி நற்கருமஞ்செய்.

(க—ரை) கடமை புரியத் தாங்கிய உடல்திடமாயிருப்பது அவசியமாகும். ஆகையால் ஆசனமுறைகளை விதிதவருது பயின்று ஆரோக்கியவாழ்வெய்தி வசித்தல் வேண்டும்.

36. பிணியகலும் மூளை தெளியும் சளையாமற்
துணிவுதருமென்றே பயில்.

(க—ரை) மேற்கூறிய யோகாசனங்களைப் பயின்று வந்தால் பிணிகள் அகன்று, மூளை தெளிந்து, உள்ளுறுதியைத் தந்து உடலை நீடிக்கச் செய்யுமென்று உணர்க.

37. காலை எழுந்து கடன் முடித்துக் கட்டாயம்
வேலைமிகச் செய்தல் விதி.

(க—ரை) அதிகாலையில் எழுந்து உடலுக்குரிய அனுட்டானங்களை முடித்து பின் கடமைகளை ஆற்றி வெற்றிகாண்பது நியதியாகும்.

38. தெய்வ உறவு பெறவேண்டின் அவர்கள்சதா
சைவ உணவுண்ணல் நியதி.

(க—ரை) உணவுப்பரிசுத்தத்தோடு மனதுப்பரிசுத்தமும் இல்லையேல், தெய்வீக ஒளி மங்கிவிடுமெனக் கண்டு சைவ உணவு உட்கொள்ளலே சான்றோர் இயல்பு.

39. உணவுநெறிக்கு ஏற்றவாறு அவரவர்கள்
குணமிளிர்கும் என்பது உணர்க.

(க—ரை) தீனியாசையிற் சிக்குண்டு கொன்றபாவம் தின்ருற் போமென வாய்வேதம் பேசினுல், துர்க்குணங்கள் மென்மேலும் பெருகி அறிவை மழுங்கச் செய்யும்.

40. அரியபிறவி பயனற்றுப் பிணி சூழ்தல்
புரிதொழிலில் இல்லைபுகழ்.

(க—ரை) மானிட வாழ்க்கையின் மாண்பை இழந்து, நல்லுடல் நாளும் பிணியால் சூழப்படில் ஆற்றும் கடமையில் நலன் கிடையாது.

## வாழ்க்கை

41. உற்ருர் உறவினர்கள் சூழ்ந்த குடிவாழ்க்கை
குற்றமின்றிச் சுற்றம்பெருகும்.

(க—ரை) பந்துமித்திரர்களோடு உறவாடி யார்க்கும் சத்துருவாக நடவாதிருக்கிற மக்களின் வாழ்க்கைக்கு, உறு துணையாக சான்ருேர்களின் நட்பும் பிரகாசிக்கும்.

42. இன்பமொடுதுன்பந் தோன்றின் புவிவாழ்வில்
நன்மையதில் உண்டெனவே காண்.

(க—ரை) சுகதுக்கம் இரண்டையும் சமபாவனையாக ஏற்று உள்ளத்தில் ஒளிரும் வல்லமை சற்றும் குன்ருதபடி, யாவும் நன்மைக்கெனவே மகிழ்ந்து வாழ்ந்திடுக.

43. உணர்ச்சியுடனிருந்து உயிர்வாழும் உத்தமர்கள்
இனத்தை அகலாமலிரு.

(க—ரை) மண்ணுலக வாழ்வில் ஈடுபட்ட மக்கள் எக்காலத்தும் எச்செயலிலும், உணர்ச்சிப் பெருக்குள்ளவர்களாகத் திகழ்வதுகண்டு அவர்களோடு உறவாடி வசி.

44. வாயளவிற் பேசி வலுவிழந்து போகாமுன்
செயலளவிற் செயலேச்செய்.

(க—ரை) பேச்சளவில் தற்பெருமை பேசிப் பேதை போன்று அலேவதைப் பார்க்கிலும் சிறிதளவேனும் சத்கடமைகளேச் செயலில் செய்வதுவே ஆண்மையாகும்.

45. கற்பும் கலேயும் நிலேப்பின் கலியுலகில்
அற்புதமா சக்தி அருளும்.

(க—ரை) கற்பின் அடக்கமும் கலேயின் திறமையும் நிலேத்து நிற்பின், மானிட வாழ்க்கையில் மிக்க மகத்துவம் உண்டென்பதாம்.

46. உழைப்பிற் கிடைக்கும் ஊதியத்தை உண்டுடுத்தும்
பிழைப்பி லிருக்கு பெருமை.

(க—ரை) தினந்தோறும் செய்கிற வேலேயிற் கிடைக்கும் சம்பளத்தை மகிழ்ச்சியுடன் ஏற்று வாழ்க்கை நடாத்தல் பெருமை உண்டெனக் காண்க.

## அன்பு

47. அறநெறி பின்பற்றி உலகில் உளவரையும்
    பிறர்நலனைப் பேணியுலவு.

(க—ரை) அன்பினால் ஆனந்தம் லபிதமாகுமெனக் கண்டு, பொதுநலனுக்காக கனிந்த உள்ளமும் கருணை மனதும் உடையவர்களாகத் திகழ்தல் வேண்டும்.

48. உருக்கமுடன் உணவும் உடையும் மிகவீய்ந்து
    இருப்பவர்கட்கு என்றும் புகழ்.

(க—ரை) வறுமையறிந்து அழைத்து உணவும் உடையும் கொடுத்து ஆதரிக்கின்ற உத்தமர்களன்றோ, இப்புவியுலகிலே, பொன்னுலகப் புகழ் எய்தப் பெறுவர்.

49. வறுமைபிணி நீங்குமாறு மனதிளகித்
    திருவளர நற்சேவை செய்.

(க—ரை) பசிப்பிணி முதல் உடற்பிணிகள்வரை நீங்குதற்கு வேண்டிய நல் உதவிகளைத்தந்து சேவை செய்தலே, நாட்டுக்கு உகந்த தொண்டர்களின் நற்கருமங்கள்.

50. கூழமுத மெனினுங்கொடுத்துப் பசியாற்றின்
    வாழ்வில் உயர்அன்பு வளரும்.

(க—ரை) ஏழைகளைக்கண்டு இன்னுரை பகர்ந்து அழைத்து உதராக்கினியை அணைத்து அனுப்பி வைப்பதுவே தருமமெனக் கண்டவர்கள் வாழ்வில் அரனருள் பிரகாசிக்கும்.

## நட்பு

51. கண்ணின் இமைபோன்று காப்பர் கலங்காது
மண்ணுலகிற்கேற்ற துணை.

(க—ரை) கண்களை இமைகள் காப்பதுபோன்று உள்ளன்பும் சீரிய விசுவாசமும் உடைய நண்பர்கள், உயிருள வரை இணைபிரியா நின்று இன்னல் களைய முயலுவர்.

52. அங்கம் பொருளாவி யாவும் சிதைந்தாலும்
தங்கள் அகத்தன்பை மறவார்.

(க—ரை) தமது உடல் பொருள் ஆவி யாவும் சிதைவதாயினும் அன்புறவுபூண்ட நண்பனுக்கு ஆபத்து ஏற்படுங்கால், மலரொடு கூடிய மணம்போன்று நின்று காப்பாற்றுவர்.

53. ஆதரவுகூறி அஞ்சாதே என்றுமன
வேதனையை நீக்கிவிடுவர்.

(க—ரை) வாழ்வில் ஏற்படும் உழல்நிலைகளைக்கண்டு வருந்தும்போதெல்லாம், அச்சந்தவிர்த்துத் திடங்கூறி உடனிருந்து ஆவன செய்து காப்பவரே நண்பராகும்.

54. தாரணிதனிற் பிறந்துதளரா உளமுடைய
வீரர்களைத் தோழரெனலாம்.

(க—ரை) இமயமலைச் சிகரமிடிந்து வீழினும், எமது இடதுகரங்கொண்டு தடுப்பேன் எனக்கூறும் உண்மையான வீரர்களையே தோழரென அறிந்து உறவாடல் வேண்டும்.

## நாடு

55. பழமுதிருஞ்சோலை வளநாடது செழிக்க
உழவுத்தொழிலே தொழில்.

(க—ரை) சோலையளாவிய நாடுகள் வளங்குன்றுமல் என்றென்றும் நன்கு பிரகாசிக்க வேண்டுமெனில் வேளாண்மையைச் சிறப்புறச் செய்தல் வேண்டும்.

56. தானந்தருமந்தவமதிகம் மேலுயரின்
வானம் வருஷிக்கும் மழை.

(க—ரை) அறநெறி தழுவி அன்னதானங்கள் வழங்கி வருகிற நாட்டில் குறைவற மாரிபொழிந்து, விளைவதிகமுற்று வறுமை நோயின்றி மக்கள் வசிப்பர்.

57. இரவிமதிபோல் என்றும் ஒளிரும் புகழ்பெரிய
புவியுலக நல்லோர் அறம்.

(க—ரை) அரனருள்பெற்ற அண்ணல்கள் கைம்மாறு கருதாது கடனாற்றிப் புகழெய்திப் புவியில் மறையினும், ஆதவன் போன்று அவர்கள் நாமமென்றும் விளங்கும்.

58. ஒப்புவமையற்ற பெரியார் உலவிவரின்
இப்புவிபோன்றில்லை இனிது.

(க—ரை) இணையற்ற சான்றோர்கள் இப்பூவுலகில் தோன்றி தருமநெறிகளை மக்கட்கு ஓதிப் புத்துயிரளித்து வருவரேல், அந்நாடே புனிதநாடாகும்.

59. ஆர்வமிகு பண்பும் அறத்திறனும் உண்டாகிப்
பார்திகழச் செய்க பணி.

(க—ரை) அறநெறி உணர்வும், ஆத்மீகப் பண்பும் வளர்ச்சியுற்றபிறகு புவிப் பணியாற்றப் புகழுண்டாம்.

## அரசு

60. குடிபடைகள் போற்றுங்குணவான் அவன் இனிய
படியுலக ஆட்சிக்கரசு.

(க—ரை) செங்கோன் முறைக்கேற்பத் தமது குடி, படைகளைக் கண்காணித்து நியதிவழுவாத ஆட்சி புரிகிற அரசனை, மக்கள் அனைவரும் தேவனெனப் போற்றுவர்.

61. செங்கோன்முறை தழுவியாளும் அரசனிடம்
மங்களமாய்த் தங்கும்குடி.

(க—ரை) ஆறிலொரு கடமை வாங்கி ஆக்ஞை செலுத்தி அரசு புரிகிற மன்னனிடம், மக்களன்பு கூர்ந்து அந்நாட்டை விட்டு அகலாது வசித்துவருவார்கள்.

62. அறிவிலுயரமைச்சும் அரியதவ ஞானிகள்நன்
நெறிபுகலநிற்கும் நியதி.

(க—ரை) அறிவுத் தெளிவுற்ற மந்திரியும் அரியதவ நிழல் அடைந்த பெரியார்களும் மன்னவன் அருகிலிருந்து அவ்வப்போது அரசியல் இலட்சியம்கூற நீண்டநாள் அவ் வாட்சி நிலைபெற்றிருக்கும்.

63. அதிகமதியகில வாராய்ச்சி அன்புறுதி
எதிலுமிகை மன்னர்க்கழகு.

(க—ரை) சிறந்த நிபுணத்துவத் தன்மையும் ஜீவகாருண்ணியப் பெருக்கும், உள் அகவுறுதியும், உலகநேர்மையும், ஆட்சியில் விழிப்பும் அரசுக்கு அழகுதரும்.

## மக்கள்

64. மண்ணிற் பிறந்த மனிதர் அனைத்துயிர்க்கும்
புண்ணியராய் வாழ்கப்புகழ்.

(க—ரை) எவ்வுயிரையும் தனது ஆன்ம உரிமையோடு இணைத்து இன்னல் இழையாதிருக்கிற காருண்ணியவான் களைப் புண்ணியரெனப் புகழுரைகூறிப் போற்றிடலாம்.

65. பகுத்தறிவுபெற்ற ஆண்பெண் அறவழியை
வகுத்துலகிற்கு ஈதல்நலன்.

(க—ரை) மெய்யறிவுற்ற எவரும் சத்தியவழி பின்பற்றி நடந்து, தனது அனுபவத்தை பலர் பயனுறுமாறு தந்து உதவுதல் வேண்டும்.

66. அடக்கம் பொறுமை அருளுறவு ஆத்மீகத்
திடத்தில் இணைக்கும் தெளிவு.

(க—ரை) அடக்கமும், அமைதியும், அணிகலனுகக் கண்டபின் ஆன்ம சுதந்திரமடைந்த வீரனுகத் தெளி வெய்தலாம்.

67. உடலைக்கழுவி உடையுடுத்தல் போதாது
திடனுளத்தைச் சுத்தியுறச்செய்.

(க—ரை) அங்கநீராடி ஆடைகள் அணிந்து அழகுற நடிப்பது மட்டிலும் போதாது. ஆத்மசக்தியோடு ஒன்றுபட்டு உள்ளுறவு பூண்டு ஒளிகாண விழைதல் நலம்.

68. சுயசேவையோடு உனது சுற்றம் சமூகமுத
லிய சேவைசெய்தல் கடமை.

(க—ரை) தமக்குரிய சாதன சதுட்டயங்களைச் சரிவரச் செய்து முடித்து அதுபோதுமென நின்றிடாமல், சமுதாய சேவையில் ஈடுபடுவதே நேர்மையானதாகும்.

69. உலகிற்கு உழைக்கின்ற உத்தமனின் சித்தமது
கலங்கரை விளக்காகும் காண்.

(க—ரை) தனது நலனைத் தாரை வார்த்து, உலக நல னுக்கு உழைக்கத் துணிந்த உத்தமனை, வாழ்க்கைப்படகிற்கு வழிகாட்டும் மணிவிளக்கெனப் புகழ்தல் மிகையாகாது.

## சான்றோர்

70. பொறுமை பொறுப்பர் புகழ்விரும்பார் எந்நாளும்
தரும நெறியுற்ற பெரியார்.

(க—ரை) உண்மை வழி தவருத பெரியார்கள் எத்துன்பத்தாடும் தமது இறுதி வாழ்வுவரை, பொறுமையாகிய பூஷணத்தை இழக்கமாட்டார்கள்.

71. நற்றவமும் ஒற்றுமையும் நாட்டில் மிகவளர
கற்றறிஞர் ஆற்றல் கடன்.

(க—ரை) உலக நன்மையும், ஒற்றுமை உயர்வும் காண நாட்டில் உள்ள பேரறிஞர்கள் தேசாபிமானிகளாகத் திகழப் பயனுண்டென்பதாம்.

72. உயிருடலை விட்டேகும் வரையில் புகழுடையர்
மயிரளவும் பேசார்பிசகு.

(க—ரை) பூதவுடலைவிட்டு உயிர் பிரிகிறதாக இருப்பினும், புகழ்பெற்ற பெரியார்கள் சிறிதளவேனும் பிழைபேசமுற்படமாட்டார்கள்.

73. மாருச் சிற்றின்பத்தை மறந்தால் மனமலர்தான்
ஊராப் பேரின்பம் உணர்த்தும்.

(க—ரை) புவிப்பற்றற்ற புனித மகான்கள் அநித்திய சுகத்தை வெறுத்து, நித்திய ஆனந்த இன்பத்தை நுகர்வர்.

74. அறிவுடைய நல்லோர்களெல்லாம் நடுநகராக்
குறிதழுவிவாழ முயல்வர்.

(க—ரை) மேலான பதவிக்கு ஆளாகக் கருதிய அறிஞர்க ளெல்லாம், நடுநிலைமையாகிய தமது இலட்சியத்தை விட்டுக் கொடாமல் வாழ முற்படுவார்கள்.

75. ஒவ்வா மனிதர்களை ஒன்ருன் ஒழுக்கமுளான்
இல்வுலக வாழ்க்கைக்கு இனியன்.

(க—ரை) தீயவர் உறவை அகற்றி, தூயவனுகி உலகில் வசிக்கின்ற உத்தம மனிதனை இணையற்ற குணவானெனப் போற்றி மதிக்கப்படும்.

76. எல்லாமிறையருள் என்றெண்ணி அகமகிழ்வர்
வல்வினை கண்டு அஞ்சாதவர்.

(க—ரை) சகல இடையூறுகளும் நமது நன்மையை நாடிப்போராடுவது சகஜந்தானென எண்ணி அகமலர்ந்து, மேலும் வருகிற கொடிய வினைகளை வரவேற்பவரே தீரராவர்.

77. ஆசாரம் தங்க அருள் ஒளிரும் அவ்வமயம்
கூசாமல் ஓடும் குறை.

(க—ரை) ஒழுக்கமிருக்க உள்ளொளி உண்டென உணர்ந்து நடைபிசகாது திகழும் நல்லவரிடத்து, குறைகள் அணுக இடமிராதெனக் காண்க.

78. அங்க உணர்விழந்த ஆன்ம சிவஞானி
தங்குமிடமெல்லாம் தகும்.

(க—ரை) இச்சையின் உணர்ச்சியை அலட்சியம் செய்த தவயோகிகள் தங்கி இருக்கும் இடங்களெல்லாம் குறையணு காது, தகுதிவாய்ந்ததாகக் காணப்பெறும்.

## சபை

79. உத்தமர்கள்கூடி ஒருங்கமைத்த எத்தலமும்
சத்தியம் நின்ருேங்குஞ்சபை.

(க—ரை) குணசேகரச் செல்வர்களெல்லாருங் கூடி அமைத்த நீதி நிலயங்கள் எவ்விடத்திருப்பினும், ஆங்கு சத்தியம் நின்று பிரகாசிக்குமென்பதாம்.

80. தங்குதடைபுகலாத் தகையாளர் ஒன்றுபடின்
பங்கமுருச் சங்கமெனலாம்.

(க—ரை) அங்க உறுப்போடு அகவுறுப்புந் தூய்மை யடைந்த தொண்டர்கள், ஒன்றுபட்டு நிறுவிய கழகங்கள் யாவும் பழுதுருது எக்காலத்தும் காட்சியளிக்கும்.

81. மாசின்றிக் கற்றபடி ஒழுகி உண்மை உப
தேசிப்பவர் ஆசிரியராம்.

(க—ரை) அருள் ஞானசபை ஆசிரியர்கள் மாசற்ற உள்ளம் உடையவர்களாகத் திகழ்ந்து, மக்களின் மனவிருள் நீங்குமாறு திருவருளுரைகளை உபதேசிப்பர்.

82. வாதுபுரியார்கள் வார்த்தைமிகப் பேசார்கள்
சாதுக்களின் சற்குணங்களாம்.

(க—ரை) எதிரிடைபேசி இழுக்குரை கூற மனது அணுவேனும் இடந்தராமல், உயரிய சற்குண நாட்டத்திலிருப்பவர்கள்தான் சாதுக்களெனப்படுவர்.

83. சத்தியத்தை சாட்சியென ஏற்கச் சிதையாமற்
சித்தாந்த சங்கம் சிறக்கும்.

(க—ரை) தரும நீதிக்குத் தடை விதியாத யதார்த்த வாதிகளால் நிறுவிய சபைகள் என்றும் குன்ருமல் சிறப்பெய்தும்.

84. வல்லமைகளின்றி வகுத்தசபை வாதிடையில்
அல்லல் பலவாகி அழியும்.

(க—ரை) திறமையற்ற சிறுமதியாளர்களால் வகுக்கப்பட்ட சபைகள் வாதுகள் வளர்ந்து தீதாகமாறி மறையும் என்பதாம்.

## சற்குரு

85. பற்றற்று இறைவன் இணையடியைப் பற்றுமென
மற்றவர்க்கும் சொல்வர் குரு.

(க—ரை) அகப்பற்றற்று அகண்டாகார சக்தியோடு, ஐக்கியமாக வேண்டுமென வற்புறுத்தி, தவ வழிகளை அருள்பவர்தான் குருதேவராகும்.

86. சாந்தமுடன் உயர்ந்த சன்மார்க்க போதனையை
மாந்தர்கட்கு அருள்வர்குரு.

(க—ரை) நெஞ்சகப்பூஞ்சோலையில் சதா சஞ்சலக் காற்றுகள் மோதாவண்ணம், சன்மார்க்க போதனையாகிய அருளுபதேசங்களைப் புகட்டுபவரே உத்தம குருவாகும்.

87. ஆதிபரம் பொருளைப்பற்றி அருவவழி
ஓதிடுவர் உண்மைக்குரு.

(க—ரை) அருட்பெருஞ் சுடரைச் சுட்டிக்காட்டி, அருவ வழிபாடெய்தச் செய்தவர்தான் உண்மைக் குருபிரான் எனக் கண்டு வணங்கப்படுபவர்.

88. நெற்றிக்கண்ணைத் திறந்து நிமலன் ஒளிவடிவை
உற்றுப்பாரென்பர் குரு.

(க—ரை) சைதன்யதேவனின் இணையடியைச் சொல்லாமற் சொல்லி உணரச் செய்து புருவமத்திய பூட்டைத் திறந்து காட்சியளிப்பித்தவரே ஆன்மகுருவாகும்.

## நற்சீடர்

89. ஆடவர்கள் பெண்டிரெவரும் உறுதியுளோர்
தேடரிய நற்சீடராம்.

(க—ரை) உள்அகம் தெளிந்த ஆண் பெண்களே அரிய சீடசிகாமணிகளாகும். பாராமுகமுடையவர்களைப் பக்குவம் அடையாத மாணவ மாணவிகளென மதிக்கலாம்.

90. சோதனைகள்கண்டு தயங்கார் அரியகுரு
போதனையை நம்பினவர்.

(க—ரை) சற்குருபிரான் அருளிய திருவுரைகளில் நம்பிக்கையுற்று, அதன்வழி தழுவி நடக்க முற்படுங்கால் ஏற்படுகிற இடர்க்கடலில் நீந்திக் கரைசேரவேண்டும்.

91. ஆழ்ந்ததியானத்தால் அருள்பெருகித் தானிறையாய்
ஊழ்வினையை வெல்ல முயல்க.

(க—ரை) பரவெளிகண்ட பாக்கியவான்கள் பாழான மனதைப் பண்படுத்தி இதயத்துள் ஆழ்த்தி ஆங்கமர்ந்து, அருளொளி வீசுதல் கண்டு அதனோடு கலத்தல் வேண்டும்.

92. குருவை அருவமதிற் கண்டு அவர்புகல்நற்
திருவுரையைப்பற்றி விலகேல்.

(க—ரை) திருவருளடைந்த குருபிரானை அருவவடிவில் அவதார புருடனெனக் கண்ட மாணுக்கர் அவர் போதித்த பொன்மொழிகளையே போற்றி நிற்பர்.

## தவம்

93. நெற்றிவெளி உள்ளறிவை ஏவி நிலைநின்று
வெற்றியுற நற்றவங்கள் செய்.

(க—ரை) ஐம்புலனைவென்று அரியதபசுபுரியக் கருதியவர்கள், தமது நுணங்கிய அறிவை லலாட வெளியுள் மேல் நோக்கி நிற்கப் பழக்கி ஆனந்தமடைதல் வேண்டும்.

94. நிட்டை மிகக்கூடி நினைவிறந்த மேலான
வெட்ட வெளிக்குள்ளே சுகம்.

(க—ரை) ஏகவெளியில் இரண்டறக்கலந்து மெய்மறந்து, நிட்டை கூடினால், சொல்லொணாச் சுகம் உதயமாகி ஒளிருமெனக் காண்க.

95. கண்ணிமையா நாட்டம்பெற்று பகலிரவாய்
விண்ணுலக வேடிக்கையைக் காண்.

(க—ரை) இமையாவிழிபெற்று இறைநாமெனக்கண்ட முடிவில், பரலோக அதிசயங்களைப் பார்த்து பரமானந்தம் அடையலாமென உணர்ந்து ஒளிகாணவிழைக.

96. நவவழியைக் காணாத நாக்கு நலனிழந்து
தவநிலையில் நிற்கத் தடை.

(க—ரை) அலையும் புலனை அசைவறச் செய்வதற்கு நாவாகிய கதவைத் தாழிடவேண்டும். இல்லையேல் செய் தவம் சிறப்பெய்தாது.

97. போக்குவரவற்ற பூரணத்தில் ஒன்றாகி
வாக்குமனமற்று உள்ளிரு.

(க—ரை) சலனமற்ற சைதன்னிய ஜோதியிற் கலந்து ஒன்றாகி ஏகாக்கிர வடிவமாய் தானேதானாகி, தன் உள்ளக வீட்டில் அமர்ந்திருத்தல் வேண்டும்.

## துறவு

98. எள்ளத்தனை உலகப்பற்றும் இலாதறுத்தோர்
உள்ளத்துறவே துறவு.

(க—ரை) உள்ளத்தைத் தூயதாக்கி மண்ணுலக மாயா மயக்கில் அகப்படாமல் இருப்பவர்களே அகத்துறவுபெற்ற பெரியார்களெனக் கருதப்படும்.

99. வஞ்சகமற்று இதய வெளியுள் குடிபுகுந்தால்
அஞ்சலிலே தோன்றும் ஒளி.

(க—ரை) அஞ்ஞான இருளகன்ற இதயத்தில், அறிவு மயமாகி அனவரதமும் தங்கித் தவமியற்றினுல் அதிசீக்கிரம் பிரமப்பிரகாசம் சூழ்ந்து காட்சி தரும்.

100. தத்வமசிப் பொருளும் நாமே எனஉணர்ந்த
சித்தமது முத்தித்துறவு.

(க—ரை) அது நீயாகிறாய் நீ அதுவாகப் பிரயத்தனப் படு என்பதற்கொப்ப தன்னைத்தானுணர்ந்து நிற்றலே முடிவாகிய துறவு எனப் புகலப்படும்.

101. அந்தரத்தில் தந்திரமாய் நின்று தவமியற்றிப்
பந்தமற நிற்றல் நியதி.

(க—ரை) இதய சிதாகாயத்தை விட்டு வெளிவராதபடி, பந்தத்தில் கட்டுண்டு உழலும் மனதை உபாயமாகத் தலை கீழாக்கி நிலைநிறுத்துதலே தவமுறையாகும்.

## முத்தர்

102. மழலை மதியுடையோராகி மறுபிறவி
அழலலறுத்தல் முத்தர் முடிவு.

(க—ரை) பிறப்பும் இறப்புமற்ற பெருமைவாய்ந்த பெரியார்கள் பேத அபேதம் அகன்ற மழலைகளைப்போன்று, இம்மகிதல வாழ்வோடு இருந்து உலவி வருவார்கள்.

103. மாண்டுவிழும் உலகஆசை அணுவுமின்றி
ஆண்டவனோடு ஒன்றுகுவர்.

(க—ரை) சிதைந்தொழிந்து போகின்ற ஆபாசப் புவிப் பொருள்களின்மீது இச்சையற்று, இறைவனொருவனே நிலையாயுளான் எனக் காண்டலே முத்தர் இயல்பு.

104. தனிமுதல்வனே தானதாகி சைதன்யமய
இனிதுலகிலென்றும் இருப்பர்.

(க—ரை) ஒன்றைக்கண்டு ஒன்றி உறவாடி இவ்வூனுடல் நாமில்லையென உணர்ந்து, ஏகாக்கிரமாகி அழியாமல் அதில் என்றுமிருப்பதே முத்தர் நிலையாகும்.

105. அரியநவகண்டம் சிறிது அறிவுணர்ந்த
பெரியவர்தாம் மேலானவர்.

(க—ரை) நானு ஜீவபேதங்களுமடங்கிய நவகண்டங்களிலும் சிறப்புரிமையுடையது, அறிவை அறிவாலறிந்த ஆன்ம ஞானிகளைத் தரிசிப்பதேயாம்.

## பாதகர் இயல்பு

106. கொடியது பொய் பொருமை கோபம் நரகவழி
நொடியில் விழச்செய்யுமெனக் காண்.

(க—ரை) நல்வாழ்வைக் கெடுத்து நரக வாழ்விற்கு ஆளாக்குவது, பொய், பொருமை, கோபம், கள்ளமெனக் கண்டு துர்க்குணம்தவிர்த்து வாழ்வதே மேன்மையாம்.

107. காமம் அகந்தை கருத்தழிக்கும் துர்ச்செயல்கள்
ஏம உருவென்று நினை.

(க—ரை) காமாந்தகாரக் காட்டைப் படரவிடாமல் தடுத்து, தன்னைக் காப்பாற்றிக்கொள்ளாவிடில் கொடிய பாவச் செயலுக்கு ஆளாக்கிவிடுமெனக் கருது.

108. வன்மொழியன் காம விழியன் வழிகாணுன்
இன்னுயிரைக் கொல்லும் இயமன்.

(க—ரை) கடுமையான மொழியும், காம விகாரப் பார் வையும் நன்னெறி உணராத நாஸ்திக நடையும், உடைய மனிதனை, மன்னுயிரை வதைக்கும் எமனோடு ஒப்பிடலாம்.

109. சிவவேடம் பூண்டு சிவநாமம் உச்சரித்து
அவம்புரிந்து அல்லல் உறுவர்.

(க—ரை) தவச்சின்னங்களை அணிந்து தகாதசெயல்களைச் செய்து அலைகின்ற பேர்வழிகள் அண்மையில் பல இன்னல் களுக்கு ஆளாகுவர் என்பதுணர்க.

110. பொய்வேடம் பூண்டு புகழிழந்த புத்தியிலான்
மெய்யிழந்த காட்டு மிருகம்.

(க—ரை) தன்னையும் தவத்தையும் புகழ்ந்து ஊர் சுற்றி ஒவ்வாத செய்கையைச் செய்பவன், கானக விலங்கை நிகர்த்தவனாவான்.

111. போகமொடு யோகம் எவையும் மிதமாகின்
தேகமது நோக விழையும்.

(க—ரை) மிதமிஞ்சி அனுபவிக்கின்ற இன்பநுகர்ச்சியினால் உடல்கெட ஏதுவாகுமெனக் கண்டு, சகல சுகபோகங்களையும் சமமாக அனுபவிப்பதுவே சிறந்தது.

112. பஞ்சமா பாதகத்தின் பற்றகன்ற பக்தனுக்கு
நெஞ்சில் இறைநிற்கும் நிறைந்து.

(க—ரை) மக்கள் மனதை மாற்றி அமைக்கும் மாபாதகச் செய்கையை இப் படிமிசை வெறுத்த பக்தனின் இதயத்தில் இயற்கையழகு இடைவிடாது இயங்கும்.

113. கோபம் கொலைகாமம் கொள்ளை குடிசூது
ஆபத்தை உண்டாக்கி அழிக்கும்.

(க—ரை) மதியை மயக்கிப் பொருளைஇழக்கச் செய்கின்ற பொல்லாத முறைகளை நல்லவையெனக் கையாளும் எவரும் முடிவில் கொடிய அபாயத்திற்காளாவர்.

114. புகையிலையுங் கள்ளும் ஊனுடற்குப் பொல்லாத
வகைஉணவென் றெண்ணி விடு.

(க—ரை) மதியை மயக்கும் மதுபானங்களையும், நோயைத் தரத்தக்க கெட்ட புகையிலை வஸ்துக்களையும் உபயோகிக்கக் கூடாதெனக் கருதி அகற்றல் வேண்டும்.

115. சோம்பல் குடிகொண்டு ஊரைச்சுற்றி அலைபவரை
வீம்பரென நாடு நகும்.

(க—ரை) வீதிகளெல்லாம் சுற்றித் தெருத் திண்ணைகளில் உறங்கி, திருட்டுத் தொழில் புரிந்து திரிகிற மக்களை சோம்பேறிகளெனப் பலரும் நகைக்க நேரிடும்.

116. கோழை மனிதன் குணமற்ற துர்ச்செயலான்
ஏழைபணி ஆற்ற இயலான்.

(க—ரை) பயங்கர மனதும் பாதகச் செய்கையும் உடைய மனிதன் மக்கள் பணியை ஏற்கத்தக்கவனுகான்.

117. சித்தர்களைப் பார்த்துச் சிரித்து ஜெகமாய்கைப்
பித்தரெனப் பேசல் பிசகு.

(க—ரை) அறிவுத் தெளிவில்லாத மக்கள் அருள் அடியார்களைப் பார்த்து, இவரும் நம்போன்ற ஜெகப்பித்தரெனப் பேசிப் பரிகசித்தல் இறுதியில் பிசகாய் முடியும்.

118. சாதிமத வீறுமிகப் பேசி மடிபிடித்து
வீதிகளில் வீண்வாதம் ஏன்.

(க—ரை) மதபேதம் பேசித் தர்க்கித்து, உலகப் போராட்டங்களை மீண்டும் மீண்டும் உற்பத்திபண்ணிக் குதர்க்க வாதங்கள் புரிவது தகாத மனிதர் செய்கையாகும்.

119. அதர்ம வெறியேறி ஆடும் அறிவிலியைப்
பதரெனவே பற்றும் பவம்.

(க—ரை) அக்கிரமம், கர்வம், தலைக்கேறிய தறுதலை மனிதர்கள் தகாத மனிதப் பதரென இகழப்படுவர்.

120. சக்திபெரிதா சிவனா என்று குரல்நெரியக்
கத்துவதால் யாது பயன்.

(க—ரை) சிவசக்தியில் எது பெரிதெனக் கூட்டமிட்டு தொண்டை நெரியக் கத்தி சண்டைகளிடுவதினால், முடிவில் யாது பயனுளதென உணர்க.

121. உள்ளத்தில் கள்ளமது பூண்டு கடல்மடைபோல்
வெள்ளைக்கவி பாடல் வீண்.

(க—ரை) இதயத்தில் எண்ணற்ற கபடத்தை வைத்து வெளியில் அழகாக 'வெண்பா'க் கவிகளைக் கடல்மடை திறந்த வாறு பாடுகிறது வீணெனக் காண்க.

122. கலியுகத் தேவதைக ளென்று பிடாரிகட்கு
பலியிடுதல் பாவச் செயல்.

(க—ரை) நீதிநிலை உணராத பாமர மக்கள் துர்க்கா தேவிகளுக்கென்று பிராணிகளைப் பலியிடத் துணிவது கொடிய பாவச் செயலாகவே முடியும்.

123. மூக்குதனில் மூச்சையிழுத்து அடைத்தல் உயிர்
போக்கும் அது பொல்லாதது.

(க—ரை) தவவழி அறியாதவர்கள் அடயோகமெனக் கூறிமூக்கின் வழியே மூச்சையிழுத்து, அடைத்து விழிபிதுங்கி மரணமடைவர். இம்மார்க்கம் கூடாதது.

124. பற்றுடைய நெஞ்சன் பல்கோயில் பார்முழுதும்
சுற்றினும் ஆங்கில்லை சுகம்.

(க—ரை) ஆசையடங்காத உள்ளமுடையோன் காசாய உடையை அணிந்து காசி போய் வரினும், அரிய கிருபை உதயமாகாது.

125. ஜனன மரணமெனும் தோற்றம் ஒடுக்கமிலா
மனமாயை காணும் கனவு.

(க—ரை) அமைதியிழந்து மாயைக்குள் கட்டுண்டமனது, எண்ணற்ற கனவினுல் வீணுன சக்திகள் பலவடிவங்களில் தோற்றமளிக்கின்றதல்லாது உண்மையல்ல.

126. பேரூர்மிகப் பெரிதும் பேசிப் பணிக்குதவான்
காருண்யக் கண்கெட்ட கயமை.

(க—ரை) பேரையும் ஊரையும் பெருமையாகப் பேசிப் பறைசாற்றத்தெரிந்து, பணியாற்ற அறியாத மனிதன், அன்புக்கண் மறைந்த அறிவிலியாகும்.

127. அச்சம் அகங்காரம் கோபம் அறந்தடுத்தல்
துச்சமெனத் தூர விலக்கு.

(க—ரை) அகங்கார மமதைகளோடு தருமந்தவிர்த்தலும், கோபாவேசத்தால் கொடியது செய்தலும், அனுவசியமென மதித்து அகற்றல் வேண்டும்.

128. அகக்கண் திறவா உடலில் அழிந்தொழியும்
முகக்கண் இருந்தென்ன பயன்.

(க—ரை) அநித்திய உடல் அழிந்தொழியுமுன் மோகப் பார்வைக்கிடந்தருகின்ற முகக்கண்ணினும் சிறந்த அகக்கண் திறக்கப் பிரயத்தனப்படல் வேண்டும்.

129. பழிக்கஞ்சி வாழாத பாவி படியுலகில்
கழிக்கும் உதவாக் கடை.

(க—ரை) மானமிழந்து மண்ணில் வசிக்கும் மாபாதக மனிதரை மக்கள், கீழ்க்கடை எனக்கருதும் கேவலப் பிறவியாகும்.

130. முழுமனச் சிங்கமென முடியேறிக் கீழ்விழுந்து
பழுதடைந்த பக்தர் பலர்.

(க—ரை) அரனருளை நாடி அருந்தவம் புரிந்து இடை நடுவில் இடறி விழ்ந்து தோல்வியடைந்தவர்கள், அளவு கடந்த பக்தர்கள் எனல் மிகையாகாது.

131. உருவ உலகத்து உழல்நிலையைக் கண்காணும்
மறுகணத்தில் மாண்டுவிழும்.

(க—ரை) காணப்படுகின்ற இவ்வுலகக் காட்சிகளெல் லாம், உழல்நிலையில் நின்று சுழன்று ஒருகால் அழியுமென உணர்ந்து நித்தியவாழ்வை நாடுதல் வேண்டும்.

132. மாளுபி மானம் இழந்து மதிமறந்தால்
வீணுகி வீழும் பிறவி.

(க—ரை) மதியற்றுப் பிற்போக்குச் சக்திகளுள் கட்டுண் டால், இப்பிறவியெடுத்த நற்பயனை இழந்துவிட வேண்டிய தாக நேரிடுமெனக் காண்க.

133. சாதகமாய்ப் பேசித் தலைமை மிகத்தாங்கி
பாதகர்கள் செய்வர் சதி.

(க—ரை) அன்புமயம் போன்று ஆவன செய்வோமெனப் பேசி முதன்மையாக நடித்து, யாருமறியாமல் ஆகாத செய்கை புரிபவர் தலைவராகார்.

134. மாக்களினம் போன்ற மக்கள் மிகுதியினுல்
சாக்கடை போலாகும் உலகு.

(க—ரை) பகுத்தறிவில்லாத மக்கள் கோடிக்கணக்கில் உயரவுயர நாட்டு நலன்கள் குன்றி, ஆபாச உலகமாகமாறி பெருமையை இழந்துவிடுமென்பதை உணர்க.

135. தொட்ட கடமைகளை விட்டு நழுவினவர்
மட்ட ரகமான மனிதர்.

(க—ரை) ஏற்ற கடமையைச் செய்ய செயலற்று விட்டு விலக முற்படுகிற எவரையும், மனிதாம்ச நேர்மையில் ஒரு பகுதி குறைந்தவர்களாகவே கருதப்படும்.

136. இரக்கமிலான் வாழ்வில் இன்பமிலே துன்பமது
நரகக்குழிக்குச் செல்ல நகர்த்தும்.

(க—ரை) ஈகை கிடையாதவன் இதயத்தில் கவலைப் புயலானது சுழலப்படுவதால் பரசுகமற்ற பள்ளத்துள் தள்ளப் படுவான்.

137. ஆடம்பர வாழ்விற் சிக்கிப் பொருளிழந்து
பாடதிகம் பட்டு மடிவர்.

(க—ரை) வரவிற்கு அதிகமாகச் செலவிட்டு, மூதாதைகள் தேடிய ஊதியம் முதலாக சிங்காரவாழ்க்கையால் இழந்து வறுமைக்கு ஆளாகி உலவலாகா.

138. ஆசான் எனக்கூறி அறியாத மக்களிடம்
பாசாங்கு செய்வர் மடையர்.

(க—ரை) நாமே சுவர்க்கவழியைத் திறக்கத்தக்கவரென பாமரமக்களை மயக்கி, பொருளீட்டிச் செல்லும் மதியீனர்களைக் கண்டு விலகிவசித்தல் மேன்மையாகும்.

139. இலச்சை பலர் கூறுமாறு மனைதோறும்
பிச்சை இரந்துண்ணல் பிழை.

(க—ரை) உழைத்து உண்ணக்கூடிய உடல் பெற்றிருந்தும், சோம்பேறி வேடமணிந்து அவமானம் பெறினும் அன்னங்கிடைத்தால் போதுமென யாசித்தல் குற்றமாகும்.

140. நியாயவழி தவறிச் சென்றால் படுகுழியுள்
பாயவருமென்று கருது.

(க—ரை) நீதிவழியை மீறி நடக்க முற்பட்டால் முடிவில் கொடிய நமன் வாதனையால் உழன்று மடிய நேரிடுமெனக் கண்டு கொள்ளக்கடவது.

141. அருளுறவு காணாத நெஞ்சில் அறியாமை
இருள் கவியக் காணல் இயல்பு.

(க—ரை) கிருபை ஒளி பரவாத உள்ளத்துள் இருள் குடிகொண்டு இன்னல் விளைவிக்கும்.

142. பேரின்ப மாகுறளைக் கற்றுணர்ந்து ஒழுகின்
பாரிலுயர் சீர்மை மிகும்.

(க—ரை) இப்பேரின்பக் குறளைக் கற்றுத் தெளிந்து சிந்தை வலுவுற்ற மக்களால், தேசம் சீரிய சிறப்புற்று, மாசகன்று, மாட்சிமையாகக் காட்சியளிக்கும் என்பது உறுதி.






சுவாமி சித்ரமுத்து அடிகள் 1945ல் மலேசியா நாட்டில் இந்திய தேசீய இராணுவத்தில் சேவைசெய்தபோது எடுத்த படம்.

வெற்றி!

# 4. மரண சிந்தனை

## மனதிற்கு உபதேசம்.

1. அறிவும் மனதும் போராடி இறுதியில் வஞ்சப்புலி போன்ற கொடிய நெஞ்சைத் திருத்தி நமது மரண சிந்தனையிலுதித்த மணி மொழிகளுக்கு மறுமொழி பகரப் பணித்துள்ளோம்.

2. பிறவியிலுயரிய மனிதன், தன்னையறிய மறந்துமாருட்டச் சுழலிற் சிக்கி உழல்வதின் காரணம் யாதென உள்ளாழ்ந்து சிந்திப்பவர்கள் தற்கால உலகில் மிகுதியும் குறைவு.

3. இம் மாயா உலகில் ஆட்சிபுரிந்து அதிகாரச் சட்டங்களைப் பிரயோகித்து வியவகார விசாரணை செய்து, அநித்தியப் பொருள்களை அறியாமையால் நித்தியமெனக்கருதிச் சூழ்ச்சி வலையுட் கட்டுண்டு முடிவில் மடிந்தழிகின்ற இவ்வுடலினுள் நின்றொளிர்வது அறிவா, மனமா? என ஆராய்ந்து பார்ப்பவர்கள் ஒருசில உள்ளத்துறவுடையவர்களேயாகும்.

4. புறத்தோற்றத்தையும் பொய்யுருவங்களையும் ஊன விழியாற்கண்டு களிப்புற்று எனதில்லம், எனது மனையாள் மக்களென மனப்பற்றுடையோனுகி, சதா சஞ்சலக் கடலிலிறங்கிக் கரையேறவும் வழியறியாமல், கவலையாகிய முதலையின் வாயிலகப்பட்டுப் பிராணனைப்பறிகொடுக்குந் தறுவாயில் மனிதன் பிரலாபமடைகிருன்.

5. காரணம் யாதென அகவிழி திறந்து ஆராயப்புகின் அண்மையில் உண்மை புலப்படுவது எளிது. இவையல்லாது இக விழியும் எனதெனக்கொள்ளும் செருக்கும் சூழ்ந்து உலகை நம்பி, ஏமாந்துபோகிற மந்த மதியும் மழுங்கிய அறிவும் பந்தபாசப் படுகுழியில் தள்ளிவிட வேண்டுமென்ற சிந்தனையும் எதிர்நின்று போராடுவதினுல் மனிதனுக்கு அகக்கண் திறப்பது அரிதாகின்றது.

6. அளவுகடந்த ஞான போதனு நூற்கள் நம் தேசத்தில் உதயமாகியும் ஆன்ம ஞானிகள் அருகிலிருந்து செவ்விய அருள் மொழிகளைச் செவியுணவாகப் புகட்டினும் காட்டிற் பிரகாசித்த மதிபோலும், கடலிற் பெய்த மழைபோலும் நன் மதிகள் யாவும் பயனற்று ஒழிகின்றன.

7. மேலும், நாட்டுப் பணிபுரியப் பிறந்த மாந்தர்கள் காட்டு மாக்கள்போன்று காட்சியளிப்பதைக் காணுங்கால், காலசக்கரச் சுழலில் மக்கள் வீழக் கிடக்கின்றனரென்ற அறி குறியேயல்லாது மற்றன்று! இதைச் சாதாரண மனிதர்கள் அறிவதென்ருலரிது. இது அவர்களுக்கு மரணமறதி அதிகம் உண்டென்பதைக் குறிக்கின்றது.

8. வேதாந்த தத்துவ வித்தைகளைக் கற்றுக் கடைத்தே றக் கருதிய பேரறிஞர்களுங்கூடக் கட்டுக்கதைகளைக் காண விழைகின்றனர். இதுவும் மரணத்தை மறந்த மதியீனமே.

9. ஒவ்வொருவரும், சதா இவ்வுருவ உலகைச் சற்று உற்று நோக்கி உடலையும் பன்முறை பகுத்துப் பார்ப்பின் உறுப்பிலுள்ள விருப்பும், உண்மையை உண்டில்லை யென்ற விபரீதமும், உடலோடு உயிர் சார்ந்தாற்றும் பொறுப்பும், தெற்றெனத் தெளியலாகும்.

10. கர்ப்பாசயப் பையில் கட்டுண்டு சுக்கில சுரோணிதந் திரண்டு உருவாகி உயிர் குடி புகுந்து புவியிற் பிறந்து புனைப் பெயரும் பெற்று பிள்ளைப்பருவமாய் வளருமென எதிர்பார்ப் பது யாருக்கும் சந்தேகமே.

11. ஆனல் இயற்கையுலகில் அமைப்போடு தோன்றிக் கண்கண்ட பொருட்கள் யாவும் ஒருநாள் அழிந்தொழியு மென உறுதியாக மரணசாசனமெழுதி வைத்து விடலாம். இதுதான் நிச்சயம்.

12. ஆதலால், மரணத்தை மறந்து விடலாகாதென மாயா விநோத மனதிற்கு பின்வருமாறு பல நற்போதனைகள் புரிந்து நாம் எச்சரிக்கின்ருேம்.

13. ஏ நெஞ்சமே! வீதிகளில் வெகுவிநோதமாகநடமாடு கின்ற ஆண் பெண்ணுடலை நீ கவனிக்கையில், அங்கலட்சணத்தோடு, அவலட்சணத்தையும் கலந்தே காண்கின்ருயல் லவா? அவை யாவும் மங்களமாக நிலைத்து நிற்பதா, அல்லது

மாயையா, எனக்காண்பதும், உன் மரண சிந்தனையிலேதான் மறைந்து கிடக்கின்றது. ஆழ்ந்து பார். உண்மை விளங்கும்.

14. பிறவிப் பிணியைப் போக்க மருந்து உன்னை உணர் தலேயாகும். கோடிக்கணக்கில் தனந்தேடிப் புதைத்து வைத்து மடிகின்ற மானிடர்களையும் நீ நன்கு கவனித்து எக் காரியங்களையும் நிதானித்துச் செய், நலனுறலாம்.

15. உன்னை அறிந்து கொள்ளாத வரையில், உலக விஷ யங்களைப்பற்றிப் பிதற்றுவதினால் யாதொரு பயனும் பெற் றுய்யமுடியாதுபோகும். ஆதலால் புகழ் இகழற்ற நிலையிலிரு. அப்படியாயின் ஆனந்தமுடன் திகழுவாய்.

16. மனமே! பிறரைக் குறை கூற விரும்பிய நீ, உன் குறைகளைச் சற்றெண்ணிப்பார். அறியாமை ஒழியும், அச்சம் பிறக்கும், அன்புருவாகி விடுவாய். இதில் ஐயமில்லை.

17. பாய்விரித்தோடும் மரக்கலம் போன்று, இந்த மானி டப் படகைத் திசை காணாக் கடலில் மன வேகமாகிய நீ காற்று உருவமாக இழுத்துச்செல்லும்போது பிரயாணியாகிய ஜீவன் படும்பாடு கொஞ்சமா? அவைகண்டு, அறிவு மயமாகிய மாலுமி மதி என்னும் சுக்கானைத் திருப்பிப் பக்குவமாகப் பட கைக் கரை சேர்க்காவிட்டால் அதோகதி யென்னும் ஆழிய கடலில் மூழ்கி விடச் செய்வாய் அல்லவா? கிருபைசெய்து சிறிது அமைதியாக இரு!

18. இம்மகிதலத்தில் தோன்றி மறையும் எவற்றிலும் மதிப்பிடவொண்ணாத மாணிக்கம் யாதென நம்மிடம் கேட்கப் பெறுமாயின், அது மரணமென்ற மெய்ப்பொருள் ஒன்றெ னவே சுட்டிக் காட்டுவோம்.

19. வாழ்வையுஞ் சாவையுஞ் சீர் தூக்கின், சாவுமணி ஓசையேசாலச் சிறந்ததெனத் தென்படும். ஆதலால், சாவைப் பரிசெனக் கொள்ளலே சான்றோர்க்கு அழகு; சாவுதான் உல குயிர் தழைக்கச் சிறந்த வித்து; மறந்து விடாதே.

20. உனது யாக்கையின் அமைப்பைக்கவனி. உரோமம், தோல், தசை, இரத்தம், நரம்பு, எலும்பு, மூளை, இருதயம், கால், கரம், சிரமென அமைந்த உறுப்புக்கள் யாவும் வேறு பட்டதின் காரணங்களையும் சிறிது சிந்தனை செய்.

21. இவ்வுடலையும் உலகையும் நீ சதமெனக் கருதாதே. உற்ருர் உறவினர்களையும் சொந்தம் பாராட்டாதே. இவைகள் அனைத்தும் நித்திய வாழ்விற்குச் சத்துருக்களெனக் கருதி அகற்று.

22. நாமேன் அப்படிச் சொல்லுகின்ருேம் தெரியுமா? உனது கால்களில்நோயுண்டாளுல் கண்களிலிருந்து கண்ணீர் வருகின்றதே. கண்களுக்கு இடையூறு நேர்ந்தால் கால்கள் ஏதேனும் கலக்கமடைகின்றதா? இவ்வாறுதான் உனது பந்தப்பிணைப்புள்ள யாவும் ஒருநாள் தொடர்பற்றுப் போய் விடுமெனச் சொல்கின்ருேம்.

23. நெஞ்சே! தோட்டி முதல் தொண்டமான்வரை ஆண்டிமுதல் அரசன்வரை அரிய திருவுரைகளை உபந்நியாசம் செய்து வருகின்ருயே, அஃது மெய்மயமாக மேலும் பிரகாசிக்குமா, அல்லது கற்பனை போன்று தோன்றி மறையுமா? இதையுன் கருத்துள் எண்ணிக் கவனமுடன் உரையாடப்பழகு.

24. உனக்கு நாம் இங்குசொல்லிவரும் உபதேசங்களைப் பகிரங்கப் பார்வையில் நோக்கிக் கணக்கெடுக்க முடியாது. அகவிழிதிறந்து அந்தரங்கமாக நோட்டமிட்டுஉணர்ந்துபார். நன்கு புலப்படும்.

25. பந்தபாச வீடாகிய கற்கட்டு மேன்மாடிகளைக்கண்டு களிப்புருதே! குச்சுவீட்டிற்கும், மச்சுவீட்டிற்குமுள்ள வித்தியாசம் யாதெனச் சற்று யோசித்துப்பார். இந்தவீடு சொந்த வீடில்லை என்பதையும், உந்தன் வீடு உயரிய சூனிய வீடென்பதையும் கண்டு கொள்ளலாம்.

26. இடுக்கியில் அகப்பட்ட எலிபோல, பல இன்னல்கள் வந்துறும் போதுதான் உனக்கு ஞானுேதயமாகின்றது. மற்றைய நேரங்களில் பற்றுருவாகிய பாழான சுழலில் வீழ்ந்து தத்தளிக்கின்ருய். இதை நடுநிலையாகிய நாம் பாராமலே பார்த்துக் கொண்டுதானிருக்கிருேம்.

27. உனது வாழ்க்கையின் வரலாறுகள் நீதிதவறி வரம்பு கடந்து போகுமாயின், இறுதி முடிவில் சுருதிக்கணக்கைப்புரட்டிப்பார்த்து தர்ம, அதர்ம சங்கையறிந்து அழைப்பு அனுப்பப் படுமே, அதற்கென்ன பதில்சொல்வாய்? உஷாரென்ற உடைவாளை மறதியாகிய மகாபாவியிடம் ஒப்படைத்துவிடாதே.

28. அளவு கடந்த ஆசை உதயமாகின்றதே, அவை எங்கிருந்து உதிப்பதெனக் கண்டுள்ளாயா? நீ இன்னும் கண்டுபிடிக்க முயலவில்லை எனவே கருதுகின்றோம். இவ்விஷயத்தில் முனைந்து ஆராய முற்படு. இடமறிந்து ஆங்கு அதை நசியச் செய்தால் அநித்திய உலக ஆபாசச் சுழல் உன்னை வந்து அடிக்கடி மோதமாட்டா.

29. ஏ மனமே! இவ்வூன உடலைத் தினசரியும் பசிப்பிணியாகிய அரக்கன் பற்றிப் பிடித்தாட்டுகின்றானே. அதற்கும் உயரிய உபாயமுண்டு கேள், சொல்லுகின்றோம். மௌனானந்தகட்டத்திலே அவை காணக்கிடக்கின்றன. கண்டுகொள்.

30. ஏழடுக்கு உப்பரிகை மீதிருக்கக் கனவு கண்ட எனக்கு ஒரு குடிசை வீடுமில்லாது பரிதவிக்கின்றேனே! எனக்கேட்ட உனது ஏழைநண்பனுக்கு, நேற்றென்ன சொல்லியிருந்தாய், இன்றென்ன சொல்லப் போகின்றாய், நாளைக்கென்ன சொல்லக் கருதுகின்றாய்? விடைபகர் வீண் காலப் போக்கு இனிமேல் வேண்டாம்.

31. கிடைத்ததைப் புசித்துச் சிந்தையை அடக்கிச் சும்மா இருப்பது உனக்கழகல்லவா? செயலற்ற எண்ணங்களை எண்ணிச் சீரழியலாமா? உழல் நிலையை விட்டு ஒதுங்கியிருந்தால் நீ நற்கதியுறலாம்.

32. அருட்பிரகாசத் தாய் உனக்கு அமுதப்பாலூட்டியதை மறந்துவிடலாமா? ஞாபகக் கலசத்தின் அடியிலே நமது உபதேசம் அனைத்தும் பிரகாசிக்கின்றதா? அல்லது இல்லிக் குடம்போல் நாம் சொல்லியதெல்லாம் வீணாகிவிடுகின்றனவா? இருதலைக்கொள்ளி எறும்பிற்கு உனது இருதயத்தை இருப்பிடமாகப் பரிசளித்து விடாதே. சொன்னோம்.

33. நூலேணிவைத்து மேலேறிப் போகவேண்டுமென உனது அகக்கதவைத் தட்டிச் சுகப்பொருளை உணர்த்தியுள்ளோம். அவைகண்டு மதுவுண்ட வண்டுபோல் சொக்கிடாமல் மகிதல மக்களோடு நீ மயங்குவது ஏன்? இது உனக்குத் தக்க மதி ஆகாது.

34. அப்பன் மகனாக இருந்ததை மறந்தான் என்றால் மகன் அப்பனாக வருவான் என்பதை நீ மறக்கலாமா? சிற்றாடைகளைச்சுற்றித் தெருவீதிகளில் ஆடியகாலம் கடந்து பருவ

வயதுவந்து தொடர்ந்தபடியால் அருவ நிலேயில் நிற்கத் தவறிவிடாதே.

35. சரீர நாற்றத்தைப் போக்க சந்தனுதித் தைலம் எனக்கு வயது இருபத்தைந்தில் வாங்கிப் பூசியுள்ளேன். உயிரைச் சிங்காரிக்க முயன்ற உனக்கு இப்பொழுது வாசனே யில் ஆசை கிளம்பக் காரணமென்ன? இவை தகாதென உணர்ந்து அகற்றி தகுவன வற்றைச் செய்யத் தயங்கிடாதே.

36. நெஞ்சே! பத்தாம் இலக்க வீடு முத்தியடையவே நாடு; பிறகனேத்தையும் விட்டுப்போடு எனும், பேரின்ப நாட்டமுள்ள பெரியார்களுக்கும், சிற்றின்பச் செருக்குள்ள சிறுமதியாளருக்கும் பொன்னுலகவாழ்வு எய்தப் போட்டி நடக்கின்றதைக் கண்டு, வெற்றிக்கொடிநாட்டி பேரிகை கொட்டி ஜெயம் பெற்று வீரசுவர்க்கமெய்தப் புறப்படு.

37. இன்று நேற்றென்ற பொருளே அறிய அறிவுக் கலப்பை கொண்டு, அகப்பூமியைச் சதா உழுது தேடியும் இருநாளில் ஒருநாளேயேனும் அறியாமலிருக்கின்ருேமே என உனக்குக் கவலே சிறிதேனுமுண்டா? இனியேனும், நீ உபசாந்த சமதரிசன நிலேயில் நிற்க முற்படு.

38. ஏராளமான செல்வமிருந்தால் தாராளமாகத் தான மிடலாமெனக் கருதுவது பெரிய தவருக முடியும். உனது அருளேச் சூறையாடிப் பொருளேப் பொய்பேசி யாசிக்க வேண்டி நேரிடும். ஆதலால் உனது அன்புப் பெருக்கால் ஊறிப் பொசியும் அமுத மொழிகளே மக்கட்குப் பங்கீடு செய்து கொடுத்தால் உனக்கு மோசமில்லே.

39. உலகு தோன்றி ஒடுங்கும் இரகசியம், நஞ்சிலிருந்து அமுதமும், அமுதத்திலிருந்து நஞ்சும் பிறந்து ஜீவராசிகளே உய்விக்கிறதென நீ உணர்தல் வேண்டும். அப்படியாயின் பகலிரவென்பனபோலப் பல பாகுபாடுகளேக் கருத உனக்கு இடமிராது.

40. பிழைகாண விழைவதும், பிழைகண்டு பிடிப்பதும், பிழை கூறுவதும் பலருடைய சுபாவம், தன்குறையுணர்வதும், பிறர் குறை காணுதிருப்பதும் பேரறிவுடையோர் சுபாவம். இதையுணர்ந்து உனது பிழைகண்டு உன்னே நீ திருத்த முயல்.

41. அஞ்ஞானி, விஞ்ஞானி, மெய்ஞ்ஞானி, தேசாபி மானி, பிரமஞானியெனப் பெயர்வந்த காரணமும், அவற்றின்

இறுதியில் ஞானியென வந்த ஒலிவடிவையும் எழுத்ததிகாரத்திற் புரட்டிப் பார்த்து உருவ வடிவில் சந்தேகமற்றுவிடின் நீ அமரருலகிற்கு ஆளாகலாம்!

42. மனமே! உனக்கு விவேக மில்லாதபடியினுலே வீணு கப்பந்தபாசத்துள் கட்டுண்டு,ஆசையாகிய அழுக்குத் திரண்டு கற்பாசயப்பையுட் புகுந்து புவியிற் பிறந்து வளர்ந்து வாலிப சேட்டையில் ஏற்படும் மூர்க்கக்குணத்தை எதிர்க்கமுடியாமல் மீண்டும் வந்தவழியை நோக்குகின்ருயே! இவை நீ முன் செய்த தீவினைதானல்லவா? ஐயமகலச் சற்றெண்ணிப்பார்.

43. உயர்ந்த மரக்கிளைகளில் உட்கார்ந்திருக்கின்ற பட்சிகளை கூட்டில் அகப்படச்செய்வது போன்று சதா உழல் நிலையில் நின்று திண்டாடும் உன்னை ஒரு நிலையில் நிறுத்த வேண்டிப் பலமுறையும் நல்லுபதேசம் புரிய நேரிடுகிறது. சரிதானெனக் கேட்டு அதன்படி நடப்பாயாகில் கிருபைவீடு பெற்று பரம பதமடைந்த பாக்கியவான்களில் நீயும் ஒருவனுகத் திகழலாம்.

44. உனக்குத் துணை நீதானென நாம் எத்தனை முறை உபதேசித்தோம். ஏன் இன்னும் கெட்டழிந்து போகப்பார்க்கின்ருய்? பெற்ற பிள்ளையும் உற்ருர் உறவினர்களும் உனக்குச் சதமில்லை. யாவரும் முடிவில் இடுகாட்டையும் எட்டிப் பாரார்களென்பதை உணர்ந்து பற்றற்று இருக்கப் பழகு.

45. அபரிமிதமான சனங்களோடு நாமும் சபரிமலையேறி இறங்கினேம். நீண்டமரங்களடர்ந்த இருண்ட கானகமல்லாது அங்கு கண்ட ஆதிசயம் ஒன்றுமில்லை. மீண்டும் வனசஞ்சாரம் செல்லத் தூண்டாதே. ஓடித்தவஞ் செய்வது பேடித்தனமெனக் கருது.

46. அண்டினபேர்களைக் கெடுத்து அவமோசம் புரிகின்ற நவநாகரீக இக் கலியுலகத்திலே, தவஞான வழிகளையறிய எவரேனும் ஓடி வருவார்களா? ஈகைமதியுடன் கூவி அழைப்பதை நிறுத்திச் சும்மாயிரு, சுகம்பெறலாம்.

47. கடமையாகிய கரும யோகத்தை பந்தமுருது செய்து முடித்தவன், ஞான யோகத்திற்கு அதிகாரியெனக் கூறும் சுருதி முடிவின் சூட்சுமம் யாதென நீ அறிந்திருக்கின்ருயா? அப்படி அறிந்திருப்பாயாஞல் உரிமையைக் கருதாது கடமையில் ஓங்கிப் பிரகாசிக்க வேண்டுமே. உனக்கின்னும் மௌட்டீகம் உண்டெனக் காணப்படுகிறது. இனியேனும் மகத்துவமிக்க புகழுடம்பெய்தப் புறப்படு.

48. சாறுஞ் சக்கையும் கலந்து அமைந்துள்ள கரும்பைப் போன்று, நீரும் சோறும் சேர்ந்திருப்பதைப் புசிக்க நீ ஏன் விரும்புகின்றுயில்லே? இவை உனது சென்ம வாசனையா? அல்லது செயற்கை வாசனையா? உத்தமர்களோடு உறவுபூண்டு உண்மையை நாட விரும்பு.

49. நீ உண்ணும் உணவுக்கு ஏற்றவாறு எண்ணமும் குணமும் அமையுமென அறுசுவை இச்சையை விளக்கினுலும் உனது அகக் குரங்கின் ஆட்டம் அடங்கினபாடில்லேயே. ஏன்! உன்னுள் அழுக்கிருப்பதனுல்தானே! இதை அவசியம் நீ ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். மறைக்கலாகாது.

50. ஏ மனமே! அடுத்துக் குடும்பத்தைக் கெடுத்த சந்நியாசியையும். பணத்தைக் கொடுத்துப் பரதேசியாகிய பாமர குடும்பத்தாரையும் நீ நன்கு அறிந்திருந்தும் ஒருவரை ஒருவர் உயர்வு தாழ்வெனக் கருதலாமா? யோசித்துப்பார். உண்மை விளங்கும் நன்மை பயக்கும்.

51. அறிவிலிருந்து ஆனந்தமும், மகிதல இச்சையிலிருந்து மாயப்பிரபஞ்சமும் தோன்றுவதுகண்டு அருள்மயமாகி நிற்கக் கருதுகிற மனிதனேக்காரண காரியமுணர வொட்டாமல் தடுத்துக் கடைகெட்ட படுகுழியில் தள்ளிவிட நீ எத்தனிப்பது தகுதியாகுமா? இனி அவ்வாறில்லாது அரிய தவம்புரிபவர்களுக்கு உரிய துணையாக நிற்பாயாக!

52. ஆழக்கிணற்றினுள் நீளக்கயிறில்லாமல் சலமெடுத்துத் தாகந் தணிக்க முடியாதவாறுபோல் அறியாமை இருள் சூழ்ந்துள்ள மக்கள் உயர்ஞானப் பெருமையை உணர்வார்களென்ரு நீ கருதுகிருய்? அது பொய்யாய் முடியும். உனது உபதேசப் பித்தை விட்டொழி.

53. உருவம், அருவம், அருவுருவமென வந்த தோற்றத்தை உனது பருவகாலஆராய்ச்சியிலிருந்து கண்டுபிடித்து மறுவற்ற உனது சற்குணம் மாசுற்று மங்காமலும் பாதுகாத்துக் கொள். இவை உனக்கு அரிய நன்மதியாகும்.

54. நீ இவ்வுலகில் உடலவதாரமெடுத்து மக்களுக்கு எதிர்காலத்தில் நீதி வழுவாது தொண்டுபுரிய என்னென்ன திட்டமிட்டிருக்கின்ருய். அத்திட்டங்கள் நிறைவேறுமா? நாடும், அரசும் அதை ஆமோதிக்குமா? அவ்வாருயின், புண்ணிய லோகத்திற்கு ஏகும் நல்வழிகளேப் புகழ்பெறுமாறு உலகிற்குத் தந்துதவு.

55. உண்மைப் பொருளை உணர்ந்தவர் சொல்லார்; சொன்னவர் உணர்ந்திராரென்பது உனது வேதாந்தமா? அல்லது இவ்வுலகச் சித்தாந்தமா? சொல்லும் செயலும் அமைந்த உத்தமர்களுக்கிவை பொருந்துமா? எதையும் யோசித்து உணர்ந்து பேசு.

56. ஏ நெஞ்சே! தலையை மழுங்கச் சிரைப்பதா? சடையைத் திரித்து வளர்ப்பதாவெனக் கருதுதல் தவறு. இரண்டும் ஒன்றுதானென்பது நமது நோக்கம். சிகையலங்காரஞ் செய்த காலமுங் கடந்து விட்டது. சிங்கார உலகம் சின்னபின்னப் பட்டு உழல்வதைக் காண முயல்.

57. கிளைகள் அடர்ந்த மரங்களுக்கும், கீழே படர்ந்துள்ள செடிகளுக்கும் காற்றால் விளையும் கஷ்டங்களைக் கண்டு பிடித்து, அகங்கார விருட்சம் அடிவேரோடு சாயுமென்பதையும் உணர்ந்து உடலோடு உள்ளமும் ஒடுங்கி உலவப் பழகு.

58. கடவுளடி சேரக் கருதிக் காய்கனிஅருந்தி உயர் தவம் புரிந்த உத்தமர்களையுங்கூட, கீழே இடறி வீழ்ச்சியுறுமாறு சூழ்ச்சி செய்வது உனக்குத் தருமந்தானா? தவத்தை அபத்தமாக்கிப் பவத்தைப் பரவச்செய்யாது இருக்குமாறு வேண்டுகின்றோம்.

59. சிறந்த உனது உடலைச் சதா இறந்து போனதாகக் கருதி, தனுகரண புவனபோகபாக்கியங்களையுந் துறந்து உனது உயரிய நிலையில் நீயாக நின்று விளையாடியும் வீணான பூமிக்கு ஏன் இறங்கிவர விரும்புகின்றாய்? உனது இராசகுஹ்ய யோக வித்தையின் குறைவா? அல்லது ஊழ்வினையின் தொடர்பா? உணர்ச்சியோடு உற்றுக் கவனித்து உண்மைத் தெளிவைப் பற்றி நில்.

60. பகிரங்கமாகச் சதா பகற்கொள்ளை யடிப்பவர்களுக்கும், அந்தரங்கமாக ஓர் தினம் அரிசி திருடினவர்களுக்கும், சித்தவிருத்தியில் வித்தியாசமின்றி ஒன்றேயாகும். ஆகையால் எதிலும் உனது கருத்தைப் பதித்து சத்துவகுணப் பிரகாசமாகத் திகழ்.

61. மனமே! வெட்டவெளியில் நிட்டை பழகினால், அட்டமா சித்துக்களும் விளையாடலாமென உனக்கு நன்கு தெரியுமல்லவா? முத்திக்கும் சித்துக்கும் முரண்பாடுண்டு எனக் கருதிப் பாவச் சுமையைத் தருகிற கோபக்கொடியனை அடக்கி ஒடுக்கினால் பொறுமை பெருகும்.

62. இச்சா சக்தியும் கிரியா சக்தியும் ஞான சக்திக்குள் அடங்க வேண்டுவதிருக்கச் சிலவேளைகளில் நீ மாயாசக்தி யினிடம் மாட்டிக்கொள்ளலாகுமா? உன்னிடம் திடசக்திக்கு இடமில்லாதபடியால் சலனமதி உன்னைச் சூழ்ந்துகொள்கின் றது. சீ! இவை பெரிய வெட்கக்கேடு. உணர்ச்சியோடு இரு.

63. குப்பானிவலசைக்குயவன் குடிபுகுந்துள்ள இப்பஞ் சபூத வீடு கொஞ்ச நாளில் மறைந்துபோகுமேயென எண்ணி ஏங்கிக் கண்ணீர் பெருக்கி அறிவாகிய தேவனைத் தொழுது அழியாத நிலையை அணுகிப் பற்றற்றிரு!

64. நெஞ்சே இலட்சுமி பிச்சையெடுக்கப் புகுந்த இக் காலத்தில் பிறந்த இளைஞர்களிடம் மதபேதமும் மற்கடமதியும் உயர்ந்து எச்சமயத்தையும் துச்சமாக மதித்து மடிந்துபோ வதற்குக் காரணமாக நிற்பது நீதானல்லவா? ஆகையால், நீ ஒடுங்கினால் இந் நிலவுலகில் நிட்டூரங்களும் ஒடுங்குவது உறுதி!

65. மாணவரும் குருவும் மானிடவடிவில் ஓர் உருவ மாகத் தோற்றமளிக்கையில், குருபிரானை அவதார புருட ரெனப் புகழ்வது எவ்வாறு பொருந்தும்? அதற்கு அவரிடம் அடையாளங்கள் ஏதேனுமுண்டா? அருவுருவ மறைவுத் திரையைக் கிழித்துப்பார்த்து அவரிடம் உறவுகொள்.

66. உயிரைச் சிங்காரித்து உண்மை பின்பற்றி வாழ்வ திருக்க, உடலைச் சிங்காரித்து உலகில் புகழ் பெற விரும்ப லாமா? புகழ் இகழாக முடியுமெனக் கடிந்து நன்னிலையறிந்து நின் கடனாற்றல் நன்று.

67. அறநெறி யறிந்த பெரியோரென உனக்குப் புகழ் மாலை சூட்டி, வாகனங்களிலேற்றி ஊர்வலஞ் சுற்றிப் பேரிகை முழக்கிக் கொண்டாடப் புவியோர் விரும்பினால் சம்மதிக்காமல் மறுக்க உனக்குச் சக்தியுண்டா? அவ்வாறாயின், அனந்த சீவராசிகளின் அகக்கோவிலில் நீ எழுந்தருளலாம்.

68. இதயகலசத்திலிருந்து உதயமாகிவரும் மணிமொழி களைக் கேட்டுச் சிந்தித்து ஆனந்த முறுவதுதான் நலமென நாமுனக்கிட்ட கட்டளை. இவை தவிர்த்து அறிவொளிமங்கிய ஆசாமிகளிடம் வாதுபுரிய முற்படாதே! சமயங்கண்டு அனைத் தையும் ஆமெனக்கேட்டு அடக்கமாக இரு.

69. ஜீவன் முக்தரும், ஜெகப்பித்தரும் ஜெகஜாலச் சித் தரும் உலவுகின்ற இந்நிகழ்காலத்தில் முத்தி நிலங்கண்டு

சித்தந் தெளிவதென்றால் சாத்தியமன்று! உருவத்தைக் கண்டு உள்ளத்தை உணராமல் நீ உண்மையை உபதேசிப்பது தப்பிதமாக முடியும்.

70. மனமே! நீ அறியாத காலத்தில் உண்டு ருசிகண்ட பதார்த்தங்கள் கிடையாத இக்காலத்தில் எண்ணி ஏங்கலாமா? இன்பந் தருவதெல்லாம் இறுதியில் துன்பமயமாகுமெனக் கருதி இச்சையற்று இறைவனருளை நாடிப் பாடுபடு.

71. நீ குடிபுகுந்துள்ள உடலும், உடல் குடிபுகுந்த வீடும், வீடுகள் செறிந்த நாடும், காடாக முடிகிற காலம் வந்தால், யாவும் குட்டிச்சுவருக்கு நிகராக ஒப்பிடவேண்டி நேரிடும். எவ்வாறெனில், இடிந்து விழுந்த வீடுகளுக்கு எதிர்மறையாக உனது வீடு இம்மாய உலகில் இடிந்துவிழும் தறுவாயில் இருக்கின்றது. கொஞ்ச நாளில் இடிந்து விழவும் போகின்றது. ஏமாந்திருப்பது உனக்கு அழகன்று.

72. கலை ஈராறையும் கட்டுப்படுத்திக் கண்ணோடு கருத்தைச் சேர்த்து வாழ்க்கை நலனறிய வகை அறிவித்த குரு பகவானை இறையவதாரமென மதித்து, உனது அங்க சேட்டைகளையும் ஒப்படைத்து,ஆனந்தஉலக அதிகாரியாக அமர்ந்திரு.

73. இரகசியக் கண் திறந்து பார்க்கும்போதுதான் உனது அந்தகாரம் சிறிது வெளிப்படையாகக் காணக் கிடக்கின்றதெனக் கண்டறிந்துள்ளோம். நீ ஓடியொளித்து உள்ளதை மறைக்கக் கருதினால், பொல்லாத சாபத்திற்காளாகுவாய். நீ தப்பிப் பிழைக்க வேண்டின் நம்மிடம் சரணடையவேண்டியதே முடிவு.

74. பவம் புரியாத நாமேன் தவம்புரிய வேண்டுமெனக் கருதலாகாது. அறுசுவை உணவுகளையுண்டு அழகான உடைகளைஉடுத்தி உல்லாச நடை நடந்த காலத்திற் கண்ட கனவாகவே முடியும். திண்டு முண்டு செய்யாமல் அகமசையாத அருந்தவஞ் செய்து அருள்சேர விழை.

75. விரோதி வருடம், ஆடி மாதம் பத்தாந்தேதி அமாவாசைநாள் நள்ளிரவில், நாம் கண்ட தரிசனம் இறுதியில் மெய்யாகவே முடியும். சத்திய ஞான வீரபுருடர்கள் அசத்தியக் கருவிலுதித்த சண்டாளர்களை வெட்டி வீழ்த்தக் கண்டேன்! வருங்காலப் படலத்தில் இவை உனக்கு ஞாபகமிருக்கட்டும்.

76. அழியாச் சுடரொளி மண்டபத்துள் உன்னைச் செல்லவிடாமல் வெளியே தள்ளுவது உனது அச்சமல்லவா?

அந்தரங்கக் கடலில் நீந்துவது எவர்க்கும் எளிதாகாது. கோழைமனதாகிய நீ, நமது உபதேசவழி நின்று உறுதிபெற் ருல், பரிபூரணமாகப் பொன்னுலக வாழ்வெய்தப் பெறலாம்!

77. உச்சிவழி சென்று உயரப் பறந்து சச்சிதானந்தப் பரவெளியில் விளையாட அன்னை ஜெகன்மாதா உன்னை அழைக்கும்போது, போராடித் திரும்பியது உன்மீது பெரிய குற்றமாகும். நீ மறுமுறையும் அவ்வாறு செய்யேன் என உறுதி செய்து கொள்ளக்கடவாயாக!

78. ஆயிரம் வருடம் அருந்தவம் புரியினும் அநித்திய உலக சூழ்நிலையில் புகுந்த மக்களைத் திருத்தியமைக்க உன்னு லாகுமா? பிரயத்தனம் செய்து பார்க்கின்ருயே! பயனேது முண்டா? இனித் தன்னறிவிலே தாளுகி நின்ருல் நலனுறலாம்.

79. மனமே! சாத்திரச் சுவடிகளைப் புரட்டிப் பார்த்து உனதிரு கண்களும் பூத்துப் போயினவே. சிறிதேனும் நிம் மதியாக இருக்கலாகாதா? கதை புராணங்களை வாசித்துக் காலங் கடத்த வேண்டாம்! கதா காலட்சேபங்களைச் சொல்லி வயிறு வளர்ப்பதினுல் உனக்கென்ன பெருமையுண்டு? அனு பவ மொழிகளைப் பயன்படக் கூறுதல் நன்று.

80. ஓடியலைந்து வாடி வதங்கி ஒருநாள் அழிந்து போவதுதானே உனது புவி வாழ்வு? இதற்குள் ஏன் பல குதர்க்க வாதங்கள் புரிகின்ருய்? இனித் தனக்கு நிகரில்லை யென்ற அகங்கார வேக மொடுங்கி, மரண தியானத்தையும் மறவாதிருக்க வேண்டுவது அவசியமாகும்.

81. ஏ மாயப் பிரபஞ்ச நெஞ்சே! அறிவுப் பிரகாசம் பொருந்திய இடமே உனதிருப்பிடமெனச் சுட்டிக் காட்டியும் நீ இன்னும் பிறவிக் குழியில் வீழ்ந்து புரளக் கருதலாமா? மார்க்கமறிந்து கரையேற வழியறியாமல் மேலும் மயங்கி விடாதே.

82. மனிதாம்சமுடைய ஒரு சிலர் தெய்வாம்சமாக மாறிப் பரமபதமடைந்ததுபோல, ஊழ்வினை வசமும் ஒருங் கமைந்திருப்பின் உனக்கும் அந்தத் தெய்கவீத் திருச்சபையில் இடமுண்டெனக் கூறி நாமுன்னை வாழ்த்துகின்ருேம்!

83. உண்ணவேண்டும், உறங்க வேண்டுமென நாள்தோ றும் துன்புறுத்திவந்த உன்னைச் சதா சமாதானம்செய்தும் கேளாதபடியால், இதற்கு மருந்து எங்கிருக்கிறது எனக் கண்டு ஆராய்ந்து உனக்கு மருந்து உன்னுள்ளேதான்

எனத் தெரிந்து, உன்னே உனது சிறைச்சாலேயுள்ளே தள்ளியுள்ளோம். இனிச் சும்மா உறங்கு.

84. நெஞ்சே! உன்னேச் சிறைச்சாலேயுள் தள்ளிய காலத்திலுங்கூட, நம்மை நீ ஏமாற்றிய கதை ஒன்றுள்ளது. அதையும் இங்கு பகிரங்கமாகச் சொல்லிவிடுகிருேம். தனித்திருந்து தவம் செய்யலாமெனத் தூண்டிப் பாசறை கட்டித் தருமாறு ஒருவரிடம் பிச்சை கேட்கச் செய்துவிட்டாய். இவை உனது நயவஞ்சகச் செயலென நாமறிவோம், நீ, தங்குமிடங்களே எல்லாம் தவச்சாலேயாகக் கருது.

85. காலே முதல் மாலேவரை கடமைபுரிந்து சடம் கஷ்டமுறுகின்றதென நம்மிடம் சொல்வது தவறுதலாகும். ''கடமை'' என்றதின் உட்பொருளே நன்குணர்ந்து மன்பதைக்குத் தக்க பணியாற்றல் வேண்டும்.

86. மந்திரக்கோலும் மகுடிக் குழலுமுடையவன் புரியும் அவித்தைக்கும், பிரமவித்தைக்கும் வித்தியாசங்கள் வெகுவாக உண்டென உணர்ந்து, உனக்கு உயரிய சாகசவித்தையாகிய சைதன்ய உண்மையை உணர்த்தியுள்ள ஆசானேப் பணிந்து தொண்டாற்றி, அறிவுக் களஞ்சியத்தின் திறவுகோலேயும் கைவிடாமல் உஷாராக வசிக்கப் பழகு.

87. நலம் நாட ஜெனித்த உடலே நாசமுறச் செய்கிற உனக்கொரு ஊரேது? உனக்கிந்த நானிலத்தில் நல்ல பெயர் தானேது? குவலய வாழ்க்கையில் சுதந்திரந்தானேது? இருக்க இடமற்ற நீ, எண்ணுவதெல்லாம் வீணுகவே முடியும்.

88. அரிசியைப்பற்றிய தவிடுபோல நீ ஆன்மாவைப்பற்றியகலாதிருந்தும், ஆனந்த வீட்டின் மேன்மாடியிலேறும் போதெல்லாம் உனதான்ம நண்பனேக் காலேவாரி விடுகின்ருயே, இவை யுனது கெடுமதிக்குணமல்லவா? இனியேனும் ஒன்றுகலந்து உறுதுணேயாக இருக்க வேண்டும்.

89. முக்குணப் போராட்டத்தினூடே சதா சிக்கியுழன்று பக்குவ நிலேக்கு வராதவரை உன்னிடம் சாந்தசக்தி எவ்வாறு நிலவும்? அரிய தவஞ்செய்து எங்ஙனம் ஜெயமுறுவாய். சிந்தித்துப் பார் சித்தம் தெளியும்.

90. ஜீவான்ம சக்தியுடைய மனிதன் பரமான்ம நிலேக்குயரவே பிரயத்தனஞ் செய்கின்ருன். விளேபயிர் கொல்லும்

கறையான் புழுப்போன்று நமனுருவாகிய நீயே அவன் தவத்தை அழிக்கின்ருய். உனக்கிது நியாயந்தானு? நாள் தோறும் நன்மையை நாசமாக்காதே.

91. ஞானசூனிய உலகைச் சமப்படுத்திச் சன்மார்க்க முணர்த்தக் கருதிய நாதாக்கள், இமையா விழிகொண்டுன்னே அடக்கிஞர்கள். அவ்வாறு நாமும் ஞான நயனத்தால் கட்டி உலகப் பிரளய வெளியில் உன்னே உருட்டிவிடுவோம். அந்திய காலம் நெருங்கிய ஒருவனுக்கு உதயாதி உண்மையை உபதே சிப்பதுபோன்றிருந்துவிடாதே, சொன்னேம்.

92. நன்று தீதிரண்டிலும் நடுநிலேயாக நிற்க வேண்டு மென உன்னே வற்புறுத்தி வழி பல புகலுகின்ரேம். இதிலி ருந்து அரிய உண்மைகளேக் கண்டுறவாடுவது உனது கட னும் உலக நன்மையுமாகும்!

93. எல்லாம் வல்ல ஆண்டவன் ஒருவனுண்டென, உலக மக்கள் பிதற்றிப் பெருமை பேசி, பேரறிவையிழந்துவிடுவது போல நீயும், அவ்வாறுரைத்துக் கெட்டழியாமல், அடக்கத் தோடிருந்து அப்பன் திருவடியைப்பற்றிப் பிடி.

94. நீயென்ன அரிவாள் மணேயின்கூர்மையா? காய்களே நறுக்கும்போது அது தன்னேயொரு சைவாம்சக் கொல்லன் பட்டடை இரும்பாகவும், மாமிசத் துண்டங்களே வெட்டும் போது ஒரு போர் வீரனின் உடைவாளாகவும் கருதுகிற உதாரணம்போல, அடிக்கொருமுறை உனது மதியை மாருட் டச் சடாமுனியனிடம் ஒப்படைக்கின்ருயே. இது உனக்குப் புகழ் தராது.

95. மனமே! எவை எப்படியாஞலும் உனது ஞான திருஷ்டியைப் பரமண்டலம் முழுதும் பரப்பிப்பார்த்துக்கொண் டிருவென திரிபுடைப் பூட்டைத் திறந்து ஜோதி நிழலேயறி வித்துச் சக்தி பெற்றிருக்கச் சொன்னேமே, அதை விட்டு எதை எட்டிப் பார்க்கின்ருய்? இது உனது மழலே மதியா? மேலே நில், மேன்மையுறலாம். கீழிறங்காதே!

96. உண்டு உமிழ்ந்த தாம்பூலத்திற்கும் உலக வியவகா ரத்திற்கும் மாறுபாடுகள் யாதும் கிடையாது. இகத்திலுட லும், பரத்திலுயிருமாக இருப்பதுதான் உனக்குயரிய மேன்மை தருமெனக் கண்டு அமைதியுறு.

97. இகபர வாழ்க்கையில் பற்றற்று இறைவனருளை நாடவேண்டுமென்ற நோக்கத்தை, உனது நுண்ணறிவால் ஆராய்ந்து, கக்கலை நக்கும் கடைபோலென்றும் உழல் நிலையைத் தொட்டுத் திண்டாடாமல் நாம் சொல்லாமல் சொன்ன நிலையில் நீ நில்லாமல் நிற்கப் பழகவேண்டும்.

98. புவியிலிருந்து பொன்னெடுக்கப்படுவது உண்மையெனினும் பொன்னை மண்ணெனக் கருதுகிறவர்கள் எவருமுண்டா? நீயேனும் ஆசையிலிருந்து மோசம் உதிப்பதெனக் கண்டு அவாவை உனக்கு அடிமையாக்கு.

99. இவ்வுருவ உலகில் உடலவதாரமெடுத்து கடமை புரிவதற்குரிய பண்புள்ள மூன்று அவயவங்களின் உன்னத முடிவை ஆராய்ந்துணர்வது உனக்கு அவசியம். கரப்பண்பும், மொழிப்பண்பும், வழிப்பண்பும் ஒன்றுபட்டு நாமிட்ட கட்டளைகளிலிருந்தும் தவருது நடந்தால் எவையும் நலமாகக் காணப் பெறுவாய்.

100. ஆதியும் சோதியுமெனச் சொல்லித் திரிவதினுல் பயனென்றுமில்லை. நீ பேதாபேதமகற்றி யாவும் நீதானெனக்காணும் காலமெதுவோ அதுதான் உனது காலமெனக் காதிலோதி ஊதினதைக் காற்றிற் பறந்தோடச் செய்து விடாதே. இதோபதேசமிது போதாதா?

101. நீ என்ன தொட்டாற்சிணுங்கியா? கவனக்கண் உன்னிடமிருக்கையில் உனது விசுவரூபத்தைக் காணேமே. சிறிதகன்ருல் அதிகாரத் தோரணை விருத்தியாகின்றதே, சீ கழுதை! உனக்குப் பழுதையெனப் பெயரிட்டாலும் குற்றமில்லை.

102. மலர்ந்த முகமும், குளிர்ந்த பார்வையும், திறந்த ஞானமும், சிறந்த சொல்லும், பரந்த நோக்கமும், உன்னையகலாதிருக்கவேண்டுமென உபதேசித்தோமே, அதைத் தழுவி நடவாவிடில் நீ ஞானப்படியிலிருந்து கீழே நழுவி விழுந்து பல தொல்லைகளை அனுபவிக்க நேரிடும். ஆகையால், ஜாக்கிரதைப் படிபற்றிச்செல்.

103. மனமே! நீ துக்கசாகரச் சாக்கடையில் புரண்டு துன்புற்ற நாள் போதாதா? அதிலுற்ற ஆதாயமாகிய பிறவிச்சுமைகள் உனது பிடரிக்கு வெகு பாரமாகத் தோன்றவில்லையா? ஆனதால் ஆழ்ந்துஎதையும்செய்யத் துணிவுகொள்.

104. நாடோடியாகத்திரிந்தலேயினும் காடு மலேகளில் ஏறி இறங்கினும், பொந்து புதர்களிற் குந்தியிருப்பினும் உனது அகங்காரமும் அறியாமையும் நீங்கிவிடுமா? சாந்த மலேபோலுனக்குச் சமதரிசனம் கிட்டாதவரை எவையும் உனக்குப் பலிதமாகமாட்டா.

105. உன்னே நமது செல்வச் சிநேகிதனுகக்கருதியே சிறந்த சன்மார்க்கங்களேயும், எதிர்மறை மரண சிந்தனேயையும், உபதேசித்துவருகின்ருேம். உனது கற்பனு சக்தியைக் கொண்டு மேலும் விரிவுறச்செய்து வீடுபெற வேண்டுவதிருக்க குடத்தினுள் ஏற்றிய விளக்கைப்போன்று இருந்துவிடாதே.

106. நாம் மரண மலரெடுத்து மாலேகட்டி அரனருள தேவிக்கு அர்ப்பணித்துத் திடஉறுதியுற உனக்குச் சாற்றுகின்ருேம். ஏற்று இன்புற்று இமையாத நாட்டத்தைப் பெற்றுய் வாயாக!

107. மனமே! உனக்குஅடிமைகளாயிருந்து வாழ்ந்தவர்களுடைய நாமங்களிலொன்ருயினும் இந்நானிலத்திற் கிடையாதுபோயிற்று. உன்னே அடிமையாக்கிய உத்தமர்களின் பெயர்கள் பொய்யாமல் என்றும் ஓங்கிப் பிரகாசிக்கின்றன. ஆதலால் நாம் சொன்ன வழிபற்றி நற்பெயரெடுக்க முற்படு.

108. அளவுகடந்த இயற்கையமைப்பைக் கண்ணுற்றுக் களிப்படையவும், அவனியில் ஆவனவற்றைச் செய்து ஜெயம் பெறவும் ஜெனனமெடுத்த மனிதன், உன்னே வசமாக்காவிடில் உலகில் வீரப்பிரதாபனுகத் திகழமுடியாது போகும்.

109. எள்ளத்தனேயும் பற்றின்றி உள்ளத் துறவு கொண்ட உத்தம ஞான உலக உதாரணச் சிங்கங்களே நீ ஏமாற்ற முடிந்ததா? அவர்களே யாரென நீ சிந்திக்குமுன் நாமே உனக்கு அறிவிக்கின்ருேம். சிறிது செவியுற்றுக் கேள்.

110. கடமையிற் சிறந்த கருமயோகத்தைக் கண்ணிமையெனக் கருதி முடித்த பரதபுவிக்கு அதிபதி அசோகனும், மேல் நாட்டு ரோமாபுரிக்கு அதிபன் மார்க்ஸ் ஒரேலியன், இயேசுநாதர், நபிநாயகம், விவேகானந்தர், அருள் இராமலிங்கர் முதலியோர் போன்ற தவச் சுவாலேயோங்கிய பெரியார்களின் காலடியிலே நீ பெட்டிப்பாம்பைப்போலச் சுருண்டு கிடந்ததை மறந்தாவிட்டாய்? மறப்பதுனக்கு மாண்பன்று.

111. சிற்றின்ப வாழ்க்கையை விரும்பிய சிறுமதியாளர் களை நீ சீரழிப்பதுபோன்று எல்லாரிடமும் உனது ஏமாற்று வித்தைகள் செல்லுபடியாகுமா? கோடிக்கு ஒருவரேனும் உனது குடலைப் பிடுங்கி மாலை சூடி அரியதவம் புரிவார்க ளென்பதைத்தான் இங்குனக்கு எச்சரிக்கின்றோம். ஆனபடி யால், எதிர்காலப் புகழோங்க நமது நன்மொழிகளைக் கேள். நலனுறலாம்.

112. நெல்லை அரிசியாக்கியும், அரிசியை மாவாக்கியும், தந்து உதவிய குந்தாணிக்கு வந்ததல்லவா நாசகாலம். தனக்கு நிகரில்லையென இறுமாந்திருந்த குற்றமே அதற்கு இடையூருகி விட்டது. இதை நன்குணர்ந்து நீ அகங்கார மற்று இருத்தல் நன்று.

113. நெஞ்சமே! உனக்குக் கொடைவள்ளலென்ற பட் டப்பெயரிட்டு அழைக்கின்றதின் காரணம் யாது? எண்ணிக் கொடாமல் காசு பணங்களை அள்ளிக்கொடுப்பதினுலா? அல் லது அருள்மொழிகளான திருஉரைகளை மக்கட்குச் சொல் லித் தருவதினுலா? மேதாவியென்ற பட்டத்தில் மயங்கினோர் கள் மூதேவிக்கு அடிமையாகியுள்ளார்கள். இவை வெகுநாள் நிலை நில்லாதெனக் காண்பாயாக.

114. மனமே! மத்திய வானத்திலுயர்ந்தது சூரியன்; உத்தியோகப் பிரகாசத்திற் சிறந்தவன் மனிதன். அவ்வாறி ருந்தும் சத்தியந்தவறி நடக்குமாறு நீ அவனைத் தூண்டுவ தினுல் அல்லவா புத்தி மத்திபக் குணமுடைய மடையனென இப்புவியில் இகழப்படுகின்றுன்.

115. பூத்து மலர்ந்து உதிரும் புட்பங்களைக் காட்டிலும் சிறந்தது உள்ளத்தில் ஊறிய அன்பு. சாஸ்திர சன்மார்க்கங் களில் உணர்வுடையவன் மனிதன். ஆனுல் அவனுக்கு ஆத்திர மூட்டி அவசர புத்தியால் அடாது செய்ய நீ தூண்டி இடை யூறுகளுக்கு ஆளாக்குவதினுல் அவனியில் அவன் ஆகாதவ னெனக் கருதப்படுகிறுன்.

116. அணி மணியிலுயர்ந்தது ஆடை; இனிய மொழி களை உரையாடுவதிற் சிறந்தவன் மனிதன். அவனைக் கடு மொழி புகல நீ தூண்டுகிறபடியால், படுபாவியெனப் பெரி யோர்களால் கடிந்து அவமதிக்கப்படுகின்றுன்.

117. மதிப்பிலுயர்ந்தது மாணிக்கம், மகத்துவ சக்தியில் உயர்ந்தவன் மனிதன். அவனை மானுபிமானம் இழக்கும்படி யாக சதா நீ செய்கின்றபடியால், மனிதப் பதரெனத் தூற் றப்பட்டு மதிப்பையும் இழந்து தவித்து உழல்கின்ருன்.

118. பொறுமையிற் பெரியது பூமி, புத்திசாதுரியத்தில் சிறந்தவன் மனிதன். அவனைத் தருமநெறி தவறி நடக்குமாறு நீ, இச்சை மயமாகி இழுப்பதால் கண்மூடிக் கயவனெனப் பேரறிவுடையோர்களால் அவன் பேசப்படுகின்ருன்.

119. சுறுசுறுப்பிலுயர்ந்தது சிற்றெறும்பு, சுக ஜீவனம் செய்வதற்குரியவன் மனிதன். ஆனுல் அவன், ஆபாசமாகப் பிச்சையெடுத்து அலையுமாறு நீ செய்கிற சூழ்ச்சியால், பிரயோ சனமற்ற சோம்பேறியெனக் கடிந்து தூற்றப்படுகின்ருன்.

120. மனமே! ஆனபடியால், இனிமேலேனும் பேரறி வுற்ற மனிதனை சிற்றின்பச் செய்கைகளுக்கு ஏவிச் சீரழியாத வண்ணம் மனிதாம்ச நேர்மைக்குத் தக்கவாறு நீ உறுதுணை யாக நிற்கவேண்டுமென நாம் உன்னை எச்சரிக்கின்ருேம்.

121. நாம் உனக்கொரு உயரிய ஆலோசனை கூற விரும்புகின்ருேம். செவியுற்றுக் கேட்டுச் சிந்தித்து அதன்படி நடக்க முற்படுவாயானுல், கவலையாகிய காலனின்றி உனது வாழ்நாளை வெகு களிப்புடன் நடத்திவரலாம்.

122. அது யாதெனில் நித்திய கண்டமாகிய உடல் தான் செத்தும் பிழைத்தும் சீரழிவதே அல்லாது உணர்வுரு வாகிய உள் மனிதன் பிறப்பதுமில்லை சாவதுமில்லை. அவன் நித்திய ஜோதியாகப் புவியில் பரவி நிறைந்து நின்று கொண்டிருக்கின்ருன். கண்டு கலந்திரு. நன்று தீதென்பது அங்கொன்றுமில்லை.

123. உன்னை உணர்ந்து உயர்நிலை நின்று வெண்ணெய் போலுனது உள்ளம் இளகி உருக வேண்டாமா? நீ என்ன கருங்கல்லால் ஆக்கிய கடினபீடமா? அடாது செய்வதை ஒழித்து அன்புமயமாக உலவு.

124. திரிலோக சஞ்சாரி போன்ற நீ இந்த இதோப தேசமெல்லாம் யாருக்கோ என்றெண்ணி பராமுகமாக இருக்கின்றாயா? அல்லது, செவியுற்றுக் கேட்டுத் தெளிகின்றாயா? ஏனிவ்வளவு பிரயாசையோடு உனக்கு நல்வழிபுகட்டுகின்றேமெனத் தெரியுமா? உலகமறதியாகிய மரணசிந்தனை உனதுமூலமாகவேயாயினும், பிரகாசிக்கட்டும் என்னும் குறிப்பாலாகும்.

125. மனமே, நீங்கள் எத்தனை பேர்வழிகள்தான் கூட்டாளிகள்? காமன் உனக்கு மூத்தவனா? சின்னவனாகிய உன்னைத் தலைவனாக்கி நீங்கள் பத்துப்பேர்களல்லவா ஒத்துக் களவு செய்கிறீர்கள். உங்களில் ஒருவரையும் விடாமல் ஓமாக்கினியில் தள்ளிப் புதையாவிடில் அரிய தவம் புரியமுடியாது.

126. குழந்தை பிறந்தால் கொண்டாடி மகிழ்வதும் இறந்த பிணத்தைக் கட்டியழுவதும் ஏனென இதுவரை நீ ஆராய்ந்ததுண்டா? அழுபவர் சிரிப்பர் என்பது உனக்கு அனுபவமல்லவா? சுக துக்கத்தாலாக்கிய உலகிலிருந்து தனக்கு நிகரில்லையெனத் துள்ளலாமா? உனக்குமொரு பாடைப்பல்லக்கு உண்டென்பதை மறந்துவிடாதே.

127. அங்கத்துள் தங்கமாகத் திகழும் அழியாத உன்னை நீ மறக்கலாமா? மறந்து தினந்தோறும் திருவிளையாடல் புரிந்ததும் போதாதா? போனதெல்லாம் போகட்டும், இனியேனும் மௌனமணியாக இருக்கப்பழகு.

128. இரசாயன முறையில் தயாரிக்கப்பெற்ற உப்புக் குடுக்கைகள் விசேடமாக வீடுகள்தோறும் இருக்கவேண்டும் என அரசினர் கட்டாயச் சட்டம் பிறப்பித்துள்ளார்களே, அதை நீ அறியவில்லையா? அதற்கு நீ கட்டுப்படலாமா? அப்படியாயின் சுதேசக் குடுக்கைக்கு வந்தது நாசகாலம்.

129. கற்பக விருட்சத்தின் பூவாயிருந்து, பிஞ்சாய் வெடித்து, காயாகத்திரண்டு, கனியாய்க்கனிந்து சுவையூறி நின்ற வகையுணர்ந்தால், நீ நாமே, அறிவுமயமெனக் காணலாம். தன்னிலையை விட்டுத் தடுமாறாமல் உயரிய நிலையில் நிற்பாயாக.

130. உன்னுள் உதராக்கினி, காமாக்கினி, கோபாக்கினி என மூன்று அக்கினிகள்கூடி உன்னை வடவாமுகாக்கினிபோல்

துன்புறுத்துகின்றன. அதை அணைப்பதற்கேதேனும் உபாய தந்திரம் கற்றிருக்கின்ருயா? இல்லையேல், பல தொல்லை களைத் தந்தவண்ணமாகவே இருக்கும். அபாயம் வருமுன் அதிசாக்கிரதையாகக் கவனித்தல் நலம்.

131. நெஞ்சே! அசத்தை உட்கொண்டு அநித்தியவழி யைப் பின்பற்றுவதெனக் கருதிவிடாமல், சத்தையுட் கொண்டு, நித்தியவிதியைப் பின்பற்றுவதென நினைவிலிருத்தி உன்னையும், உனக்கு ஆதாரமாகிய தலைவனையும் அறிந்து உன் பிறவிப் பிணியைப் போக்கப் பிரயத்தனப்படு.

132. கங்கை, யமுனை, காவேரி, சிந்து போன்ற நதி களில் மூழ்கக் கருதிய உன்னைத் தடுத்து நிறுத்தி, உனதுள் ளிருந்து ஊறிப் பொசிந்து பொங்கி வழியும் ஆனந்த நதியில் மூழ்கென நாமுனக்கு உபதேசித்தோமே, அவ்வாறு நீ ஒழுகிவரின், அகக்கண் திறந்து அருள் செறிந்தோங்கி அண் டமும் பிண்டமும் ஒன்ருக நின்று பிரகாசிக்குமே!

133. உன்னை விட்டு என்றும் பிரியாத ஆன்மலோகத் துணைவர்கள் யார் தெரியுமா? உனது அரிய பொய்யா மொழியே தாய்; அறிவுத் தெளிவே தந்தை; ஞான ஒளி தான் குரு; நாவின் வன்மையே கலை; தருமமென்பது சகோ தரர்; ஈகையென்பதே நண்பர்; பொறுமையென்பது புத்திரர்; திடநம்பிக்கைதான் மனைவி; அருட்பிரகாசந்தான் சம்பத்து, ஆனந்தமே உனது அழியாத வீடு. இவ்வாறுற்றநிலைதான் இகபரப்பற்றற்ற நிலை.

134. காமக்கரடியும், குரோதப் புலியும், லோபப்பன்றி யும், மோகக் குக்கலும், மதுவரக்கனும், அச்சப் புதர்களும் அடர்ந்த கானகத்துள் அருளாகிய வாகனமேறி, அறிவா கிய ஆயுதந் தாங்கி, குருவாகிய அரசன் புகுந்து, குணமா கிய வில்லை வளைத்து நித்தியானந்தப் பாணந் தொடுத்து அநித்தியமான காட்டை அழித்து ஆசையாகிய விலங்கினங் களை வேட்டையாடி சத்தியவித்தை விதைத்துவருகின்ருனே! நீ இதை உணராமலின்னும் உறங்கலாமா? விழிப்புடனிருந்து உன்னைக் காப்பாற்றிக்கொள்.

135. மரணரதமேறி இடுகாடுலகிற்கு ஏகி, பாதாளப் பட்டணத்திற்குச் சென்று இருட்டுப் பாசறை வீட்டிற் குடி புகுந்து, மண்மலரென்னும் பஞ்சணையின்மீது உல்லாசமாக மல்லாந்து படுத்து, கண்விழியாமல் தூங்குகிறகாலம் நெருங்கி

வருவதை உனது பராமுகப் பார்வையால் கவனிப்பின்றி இருந்து விடாதேயெனக் கூறுகின்றேன்.

136. மனமே! இம்சையகற்றி அஹிம்சையைப் பின்பற்றி வாழப் பிறந்த மனிதரை உணர்வற்ற தீயவழிகளில் திருப்பிக் காருண்ணியமற்ற கல்நெஞ்சம் உடையவர்களாகச் செய்து ஊனுடல் தாங்கிய ஜீவன்களை வதைத்துஉண்டு வசிக்கவும் நீ தூண்டுகின்ருய்! உனது ஆட்டம் அடங்கினுல் கொடிய கொலைச் செயலும் நீங்கிவிடுமென்பது வெளிப்படை.

137. விளையாட்டிற்கு வைக்கின்ற நெருப்பானுலும், வீடு பற்றி எரிந்துபோகுமென்பது உண்மையல்லவா? உள்ளும் புறமும் ஒன்றுபட்டு நீ தெய்வீகத் திருவாக்கைப் பிரயோகிக்க வேண்டியதிருக்க, மெய்மயமாகிய கிளியைப் பொய்யாகிய பூனையினிடம் ஒப்படைத்துவிடலாகாது!

138. அல்லும் பகலுமாக நாமிருவரும் பொய்யுலக வாழ்விற்குப் போராடிப் புத்தியீனமாகச் செத்துமடியப்போகிற தருணத்தில் நல்ல நிலைகண்டு நாமே, நாமாகினபடியால் இதற்குமுன்தொட்டுத் தொடர்ந்து கூடிவிளையாடிய கெட்ட சகவாசத்தைக் கனவிலும் எட்டிப்பார்த்துவிடாதே. சொன் னேன்!!

139. சித்தசலனமற்ற சிசுவும்,உத்தம நிலையை அடைந்த மகானும் நன்று தீது, உயர்வு தாழ்வுகள் அறியாதிருக் கின்ற காரணங் காண விழையின் அவர்களின் இதயப் பூஞ் சோலையை விட்டு எழுந்திராமல் நீ ஆனந்த நித்திரை செய் வதையே குறிக்கின்றது.

140. நாமிதுவரை உனது மழலைமதியைப் போக்கி மகத் துவம்மிக்க பேரறிவைப் புகட்டி வருகின்ருேம். நீ கேட்டுத் தெளிந்து கிருபைவீடு பெற்றுய்வாயானுல் உன்னை அழகிய அரசவடிவிற் சிங்காரித்து, அரியாசனத்திலமர்த்தி, நமது அகங்குளிரப் பார்த்து ஜகஜீவ சிருஷ்டித் தொழிலையும் ஒப் படைத்து அழியாப் புகழெய்தும் உலகிற்கு உன்னை அதிபதி யெனவும் முடிசூட்டுவோம்!!

141. ஆகா! மரண சிந்தனையின் மகத்துவம் அதிவிரை வில் உனது அங்கத்தைப்பற்றி மிகநன்ருய் ஜொலிக்கத் தொடங்கி விட்டதே? காரணம் யாதென யாரறிவர்? கற்றுக்

கொடுத்த நாமும், உற்றுக்கேட்டுணர்ந்த நீயுந்தானே அறியலாம். பற்றற்று முற்றும் துறந்த முனிபுங்கவர்களுக்கு அடையாளமிந்தச் சாம்பவிதேவியின் இமையா நிலேயேயாகும்.

142. ஏ நெஞ்சே! தரித்திர நாராயணனுக்கு எதிர்பாராத தனப் புதையல் கிடைத்த தன்மை போன்று உனதறிவுச் சுரங்கத்தின் கதவு திறக்கப்பட்டதைக் காணக்காண வெகு பரமானந்தமே! நாமிருவரும், இனி ஒருவராகி ஏகாக்கிர வீட்டிற் சைதன்னிய வஸ்துவில் குடியிருப்போம்! உறுதி தளராத மனிதனுக்கு இறுதி முடிவான நிலேதான் இம் மரண நிலே.

143. மேற்கூறிய நியதிதழுவி நீ நடப்பாயாகில்,உன்னே நமது பரிபூரண கருணுநிதியாகக் கருதி, மனக் குரங்கென்ற பட்டப் பெயரையும் மாற்றி, நமதன்னே மனேன்மணியென நற்பெயரிட்டு, அன்புமலர்கொண்டு அர்ச்சித்து, ஆனந்தக் கண்ணீர் சொரிந்து போற்றி என்புருகி இருகரங்கொண் டேற்றித் துதித்து, இதயக்கோயிலில் சதா உன்னே எழுந் தருளச் செய்து பூசிப்பேன்.

144. ஏ மனமே! சிவசக்தி நிறைந்த இப் பரந்த உலகம் படுகளமாக மாறிவருகிறதைத் தடுத்து நிறுத்தவேண்டின் உனது பேருபகாரமாகிய சாந்தமே தேவைப்படுகிறது. இல்லேயேல், சாமானியமாகச் சமாதானங் காணமுடியாது போகுமென்பதை நாமறிவோம். ஆதலால், எவற்றிலும் நீ அமைதியாக இருக்குமாறு மிக மன்ருடிக் கேட்டுக்கொள்கிறேன்!

நமதகத்துள் மங்களமாகத் தங்கிய மனேன்மணியே
உனக்கு அடியேன் வணக்கம்.

அமைதி கலேயாதிரு !

ஜெயம்.



வெற்றி !

# 5. மௌனானந்த மணிமொழிகள்

அன்புள மக்காள் நீங்கள் அறநெறி தழுவிநாளும்
பண்புள ஆன்மஞானப் பதவியில் வலுவாய் நின்று
வன்புற வரியவீர மொழிபலர்க் குபதேசித்து
இன்புற வாழ்க ஆசி! இயம்பினே மியம்பினேமே!!

1. சத்தியமே தெய்வமென்று நம்பினவர்களை, இயற்கைத் தேவி சோதனை உருவாகி வந்து போர் பொருதிய வண்ணமிருப்பாள்.

2. அன்பும், அறமும், இன்பவாழ்வெனச் சொல்வது எளிது. செயலளவிற் செய்து காண்பிப்பதுதான் கடினம்.

3. பொய், பொருமை, கோபம், கள்ளம், இவை நான்கும் மனிதர் குணத்தை மாற்றி மிருகச் செய்கைக்கு ஈடுபடுத்தும்.

4. யோகாசனமும், சுகபோஜனமும் இல்லாதவர்கள், அடிக்கடி பண்டிதர்களிடம் சரணடையவேண்டி நேரிடும்.

5. சித்தத்திடமும், திரேக ஆரோக்கியமும், ஆத்ம சக்திக்கு உறுதுணையாகும். இல்லையேல், வாழ்க்கையில் மகிழ்வு கிடையாது.

6. அழகுவாய்ந்த சரீரமெடுத்த எவரும் அருவருக்கத்தக்க செய்கையில் ஈடுபடலாகா. அவ்வாறு ஈடுபடுவோரை மனிதரென மதிக்க இடமிராது.

7. உயர்ந்த கருத்துக்களை உலக மக்களுக்கு அறியப்படுத்துவதோடு தானும் அவ்வழி பின்பற்றி நடக்க முற்படுகிறவரே கடமையாளராகும்.

8. உழைப்பாளி மக்களைக் கண்டு உபசரித்து ஊக்க மொழிகளைப் பகருவது, உத்தமர்கள் தொண்டின் ஒரு பகுதியாகும்.

9. உடலும், உடையும் அழுக்குப் படிந்திருத்தல்கண்டு, பாமர மக்களின் உரிமையைப் பறிமுதல் செய்வது கொடியதாகும்.

10. தொழு நோயுடையவர்களேயும் தொட்டுப் பணி யாற்றத்தக்க அறிஞர்கள், தீண்டப்படாதவர்களென மக் களேக் கூற மனமிசையார்கள்.

11. தனக்குரிமையான வஸ்துக்கள் இவ்வுலகில் ஒன் றுமே இல்லாதிருந்தும், என்னுடையதெனப் பற்றுறுவது குறுகிய உள்ளத்தைக் குறிப்பதாகும்.

12. ஆண் பெண் அனைவரும் அதிவிரைவில் ஆத்மீக சக்தியோடு உறவாடாவிடில், தமது இளஞ் சந்ததிகளுக்கு நல்வழி காட்டியவர்கள் ஆகமாட்டார்கள்.

13. அறிவு வளராத மக்களே அறவழியிற் கொண்டுவர முன்வந்தவர்களிடம், சகிப்புத்தன்மை இல்லாமை காணல் மிகப் பரிதாபமே.

14. குறுகிய குணமுடைய மனிதர்களிடம் குபேர சம்பத் திருப்பினும், தருமநெறிக்கு உதவாதிருப்பது சில காலத்துட் சிதைந்து விடுமெனக் காண்க.

15. நாடகமாடிய முடிவில் ஆடம்பர உடைகளைக் கழற் றுகிற தன்மைபோன்று, மாடமாளிகை கட்டிக் குடியிருந்த ஊனஉடலும் ஒருகால் அகற்றப்படும்.

16. உதித்ததை உடன் செய்ய முனைவது அவசியம் எனி னும், பகுத்துணர்ந்து பலருக்கும் உபகாரமாகும் பொருட்டுச் செய்தலே புகழைத்தரும்.

17. வெற்றி தருமென விரும்பிப் பணியாற்றிய விவேகி கள், தன்னையணுகுந் தோழனுகிய தோல்வியைக் கண்டு இதயந் தளர இடங்கொடார்கள்.

18. உடல் தளர்வுற்ற காலத்திலுங்கூட உள்ளத்தளர்வு பெருத தீர புருடர்களிடம், காலங்கடவாமல் கருணைப் பிரவாக வெள்ளம் கரைபுரண்டோடிய வண்ணமிருக்கும்.

19. கோபமாகிய பூனையை சாந்தமாகிய கூடையிலிட்டு சந்தடி செய்யாது செய்வது, கிருபை குடிகொண்ட பெரியார் களின் இயல்பாகும்.

20. வன்மையோடு கூடிய வைராக்கிய சக்தியை உச்ச நிலைக்கு உயரச் செய்யாதவரை, அச்சமாகிய பேரிடி முழங்கி அபாயத்திற்கு உள்ளாக்கும்.

21. யோசித்து உணர்ந்து பேசத் தெரியாத மக்கள் துவேஷ மனப்பான்மைகொண்டு தூஷிப்பது கண்டு, மனந் தளராமல் அவர்களை நேசிப்பவர்களே தவசிரேஷ்டர்கள்.

22. அரிசியை அப்பமாக்கித் தருகிறேமெனக் கூறுவதிலும் பார்க்கத் தற்போதைய பசி தணியத்தக்க கூழமுதம் வார்ப்பதே சிறந்த தருமம்.

23. ஆன்ம வீரத்தையிழந்த எவரும், பரோபகாரச் செய்கைக்கு அருகதையற்று, பலவீனர்களெனவும் பெயர் தாங்குவர்.

24. பஞ்சேந்திரியங்களின் போக்கைத் தடுக்க முடியாதவர்கள் அறியாமைப் பள்ளத்தில் வீழ்ச்சியுறுவதுபோன்று, ஆற்றலோடு உலகானுபவமும் இல்லாதவர்கள் செய்கை பிரயோசனமற்றதாகும்.

25. ஆகமமென்பது அனுபவம் எனக் காண முடியாதபடியால், மனோவேகமாகிய மாயையோடு கூடிக் குலாவ நேரிடுகிறது.

26. செக்கிழுக்கின்ற மாடுகள் புண்ணுக்கு வாடையைச் சுவாசிப்பனபோன்று, துக்க வாழ்க்கையைக் கண்ட பின்பே மனிதன் ஞான விசாரத்தில் ஈடுபடுகிறான்.

27. கைப்பிடி கிடையாத ஆயுத உதவியைக்கொண்டு மரக்கிளைகளைத் துண்டுசெய்ய முடியாதவாறுபோல,வீரமிழந்த மனிதர்களினாலே எக்கடமைகளையும் ஜெயம்பெறச் செய்ய முடியாததாகிறது.

28. சமையல் செய்கிற பாத்திரங்களைக் கரி பிடியாமலிருக்கச் செய்கிற பிரயத்தனம் வீணாகுவதுபோல, சர்வாதிகார ஆசை இருக்கிறவரை இருதயத்திலிருந்து காமாந்தகாரங்கள் உதயமாகாமல் இராது.

29. ஆடம்பரமாகிய நடையலங்காரங்களைக் கண்டு மனிதர்களை மதிப்பிடுவது, காராம்பசுவின் பாலெனக் கருதிக் கள்ளிப்பாலை உட்கொள்வதாகும்.

30. அளவிடற்கரிய கடமையாளர்களிற் புகழ்பெற்ற தலைவனை, எண்ணற்ற விண்மீன்களிற் சிறந்த விடிவெள்ளிக்கு ஒப்பிடலாம்.

31. மதியை மயக்கும் மாபாதக மனிதரைக் கருவி கரணாதிகளைக்கொண்டு காணமுடியாதபோது, ஆன்மஞானத்தைத் தரும் அருளுபதேச மேதாவிகளை எப்படிக் காண முடியும்?

32. அடக்கமும் பொறுமையும் அவசியமாகும். இல்லையேல், வாழ்க்கையில் இழுக்கு எய்தும்.

33. ஆரம்பக் கடமையில் யாவருமே வெற்றி தோல்வியைக் கண்டுகொள்ள முடியாது. கண்மூடி நடக்கிற காரியங்களைக் கைவிடுதல் மிகவும் மேன்மை.

34. சண்டாள எண்ணமுள்ளவர்களின் வாழ்நாள், பயங்கரமாகவே தோன்றி முடியும்; எனவே நீதிக்குப் புறம்பே நீங்கள் நில்லாதீர்கள்.

35. மாயச் செல்வம் மலையளவு பெறினும், இச்சையொழிந்த இதயத்தை எவரிடமும் காணமுடியாது ஆண்டவன் அருளைப் பெற முயலுங்கள்.

36. மதப்பித்து நீங்கித் தவப்பித்து எய்துங்கள். சமநோக்குள்ள மெய்யறிவு எவரிடம் உண்டெனக் கண்டு உண்மையைப் பற்றி உரையாடுங்கள்; நலன் எய்தலாம்.

37. கர்வம் அற்ற தலைவன் ஒருவனே மக்களுடைய உள்ளத்தைக் கொள்ளை கொள்ள முடியும். ஆன்ம ரட்சகன் எவனோ, அவனே மாசிலா அன்பு மன்னனாவான். மற்றவன் படிப்புக் கருவியே.

38. குறை புரியாத மனிதர்களைக் குவலய வாழ்க்கையிற் காண முடியாது. அறியாத காலத்திற் செய்த துர்ச் செயல்களை எண்ணிக் கண்ணீர் வடிப்பவன் எவனோ, அவனே தூயவனாவான்.

39. ஏழ்மையை எண்ணி ஏங்காதீர்கள். எதிர்கால வாழ்க்கை தடைபடாதபடி, ஆன்ம வலிமையைத் தேடிவைத்துக்கொள்ளுங்கள்.

40. மண்ணுலக உயிர்க்கும், மாயாஜால வித்தைக்கும் வேற்றுமை இல்லை. தோன்றி மறைகிற தூலத்தை மதியாத மனிதன்தான் ஞானி எனப்படுவான். அவனே வாழ்விற்கு ஒளி தருவோன்.

41. நிறையறிவுச் செல்வம், அறியாமையில் வீழ்ந்து சிறைவாசம் செய்வதை மீட்க முயலுங்கள்.

42. மது உண்ணக்கூடிய வண்டினங்கள் பலவகை உண்டு எனினும், தேனீக்கள் ஒற்றுமையாகக் கூடு கட்டுவதைப் போன்று உங்களுடைய உள் உணர்வு ஒன்றிப் பணி புரியுங்கள்.

43. தீர்க்கதரிசிகளைத் தந்த புவிதேவி, ஒழுக்கமிழந்த மக்களையும் படைத்துள்ளாள். தீர்க்கதரிசிகளாலேயே ஒழுக்கந்திருந்தும்.

44. தாய்மொழிப் பயிற்சியும், சமய உணர்ச்சியும் குன்றிய சமுதாயம், தாழ்வுபடுமென்பதில் ஐயம் கிடையா.

45. அறிவு பரப்பும் அறப்பணியைக் கலைக்கு அரசர்களாகிய ஆசிரியர்கள் கைக்கொள்ளாது விடுவரேல், பள்ளிக்கூடத்திற்கும், பஜனைமடத்திற்கும் வித்தியாசமில்லை.

46. பகுத்தறிவை இழந்த மக்களுடைய சிற்றறிவு, குத்துவிளக்கின் வெளிச்சத்தைவிடப் பன்மடங்கு குறைந்த அரிக்கன் விளக்கின் அளவுகூட ஒளி காண முடியாதென்பது உண்மையாகும்.

47. குடிப்பழக்கத்தையும் கொடிய சூதையும் கைவிடாதவனுடைய வாழ்க்கை, கொள்ளிக்கட்டையைக்கொண்டு தலையைச்சொறிந்த கதையாய் முடியும்.

48. உச்சநிலையை எட்டிய உலக நாகரீகத்தினின்றும் சிறந்த அறிவுப் பிரகாச அரியாசனத்தில் அமர்ந்திருப்பவனே புகழிடம் பெற்ற மனிதன்.

49. விண்மாரியினும் மிக்க சொன்மாரி பொழியும் விவேகிகளின் விஷயம், கிரியாம்சையிலுண்டாவென உணர்ந்தறியத்தக்கவன் திறமைவாய்ந்த நிபுணனாவான்.

50. உயிர் துறக்கவுந் துணிந்து உண்மைக்குப் போரிடும் சுத்த வீரனுக்கு, உலக மக்களுடைய உருக்கக் கண்ணீர் கலந்த உள்ளன்புக் கோட்டையே சுவர்க்க வீடாம்.

51. உற்சாகமிழந்த உழைப்பாளிகளுக்கு உணர்ச்சி வேகத்தை ஊட்டும் தலைவனிடம், வார்த்தைச் சித்திரங்கள் அமைந்த நாவன்மையும் நடைநயமும் முக்கியமாக வேண்டற்பாலனவாம்.

52. கருத்து வேற்றுமைகளற்ற சொற்களும், கருவி கரணாதிகளை வென்ற நெஞ்சும், ஞானத் தெளிவெய்திய பெரியார்களின் நுட்ப சாதனங்களாம்.

53. சென்ற கால நிகழ்ச்சிகளைக் கற்பனைக் கண்கொண்டு கண்டவன், கடமையாகிய கடலில் இறங்கிய பிறகு சண்டமாருதப் புயல் அலைகளைக் கண்டு திரும்பமாட்டான்.

54. புத்துயிர் ஒலிக்காத மொழிகளும், புகழை விரும்பிய பணியும் தூயதருமத்தைத் துகள்படியச் செய்யும் தூர்க்கருவிகளாகும்.

55. கத்திமுனைக்குப் பணியாத மக்களைச் சத்திய நெறிக்குள் அடக்கலாமென, புத்தி விசாலமுடைய உலகானுபவ உபாய தந்திரிதான் உணரமுடியும்.

56. வெள்ளிப் பேழைக்குள் அடுக்கிய தங்கத் தகடுகளை யொப்ப, மூளைச்சுரங்கத்துள் விளைகின்ற ஞாபக இரத்தினங்களைப் பெயர்த்தெடுக்கக்கூடிய மதியூகியே பேரறிவாளன்.

57. சுவை சொட்டத்தக்க கனிரசமென இனிய சொல்லணிகளைச் சபைமுன் மொழியத் தவறியவன் புருஷலட்சண உரிமையைப் பறிகொடுத்தவனாகி இகழப்பெறுவான்.

58. உபயோகமில்லாத உழைப்பிற் புகாதபடி மனதை மடக்கி, இழைத்த பிழைகளை எடுத்துக்காட்டித் தன்னெஞ்சைத் தட்டித் திருத்திய மனிதன், தேசாபிமான வழிகாட்டியாவான்.

59. மூடநம்பிக்கையாகிய மூத்தோனுடன் போரிட்டு வெற்றிகண்ட தன்னம்பிக்கையுடையோன், சவலைமதியை அணுகி வெறுக்கத்தகுந்த வெட்கக்கேட்டை வெகுமதியாக ஏற்கமாட்டான்.

60. தூயநிறமுடைய தும்பை மலரில் வர்ண இறகுகளை உடைய வண்ணாத்திப் பூச்சிகள் அமைதியுடனிருந்து மதுவை உண்பதற்கொப்ப, இம்மகிதல வாழ்க்கையில் ஈடுபட்டோர் யாவரும் இலகுவாகிய இயம நியமங்களைக் கைக்கொள்வரேல் சாந்தியுறுவர்.

61. முற்றத்தில் உதிர்ந்து கிடக்கின்ற முருங்கை மலரை ஆரம்புனைந்து அணிய ஆசைப்படாததுபோன்று, அன்புகூர்ந்து அறப்பணியில் ஈடுபடாதவர்கள் தேசாபிமானிகளெனப் புவியில் புகலப்படுவதில்லை.

62. எமதருமை மக்களே! நீங்கள் புண்ணிய சீலர்களாகத் திகழக்கூடிய சுபகாலம் அண்மையிலுள்ளபடியால், அருளொளி விளக்கு அணையாத ஜோதியாக சுடர்விட்டுப் பிரகாசிக்கத் தொடங்கிவிட்டது. இவைகண்டு நீங்கள் யாவரும் வெகு விழிப்புடனிருந்து அன்னையின் அருட்பிரசாதத்தில் பங்கெடுத்துக்கொள்வீர்களாக.

63. எண்சாண் தச்சுள் அமைந்த கட்டிட வேலையைக் கண்ணுற நேரங் கிடையாதபோது, பராமுகப் பார்வைக் கிடந்தந்து நிற்கிற சிந்தையை நீங்கள் எவ்வாறு அடக்கியாள முடியும்! ஆனபடியால், ஒவ்வொருவரும் தமது உள்ளக் கோவிலை ஊன்றிக் காணமுயலுங்கள். நமதருள்மாதா ஆங்குதான் திருநடனமாடியவண்ணம் இருக்கின்ருள்.

64. சதாகாலமும் குணமலை மீது நின்று விளையாடத் தகுந்த நீங்கள் குறுகிய மனப்பான்மையோடு கூடி வசிக்க லாகுமா? தயாள மனதுடைய சீலர்களாகத் திகழுங்கள். அவ்வாறாயின் தெய்வீகசக்தி உங்களைத் தேடி ஓடி வருமெனல் மிகையாகாது.

65. பிறவிக் கருவில் மீண்டும் அமையாதிருப்பதற்காகவே இறைவியின் கழலடியைக் கட்டித் தழுவியுறவாடி வேளை தவறாது பக்திக் கடலில் மூழ்கிமூழ்கி, எழுந்திருக்க வேண் டியதாகிறது. அதற்கடையாளமாகக் கருணைவிழி திறக்கப் பட்டு, முகவிழிமடையாகிய வாய்க்கால் வழியாக அருளருவி கரைபுரண்டோடி வரக் காணலாம். பன்னீர் அபிடேகத்தைக் காட்டிலும் நமது இறைவிக்குக் கண்ணீர் அபிடேகமே ஏற்ற தாகும்.

66. விளைவதிகமாகிய முத்துக்களிடம் ஒளி அதிகமாக வன்றோ காணப்படும். அவ்வாறொப்ப, அருள் நிரம்பிய மக் களிடம் அன்பு மலர் பூத்து உதிர்ந்த வண்ணமாகவே இருக் கும். இதனை அவரவர்களின் விசுவாச வாழ்விற்கு உகந்தவாறு தான் உணர்ந்து கொள்ள முடியும். நீங்கள் பூரணவடிவோடு உறவாடுங்கள்.

67. பரமானந்த பிராப்திக்கு ஆளாகக் கருதியே நீங்கள் உயிர்வாழ வேண்டியிருக்கின்றது. இவை சொல்லச் சுலபம், அடைவது கடினமெனக் கருதிவிடாதீர்கள். உங்களின் அன் றாட வாழ்வினூடு அனுபவிக்கின்ற இன்ப துன்பச் சுழல் வேகமே தக்க சான்றுகளாகும்.

68. நமது மூதாதைகள் தோன்றிக் கடனாற்றிய புனித பூமியில், ஒரு சில கடமையாளர்கள் சொற்பொழிவுகளையுங் கூட விற்பனை புரிந்து வருகின்றார்கள். அவைகண்டு மோக முற்ற மக்கள் கற்பனைசக்தியைக் கடந்து கடைத்தேறுவது எங்ஙனமியலும்? அவையுணர்ந்து நீங்கள் அறநெறிபற்றிய அனுபவ மொழிகளைத் தருமோபதேசம் புரிவீர்களாக.

69. அடியேன் இகக்கடலைக் கடக்க முயற்சித்த காலங் களில் கெட்ட குணக்காட்டை வெட்டி நிர்த்தூளியாக்கிய அனுபவச் சுருதிகளை, நீங்கள் வாசிக்கும் போதெல்லாம் வாழ்க்கை மேம்பாட்டை விநயத்தோடு ஆராய்ந்து உணர்ந் தால் மேன்மையளிக்கும். இல்லத்திருந்து சொல்லற்ற சுக முணர், என்பதுதான் உங்களுக்கு நமது பொன்மொழியாகும்.

70. பறந்து வசிக்கின்ற பறவையினங்களில் ஒன்றாகிய

கிளிப்பிள்ளை, கற்றுக் கொடுத்தற்கேற்பக் கவிபாடுமெனினும், பொருட்சுவை சிறிதளவேனும் அதனிடமிருந்து காண முடியாது. ஏனெனில் அதற்கவை இயற்கை மொழியில்லை யென்பதையே குறிக்கின்றது. நிகழ்காலச் செயலாளர்களுங் கூட வீண் வசனங்களைத் தினந்தோறும் செவிடுபடக் கூவி வருகிறார்கள். அவ்வாறில்லாது உங்கள் திருவசனங்கள் சுருங்கிய மொழியில் விளங்கிய பொருள் பொதிந்திருக்கட்டும்.

71. பண்படாத மனதைச் சதா பக்தியென்னுங் கடலினுள் மூழ்கச் செய்பவர்கட்குத்தான் மனது வசமாகி இறைவியினிருதாட்களையும் கட்டித் தழுவியுறவாட முடியுமே தவிர மற்றவர்கட்கு இயலாததாகும். நீங்கள் கிருபை வழியைப் பின்பற்றி வரப்பிரசாத விசுவாசத்தை நுகரத் தயங்காதீர்கள்.

72. ஆங்காங்கும் அருளொளி வித்தை அடியேன் விசிறி வருவது போதுமேயென, நீங்கள் வாளாவிருந்து விடாதீர்கள். ஒவ்வொருவரும் ஆர்வங் கொண்டாலொழிய புனித விருட்சம் புவியில் பரவி வளர்வதற்கு நெடுநாளாகுமென உணர்வீர்களாக.

73. நீங்கள் பிரமச்சரிய விரதத்தைக் கடைப்பிடித்தொழுகத் தவறாதீர்கள். பிரமச்சரிய மென்றால் விவாகம் செய்து கொள்ளாமல் இருப்பதெனக் கருதியும், ஒரு சிலர் சொல்லக் கேட்டும் வாழ்வைப் பாழாக்கி விடுகிறார்கள். பிரமச்சரியம் யாதெனில், இக்கடமையில் உடல் ஈடுபடினும், இறைபால் இதயம் ஒளி மங்காதிருத்தலேயாகும்.

74. சூடினவர்களுக்கு வாடை தராத தாழைமலர் போன்று, உங்கள் கடமை உங்களுக்கு நலன்தரத் தாமதித்தாலும், பிறர்க்குப் பேருபகாரமாகப் பயன்படுமாறு நடந்து கொள்ளுங்கள். இவைதான் தெய்வ மனிதர்களின் செய்கைகளாகும்.

75. பட்ட மரத்தைத் தட்டிப் பார்த்தாலும் சப்தமாகவே பரன் காட்சி தருகின்றான். உடல் தாங்கிய ஒரு சில மக்களிடம் விசுவாசமில்லாமல் இருப்பது நலமாகுமா? மற்றைய மக்கள் அவ்வாறிருந்தாலும் நீங்கள் உண்மை வழியை விட்டு விலகாதிருந்து வருவதோடு பிறர் உணருமாறும் நடந்து கொள்ளுங்கள்.

76. ஒரு சிலர் ஒழுக்கமுள்ளவர்களைப் போன்று நடித்து அகத்துள் அஞ்ஞான இருளை மறைத்து வைத்து வருகின்றார்கள். அவைமட்டுமா, பொறாமையாகிய சேற்றையும் சந்தனம்

எனக் கருதிப் பூசிக்கொள்ளுகிறார்கள். ஆனால் அவர்கள் வாழ்க்கைச் சக்கரப்பற்கள் யாவும் தேய்வுற்றபோது, கிடுகிடு பாதாளப் படுகுழியுள் குடியோடு பாய்ந்து மாய்ந்து போவார்கள். ஆதலால் உங்கள் உள்வினை நல்வினையாக இருந்தால் ஊழ்வினை ஒன்றும் செய்யா.

77. நாடக மேடையில் நானாவித வேடங்கள் காட்சியளித்து மறைவதுபோன்று, இவ்வாடலுலகமும் வலமிடமாகச் சுழன்றாடுகின்றது. இவைகாண உங்கள் உள்ளொளி உடலை உற்றுப் பாருங்கள். பற்றற்றுப் பரமரகசிய சிதாகாயத்தில் குடியிருக்கலாம்.

78. விதியாகிய மாணிக்கத்திற்கு மதியாகிய ஒளி கிடையாவிடில் அதற்கு மதிப்பு எங்கிருந்து கிடைக்கும்? இவ்வாறொப்ப அருளுருத்திரண்டு உலகிலுதித்த மனிதன் அறிவுச் சுடரின்றி உலவுதல் தகுதியாகுமா? இக்கட்டத்தை ஊன்றி ஆலோசனை செய்யவேண்டியது அவசியமாகும்.

79. இம் மகிதலம் எவற்றால் ஆக்கப்பட்டிருக்கின்றது எனக் காணமுயல்பவர்களுக்கு, கருணையாகிய கடல் மடை திறந்து பாய ஏதுவாகும். இவ்வூனஉடலும் பிடிசாம்பலாகி முடிவில் குடிசூழ்ந்து வாழ்ந்த வகையறியாது போகிறதற்குக் காரணம், மாயை மயக்கமெனச் சுலபமாக எவரும் சொல்லிவிடலாம். ஆனால் அவை யாதால் ஆகின எனக் காண்பது மட்டிலும் எளிதாகாது.

80. வாயுரையாடற்குரிய நாவுடைய எவரும், திசை நான்கு எனக் கூறிவிடுவது வெகு சுலபமாகும். ஆனால், வட திசை முடிவைக் கணக்கிட்டுக் கண்டுபிடித்தவர்கள்உண்டா என இன்னும் விசாரணைக்கு எவரும் எடுத்துக்கொள்ளக் கிடையா! இவைதான் இவ்வுலக விவேகக்குறைவைக் குறிப்பிடுகின்றன.

81. உடல் உறுப்புக்கள் யாவும் அபிநயம் தரும்படியாக நடியாவிடில், அப்பெண்பாலை நடனமாதென யாருமே புகல மாட்டார்கள். அவ்வாறுதான் உங்களின் கடமைகளில் இடையூறுகள் தோன்றுவதுகண்டு மதிமருண்டு பின்வாங்கினால், அறிஞர் குழாங்களிடையே நீங்கள் மதிக்கப்படமாட்டீர்கள்.

82. துத்தி இலையைக் கசக்கிச் சாறெடுக்க முடியாததன்மைபோன்று, புத்திவலுவில்லாத மக்களையும் சாமான்யமாகச் சீர்திருத்தம் செய்யமுடியாது. நீங்கள் அவ்வாறில்லாது

அழகிய மலரைத்தருகிற தாமரைவடிவைத் தாங்கித் தரணி யில் நடமாடி வசியுங்கள்.

83. பசும் பொன்னுற் செய்த பாத்திரங்கள், ஒளியிலும், விலையிலும் உயர்ந்ததெனினும், புவியிலிருந்தெடுக்கப்பட்ட தென்பது மட்டிலும் பொய்யாய் விடாது. ஆதலால், மரண பயம் நிறைந்த மனிதர்கள் மாயை வெறி கொண்டலைவது தகாதெனத் தடுத்தாட்கொள்ள, நமதன்னை பாரதமாதா விற்கே பூரண உரிமையுண்டு.

84. இகசாகரங் கடந்த பெரியார்கள் இதயம், பூரண சந் திர ஒளியிற் கண்டெடுத்த மாணிக்க மணியைப் போன்று பிர காசிக்கும். துர்க்குணக் குப்பைகள் குவிந்த மக்களின் உள்ளம், இருட்டறைகளுக்குள்ளிருக்கிற அடுக்குப் பானைகளுக்கு ஒப் பிட்டு, அணுவளவேனும் ஒரு நிலை நிற்க முடியாதபடி, மன மானது மாசுற்றதாகவேயாகி அறிவை மறைவுபடச் செய்யும்.

85. விதைதந்த மரமும் மரம் தந்த கனியும் நிழல் வந்த வகையை உணரமாட்டா. ஆற்றலுடைய மனிதப் பிறவியே தோற்றம் ஒடுக்கங்களைக் கண்டு பிடிக்க முடியும். குழலூதா மல் அரவம் ஆடாதென்பது போன்று, இக்கட்டத்தை உங் களுடைய அறிவின் ஆழத்திலிறங்கியே உணர வேண்டும்.

86. பொதி சுமப்பதற்கெனவே விதிவசம் தாங்கிப் பிறந் தது கழுதையெனக் கருதிவருவது, தகுந்த அறிஞர்கள் கருத் திற்கு மாறுபட்டது மக்களினத்தில் ஒரு சிலர், சான்றோரினம் சார்ந்து பக்குவமடையாதபடியால், அவர்கள் பாமரரெனக் கருதப்பட்டு வருகிறார்கள்.

87. வஞ்சகம் வளர்கிற வையக வாழ்வில், ஒருவரிட மொருவர் தஞ்சம்புக வேண்டியதாகத்தானிருந்து வருகிறது துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனமென்பது மண்மூடிப் போகா தபடி தரும நெறி தவறாத சட்டம் வகுத்து, தரணிக்குதவ ஓர் தகுந்த தலைவன் இக்கலியுலகில் தோன்றி அரசியலரங்க மேடையின்மீது ஏறி, ஆட்சி செலுத்த வருகிறது எக்காலமோ வென எதிர்பார்க்கப்படுகிறது.

88. அவசரமான அலுவல்களைக் கவனிக்க வேண்டி ஆகாய விமானமீதேறிப் பறந்து செல்கிற மனிதனுக்கும், கவலையற்ற மனதுடையவனாகக் கால்நடையாக நடந்து தேச சஞ்சாரம் செய்பவனுக்கும், அனுபவ வித்தியாசங்கள் மிகுதி யுண்டு. இகபரக் கடமையில் நீங்கள் நிதானமாகச் செல்ல முற்படுங்கள்.

89. மற்போர் பொருதுகின்ற மல்லர்கள் இருவரில் ஒருவரெவரேனும் கீழ்விழாத பட்சத்தில், வெற்றியைக் காண முடியாது நின்றவர் கொண்ட வெற்றி வீழ்ந்தவர் தந்ததெனப் புகல்பவர் எவருமில்லை. வெற்றியும் தோல்வியும் பிரிக்க முடியாததொரு சதானந்த சக்தியெனக் காண்பவர்களுக்குச் சாட்சியளிக்கும்.

90. புதுமை மலர்கள் பூத்து உதிர்கின்ற இதயப் பூங்காவனத்திற்குப் போதிய பாதுகாப்பில்லாதபடியால், ஐம்புலக் கள்வர்களும் கூடி நற்பயனளிக்கிற காலம்பார்த்துச் செடிகளை வேரோடு பிடுங்கி வீண் பிரயோசனச் சூறையாடப்பட்டு வருகிறது. ஆதலால் நீங்கள் உங்களிதய கமலாசனச் சுரங்க வாசலைக் கட்டாயமாகக் காவல் புரிய முற்படுங்கள்.

91. விருத்தாப்பிய வயது வந்தபிறகுதான், மனிதன் தனது வாழ்நாளின் வாழ்க்கை வரலாறுகளைச் சிந்தித்து, சென்ற காலத்தில் செய்த தவறுதல்களையெல்லாம் எண்ணித் துக்கசாகரத்துள் மூழ்கி,கிழப்பிணமேயெனச் சிலர் ஏசச்சகிக்க முடியாமல் மரண சிநேகனைக் கூவியழைக்க முற்படுகின்றான். வாலிப சேஷ்டை நிலையற்றதென முன்கூட்டியே உணர முடியாது போனதற்குக் காரணம், இலௌகீகக் குழாய்க்குள் புகுந்து திரும்ப முடியாதபடி திகைத்து நின்றதேயாகும்.

92. தனவந்தனைத் தரித்திரமுள்ளவனோடு ஒப்பிட்டுச் சரிசமம் கருதிக் காணும்போது, மீண்டும் திரண்ட ஐஸ்வரியம் கைகூடி வர வேண்டுமேயென எண்ணிச் சதா சஞ்சலக் காற்றினலே மோதியவாறு யார்க்கும் புலனாகாதபடி புவியில் உலவி வருகின்றான் தனவந்தன். ஆகையால் நேற்றுக்கிடந்த பட்டினியை நினைந்து, இன்றுசாப்பிட்ட கூழுணவைக்குறித்து மனமகிழ்கின்ற ஏழை மனிதர்களுக்கு இணை கிடையாது.

93. மானில மக்களிற் சிலரை மதியீனர்களெனக் கூறுகின்றது கூடாதெனினும், அன்னவர்களின் அறிவை உச்ச நிலைக்கு உயர்த்தாது இருப்பதுதான் பரிதாபகரம். நீங்கள் பகுத்தறிவுச் சிகரத்தின்மீதேறி இந்நிலவுலகக் காரியாதிகள் யாவற்றையும் கண்காணியுங்கள்.

94. அறுசுவைகளில் ஒரு சுவையாகிய மாம்பிஞ்சு முற்றிய காலையில் புளிப்பும், கனியாகிய முடிவில் இனிப்பும் தருகிற தன்மை போன்று, மனோபக்குவமடையாத மக்களும் படிப்படியாகத்தானே ஆற்றலுடையவர்களாக வேண்டுவதிருக்கிறது. ஆதலால், விவேகமில்லாத பிள்ளைகளைக் கண்டு நீங்கள் வெறுப்புற வேண்டாம்.

95. பாசவலையுட் சிக்கிய மக்களை நற்கதியுறச் செய்யவே பேரின்ப நிலையையடைந்த பெரியார்கள் அனைவரிடமும் அபிமான உறவுபூண்டு தொண்டுபுரிவர். நித்திய கண்டத்துள் வீழ்ந்து செத்துப் பிழைக்கின்ற பித்துலகப் பிரியர்கள் மேற்கூறிய உத்தமர்களுக்கு உபத்திரவம் தந்தவண்ணமாகத்தான் இருப்பர். இருப்பினும், பொறுப்புரிமை வாய்ந்த பெரியார்களாகியபடியால், அவர்களிடம் சகிப்பிற்கிருப்பிடம் மிகுதியுண்டு.

96. உழுது பயிரிடுகின்ற நிலங்களுக்கு வருடவாரியாகப் பரிபாலனத் தீர்வையைச் செலுத்தத் தவறினால், அரசாங்க அனுமதிக்கிணங்க அதிகாரத்தோரணையோடு சமுசாரிகளிடமுள்ள நிலங்களைப் பறிமுதலாக்கப்படுகிறதுபோன்று, சீவான்மாக்கள் யாவரும் சரீர சௌக்கியமாகப் புவியில் வசிக்க வேண்டின், இயம நியமமாகிய சாதன சதுட்டயங்களைச் சரிவரச் சதாகாலமும் செய்யாவிடில், இவ்வுடலைக் கொடிய நோயென்னும் கைதிக்குள்ளாக்கிய முடிவில், இயமராஜனிடம்கொண்டு போய் ஒப்படைக்கப்படும்.

97. வேலையில் இவன் கெட்டிக்காரனாவெனக் கண்டு கூலிக்கமர்த்திக்கொள்ள வேண்டுமே தவிர, உருவத்திலுயர்ந்தவனா, தாழ்ந்தவனா எனக் காண வேண்டாம். அருளுபதேச ஆசிரியர்களிடம் பொன் பொருளாதிகள் உண்டாவென நோட்டமிடுதலோ, கேட்டுத் தெளிதலோ உங்களின் மெய்யறிவுடமையைச் சிறப்பிக்காது.

98. சடுகுடு பாய்ந்து விளையாடிய பாலிய வயதையும், சன்மார்க்கக் கடமைக்குகந்த வாலிப வடிவையும்,இடையீடற எண்ணிக் கண்ணீர் சொரிந்து, தேசாபிமானிகளாகிப் பணியாற்றிய மகா யோகிகளின் வச்சிர தேகங்களையுங்கூடப் புவிக்குரியாள் தனக்குரிமையாக்கிக் கொண்டாளென்றால், மற்ற தோற்றங்களெல்லாம் அவளுக்கெம்மாத்திரம்? உங்கள் நெஞ்சகச் சாட்சிக்கு மட்டும் விரோதமாக நடவாதீர்கள்.

99. காட்டுப் பூனைகளின் காலிடையிலுள்ள அழுக்குகள் வாசனை தருகிறபடியால், புனுகெனவும் புகழ்ந்து பூசிக்கொள்வதுடன், அப் பூனைகளையும் நன்கு கவனிக்கின்றனர். அவை போன்று, தற்கால மனிதனும், பணம், படிப்பு, பதவிகள் போன்ற ஆடம்பரங்களுக்காகவே மதிக்கப்படுகின்றான். வீட்டுப் பூனைகளை விரட்டியடிப்பதுபோன்று, நாட்டுப்பணிக்கேற்ற நல்லோர்களையெல்லாம் தூற்றி அகற்றுகின்றனர்

இவைகள்யாவும் இயற்கை நியதியெனத்தான் காண வேண்டும்.

100. ஊழிகாலத்து உண்மைகளைக் கருத்தூன்றிக் கண்டு பிடிக்க முடியாத மக்கள், ஆழிய நரக வழிகளையணுகி ஆடம் பரப் புலிகளின் அருகில் விளையாடி வருவது ஆபத்தென்பதை தற்போது உணரச் சாத்தியப்படாமல், அவதார புருடர்களி டையே தப்பபிப்பிராயமுற்றுச் சதிச் செயல் செய்யத் துணி கின்றனர். ஆயினும், நமதருளொளிஅன்னையின் தனையர்கள் தானேயென யாம் வாழ்த்துகின்றோம்.

101. கேள்வி:- சுவாமி! தாங்கள் மௌனம் அனுஷ்டிக் கும் நோக்கம் யாது?

பதில்:- எமது இதய மலர்களாகிய மக்களே! மனித சமு தாயம் தெய்வீக சமுதாயமாக மாறவும், உலகிடை நிலவி வருகிற ஓயாத போர்வெறி ஒழியவும், ஆண் பெண் அனை வரும் ஆன்மஞான ஒருமையுள் ஒன்றுபடவும்வேண்டியே, இயற்கையழகை நம்பிய அடியேன் இந்த அசபா மௌன விரதம் அனுட்டிக்கத் தொடங்கியுள்ளோம். மற்றெந்தக் காரணத்தையும் முன்னிட்டலல.

102. வையக வாழ்வு தடுமாறி விழக்கூடிய அளவிற்கு மனித சமுதாயத்தின் மனப்போக்கும் குன்றி வருகின்றது. அறநெறி தழுவிய அன்பர்களாக மேற்கூறிய மாற்றங்களைத் திருத்தியமைக்க நீங்கள் முற்படுங்கள்.

103. கடவுளுடைய திருநாமத்தை வாய்கொண்டு துதிப் பது மட்டிலும் போதாது. சுக துக்கம் இரண்டிலும், சம இன் பம் காண்பதால் இறை பக்தி வளரும் என இதயபூர்வமாக ஒப்புக்கொண்டு வணக்கத்தில் ஈடுபடுங்கள்.

104. உங்களுடைய கடமை தாங்கிய உடல் புத்துயிர் பெற்று நீடிக்க வேண்டிய முயற்சிகளைச் செய்து முடித்துக் கொள்ளுங்கள்; பிரிக்கப்படமுடியாத சகோதர வாஞ்சையை யும் உங்கள் வாழ்க்கைப் படலத்தில் ஒரு பகுதியாக இணைத் துக்கொள்ளுங்கள்.

105. ஓர்மையென்பது ஒப்பற்ற சக்தி; அது கெட்ட மக்கள் கோரிய காரியங்களுக்குப் பயன்படாதபடி மறைந்து கிடக்கின்றது. உங்களுடைய உள்ளம் திடம் பெருதிருப்ப தைப் பண்பாடாக்குங்கள்; பயன்பெறலாம்.

106. வீதிகள்தோறும் வேதாந்திகள் கூடிப் பிரசங்க மேடைகளை உண்டுபண்ணிய பிறகுமா நீங்கள் அறிவாகிய கடலில் மூழ்காமல் இருக்கவேண்டும். தத்துவ வேதாந்திக ளுக்குப் பதிலாக, புத்தக வேதாந்திகள் புகட்டிய அறிவுரை கள் பயன்படா; பண்பட்ட பெரியார்களுடைய கண்பட்டாலும் கடைத்தேறலாம்.

107. உங்களுடைய உள்ளத்தைத் தூயதாக ஆக்காமல் கெடுப்பது, ஆகாத எண்ண அலைகளுக்கு இடம் தந்துவிட் டதே காரணம். தவஞானிகள் அருளிய திருவாய் மொழிகளை ஏற்றுச் சிந்தித்து அதன்படி ஒழுகிவர முற்படுங்கள்; சாந்தியுறலாம்.

108. உண்டு, முடியும், ஆகும் எனக்கூறுகிற உறுதி மொழிகளுக்கும், இல்லை, முடியாது, ஆகாதென்று சொல்கிற வலுவிழந்த வாக்கியங்களுக்கும், வாது என்கிற கிளைகள் வளர்ந்து வெற்றிகாண முடியாதபடி தடையாய் இருக்கிறது. இத்தடையைப் போக்கப் பராசக்தியின் திருவருள் வேண்டும்.

109. நிலைபெற்ற அழகிற்கு பார்வையை உரிமையாக்கிய பின், மாயைமயக்கை மறக்க முடியாமல் தத்தளிக்கும்படியாக நேரிடும். உள் நோக்கம் இருந்தால், உழல்நிலை உங்களைப் பாதிக்காது; அழகிய அருளை உறவு கொள்ளுங்கள்.

110. பட்டுப்போன மரக்கட்டைக்கும், பாமர மக்கட்கும், வித்தியாசமில்லை. கெட்டவர் கெட்டுப் போகட்டுமெனப் பார்த்திராமல், பிறர் இன்பம் தனதின்பம் எனக் காண்பதே பெரிய இன்பம். துணிந்து பணியாற்றி நீதிக்கு நீங்கள் துணையாக நில்லுங்கள்.

111. அவநம்பிக்கை அற்ற மனிதரிடம், திடநம்பிக்கை குடிகொள்ள இடமிருக்கும். திடசித்த ஞானிகளின் திருவாக் குகளை ஏற்றுப் போற்றி உய்யுங்கள்.

112. அனுபவ ஞானிகளின் திருவாய் மொழிகளை, அரு ளிய உபதேசங்களை ஏற்று, அறியாது செய்த பிழைகளை எண்ணி மீண்டுமவை அணுகாமல் அகற்றி தெய்வாம்ச மனிதர்களாகத் திகழுங்கள் என்பதே உங்கட்கு மெய்யுபதேச ஊழியனாகிய அடியேன் மௌனவாய் திறந்து அருளிய வாழ்த்து.

113. எமது இதயமலர்களே! நிகழ்கால வேகச்சுழலில் சிக்கிய மக்களை அருளொளி நிழலில் அமைதிகாணச் செய்வது

தான் ஊக்கம் நிறைந்த உங்களுடைய ஆக்க வேலைகள் என்பதை மட்டிலும் மறக்கலாகாதென்பதே நமதுபதேசமாகும்.

114. உலக உபகாரத்திற்கெனப் பிறந்துலவும் மக்கட்குத் திடமனதும், திரேக நலனும் முக்கியமென்பதை உணர்த்துவதற்குப் போதிய சக்திவாய்ந்த தொண்டர்களை, உங்களிடையே தெரிந்தெடுத்து விரைவில் ஆவன செய்ய முற்படுவதே தகுதியாகும்.

115. பித்துலகத்தை மேவிய சிற்சுகக்கடலைக் கடந்து, பேரின்பத் தேனைப் பருகச் செய்வதற்கு, பரிபூரணம் பெற்ற பெரியார்கள் பணியாளர்களாகத் தோன்றி, நற்றவ மார்க்கத்தைப் பற்றும்படிக்கு அருளுரை கூறிய முடிவில் அவனியினின்றும் மறைகுவரென்பது கண்கூடாகும். ஆதலால், விரிவாகிய அறிவைப் பெறுதற்கு உரிமையையுடைய நீங்கள் காலங் கடவாமுன் அருளொளி உறவைப் பெறுவீர்களாக!

116. செல்வர்களே! எண்ணற்ற உலகப் பொருளைக் கையாண்ட சுய சுதந்திரங்கள் எல்லாவற்றிலும் தலையாய சிறப்பைத் தரத்தக்க ஆன்ம சுதந்திரத்தை, நீங்கள் அடையாதிருக்கிற பெருங் குறையை நிவர்த்தித்துக் கொள்ளுங்களென்றுரைப்பதே உங்கள் ஊழியனாகிய ஏழையடியேனுடைய கடமையாகும்.

117. வருங்கால இளங்காளைகளுக்கு ஏற்ப, உங்களுடைய வாழ்க்கையின் போக்கைப் புதுப்பித்துக்கொள்ள வேண்டுவதுடன், இதயக் குளத்தினடியில் புதைந்திருக்கின்ற உண்மைகளையும் ஆராய்ந்துகண்டுபிடித்து, ஆங்காரியங்களுக்கு உதவி உணர்வு பெருக்கி வாழ்வீர்களாக!

118. எமதரிய தவத்தனயர்களே! புறப்பொருளில் இச்சையுடைய எவரும் திருப்பெருந்துறையை அடைதல் முடியாதெனக் கூறும் வேதவாக்கை, உங்கள் அறப்பணியிலிருந்தே மாற்ற முடியுமென்பது நமது தளராத நம்பிக்கை. ஓர்மையும் உறுதியும் உண்டாகப் பெறின் மேற்கூறிய மார்க்கம் மிகவும் எளிதெனக் காணப்படும்.

119. தீர்க்கதரிசிகளாகிய நமது முன்னோர்கள் தழுவி ஒழுகிய தவவழிகள் யாவும் தலைகீழாகி மங்கி மறைந்துபோனதற்குக் காரணம் காண்பீர்களானால், ஆன்ம வலிமை கிடையாத மக்கள் அதிகமாகி அறநெறி மறந்துபோனதேயாகும் என நீங்கள் உணர முடியும்.

120. எமது குணமணிகளே! ஒற்றுமையாகிய ஓமகுண்டத்தில் வைராக்கிய விறகையடுக்கி, ஆர்வமாகிய நெய்யைச் சொரிந்து, அசையா மௌன மந்திரம் செபித்து, அடக்கமாகிய எக்கியம் வளர்த்து அருட்பிரகாசச் சம்பத்தை அடைந்துய்வு பெருது உலகிலுதித்த மக்களாகிய நீங்கள் மழலைமதியுடன் வாளாவிருந்து வருவது தகுதியாகா.

121. கவலைக்கடலில் மிதந்து கரைசேர முடியாதபடி பரதவிக்கின்ற மக்களைக் கைதந்து காப்பாற்ற முன்வந்த கடமையாளரைப் பிடரிபிடித்துப் பின்தள்ளத்தக்க இடையூறுகளிலிடையில் அகப்பட்டுத் துன்புறுமாறுசெய்து சோதிப்பது திருவுள்ளச் செய்கையின் இயல்பு என மதித்து இன்புறுவது அறிஞர்க்கழகு.

122. மக்களே! தெய்வீகம் தங்கிய கடமைகளில் நீங்கள் வெற்றிபெற்றுய்யும்பொருட்டு அழியாப் பொருளை அகமுற உணர்ந்த முடிவில் அணையா விளக்கை ஏற்றி எமதருமைக் குழந்தைகளாகிய உங்களிடம் ஒப்பித்துள்ளோம். ஆராவமுதமளிக்கத்தக்க நமது அருளொளிமாதா உங்கட்குக் கிருபை பரவிய நித்தியானந்தத்தை அளிப்பாளாக!

123. நமதரிய குண சிகாமணிகளே! இப்புனித பூமியில் தற்காலச் சிறப்பைக் கண்ணுறுங்கால், அளவுகடந்த மடாலயங்களும், ஆச்சிரமங்களும், ஞானசபைகளும், மலிந்து காணப்படுகின்றன. ஆங்காங்கு புரியும் உபந்நியாசங்களை மக்கள் செவிமடுத்தும், அவர்களிற் பெரும்பாலோர் மனதுணர்வு பெருத் தான்தோன்றித் தன்மையுடையவர்களாகவே காணப்படுகின்ருர்கள். காரணம் யாதென ஆராயுங்கால், காலஞ்சென்ற கனதனவான்களின் நன்கொடைகளைப்பற்றி ஏழை மனிதனின் செவியில் ஓதிய கதைபோல்உளது.பயனற்ற பழைய பல்லவிகளைப்பற்றி மேடைமீதேறி நாள்தோறும் பிரசங்கிப்பதில், யாதொரு பயனையும் நம் நாட்டு மக்கள் பெற்றுய்யப்போவதே கிடையாது.

124. கடமையை வழிபடு கடவுளாகக் கருதிய பெரியார்களுள் ஒருவராகிய விவேகானந்தர் விட்டுச்சென்ற, வீராவேசத்தொண்டின் பிற்பகுதி வேலையை,வெற்றிபெறச்செய்து முடித்தே தீருவோமென மார்தட்டி முன்வருகிற மனிதனை, மாநில மக்களும் ஒருகால் புகழுரை கூறி வரவேற்பர் என்பதில் ஐயமுண்டோ?

125. திடசக்தி உபதேச ஆலயங்களை அகிலம் முழுவதும் பரவச் செய்தாலொழிய, புவிப்பிரளயகாலப் பரிசோதனைக்குத் தப்பமுடியாதுபோகும் என்பது உண்மையாகும். ஆதலால், அதிவிரைவில் ஒவ்வொருவரும் ஆத்மஞானத் திடத்தைப் பெற்றுய்வீர்களாக!

126. நிட்டூரச் செயல்களைச் சதாகாலமுஞ் செய்து, வாழ்க்கையைப் பாழாக்கிவிடாதீர்களென அன்புகூர்ந் தழைத்து அறைகூவினும், சரிதானெனச் செவிசாய்த்து ஒப்புக்கொள்ளப் போதிய மதி கிடையாதபடியால், மழலை மதி யுள்ள மக்கள் மயங்குகின்றனர். ஆங்காலம் அருகிலொளிரும் போது கலக்கந் தெளிந்தெழுந்து கண்ணியமாகக் கடமை யோடு உறவாடுவார்கள் என்பதையும் நாமறிவோம்.

127. சீவசக்தியிற் சிறந்த பெரியார்கள்,தேசபக்தியைத் தமது இதய பரிபூரண சமநோக்குடன் இணைத்து, ஆதரித்து, ஆவன செய்ய முயல்வர். அறிவு வளராத ஒரு சிலர் பக்தர் களைப் போன்று பாசாங்கு செய்து, பலரிடமும் பகைமை பாராட்டிப் படுகுழியுட் பாயஎத்தனிப்பர். நீங்கள் அவ்வாறில் லாது, நமக்கனைவரும் நேசர்கள் தானென நினைந்து கடனாற் றுங்கள்.

128. ஓராயிரங்கோடி உபதேசமொழிகளைக் கேட்பினும், ஆத்மீக சக்தியுபதேசத்தினைச் செவிமடுப்பதற்கு இணையா குமா? எஞ்சியது இவையாகுமே தவிர வேறு கிடையாதா கையால், சுறுக்கென மக்கள் துள்ளிக் குதித்து எழுச்சியுறு மாறு, உணர்ச்சிப்பிரவாக மொழிகளைப் பிரயோகியுங்கள்.

129. மெல்லிய பாதங்களைத் தாங்கிய எலிப்பகைவ னாகிய பூனை சந்தடியின்றி நடப்பதுபோன்று, நீங்களும், உங் களிடமுள்ள சித்த அமைதியைக்கொண்டு அறுவகை விரோதி களையும் பிடித்துச் சிறையிலடைக்கப் பிரயத்தனப்படுங்கள். அவ்வாருயின், அதிவிரைவில் ஜெயசீலர்களாகத் திகழ முடியும்.

130. அநித்திய மார்க்கத்தைச் சதமெனக் கட்டிப் பிடித்து, நித்திய வழிபாடுகளை உதறித்தள்ளிய மக்களைச் சீர்திருத்த முயற்சிப்பது, வெகு உபாய தந்திரமாகவே இருத்தல்வேண்டும். அதாவது, சற்குணம், சமகுணம், துற்குணமுள்ள மக்களிடையே,நல்லுபதேச மொழிகளை உரை யாடுவது, அவரவர்கள் குண பாகுபாடுகளுக்கேற்ப மிளிர வேண்டும். அவைதான் உங்கள் கூரிய குணசாதுரியத் தன்மையாகும்.

131. மேற்கூறியவாறு பணிபுரிய முற்பட்ட பல பெரியார்கள், மக்கள் திருந்திவராமை கண்டு சிந்தை தளர்ந்து, மௌன சாதனத்தை மேற்கொண்டு நாவை முத்திரையிட்டு, பேயரைப் போன்று திரிந்து மறைந்தனர். வசித்தும் வருகின்றனர்.

132. அவ்வாறு உயரிய கடமைகளைச் செய்துமுடிக்கும் திறனற்று, அரைகுறையாக விட்டு நழுவிவிடுவது, உங்களைப்போன்ற பேரறிவுடையோர் பெருந்தன்மைக்கு அழகு தராது. அவை, ஆற்றில் இறங்கிச் சேற்றைப் பூசித் திரும்பியவன் கதையை ஒக்குமெனக் கண்டு, உண்மைக்கு உழைக்க முன்வாருங்கள்.

133. கலையாகிய குளத்திலே குதித்து, அறிவாகிய நீரிலே மூழ்கி, ஒழுங்காகிய கரைகண்டேறி, கேள்விமயப் புத்துடையணிந்து, அடக்கப் பெரும் பாதையைக் கூடி, அருள்மய வீட்டிற் புகுந்து, அன்பென்ற அமுதமருந்தி, அறியாமை இருட்பசியை நீக்கி, ஆனந்தசாகர இளைப்பாறக் கருதிய தகையுடையவர்கள்தான் கடமைச்சுமையைத் தாங்கி நடாத்தவியலுமே தவிர, மற்றவர்களுக்கு மலையெனவே காணப்படும்.

134. ஆனாலிவைகண்டு இதுவரை நம்மாலியலாதெனக் கூறி நழுவினோர், மற்றுருகுமென மார்தட்டி முன்வந்து பின் தடுமாறினோரின் கணக்கிலதிகமாகவே மதிப்பிடலாம். இவை யாவுமுணர்ந்தே வீரப்பிரதாபக் கச்சையைக் கட்டி நீங்கள் கடமைக் கடலிலிறங்கி நீந்தல் வேண்டும்.

135. எத்தகைய சூழ்நிலைகள் கவிந்து துன்புறுத்தினும், உறுதி தளராத நேர்மையும், உயரிய சன்மார்க்க விசுவாசங்களும் உங்களை விட்டகன்று நழுவச் சற்றேனும் மனதிற்கிடந் தந்துவிடாதீர்கள். இன்ப துன்பமிரண்டும் இரவும் பகலுமென உணர்ந்து களிப்பெய்துங்கள்.

136. குஞ்சுப்பாம்பிற்கு நஞ்சில்லையெனக் கருதிப் பஞ்சமா பாதகங்களைப் புரிகிற பேர்வழிகளும் உங்களைச் சூழ்ந்துள்ளபடியால், பக்கவேரற்று ஆணிவேரொன்றில் ஆடிக்கொண்டிருக்கிற விடவிருட்சம் வருங்காலப் புயலில் வீழ்ச்சியுறுமென நம்பிச்சிறிது விலகி வசித்துப் பணிபுரியத் துணிதல் வேண்டும்.

137. மனித சமுதாய வரம்பு கடந்து, அயோக்கியச் செயல்களை அருந்தொழலாகக் கருதுவது, உயிரினு முயர்ந்த யோக்கியதாம்சத்தைப் பறிகொடுத்ததற் கொப்பாய் விடுகின்றது. சிறுபோதுள்ள புவி வாழ்க்கையில், குறையாநிதி

உங்கள் ஒழுக்கமென உணர்ந்து போற்றுவதோடு, சட்டி, அமாவாசை போன்ற விரதங்களிலும் பன்மடங்கு அதிகம் சிறந்தது, கருதிய கருமம் நழுவாது செய்து முடித்துச் ஜெயம் பெறுவோமெனத் துணிந்து வைராக்கிய விரதம் பூணுதலெனக் காண்க.

138. மாந்தர்களிடையே தாட்சணியமென்னும் பரோபகாரத்தன்மை சிறிதளவேனுமின்மையால், இன்றைய உலகம் கொடிய பயங்கர சக்திகளுக்குள்ளாகி, இரணகளப்போர் வெறிகளும் மிகுதியுற்றுக் குடிப்பிறந்த மக்கள் கூடை தலை மீதெடுத்து நாடோடியாகக் கூலிக்கலைகின்றனர். இவை தருமநெறி தவறியதின் அறிகுறியே.

139. நமது தேச மக்கள் செழிப்புற்று வாழ்க்கைப் பூங்காவனத்தை வளர்ந்தோங்கச் செய்யவேண்டுமெனின், ஆராய்ச்சிக் கூர்மையும், ஆவன செய்யும் வன்மையும், பிரகாசிக்க வேண்டுமேயல்லாது, ஜனசமுதாயக் கணக்குமட்டிலும் உயர்வதினால் புகழெய்தாது.

140. நாமின்றைய உழல்நிலைகளினூடு வகுத்துதவிய அருள் நிலையங்கள், புவிமுழுதும் பரவி வருகிற காலத்தில் உலக சமாதானம் நிலவுமே தவிர, வாக்காளர்களை மட்டிலும் பொறுக்கிக் கூப்பாடு போடுகிறதினால், வேற்றுமைப் பிளவு என்கிற தழும்பு மறைந்துவிடாது. மறைந்தது போலத் தோன்றினும் மீண்டும் தலை தூக்கியே துன்புறுத்தும்.

141. நீங்கள் இக்கட்டத்தை மிகுந்த ஆலோசனைக்கு எடுத்துக் கொள்வதோடு, அதற்குரிய நன்மார்க்கங்களையும் கண்டுபிடித்துச் சீர்திருத்தச் சிற்பிகளாகத் திகழுங்கள். இதற்கு உங்கள் சித்தத்திடனே சிறந்த உறுதுணையாகும்.

142. அரிய கடமைகள் புரியத்தூண்டும் பெரியார்களை அகமகிழ்வுடன் வரவேற்று, அன்பு மலரைச் சூடி உபசரிக்க வேண்டுவதிருக்க, நறுமணந்தந்து ஒரு கணத்தில் வாடி வதங்கும் மல்லிகை மலரை மட்டிலும் மாலையாகப் புனைந்து, கழுத்திலணிவித்துக் கரகோஷமிட்டு அப்பெரியார் புகன்ற பொன்மொழிகளை மறந்துவிடுவதினால் மதிப்பொன்றுமில்லை.

143. முன்னின்று முகமன்பேசிப் பின்னின்று பிழை கூறுகிற மக்களை மிகுதியாகப் பெற்ற எந்த நாடும் வளங்குன்றி, அந்தகன் கைக்கோலையிழந்த தன்மை போன்று, திசைதடுமாறித் திண்டாடுமென்பதே சரித்திரங் கண்ட சான்றாகும்.

144. ''விழித்தெழு மனிதா'' என்ற வேதவாக்கை மறந்த படியால், பழிப்புக்கிடந்தந்து பாரத புவி பல பிரிவினைக்குள் ளாகி முடிவில் இரணகளமாக மாறி, மானிட வர்க்கமே மடிந்தழிகின்ற தருணத்தையும் எதிர் நோக்கி நிற்கின்றது. இதற்கினி யாது பரிகாரமென நீங்கள் ஆராய முற்படா திருந்து விடுவீர்களானல் இயற்கை அழகமைந்த மனித வாழ்க்கை, எமனுலக வாழ்க்கையாக மாறிக் குறைந்து மங்கி விடும்.

145. குறுகிய தன்னல நோக்கத்தைப் பெரிதும் விரும்பி வசிப்பது, சமரச நேர்மையை மாற்றி விடுமேயெனச் சதா சிந் தித்துப் பரோபகார மார்க்கபோதனையில் ஒவ்வொருவரும் ஈடு படாத படியால், கோடிக் கணக்கான மக்கள் பகுத்தறிவை யிழந்து பசி நோயினுக்கடிமையாகி, செல்வங் கொழித்த நாடு வல்வினைகளடர்ந்த காடாகக் காட்சி தருகின்றது.

146. வீரசுவர்க்கத்தை விரும்பித் திடதைரியத்தைக் கொண்டவர்களால் நாட்டு முன்னேற்றத்திற்கேற்ற நன்மை கள் செய்ய முடியுமே தவிர, கடமைகளைப் பற்றி வாய் கொண்ட மட்டும் வானளாவப் புகழ்ந்து, தருணத்தில் பதுங்கித் தலை மறைவாக நின்று பின்வாங்கி, வெற்றி கண்ட பக்கம் திரும்பி விடுகிறவர்களால் முயற்சித்த கருமத்தில் அபஜெயமல்லாது ஜெயங்காண முடியாது.

147. நமதுபதேசமுணர்ந்து உள் விழிப்பெய்திய செல்வர் கள் உத்வேக சக்தியை விட்டு அகலாதிருப்பார்களாயின் சதிச் செயல்களுக்கு அகப்படாத மதியூகிகளாகி, மரண பரியந்தமும் பொதுவிதிகளுக்காக உழைத்துப் பொல்லாத போராட்டத் துரோகச் செயலைச் சரணடையச்செய்து, சர்வ பரித்தியாகி களாகத் திகழுவார்கள்.

148. நீங்கள்ஏன் இப்புவியில் பிறந்தீர்களெனக் காணுங் கால், தரணியில் தருமநெறியைப் பரப்பி, அதர்ம நெறியை அடக்கிச் சேவையறிந்தாற்றி, நாட்டைச் செழிப்புறச் செய்ய வேயாகும். இவையுணராதிருப்பது உங்கள் திருநாமத்திற்குப் புகழ்தராது. ஆகவே, பொய்யுடம்புஅழியுமுன் அதனுதரவைக் கொண்டு அதிவிரைவில், புகழுடம்பெய்தப் புறப்படுங்கள்.

149. இக்கடமை முதல் எக்கடமைகளையும், சித்த சலன மற்ற திடசக்தியில்லாதவர்கள் பூரணமாகச் செய்து முடிக்க வியலாது விழிப்பது கண்கூடாகும். இவையுணர்ந்து, நீங்கள் பரிசுத்த ஆத்மசக்தியோடு கலந்துறவாடினுல் யாவும் ஜெய மாகவே முடிவு பெறும்.

150. உங்களைச் சந்தேக விபரீதங்கள் சதாவந்து மோதா தவாறு, நம்பிக்கையாகிய வைர வாளாயுதத்தைப் பிடி தவற விடாதீர்களென நாம் எச்சரிக்கின்றோம். ஏனெனில், ஏமாற்ற மென்ற கொடியனொருவன் எவரிடமும் முன்னின்று போராடு வான். அவனுக்கு அடிமையாகாமல் தப்பிப்பதுதான், உங்க ளின் தலைசிறந்த தந்திர உபாயமாகும்.

151. நாட்டிலுலவும் நாசகால இருளையொழித்து விமோ சன வெளிச்சத்தைப் பிரகாசிக்கச் செய்ய வேண்டிய திட்டங் களை வகுத்துக் கிரியாம்சையில் இறங்கியுழைக்க முற்படுங்கள். ஆச்சரியமான உங்களின் அனுபவ நுணுக்கங்களை மக்களி டையே எடுத்தியம்புங்கள். அஞ்சாத வீரர்களாக அருட்சுடர் மன்றத்தை வளர்ந்தோங்கச் செய்யுங்கள். பாமரத்தன்மைய கலப் பலவழிகளிலும் பாடுபடுங்கள்.

152. இன்றைய சண்டாளச் சதிச்செயல்கள் அண்ட புவனங்களனைத்திலும் பரவி, அறியாமைப் பேயை அதிகரிக்கச் செய்து வருகிறதுணர்ந்து, எதிர்காலச் சந்ததிகளின் வாழ் வையும் பாழ்படச் செய்யாவண்ணம் நிகழ்காலத் தத்துவ ஞானிகளாகிய நீங்கள்தான் நீதிநிலை வளரச் செய்தல் வேண்டும். ஆகையால் அதற்குரிய ஆராய்ச்சிக் கதவைத் தட்டித் திறந்து, மறைந்துகிடக்கின்ற மார்க்கத் திறவுகோலைக் கண்டுபிடியுங்கள்.

153. உண்மையை நாடியுழைத்து நாட்டிற்கு நன்மை புரியலாமெனக் கருதியவர்களை, பல இடையூறுகள் சூழ்ந்து தலையீடு செய்து போராடுவதியல்பே. அவைகண்டு சக்தி பெற்ற தகைமையாளர்கள், சிறிதுந் தயங்கித் தம் கடமையை விட்டுக்கொடார்கள்.

154. பகுத்தறிவுடைய பேரறிவாளரைப் பாமர மக்கள் கண்டு பழிப்பதுண்டு. அவர்களறியாமையைக் கண்டு திருத்த முயலாது குறைகூறுதலைக் காணுங்கால், மேற்கூறிய அஞ் ஞான இருளில் அகப்பட்ட பாமரனே பகுத்தறிவு வேடம் புனைந்து ஏமாற்றியதாகத் தெரிகின்றது.

155. ஆரம்பகாலக் கடமைகளை நீங்கள் வெகு பிரயாசை யோடுதான் செய்யவேண்டியதாக நேரிடும். அத்தகைய உய ரிய உழைப்பிலிருந்து உங்கட்கு முதன்முதலாகக் கிடைக்கக் கூடிய ஊதியம் யாதெனில், பலவித இன்னல்களாகவே தோன்றி எதிர்நின்று எக்காரியங்களுக்கும் செல்லவிடாதுவழி மறிப்பவைகண்டு வெற்றிகாணுமல் பின்வாங்கா வீரமாகும்.

156. இமயமலைச் சிகரத்திற்கேறிச் செல்வதினும் நீங்கள் ஏற்ற கருமத்தைச் ஜெயம்பெறச் செய்து முடித்துப் புகழ் பரவிப் பிரகாசிப்பதெனக் காணுதல் தகுதியாகும்.

157. பொறுமைக்கு எதிர்மறையாகிய பாவச்சாக்கடை யென்னுங் கோபத்தைக் கைக்கருவியாகப் பாவிப்பதால் உள்ளன்பு பூண்ட உங்கள் ஆன்ம நண்பர்களையும் புறக்க ணித்து பொல்லாதவர்களெனக் கருதிப் புகழையும் இழந்து விடவேண்டி நேரிடும். ஆதலால், சினந்தவிர்த்தல் அவசிய மாகும்.

158. அங்கவீனத்தை அடைந்தவர்களுங்கூடத் தமது அவலட்சணத்தை அழகுபெறச் செய்ய நினைந்து, ஆடையா பரணாதிகளை அணியுந்தன்மை போன்று, உங்களிடமுடைய மனநோயை மறைப்பதற்காகப் பொய்யாகிய ஆபரணத்தைப் பூண எண்ணாதீர்கள்.

159. போனநாள் போக, இனியேனும் மானிடப் பயிர்கள் தழைத்தோங்கி வளர்ந்து, சஞ்சலப் பதர்களின்றி அறிவு மணி பிடித்து விளைந்து, அறநெறி அறுவடைசெய்து, அன்புமயமென் னுங் களஞ்சியத்திற் கொட்டிக் காருண்ணிய வள்ளலாக வாழ உண்மை கடைப்பிடித் தொழுகுதல் வேண்டும்.

160. இவ்வுலகியல் அரங்கமேடையில் இகபரக் கற்பக விருட்சத்தை விரிவுற வளர்த்து, அமைதியாகிய கனியை அருந்தி, அவனியிலன்பு கூர்ந்துலவப் பிறந்த ஆண் பெண் இருபாலருள், பெண்மையுள் ஆண்மையும், ஆண்மையுள் பெண்மையும், வியாபித்துள்ளபடியால் ஒரு சார்புயராத திட் டம் வகுத்துதவ, பகுத்தறிவோடு ஆர்வங் கொள்வது உங்கள் கடமையுள் முதன்மையாகும்.

161. நடுநிலைமையாகிய படியை விட்டு நழுவினால் இக்க லியுலக வருடக்கணக்குப் பொய்த்து, இடைநடுவில் உலகம் இடறி விழுமாறு இயற்கை மாதா பல பரிசோதனை புரிவா ளென்பது அடியேன் அகக்கண்ணிற்கண்ட காட்சி பலவற்றுள் ஒன்று.

162. களிமண்ணாலாக்கிய பாத்திரங்களனைத்தும், மண் வடிவத் தன்மையில் ஒன்றெனினும், சூளையில் வைத்துச் சுட்ட பாத்திரம் போன்றல்லாது, பச்சைப் பாத்திரம் நீர் தாங்குஞ் சக்தியையிழந்து கரைந்து மறைந்துவிடுகின்றது. இவ்வுதார ணங் கண்டு உங்களை நீங்கள் பண்படுத்திக்கொள்ளுங்கள்.

163. ஆன்ம ஞானிகளைத் தந்து அறநெறிகண்ட தாய் நாடு, அறியாமை நிறைந்த படுபாதகத் துறையில் சுழலக் காரணங்காணும்போது, ஆத்மீக சக்தியின்மையைக் குறிக்கின்றது. எனவே, எக்காரியங்களுக்கும் சக்திக் கழகங்களை ஆங்காங்கு நீங்கள் ஏற்படுத்தி, ஆண் பெண் இருபாலாருள்ளத்திலும், சதோதய சக்தியுறுமாறு, அருட்பிரகாசப் பொன்மொழிகளை நாள்தோறும் சிறிதுசிறிதாகப் போதனுமுறையில் உபதேசித்துவந்தால், அதிவிரைவில் தேசம் புகழ்பெற்றோங்கித்திகழ்வதோடு, தமிழ்த்தாயீன்ற தனயர்களாகிய உங்கள் கடமைகளுமன்றே முடிவுபெறும்.

164. மேற்கூறிய குறை நீங்காதிருக்கிறவரை, நாட்டின் நலன்களைப்பற்றிக் கூட்டங்களில் கூறுவதினாலோ, ஏட்டிலெழுதிப் பாட்டாகப் பாடித் திரிவதினாலோ பயனெய்தாது. தியாகம் புரிவதற்குரிய வன்மையுடையவர்களால், தருமோபதேச வீரமொழிகளை அனைவருடைய உள்ளத்திலும் பசுமரத்தாணி கடாவிய தன்மைபோன்று அள்ளி விசிறல்வேண்டும்.

165. அத்தருணந்தான் மக்கள் சுதந்திரத் தன்மையை உணர்ந்து, ‘‘ தலைநிமிர்மனிதா ’’ என்ற வாக்கிய வழியைப் பின்பற்றி நடக்க முற்படுவர். அன்று தொட்டு, அகங்காரக் காடுகள் வளரவும், பொருமைப் புலிகள் பதுங்கியிருக்கவும் அங்கு இடமிராது.

166. அழகிய வடிவமைந்த மயிலானது தனது தோகைகளை விரித்தாடும்போது, பசியால் வருந்திய பாலகனொருவன் அதைக் கண்ணுறுவானானால், சிறிதளவு நேரம் அதன் ஆடலழகில் மயங்கித் தம்பித்து நின்றுவிடுவானெனினும், ஆடல் முடிவில் மயில் பறந்தோடிப் போனது போன்று, அச்சிறுவன் தனது பசிநோய் பறந்தோடக் கண்டானில்லை. இத்தன்மை போன்று, பற்பல மேடைப் பிரசங்கங்களைக் கேட்டும், மக்கள் மனது பண்பாடடைந்து அஞ்ஞான நித்திரை நீங்கி, மெய்ஞ்ஞான விழிப்பு ஏற்பட்டபாடில்லையே.

167. உயரிய கருமங்களைச் சீரிய முறையில் செய்து முடிக்கப் பக்கபலமாகத் துணைநின்று கடனாற்றும் மக்கட்கு, நமது அருளருவியில் பங்குண்டெனக்கூறி, உலகை வசியஞ் செய்யவேண்டும் என்றெண்ணிச் சதா மூலிகை தேடியலைகின்ற முணு முணுப்பாளர்களையுங்கூட நமது ஆத்மீக சக்திக் காந்தமலை, கிரகித்து அருகில் இழுத்துக்கொள்ளும் என்பதையும் உங்கட்கறிவிப்பதோடு, நமது கள்ளமில்லாத உள்ளக் கோவிலில் உங்கட்குப் போதிய இடமும் அளிப்போம்.

168. அகிலம் முழுவதும் ஆத்ம சக்திக் கழகங்கள் நிறுவப் பெற்று ஆதிக்கஞ் செலுத்துகின்ற காலந்தொட்டு உண்டாய குவலயக் கொந்தளிப்பெல்லாம் அடங்கி, அரசியலுறவுகளும் அதிகரித்து, சீவாதார உரிமைகளும் குறைவறக் கிடைத்து, நிலவுலக உயிரெலாம் நீதிக்குடை நிழலில் அச்சமகன்று, அன்புமயமாக வசிக்குமென்பனவே அடியேன் அகவிழி கண்ட மணிமொழிகளாகும்.

169. தெய்வாதீனமாகக் கிடைத்த வாழ்வுச் சுரங்கத் தைத் தோண்டிப் பசும்பொன்னினும் சிறந்த கிருபைப் பொருளை எடுக்கத்தெரியாமல் வீண்பிரயோசனம் எனக்கருதி வேருெருவரிடம் விக்கிரயஞ் செய்துவிடாதீர்கள். சீர்கேடான செய்கைகளைச் செய்யச் சிந்தைக்கு இடங்கொடுத்துவிடாமல், பேர்பிரகாசிக்கத்தக்க நன்மார்க்கங்களையே சதாகடைபிடித்து ஒழுகி வருவீர்களாக.

170. புல்லாங்குழலூதிய தொனியைச் செவியுற்ற பசு நிரைக் கூட்டங்கள் வையாளிபோட்டு ஓடி வருகிற தன்மை போன்று, இனிவரப்போகிற சத்திய வியாபகப் போராட்ட அணிவகுப்பிற் கலந்து தயங்காமல் கடனுற்றத் தங்களைத் தற்போதிருந்தே தயாராக்கிக் கொள்ளல் நலம்.

171. உயரிய நன்மார்க்கத்தை உணராத மக்கள் பல வாகப் பழிப்பதற்குத்தான் முற்படுவார்கள். அவைபற்றி உங்கள் இதயம் நொந்து, மனம் பதறி, மார்க்கத்தைவிட்டு நழுவிவிடாதீர்கள். கேவல மொழிகள் செவியில் விழ விழ வீரம் பிறக்க வேண்டுமேயொழியக் கோழைகளாக மாறி விடுவது தகுதியன்று. நாம் எண்ணிய முடிவை அடையாமல் உயிர் வாழ்வதைக் காட்டிலும், மடிவதே மேலெனச் சபதம்பூணுங் கள். அவைதான் புருடார்த்த லட்சியமாகும்.

172. உல்லாச ஊஞ்சலில் உறங்கி விழுந்து உட்கார்ந் திருக்கிற மக்களெல்லாம், கீழ்மேலாக ஓடியாடுகிற ஊஞ்சற் கயிறு அறும்பொழுது எத்திசையிலோடி விழுவாரென யாரறிவார்? இவையுணர்ந்து, இனி யாவரும் திடசக்திச் செல்வத்தைமிகைபடச் சேகரியுங்கள்.

173. அகில உலக ஆலோசனையாளர்களில் நீங்களே மதி நுட்பமுடையவர்களாகத் திகழ்ந்து, அதிகார உயர்வு பெறு வீர்களாயின், அன்றே அருளருவியாற்றை மடைதிறந்து, ஜனசமுதாய நஞ்சைக்குப் பாய்ச்சி, ஒற்றுமைப் பயிர் செழிப்

புற்று, ஆனந்தத் தானியம் விளைந்து, நிருவாகத்திறனுக் கேற்றவாறு, ஒப்படையாகிற மாசூலையும், உங்களிடமே ஒப்படைக்கப்படும்.

174. மக்களே! எதிர்வாதுபுரியும் செல்வர்களைப் பகைவர் களெனக் கருதிச் சிறிதேனும் மனதைப் பிளவுபடச் செய்வீர் களானால், சற்சனர்கள் உறவையுங்கூட இழக்கும்படியாக நேரிடும். ஆதலால் உறவு பகை பாராட்டாது, அனைவரிடமும் அன்புமயமாக ஒழுகினால் சீவசமுதாயத் தொண்டர்களென்று உங்களைக் கண்டவர்களெல்லாம் கைகூப்பித்தொழுவரென்பது உண்மையாகும்.

175. அறநெறியுணர்ந்த பெரியார்கள் தந்தருளிய சீவகாருண்ணிய நன்னூற்களைப் படித்தும்,மற்றவர்கட்கெடுத் தோதியும் முடிவில் பிராணிகளை வதைத்துண்ணும் துர்ப்புத்தி யகலாத பேர்வழிகள் நற்புத்தியோடு உயரிய நாட்டுப் பணி புரிந்தாலும் பயனற்றுப்போம். இவையறிந்து நீங்கள் அசை வமகற்றி நிற்றல் நலமென நன்கு ஆராயுங்கள்.

176. மனமாசகலாத மக்கள் மாறுபாடான சொற்களைக் கொட்டியளப்பதுபோன்று, நீங்களுமுங்கள் திருவசனங்களைக் கறைபடியச் செய்துவிடாதீர்கள். நீதி நெறிபற்றிய அன்பு மொழிகளை ஆழ்ந்த கருத்தோடு உரையாடுங்கள்.

177. நிகழ்கால நிலைமைகளைச் சமாளிக்கத்தக்கது சமதரி சன நோக்கமும், சாந்தகுணமும், சற்சனர்களின் உறவுமே யாகும். இவ்வுரையைத் தழுவி நடவாது நழுவி விழுமாறு செய்யவே அகங்கார மல்லன் உங்களுடன் சதா அமர்புரி கின்றான். ஆகவே, அபஜெயத்தை அவனிடமே ஒப்படை யுங்கள், நீங்கள் வரவேற்க வேண்டாம்.

178. நீண்டநாள் உலகில் வசித்த சர்ப்பம், உடல் குறுகி உள்ளுறுதி பெற்று, நாதம் விளைந்து, நாகரத்தினம் பிரகா சித்து அசத்தியத்திற்கு அஞ்சிப் பகலில் மறைந்து, இரவில் இரைதேடி அடக்கமாகப் புதரில் வசிக்கிற தன்மைபோன்று, நான்கு யுகங்கண்ட நரமனிதர் தோற்றம், ஆள் சிறுத்து, அறிவுபிரகாசித்து, அடக்கங்காத்து, அரியபணியாகிய உயர் நிலைபற்றி நிற்றலே தகுதியாகும்.

179. பரிபாஷையாகப் பலரும் எழுதிய நூற்களையெல் லாம் நீங்கள் கற்றுக்கொண்டிருப்பதைப்பார்க்கிலும், கற்ற வற்றை நடைமுறையில் பரீட்சைசெய்யுங்கள். கற்றநூற்களை

கத்தைகத்தையாக ஒருமூலையில் பதுக்கிவைப்பதில் யாதும் பயன்தராது. செல்லும் இடங்களிலெல்லாம் அமுதமொழிகளை அள்ளி விசிறுங்கள். அப்பொழுதுதான் ஆன்மஞான வீரர் களாகத் தேர்ச்சியுறுவீர்கள்.

180. தினசரி உழைப்பிலிருந்து கிடைக்கக்கூடிய ஊதி யத்தைப் போதுமெனக்கருதி அகமகிழ்வுடன் ஏற்று இன் புற்று, இகக்கடமையை வெகுபெருமையாகவே நடாத்தி வரு வதோடு, நீங்கள் அறிவு விழிபெற்று உய்வீரேல், உங்களைக் கண்ட பாமரருங்கூடக் கடைத்தேறுவர். இவை நமது அமுதமொழி.

181. பரந்தஉலகில் திறந்தவெளியில் சிறந்த அணுக் களைக் கணக்கிட்டாலும், மறந்த மதியீன மக்களை மதிப்பிடல் ஆகா. அந்தச் சென்மம் சிதைந்து அழிந்துவிடும் என்பது உறுதியாகும். ஆகவே, வெற்றியும் தோல்வியும் பற்றற்ற எவர்க்கும் சமமெனத் துணிவுகொண்டு கடனாற்றுங்கள்.

182. நீங்கள் எவ்விதத்திலும் புகழுடம்புஎய்திப் பிரகா சிக்கவேண்டுமென்பதே நமது விருப்பம்; அப்படியாயின் நமது நாடு புனிதமுறக்கண்டு களிப்படைவோம். சேவைபுரிபவர் வாழ்வே சிறந்த வாழ்வு, மற்றவர் வாழ்வு மதிப்பற்ற வாழ் வெனவே காணப்படும்.

183. உங்கள் அன்றாட வாழ்க்கையில் நன்றுதீதுணர்ந்து நடக்கப்பழகி, நமது அருளொளி மார்க்கத்தையும் உங்களின் ஆன்ம உரிமையாகக் கருதுவதோடு, நீங்கள் நீண்ட ஆயு ளோடு வாழ்ந்து, இப் பரதகண்டத்தில் பணிபுரிந்து, பரகதி யணுகச் சன்மார்க்க வழிகளையும் வகுத்துக்கொள்ளுங்கள்.

184. மந்தமதியும், மழுங்கின அறிவும் பந்தபாசப் படு குழிக்கு ஆளாக்குமென நீங்கள் உணர்ந்து, அறிவை முன் னிட்டுப் புத்தியைப் பின்னிட்டுப் பழகுவதோடு, வெகு அடக் கத்தோடுஇருந்து ஆங்காங்கும் சத்தியவித்தை விதைத்துப் புண்ணிய பூமியை விகசித ஒளிபெறச்செய்ய விரைவினில் விழையுங்கள்.

185. சமயபேதப் பற்றுடையவர்களைச் சார்ந்தொழுகுதல் உங்களைச் சதா சஞ்சலக் கடலில் ஆழ்த்திவிடும்; ஆதலால் அவைகண்டுஒதுங்கி, விந்துமதமே எந்தமதத்திற்கும் சொந்த மதமென ஒருணர்வு பெற்று ஒளிர்தல் வேண்டும். இவை உங்கள் பேரறிவிற்குப் பெருமையளிக்கும்.

186. எக்கடமைகளிலும் அமைதியாகிய நிதானம் நிலவு தலவசியம். அமைதிக்கெதிர்மறையான அவசரமே கைகூடாத காரியங்களில் புகுத்திக் கவலையென்ற கயிற்றால் பிணைத்துப் பிற்போக்குச் சக்திக்கு உங்களை ஆளாக்கிவிடும். இவை குறித்தே, ஆவனசெய்பவர்க்கு அவசரமாகாதென நாம் புகட்டிவருகின்றோம்.

187. அறநெறி வாழ்வை நாடி, அகமும் புறமும் ஒன்றியுலவி ஆனந்தச் சுகபோகமுறவே, பகுத்தறிவுற்ற மனிதாம் சமாகப் பாரிற் பிறந்தனரேயன்றி, தேடிச் சுகித்துச் செத்துப் போவதற்காகவல்ல. ஆதலால், உண்மையை நாட உடனே விழையுங்கள். நாளைஎன்ற நன்னாளை எதிர்பார்க்கவேண்டாம்.

188. நன்மார்க்கங்களை நடைமுறையில் அனுட்டிக்கத் தவறி உடல் நோயுற்று, மதியிழந்து பேயாண்டி வேடம் புனைந்து, பிச்சையெடுத்தலைவது தகுதியாகா. அவ்வாறு உங்களுடலையும் நோயாகிய பேயனிடம் காட்டிக்கொடாதீர்கள். சுகசரீர வாழ்க்கைதான் சுவர்க்க வாழ்க்கை.

189. எதிரில் இனியது பேசி மறைமுகமாக அடாதுபுரியும் செயலாளர்களை நமதகவிழிதிறந்து காணும்பொழுது, ஆச்சரியப் படுவதோடு ஒருபுறம் பரிதாபமே; காரணம்; அவர்களின் காமாந்தகாரம் மிகுந்த கயமைக்குணமும், சிற்றறிவுடையோரின் சேர்க்கையுமேயல்லாது மற்றவையன்று.

190. எதிர்கால இந்தியாவில் புனர் நிர்மாணப் புகழோங்கி ஒளிருங்காலக்கட்டத்தில், அன்பு ததும்பிய ஏழை மக்களுக்கு இருப்பிடந்தந்து, ஏகபோக உரிமையுமளித்து, அன்னை பாரதமாதா ஆதரித்தேற்றுக்கொள்ளுவாள். குண்டாந்தடி தூக்கியலையுங் கோழைகளுக்கு, அந்த அருட்பிரகாச ஆட்சியில் சற்றேனும் இடங்கிடைக்காதென்பது சத்தியம்.

191. ஊரின் புறம்போக்கு நிலங்களில் தரிசு கிடப்பன போன்று, நாட்டிற்குக் கேட்டை விளைவிக்கும் புல்லுருவிகளும் உண்டென்பதை யாமறிவோம். அவையுணர்ந்தே, பயன் தரத்தக்க மார்க்கங்களைப் புகட்டி வருகின்றோம். இதற்குப் பக்கபலமாக உங்கள்போன்ற தக்க துணைவர்கள் தேவையாகும். ஆக்க வேலைகளைச் செய்து முடிக்க, ஊக்க விதையை உங்களின் இதயபூமியில் விதைப்பதுவே நமது கடன்.

192. அங்க உறுப்பில் ஒரு பாகமாகிய கண்ணில் ஒளிமங்கினால், அன்னை தந்தையரிட்ட அழகிய புனைப்பெயர் மறைந்து, குருடனெனக் கூவியழைப்பதுபோன்று ஐம்புலனொடுங்க வழியறியாமல் மனிதாம்ச குணங்களும் மாறிவிடுகின்றன.

193. பூமிபாரம் பொறுக்கொணுது, இப்புவிப் பூஞ்சோலையை அழித்துவிடலாமாவென இயற்கை மாதா துக்கக் கண்ணீர் சொரிகின்ருள். மீண்டும் சிறிது நகைத்துத் தகைபூணுகின்ருள். இவைபற்றிப் பாமர மக்களறியார். அறிய உரைப்பினுங்கேளார். அறியுங்காலமும், கேட்குங் காலமும் அருகிலுளது.

194. விளைவற்ற உட்டண பூமியாகிய பாலைவனத்திலுங் கூட, பேரீச்சமரங்களும் நெருப்புக் கோழிகளும் உற்பத்தியாகின்றன. கொடிய வஞ்சகம், பொருமை குடிகொண்ட நெஞ்சகப்பூமியாகிய நிலத்தில், வறட்சிப் புல்பூண்டுகளுக்கொப்பான சிறிது இரக்கங்கூடக் காண்பதரிதாகின்றது.

195. மக்களிற் பெரும்பாலானேர் இன்னும் மழலைமதியுடையவர்களாகவே காணப்படுகின்ருர்கள். இருப்பினும், சிலகாலத்துள் மிகவும் சீர்திருந்தி வந்துவிடுவார்கள். சிற்ருடையணிந்து தெரு வீதியில் விளையாடுகிற காலம் தற்காலமெனினும், பருவவயதும், அறிவிலுயர்வும் வளர வளரச் சென்றதைக் கழித்து, நின்ற நாட்களைக் கணக்கெடுக்கையில் யாவுஞ் சீரியமுறையில் ஜெயந்தருமென்பதில் ஐயமில்லை.

196. அவனி முழுவதையும் ஒரு மனிதன் ஆட்சிபுரிந்தாலும், ஆசை அம்மனிதனை விட்டகல்வதில்லை. காரணங்காண முயலுங்கால், நித்தியப்பொருளை அறியாமையேயெனல் மிகையாகாது. உங்கட்கு உயிர்ப்பற்றுடைய நண்பர்கள் ஒரு சிலர் கிடைத்தால் போதுமானது. பயனற்ற பல தோழர்களை நம்புவதில் யாது பயன்? இறுதியில் பல இன்னல்களை விளைவித்து, உங்களைக் கைவிடுவார்கள்; ஆதலால், அசத்தியச் சிநேகிதர்களை அணுகாதீர்கள்.

197. ஆக்கவேலைகள் செய்து பணியாற்ற உங்கட்குப் போதிய ஊக்கமிருக்கவேண்டும். அதற்கு உங்களின் உடலும் மனதுந்திடனுற, நமது யோகாசன முறைகளை நன்கு பயிலுங்கள். நன்மையுண்டு. சொல்லொணுத் துன்பம் வரினும் அவை கண்டஞ்சி, நல்வழி விட்டு நழுவலாகாது. நழுவி விழுந்து நரக வேதனையடைபவர்களும் வெகுபேருண்டு.

198. ஆர்வமுடைய மக்கள் ஆரோக்கிய நெறியைக் கடைப்பிடிப்பது போன்று, பங்கமுறவிருக்கும் அங்கத்தைத் தாங்கிய ஆசாமிகள் பயன் படுத்துவார்களா? இக்கலியுலகச் சங்கடம் அவர்கள் தலைமீதிருப்பதை அவரறியார். இவை நமது அனுபவமூலங்கூறும் உறுதியாகும். தாழ்ந்த குணமுடைய மக்களுக்கு ஆழ்ந்த மதிகாண்பதரிது. தீது நன்ருகத்

தோன்றி உடலை நலியச் செய்யுமென்பது இப்போது தெரிய வராது. இன்னும் சிலகாலம் செல்லவேண்டும்.

199. உண்மையைக் கண்டு உறவாடத் தயங்குகிற பாமரரை அறியாத மக்களெனக் கருதி அன்பு செலுத்தத் தவருதீர்கள். இவையுங்கள் சிறந்த குணத்தின் பெருமையாகட்டும். உயரிய இலட்சியக்குறி தவருது அரிய தொண்டாற்ற உரிமையுடைய நீங்கள் அணுவேனும் கட்சிப்பிளவுகளை உயர்த்தவேண்டாம்.

200. முற்கால மனிதன் வஞ்சகமற்ற இதய ஒளியுடன் சஞ்சலமற்ற சம்சார வாழ்க்கை நடாத்தி, அறநெறியொழுகி, ஐம்புலனடக்கிப் புத்துயிர் பெற்று அஞ்சாத வீரனுகத் திகழ்ந்து அருந்தவம் புரிந்து, பொய்யாப் புகழெய்திப் புவியில் மறைந்தான்; அவனே தெய்வ மனிதன்.

201. நுணுக்கமாகிய அணுக்கள் திரண்டு மனுக்களாக மாறி, மண்ணுலகிற் பிறந்த வகையுணராமல், மனுக்கள் அணுக்களைப் பிடிக்க முயன்று, அணுக்களால் மனுக்கள் மடிந்தழிந்து போகின்றனர். இவைதான் நிகழ்காலத் தடுமாற்ற மனிதன் நிலை.

202. மந்திரம் தந்திரம் இரண்டையும் ஒன்ருயிணைத்து, இயற்கையுடலோடு செயற்கையிறகுகளமைத்து, அந்தர வெளியில் சந்திராயுதந்தாங்கி உயரப்பறந்து, மனிதனும் மனிதனும் மற்போர் புரியவரப்போகின்றனர். இவைதான் எதிர்கால மனிதர்நிலை.

203. மேற்கூறிய கால நிலைமைகளை நன்காராய்ந்து, திரிகரண சுத்தியோடு உயரிய ஆக்கத்தை மக்கட்கு அளிப்பதோடு குற்றஞ் சிதைந்து நற்றவநாடு உயரவேண்டி உங்களின் உள்ளம் கள்ளமில்லாத பரிசுத்த ஒளியும் பெற்றிருக்க வேண்டும்.

204. பருவகாலஅறிவைப் பிரகாசிக்கச் செய்து கடமை எவையெனச் சிறிதுநுணுக்கமாக நோட்டமிடுவீர்களானுல், உண்மை புலனுகாமற் போகமாட்டாது. ஆனுல், ஆராய்ச்சித் தெளிவென்பது நமது நாட்டு மக்களிடையே பெரிதும் காண்பதரிதாகிவிட்டபடியால், கண்டதே காட்சி கொண்டதே கோலமெனக்கருதி, அடாது புரிந்து அல்லலுறுகின்றனர்.

205. எடுத்த கருமத்தை முடித்து வெற்றி காண விரும்பிய தீரபுருடர்களாகிய உங்களின் உயரிய கடமைகளில், கண்

193. பூமிபாரம் பொறுக்கொணுது, இப்புவிப் பூஞ்சோலையை அழித்துவிடலாமாவென இயற்கை மாதா துக்கக் கண்ணீர் சொரிகின்ருள். மீண்டும் சிறிது நகைத்துத் தகைபூணுகின்ருள். இவைபற்றிப் பாமர மக்களறியார். அறிய உரைப்பினுங்கேளார். அறியுங்காலமும், கேட்குங் காலமும் அருகிலுளது.

194. விளைவற்ற உட்டண பூமியாகிய பாலைவனத்திலுங்கூட, பேரீச்சமரங்களும் நெருப்புக் கோழிகளும் உற்பத்தியாகின்றன. கொடிய வஞ்சகம், பொருமை குடிகொண்ட நெஞ்சகப்பூமியாகிய நிலத்தில், வறட்சிப் புல்பூண்டுகளுக்கொப்பான சிறிது இரக்கங்கூடக் காண்பதரிதாகின்றது.

195. மக்களிற் பெரும்பாலானேர் இன்னும் மழலைமதியுடையவர்களாகவே காணப்படுகின்ருர்கள். இருப்பினும், சிலகாலத்துள் மிகவும் சீர்திருந்தி வந்துவிடுவார்கள். சிற்ருடையணிந்து தெரு வீதியில் விளையாடுகிற காலம் தற்காலமெனினும், பருவவயதும், அறிவிலுயர்வும் வளர வளரச் சென்றதைக் கழித்து, நின்ற நாட்களைக் கணக்கெடுக்கையில் யாவுஞ் சீரியமுறையில் ஜெயந்தருமென்பதில் ஐயமில்லை.

196. அவனி முழுவதையும் ஒரு மனிதன் ஆட்சிபுரிந்தாலும், ஆசை அம்மனிதனை விட்டகல்வதில்லை. காரணங்காணமுயலுங்கால், நித்தியப்பொருளைஅறியாமையேயெனல் மிகையாகாது. உங்கட்கு உயிர்ப்பற்றுடைய நண்பர்கள் ஒரு சிலர் கிடைத்தால் போதுமானது. பயனற்ற பல தோழர்களை நம்புவதில் யாது பயன்? இறுதியில் பல இன்னல்களை விளைவித்து, உங்களைக் கைவிடுவார்கள்; ஆதலால், அசத்தியச் சிநேகிதர்களை அணுகாதீர்கள்.

197. ஆக்கவேலைகள் செய்து பணியாற்ற உங்கட்குப் போதிய ஊக்கமிருக்கவேண்டும். அதற்கு உங்களின் உடலும் மனதுந்திடனுற, நமது யோகாசன முறைகளை நன்கு பயிலுங்கள். நன்மையுண்டு. சொல்லொணுத் துன்பம் வரினும் அவை கண்டஞ்சி, நல்வழி விட்டு நழுவலாகாது. நழுவி விழுந்து நரக வேதனையடைபவர்களும் வெகுபேருண்டு.

198. ஆர்வமுடைய மக்கள் ஆரோக்கிய நெறியைக் கடைப்பிடிப்பது போன்று, பங்கமுறவிருக்கும் அங்கத்தைத் தாங்கிய ஆசாமிகள் பயன் படுத்துவார்களா? இக்கலியுலகச் சங்கடம் அவர்கள் தலைமீதிருப்பதை அவரறியார். இவை நமது அனுபவமூலங்கூறும் உறுதியாகும். தாழ்ந்த குணமுடைய மக்களுக்கு ஆழ்ந்த மதிகாண்பதரிது. தீது நன்ருகத்

தோன்றி உடலை நலியச் செய்யுமென்பது இப்போது தெரிய வராது. இன்னும் சிலகாலம் செல்லவேண்டும்.

199. உண்மையைக் கண்டு உறவாடத் தயங்குகிற பாமரரை அறியாத மக்களெனக் கருதி அன்பு செலுத்தத் தவருதீர்கள். இவையுங்கள் சிறந்த குணத்தின் பெருமையாகட்டும். உயரிய இலட்சியக்குறி தவருது அரிய தொண்டாற்ற உரிமையுடைய நீங்கள் அணுவேனும் கட்சிப்பிளவுகளை உயர்த்தவேண்டாம்.

200. முற்கால மனிதன் வஞ்சகமற்ற இதய ஒளியுடன் சஞ்சலமற்ற சம்சார வாழ்க்கை நடாத்தி, அறநெறியொழுகி, ஐம்புலனடக்கிப் புத்துயிர் பெற்று அஞ்சாத வீரனுகத் திகழ்ந்து அருந்தவம் புரிந்து, பொய்யாப் புகழெய்திப் புவியில் மறைந்தான்; அவனே தெய்வ மனிதன்.

201. நுணுக்கமாகிய அணுக்கள் திரண்டு மனுக்களாக மாறி, மண்ணுலகிற் பிறந்த வகையுணராமல், மனுக்கள் அணுக்களைப் பிடிக்க முயன்று, அணுக்களால் மனுக்கள் மடிந்தழிந்து போகின்றனர். இவைதான் நிகழ்காலத் தடுமாற்ற மனிதன் நிலை.

202. மந்திரம் தந்திரம் இரண்டையும் ஒன்றுயிணைத்து, இயற்கையுடலோடு செயற்கையிறகுகளமைத்து, அந்தர வெளியில் சந்திராயுதந்தாங்கி உயரப்பறந்து, மனிதனும் மனிதனும் மற்போர் புரியவரப்போகின்றனர். இவைதான் எதிர்கால மனிதர்நிலை.

203. மேற்கூறிய கால நிலைமைகளை நன்காராய்ந்து, திரிகரண சுத்தியோடு உயரிய ஆக்கத்தை மக்கட்கு அளிப்பதோடு குற்றஞ் சிதைந்து நற்றவநாடு உயரவேண்டி உங்களின் உள்ளம் கள்ளமில்லாத பரிசுத்த ஒளியும் பெற்றிருக்க வேண்டும்.

204. பருவகாலஅறிவைப் பிரகாசிக்கச் செய்து கடமை எவையெனச் சிறிதுநுணுக்கமாக நோட்டமிடுவீர்களானுல், உண்மை புலனுகாமற் போகமாட்டாது. ஆனுல், ஆராய்ச்சித் தெளிவென்பது நமது நாட்டு மக்களிடையே பெரிதும் காண்பதரிதாகிவிட்டபடியால், கண்டதே காட்சி கொண்டதே கோலமெனக்கருதி, அடாது புரிந்து அல்லலுறுகின்றனர்.

205. எடுத்த கருமத்தை முடித்து வெற்றி காண விரும்பிய தீரபுருடர்களாகிய உங்களின் உயரிய கடமைகளில், கண்

ணிமை கொட்டாத கைங்கரியங்கள் பல உள; அவை வரவர ஞான சூரியன்போல் பிரகாசிக்கத் தொடங்கி கதிரொளி வீசுங்கால் கண்டு களிப்பெய்தலாம்.

206. பாவப் பொதிக்குக் காவற்காரன் போன்றுள்ள சிலர் கடமைச் சிதைவுகளேற்படுத்த முயன்று, குறைகூறத் தகுந்த நாவு படைத்தவர்களாகத் தோன்றித் தொல்லைகள் பல தர எத்தனிப்பர். அவற்றை வீர வைராக்கிய வாளாயுதங் கொண்டு சிதைத்து முன்னேறவேண்டுவதே உங்கள் ஜெய சீலத்தன்மைக்குகந்ததாகும்.

207. நல்லற நெறியில் வசித்து மங்களமாகிய உங்கள் மனையில், திங்களொளி போல் திருவருளை நின்று விளையாடச் செய்து, சாந்த வசனங்களையும், சன்மார்க்க போதனைகளையும், திருவாய் மொழியாக உரையாடிவந்தால், நீங்கள் எக் கடமையிலும் வெற்றி காணுவீர்களென அடியேன் தளராத நம்பிக்கை கூறத் தயங்கமாட்டேன்.

208. சதிச்செயலனந்தம் புரிவதற்கு இயைந்தஉங்களின் ஐம்புலன்களுக்கும் நீங்களே சர்வாதிகாரிகளாகத் தோன்ரு விடில், அவை பாவப் புதரினுள் தள்ளித் திரும்பி வருவதற்கு ஒருமார்க்கமுமின்றிச் செய்துவிடும். ஆகையால், ஐம்புலனை அடக்கி ஒடுக்கியாள முற்படுதல் வேண்டும்.

209. உடலுக்கும், உள்ளான்ம சக்திக்கும் தொடர்பேற் படாமல், துன்ப உலகை இன்பமயமாகக் காணச் செய்வது உங்கள் மன அமைதியற்ற புலனசைவேயாகும். புலனெடுங் கிய புண்ணியர்களுக்கிந்தப் புவியுலகு அடங்குமெனக் கூறிய முதுமொழி மிகையாகாதன்றோ?

210. அகக்கண்ணென்ற விழிப்பும், ஞானவிசாரப் பசியும், மனமௌன ஏகாந்தமும் பெற்றுலொழிய நீங்கள் நினைத்த கருமத்தைச் செய்து முடிக்க முடியுமா? முடியாது போவ தோடு, கருமயோகக்குறைவும் உங்களைத் தொடர்ந்தேவரும்.

211. தனது நலனுக்காக உயிர்வாழ்வதினின்றும், உலக நலனுக்காக நீங்கள் வசித்தாற்றும் நன்மையே, முடிவற்ற புகழை அளிக்குமெனத் தேர்ந்துகொள்ளுங்கள், இவை உங்கள் ஆழ்ந்தசிந்தனையுள் புதைந்து கிடக்கின்றன. காண்பீர்களாக!

212. அழுக்கு உடைகளையணிந்து, ஆபாசத் தோற்றத் துடன் நடமாடிய பெரியார்களிடம், அடக்கசக்தி அதிகமாக ஓங்கி, அருள்பெருகி வளர்ந்து அன்புமயமாக மக்களை ஆத ரித்து, ஆசி கூறிய காலங்கடந்து, பட்டுப் பீதாம்பரங்களை

அணிந்து, படாடோபத் தவங்கள் மிகுதியாகியபடியால், ஜீவ சக்திகள் குறைந்து வருகின்றதைக் காணுகின்றோம்.

213. பாருலகக் கடமைகள் பலபிரிவாகக் காட்சியளிப்பினும், சற்கடமைகண்டு உடல் பொருள் அனைத்தும் அவைக் கீடில்லையென மதித்துத் துணிவுகொண்டு கடனாற்றும் தூய்மைமனிதனைத் தெய்வீகப் புருடனெனவே கருதிப் போற்றலாம்.

214. விழலுக்கிறைத்த நீர்போன்று உங்கள் சக்திகளை வீண் காலப்போக்கிற் செலவிடாமல் இக்கலியுலக சகாப்த மனித சமுதாய வரிசையில் நீங்கள் முதலிடம் பெற்றுக்கொள்ளுங்கள். அதற்காகவே மானிட உடல் எய்தியுள்ளீர்களென்பதை உணருதல் மேன்மையாகும்.

215. பகுத்தறிவோடு உயரிய வழியில் வாழ்வைப் பயன்படுத்தத் தெரியாதபடியால், மக்கள் பண்பாடிழந்து உழல்கின்றனர். அதற்குரிய தெம்பையளித்துச் சிறப்புடன் வசிக்கின்ற வகையுபதேசமும் புரிவதற்காக உங்களை நீங்கள் ஊக்கி, அகக்கோவிலை நன்கு அலங்காரஞ் செய்துகொண்டுதான், அருளுபதேச அர்ச்சனைகளைப் புரிதல் வேண்டும்.

216. இப்புவியுலக வாழ்க்கையிலிருக்கும்வரை நீங்கள் உருக்கு மனிதர்களாக வசிக்கப் பழகி, உங்கள் உள்ளத் திடனைக்கண்டு தற்கால உலகம் அல்லலுருவண்ணம் இயங்க வேண்டும். ஆபாச அசத்திய சக்திகளையெல்லாம் உங்கள் சத்தியச் சுடரால் சுட்டெரியுங்கள். வீரர் உயிர்வாழ்வது இவைக் கன்றி மற்றவைக்கன்று.

217. உங்கள் உணர்ச்சிப் பிரவாகத்திலிருந்து எழும் உத்வேகமே, இனிவரும் பெரியார்களாகிய நிகழ்கால இளைஞர்களுக்கு, நீங்கள் வகுத்து உதவிய வன்மைமிக்க மார்க்கமாகும் எனஉணர்ச்சி விழி திறந்துய்யுங்கள்.

218. இவ்வுலக ஆடம்பர வாழ்விற்குரிய தனசேகரக் குவியல்கள், மலைமலையாகப் பெருகினும் அவைகளிலொரு மகிழ்ச்சியில்லை. உண்டு சுகித்து உப்பரிகையின்மீது சப்பிர மஞ்சத்தலையணை கொண்டு அமர்ந்திருப்பினும் பயனொன்றில்லை. மாநில மக்கள் அனைவரும் மகாத்மா மகுடமிட்டழைப்பினும் ஒரு மகிழ்ச்சியுண்டோ? இல்லை! இல்லை!! தன்னையும் தனது செயலையும் உணர்ந்து, வாழ்வில் வெற்றி கண்டால், நீங்கள் அளவற்ற ஆனந்த இன்பத்தை அனுபவிக்கலாம்.

219. இவ்வாறேங்கிய கொள்கையினின்றும் நீங்களேன் விலகி வசித்தல் வேண்டும்? விவேகக் குறைவு இராதிருந்தாலல்லவா நேர்மைக்கு நேர்மாறாகத் தடுமாறி ஓரடிகூடப் பிசகி நடக்கமாட்டீர்கள். இவைபற்றி நாம் உங்களுக்கு எச்சரிக்கை செய்து வருகின்றோம்.

220. முதுகு வளைந்த முதியோனுக்கு ஊன்றுகோலொன்று வேண்டுவதுபோன்று, நம்நாட்டில் அறியாமை இருளை நீக்க அருளொளி நிலையங்கள் அவசியம் வேண்டற்பாலன. பகுத்தறிவுள்ள மக்கள் வகுத்த சன்மார்க்கமே சிறந்ததென நமது மூதாதைகள் புகன்றவை பொன்மொழிகளாகும்.

221. கரைகடந்த காருண்ணியங்களைத் தந்துதவிய மெய்யடியார்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி நடக்கத் தூண்டினாலும், பெரும்பாலோர் சந்தேகக் கயிற்றால், கட்டுண்டு தயங்குவதேனெனச் சிறிது காணமுயன்றால், ஜெகஜாலச் சித்தர்களிடம் சிக்கி ஏமாந்துபோன உள்ளத்துடிப்பெனவே காணுகின்றோம்.

222. ஏழை மக்களின் கோழை மனதைப் பண்படுத்தி, மன்பதைகளோடு ஒன்றி உயிர்வாழச் செய்து நீங்கள் ஆங்காங்கும், வீரமொழிகளைப் புகட்டி, அறிவுமுதிர வழிகாட்டிகளாகவும் திகழ்ந்தால், வெகு விரைவினில் நாடு முன்னேறிப் பிரகாசிக்குமென்பதே உங்கள் துணிபும், நமது நம்பிக்கையுமாகும்.

223. புகழ்பெற்ற புண்ணிய பூமியில், துகளுற்றுப் பல துன்பவிருள் சூழ்ந்து, மக்கள் கலக நிலையில் சுழலக் காரணம் யாதெனக் கண்டுபிடித்து, கடமையைக் கண்மணியெனப் போற்றி ஆவன செய்து அறியாமையைப் போக்கவே, தங்கள் போன்ற வாலிபர்களையும்,வன்மைபடைத்த மார்க்க போதகர்களையும், நமது பாரத பூமிக்குரியாள் ஆக்கியவண்ணமாகவே இருக்கின்றாள்.

224. கடமையிலிறங்கிய பேரறிஞர்கள், பேராசைப் பிணியைப்படரச் செய்வது அழகாகாது. இவை பெரிதும் துர்ச்செய்கையே. நம்மை நாம் அடக்கியாள இவையொரு எடுத்துக்காட்டாகும். சித்தந் தெளிந்து வெற்றி பெற்றோமெனக் கூறும் ஒருசிலர், ஆபாசமாகிய புவிப்பேராசையிற் சிக்கி மகா மோசப் படுகுழியுள் வீழ்ச்சியுறுகின்றனர்.

225. தர்மத்தை அதர்மம் விழுங்கிய தற்கால வேத முடி பென்னும் அனுபவவீதியில் நியாயங்காணக் கிடைப்பது பெரிதும் அரிதாகிவிட்டது. ஏனெனில், தனசேகரப் பள்ளத்தில் பேரறிஞர்களென்று பெயர் பெற்றிருக்கும் பெரியார்களுங் கூட, கண்மூடித்தனமாகப் பாய்வதையே குறிக்கின்றது. ஆனதுணர்ந்து, அறநெறி மார்க்கமாகக் கிடைக்கும் ஊதியம் மிகுதியும் உயர்வெனக் கருதியுழைத்துச் சஞ்சலமின்றிச் சமுதாய வாழ்க்கை நடத்தல் மகிழ்வுதரும்.

226. மன நிம்மதியுற்று நீங்கள் கலங்கா நிலையைஅடை யவே ஆங்காங்கு அறிவுத்திறனுற்ற பெரியார்கள் அரிய தவம் புரிகின்றார்களே தவிர, சீரழிந்த சிற்றின்ப அவாவுக்கன்று. பூதபௌதீக வாழ்க்கைக்கு வழிபடு தேவதையாக அறிவுச் சுடரொளியாகிய ஆன்ம உறவை விருத்தி செய்யுங்கள். அத் துடன், நாமும் உங்கட்காக வகுத்துதவிய நன்னூற்களையுங் கற்று உறுதி தளராதவண்ணம் அனுட்டித்தால் அண்மையில் நன்மைபயக்கும்.

227. இதை ஆழ்ந்தறிந்து நீங்களனைவரும், இதுகால மிருந்தது போலிராமல், நமதரிய திருவுரைகளைச் செவியுற்ற பாக்கிய வசத்தால், வச்சிரதேகந்தாங்கி, வைராக்கிய உள்ளம் படைத்து, வருங்கால வாழ்க்கைப் பயனை உணர்ந்து, உலக விழிப்பிற்கு உதாரண வீரர்களாகத் திகழுங்கள்.

228. தற்கால விஞ்ஞான சக்திகளைக்கொண்டு ஆக்க சக் திகளை நசிக்கச் செய்வது ஆச்சரியப்படத்தக்க காரியமல்ல. இனிவரும் மனித ஆத்மீக சக்திதான் தாரக மந்திர விளை வாகித் தழைத்தோங்கி நிற்கப்போகிறதென நாமுபதேசிப் பதை நீங்கள் நிதரிசனமாகக் காணக் கால நிகழ்ச்சிக் குறிப்பே காட்டுகின்றது.

229. சித்த வல்லமையில்லாதவர்கள் செய்யத் துணிந்த கடமைகளெல்லாம், வாயளவிற் தோன்றி மறைந்துபோகு மேயல்லாது; செய்கை முடிவில் ஒளிரும் பெருமையைத் தரு மென்பது பகற்கனவாகவே முடியும்.

230. இன்றைய உலகில் நெருக்கடியான நகரத் தெருக் களில் பாடையொருபுறம் பல்லக்கொருபுறமாகச் செல்வதை யும், கூக்குரல் ஓர்சார் குலாவுதல் பிறிதோர்சார் காட்சியளிப் பதைக் கண்டும், மறந்து மையலாகிய மாயையில் விழுந்து புரளுதல் தகுதியன்று. தகாதவற்றைப் புரியத்தூண்டிய தறுதலை மனதைத் தண்டிக்காமல் விட்டுவிடாதீர்கள்.

231. மேற்கூறிய கவனமில்லாவிடில், உயர்குணமுடைய உங்கள் போன்ருேரையும், அதர்ம மனது சிதறியோடிச் சில விடய சூனிய மார்க்கங்களில் புகுத்தி வீண் காலப்போக்கிற்கு ஆளாக்கி, இகப் படகோட்டும் நிதானத்துடுப்பைப் பறிகொடுத் ததற்கு ஒப்பாகிவிடும்.

232. முகவிழி திறந்துகாணும் உருவத்தோற்றங்கள் அனைத்தையும் சமநிலை வடிவமாகச் சதா பாவனைசெய்யுங்கள். அப்படியாயின், நானென்ற அகங்காரக் கயிற்ருல் பிணைக் கப்பட்டுள்ள எண்ணற்ற சிந்தனைகள் உங்கட்கு இணங்கி, கணக்கற்ற கடிதடக் குழியில் இடறிவிழாதவண்ணம் பாது காத்து நிற்கும்.

233. இக்கட்டமாகிய இகக்கட்டைச்சமாளிக்கவும் மார்க் கமுண்டு; அவைதானுங்கள் பற்றற்ற பரிசுத்த வாழ்க்கை. இன்பசாகரமெங்கிருந்து உதயமாகின்றதெனக் காணும் போது நீங்கள் அனுபவிக்கும் பல்வேறு இடையூறுகளிடையே தானென்பது உங்கள் ஒவ்வொருவரின் அனுபவத்திலிருந்தே உணரமுடியும்.

234. என்றும் தளராத நம்பிக்கையை மேற்கொண்டு இகபரக் கடமைகள் எவற்றினும் ஏகாக்கிரசித்தத் தெளிவுடன் தொடங்கி முடிக்க முயன்ருல், யாதொரு தடையுமின்றி முடிவு பெறுமென்பது நிச்சயம்.

235. ஒருசிலர் சிறிய செயலையும் பெரிய மலையென மதித்து மனந்தளர்வது கண்டு, உங்களுயரிய சித்த உறுதி யையும் உழல் நிலையுள் தள்ளிவிடாதீர்கள். கண்ணிமைகள் கடமைசெய்யத் தாமேதுடிக்கின்ற கருத்து ஆங்கிருக்கட்டும்.

236. நீங்கள் பரவடிவானந்தப் பாக்கியவான்களேயாம். அற்பமாகிய ஆயுள் படைத்த மட்டரக மானிடவடிவை நீங்க ளெனக் கருதிவிடாதீர்கள்! அறிவுமயமாகிய உங்களை நீங்கள் அறிவதில்லை; அறிந்தால் ஒருவித அச்சமுமில்லை.

237. மனோவாக்குக் காயமெனப் புகழும் அர்த்தசாராம் சங்கள் யாதெனக் காணமுயலாதிருந்து வருகிறீர்கள். அதை நாம் உங்கட்கு உணர்த்துகின்ருேம். உற்றுநோக்குங்கள். மனம் மறையும்; காயமழியும்; வாக்கு நிற்கும். இவையு ணர்ந்து நீங்கள் சொல்லுறுதிகாத்து, பண்பட்ட நாடு புண் பட்டு உழலாவண்ணம் காப்பாற்றுங்கள்.

238. சொல்லுறுதியற்ற மக்கள் வைராக்கியத்திடனை இழந்து, ஆரோக்கிய சரீரமற்று ஆவனசெய்யமுடியாது திகைப்புற்று, முன்வராமற் பின்வாங்கிப் பேதைகளாகினதேயல்லாது மற்றன்று. இனி அவ்வாறிருப்பது உங்கள் போன்ருர்க்கு நியதியன்று.

239. எமது இமையாவிழிகளாகிய நீங்கள் அறத் தொண்டில் இறங்கி ஆவனசெய்வோமெனத் துணிந்து உரையாடியபிறகு, தொல்லைதருமோவென எண்ணி மதி மருண்டு தடுமாறுவது கோழைமனதுடைய குழுவினர்களுக்கு இயல்பெனமதித்து, மனந்தளராது முன்னின்று பணிபுரிவீர்களாக!

240. மனிதான்ம உரிமையில் மறதிபிறந்து, அந்தகார அவாவிற்கு அடிமையாகி, கைகூடாக் காரியம் கருதிய நபர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றினுல் நடுவழியில் இடறிவிழ வேண்டியதாகும் எனச் சதா சுட்டிச்சொல்லி, உள்விழிப்பென்னும் உத்வேகத்தை உங்கட்கு ஊட்டிவருகின்ருேம். பற்றிக்கொள்ளுங்கள்.

241. தன்னைத்தான் முதலிலுணர்ந்து, தனது குறைகளைத்தான் கண்டு அகற்றி தானே யதார்த்தவாதியெனக் கண்ட மனிதனெவனே, அவன் நின்றநிலையை விட்டு என்றும் பிசகமாட்டான். சித்த ஜெயம்பெற வழிகாட்டியென்பதற்கும் அவனே உத்தரவாதி.

242. வஞ்சகமற்ற நெஞ்சகவிரிவிலிருந்து உதயமாகி ஒளிரும் வீரமொழிகளை, ஏகபோகமாக மக்களிடையே எடுத்தியம்பி என்றும் குன்ருத வல்லமையுள்ளம் படைத்தவர்களாகத் திகழுமாறு, நாமுங்கட்கு அறைகூவிப் பறைசாற்றுகின்ருேம்.

243. இம்மகிதலமுதல் மகாமேரு பருவதம் வரை உங்கள் கமலாசனவெளி அடங்கியுள்ளது. ஆழ்ந்த தியானத்தால் அனைத்தும் ஒளிரும். இவைகண்டு, இளகிய மனதுடையவர்களாக அன்புத் தொடர்பு கொண்டு வசித்து ஆபாச வழுக்களில் வீழ்ச்சியுருவண்ணம் நீங்கள் உங்களைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுவதே முக்கியமாகும்.

244. இவ்வுடலுருவம் தோன்றி மறையக்கூடிய பஞ்சேந்திரிய அமைப்பின் பாவையாகும். இதன் சூட்சக் கயிற்றைக் கண்டுபிடித்தவனைத்தான் மோட்சத்துக்கதிகாரியெனக் கூறுவதுண்டு என்றும் குன்ருது நின்றுகொண்டிருக்கும் பரம்பொருளை நாமென உணர்ந்து நலனெய்துங்கள்.

245. எறும்பு முதலாக எச்சடலத்தையும், இறையரு ளென்ற ஒன்றே பிறப்பொடு இறப்பைக் கலந்து சிருட்டித்து வருகிறது. இவை சிறிதுமுணர நேரங்கிடையாதிருக்கிற மக்களுக்கு வேதவிதிகளை விசாரணை செய்வது எங்ஙன மியலும்? ஆன்மவிசாரத்தில் ஈடுபட்டால் நீங்கள் அருட்பிரகா சத்தைக் கட்டித்தழுவி உறவாடலாம்.

246. கடவுள் துணையென்னும் வழக்கச் சொற்களை கட முள்ளுனையென மாற்றிக்காணின், வெகு விரைவில் அதியுன் னத ஆற்றலுறக் காண்பீர்களென்பதிற் பேதமில்லை. எவ்வா றெனின்? கடமுள் + உனை எனப் பிரித்துணரின், சரீரத்தி னுள்ளே நீ வியாபித்துள்ளாயெனப் பொருள் படக் காண லாகும்.

247. காலை மாலை ஒருசில நிமிடங்களேனும் மூளைக்கு வேலைகொடுக்கத் தவருதீர்கள். மூளையானது மெழுகுபோன்று உறைந்துள்ளபடியால், ஆராய்ச்சியென்ற உஷ்ணத்தைக் கொடுத்து இளகச்செய்தால் நுணங்கிய விடயசாராம்சங்கள னைத்தும் தெற்றெனத் தெளிய ஏதுவாகும். அவ்வாறு அறிவுச் சுடரொளி பெற்றோர் மனிதப்பிறவியில் மேம்பாடு உடையவர்களெனப் புகழப்படுவர்.

248. நுண்ணறிவோடு ஆழ்ந்த மனதை, உலகப்பரப்பிற் பகிரங்கப் பார்வைக் கிடங்கொடுத்தால், கண்ணாடி வீட்டில் நுழைந்தவுமலி போன்று திரும்பிய பக்கமெல்லாம் சஞ்சல மாகிய திடரில் முட்டிப் பரதவிக்கும் படியாகச் செய்துவிடும். ஆதலால், அசையா நிலையில் நின்று ஆராய்தல் நன்மைதரும்.

249. மானிட வாழ்க்கையின் வரலாறுகளைச் சிறிது சிந்தனை செய்யப்புகுந்தால், அந்தகாரக் குப்பைகள் அளவு கடந்து குவிந்துகிடப்பதைக் காணலாம். அவ்வாறுங்களின் அரிய புவி வாழ்க்கையை வீணாக்காமல் ஆனந்தசாகரமாகக் கருதி, அநித்திய சக்திகளுக்கு அஞ்சிப் பதுங்காவண்ணம், அதிதீவிர சிங்கங்களாகத் திகழுங்கள்.

250. வீட்டாட்சியில் விடயானுபவமறியாதவர்கள், நாட் டாட்சியை நடாத்தவியலாதெனவே நாமுங்கட்கு சுட்டிக் காட்ட விரும்புகின்றோம். ஆகையால், உங்கள் இல்லக் கோவி லோடு உள்ளக்கோவிலையும் இணைத்து நடாத்திவர முற்படுங்கள்.

251. உலகப்போராட்டத்துக்கென உடலோடு அமைந்து தோன்றிய பொருமை எனும் எருமையைக் கால்விலங்கிட்டுக் கட்டிப் போடாவிடில், சகோதரத்துவத் தன்மையும் தகைமை பொதிந்த உள்ளமும், கசடு அணுகியதாகிவிடும். ஆகையால், பொறுமைக்கு உறைவிடப் பூதேவியென, உங்கள் வாழ்க்கைச் சரித்திர வரலாறுகளில் ஒருகுறைவும் படாதபடி நடந்து கொள்ளுங்கள்.

252. அறிவுச் சுரங்கத்தைத் தோண்டி அளவிலா ஞானச் செல்வங்களை அள்ளியள்ளி, உங்கள் அவா நிறைவேறத் தந் தருளுவதே நமது குறிக்கோள். ஏற்று இன்புறுவது உங்கள் உயரிய கடன். அதிலும், நமதரிய மொழிகளில் சிறிதேனும் ஐயமில்லாதிருப்பின் கடமைக்குக் கடம் இடம்தருவது உண்மையாகும்.

253. பிறர்க்கெனப் பிறந்தமனிதன் தனக்கென எவற்றி லும் நீங்காத பற்றுறுதல் நீதியாகுமா? நற்பணிபுரிய நமக் கெனக் கிடைத்த சன்மார்க்கத்தைப் பற்ருகிய கொடிய படு குழிதான் தடைசெய்கிறது. இதுஅடியேன் நடைமுறையில் அறிந்த உண்மையாகும்.

254. மெய்யறிவாகிய கிருபை வடிவைப் போற்றி நடு நிலை நின்று கருதிய கருமம் முடிக்கப் புகழ் தானேவரும். அற மும் வளரும். உங்களின் சீரிய வசனங்களுக்கொப்ப, காரிய சக்திகளும் மிளிரவேண்டுவது அவசியம். சொல்லும் செயலும் ஒன்றுபடாத எவரது திருவாக்கும் அவவாக்காகவே கருதப் படும்.

255. விதியை மதியால் வெல்லலாம் எனக்கூறும் கூற் றுக்கு மாற்றமாக, அவரவர்கள் செய்யும் சதியாகிய சண்டா ளனை யாதுசெய்வதெனக் கூற இயலாது போனதென்ன? சொல்வதெலாம் சுருதி முடிபெனக் கருதிய மூடமதியால் இன் றைய உலகம் பலவீனமடைந்து பரதவித்து உழல்கின்றது.

256. அடாது புரிபவர்களை வரவேற்று ஆதரிப்பதும் நலம்நாட விழைபவர்களை துவேஷ மனப்பான்மையுடன் தூஷிப்பதுமாக, அன்ருட வாழ்க்கையை நாசகாலச்செய்கை யிற் செலுத்தி அலையும் மடமதிமக்கள் பெருகியபடியால், பரத கண்டம் பஞ்சப் பேயினுக்கு அடிமையாகி, அன்னபானுதி களுக்கு அடுத்த கண்டத்தை எதிர்நோக்கியுளதென்பது உண்மையாகும்.

257. மகா மாயக்குதிரைகள் ஓடுகின்ற பந்தய மேடை யில், ஆயப்பகடைகள் உருட்டிய உதாரணக் கதைபோன்று, இல்வாழ்க்கையை வாழ்வாங்கு வாழும் வகையுணராமல் சிலர் பகைவாழ்க்கையாக வாழ்ந்து பாழாக்குகின்றார்களே! நீங்கள் அவ்வாறு வழிதவறி வாழ்வு நடாத்த முற்படாதீர் களெனக் கூறுகின்றோம்.

258. அளவு கடந்து இச்சாசக்தியுள் கட்டுண்ட எவரும், கிரியாசக்தியைச் சரிவரச் செய்து முடிக்கவியலாது கைவிடுவ ரென்பதும் அனுபவ வாயிலாக நாமறிந்த உண்மையாகும். அவைகண்டு இச்சைக்கிசைந்து பெரிதும் பாதித்துக் கட்டுறாத படி, ஞானசக்தியைப்பற்றி நிற்றலே நியதியாகும்.

259. மேற்கூறிய சக்திகள் மூவகைப்படும். அவை இச்சா சக்தி, கிரியாசக்தி, ஞானசக்திகளெனப் பெயர் பெறும். அவற் றோடு அணுகிய சப்த செயற்களையும் பற்றி உங்கட்கு விப ரமாக அறிவிக்கப்போகின்றோம். சித்தசலனமின்றி வாசித்து உணர்தல் மேன்மையாகும்.

260. இச்சா சக்தியின் இணைப்பு, பித்த உணர்வும், தாமத குணமும், அசாத்தியத் தன்மையும், அறியாமை அடர் வும், இடைகலை நாடி எழுச்சியும், மனமிகுதியான அலைவும், மாதாவடிவாம்சமும் பொருந்தி நிற்கும்.

261. கிரியா சக்தியின் இணைப்பு, இரத்த உணர்வும், இராட்சதகுணமும், அகங்காரத் தன்மையும், ஆசாபாசங்க ளடர்வும், பிங்கலைநாடி எழுச்சியும், பொறுமையிழந்த புத்தி யும், பிதா வடிவாம்சமும் பொருந்தி நிற்கும்.

262. ஞானசக்தியின் இணைப்பு, மூளையுணர்வும், சத்துவ குணமிகுதியும், சமநோக்கான தன்மையும், அருட்பிரகாசத் தொடர்பும், சுழிமுனைநாடி எழுச்சியும், ஆராய்ச்சித் தெளி வுள்ள அறிவும், குருவாம்ச வடிவும் பொருந்தி நிற்கும்.

263. இவைகண்டு உயரிய பராசக்தியின் நாட்டத்தைப் பெற்றுய்யும்பொருட்டே, நமது பண்டைய காலப் பேரறிஞர் களாகிய பெரியார்கள் அறிவு வளர்ச்சியில்லாத மக்கட்கு ஓவியங்களை வகுத்து, வள்ளிதெய்வானை சுப்பிரமணிய சமேத ரெனச் சுட்டிக் காட்டிப் பயபக்தி மார்க்கத்தைப் புகட்டிவந்து உள்ளார்கள். இக்கலிகாலக்கட்டத்தில் பொருள் சேகரிக்கக் கற்ற, போதகக்குருமார்களின் பொய்ப்பிரச்சாரத்தின் விளை வால், நாளாவட்டத்தில் ஞானவடிவமமைந்த அருவுருவம் இருளுருவமாக மாறிவிட்டது.

264. ஆத்மீக சக்தியுள் மூழ்கி வெற்றிபெற்ற நமது ஆன்ஞோர்கள், ஆலயமென ஓர் நிலையம் நிறுவி, ஆண்பெண்ணுருவைக் குறித்துச் சரசுவதி விக்கினேசுவரனெனப் பெயரிட்டு, முதற்தெய்வமாக வணங்கிவரக் கட்டளையிட்டு அறிவில் உயர்வில்லாத மக்கட்கு ஆலயத்தின் அந்தரார்த்தத்தை உடற்கூறிலிருந்து உயர் வழி காட்டியருளினுர்கள்.

265. ஆலயமென்பது ஜீவான்மாவாகிய நீ, பரமான்ம சக்தியுள்லயித்து ஐக்கியமுறு என்பதின் அர்த்தமாகும். சரசுவதி என்பதற்குப் பொருள், சரமாகிய பிராணனை, தன்னுள் தானுகச் செய்யென்பதாகும். விக்கினேசுவரனெனப் புகல்வது, மேற்கூறிய நியதி தவருதிருப்பின் விக்கினங்கள் நீங்கப்பெற்று ஈசாம்சத் தன்மையுறலாமெனக் குறிப்பதாகும்.

266. ஞானுசிரியர் முதல் கவியாசிரியர்கள் வரை நம் நாட்டிற் பிறந்து உறங்கிக்கிடந்த மக்களைத் தட்டிஎழுப்பி, விழிப்பேற்படுத்தி வருகிருர்களெனினும், அவர்களினூடு ஒரு சிலர் போலி வேடம் புனைந்து பொய்ப்பிரச்சாரம் புகன்று வருகிறபடியால், பொய்யாசிரியர்களின் போக்கைத்தடுத்து அவர்கள் அறைகூவிவருகிற மாயக்கண்ணிக்குள் பாயக்கூடாதென மக்கட்கு இயம்ப வேண்டும்.

267. உணர்ச்சி அணுவளவும் இல்லாத மக்கள் நாட்டிற்கு இடையூறுகளை விளைவிப்பதோடு,பகைமையும் பாராட்டுவார்கள். அறிவிலிகள் தோண்டிய படுகுழிகளைக்குறித்து அத்தகையோர் எங்குளாரெனச் சதா பிரயோசனமற்ற ஆலோசனைகள் செய்வதைப்பார்க்கிலும், படுகுழிகளனைத்தையும் தாண்டிச் செல்லக்கூடிய, பராக்கிரமவித்தையைத் தாம் கற்றுப் பிறருக்கு அறிவிப்பதே வீரமாகும்.

268. நித்திய வல்லமையோடு கூடி விளையாடவேண்டுமெனின், அதற்கு அவசியம் அகப்பரிசுத்தமே தேவையாகும். கள்ளத்தை உள்ளத்துள் புதைத்து கபட உரையாடுதல் கல் உருவத்தைக் கட்டித்தழுவி முத்திட்ட கதைபோலாகும்.

269. அருளொளி வெளியில், அடிமுடியற்ற அன்பு மலரில், ஊறியொழுகும் அமுதினையுண்ட வண்டினங்கள், மறு மலரில் ஊறும் பாகைப் பருக மனங்கொள்ளுமா? கொள்ளாதெனினும், ஒருசில மலமுருட்டி வண்டுகளோடு கூடியுறவாடுகிறபடியால் மனந்தடுமாறி உழல்கின்றன. மக்களே! இவையுங்கட்குத் தக்க உபதேசமாகும்.

270. ஆன்ம கோடிகள் தழைக்க மழைபொழியவரும் இருள் மேகமொப்ப, புண்ணியவழிகளே வகுத்துதவ வந்து புவியிற்பிறந்த அவதார புருடர்களின் திருவசனங்கள், அருள ருவிபோன்ருேடி வரும்போதெல்லாம், பராமுகமாகிய உடைப் பின்றித் தேக்கிச் சிதறவிடாமல், மனனமாகிய கண்மாயமுள் செலுத்திக் கவனமாகிய காவல் காத்து, சமயோசிதமென்னும் தண்ணீரை அவரவர்கள் வாழ்க்கை வயலுக்குப் பாய்ச்ச வேண்டும்.

271. பந்தபாசம் மிகுந்துள்ள அந்தகாரக் களேகள் சூழ்ந்து வாழ்க்கைப் பயிரைப் பாழாக்காதவண்ணம் பார்த் துக்கொள்வது உங்கள் கடன். மேற்சொன்னவாறு, கூரிய மதியுடைய மக்களாகிய நீங்கள் அறியாமைஇருளென்ற வறுமை நீங்கி, மெய்ஞ்ஞானசேகர அமுதமருந்தி அவியா நெருப்பென்னும் பாவம் நீங்கப்பெற்று, ஆனந்தமென்ற அருளொளிவீட்டில் அமர்ந்திருங்கள்.

272. புறத்துறவுற்ற சில போலிகளே நம்பி ஏமாந்ததை எண்ணி யெண்ணி, அகத்துறவுற்ற பெரியார்களேயும் சந்தே கித்து, விபரீத வியாக்கியானம் பேசுகின்ற பேர்வழிகளே அணுகாது அகன்று, கிருபை வழிபற்றி வெற்றிகண்ட மெய் யடியார்களேக் கண்டணுகி வசித்தல் மிகுதியும் உங்கட்குப் புகழுண்டாக்கும்.

273. அருளுலகை அடைந்த அடியார்களில் அருட்சோதி வள்ளல் இராமலிங்கரும், வீரஉணர்வுற்ற விவேகானந்தரும், சாந்த மூர்த்தியாகிய காந்தி மகானும், மார்க்கமுணர்த்திய முகம்மது நபியும், ஈசாம்சச் செல்வன் ஏசுநாதரும், சித்த ஜெயம் பெற்ற புத்தபிரானும் போன்ற தேசாபிமான ஜீவன் முத்தர்களே மனத்துறவுடைய மகான்களாகும்.

274. பூமிக்குள் புதைந்த வித்துக்களனைத்தும் புத்துயிர் பெற்ருேங்கிவளர்ந்து பயன்தருவதில்லே. சத்தானவித்துக்களே பூதேவிஏற்று அதனுருவடிவைக் கிரகித்து, அருவத்திலிருந்து வேருெரு உருவத்தை வெளித்தோன்றச் செய்து வெகு பலன் தருமாறு செய்கின்ருள்.

275. புவியிற் பிறந்த மாந்தர்களில் ஒருசிலரே சுத்தாத்ம சக்தியையுணர்ந்து, சுகதுக்கங்களே இன்புடனேற்று நின்ற நிலேயில் ஒன்றியிருக்கின்ற தமது எதார்த்த நிழலில் நிற்கின் றனர். காமாந்தகாரங்கள் சூழ்ந்த அலங்கார அங்கங்களே மட்டிலும் தாங்கிய அருளற்ற மக்கட்கு அவ்வானந்த நிழலில் தங்க இடங்கிடையாது.

276. மனோவிகாரமுடைய மனிதாம்சங்களுக்குத் தகுந்த வாறு வற்புறுத்திக் கூறியுள்ள நமது திருவுரைகளைச் சிறிதளவு வளராத செல்வர்கள், ஆழ்ந்தறிவதற்கு இயலாமல் கருத்து வேற்றுமைகளாகக் கருதிவிடலாகாது. அழுக்குப் படிந்துள்ள அங்கவஸ்திரத்தை அடித்துத் துவையாது எங்ஙனம் தூய தாக்கலாமென உங்கள் நுண்ணறிவைப் பற்றி உணர்ந்து கொள்ளல் வேண்டும்.

277. வித்தை வேதாந்திகள் மிகுந்துள்ள தற்காலத்தில் நீர்மேல் நடப்பதும், நெருப்பினுள்ளிருப்பதும், பூமிக்குள் புதைவதும், அந்தரப் பிரவேசம் செய்வதுமாகப் பல சித்துக் களைக் காண்பித்துப் பாமர மக்களை மயக்கி விடுகின்றனர். இவையாவும் ஜீவனோபாயத்திற்காகப் புரியும் ஜாலவித்தை களேயல்லாது நாட்டு மக்களுக்கு இதனாலொரு நன்மை கிடையாதாகையால், புத்தி சாதுரிய மக்களாகிய நீங்கள் இவ்வித்தையில் விருப்பங் கொள்ளாது இருப்பீர்களாக.

278. தேசங்கள்தோறும் கசரத்து, தண்டால், மல்யுத்தம், சிலம்பம் போன்ற பல உடல் நலன்தரும் விளையாட்டுகள் உண் டெனினும், யாவற்றிலும் சிறந்தது யோகாசனமெனல் மிகை யாகாது. ஆகவே, உங்கள் பூதசடலத்தின் உட்கருவிகள் உறுதி பெற்று நிகரற்ற திரேகாரோக்கியத்தைப் பெற்றுய்ய வேண்டு மெனில், மேற்கூறிய ஆசன முறையே சாலச் சிறந்ததாகும்.

279. மகிதலமக்கள் அனைவரிடமும் அஞ்சாமையென்ற அக்கினியிருக்கையில், மதிமருண்டு மாண்டு போவோமோ வென எண்ணிக் கலங்கக் காரணமில்லை; உறுதி நிழலைவிட்டு விலகாதிருவென உபதேசிக்கத்தக்க குருபிரானொருவர் கிடை யாத குறைதானெனக்கண்டு ஊகிக்க வேண்டி நேரிடுகிறது.

280. பாபநாசப் பரிகாரந்தேடிப் பலவித ஸ்தல யாத்தி ரைகளுக்கெல்லாம் நீங்கள் ஓடவேண்டாம். கள்ளமில்லாத உள்ளத்தைப் பெற்றிருந்தால் போதுமானது. சுத்தமனதும் வாக்குமே சுவர்க்கமாகுமென உணர்ந்து நமது நன்மதி பொதிந்த பொன்மொழிகளை நாடி நடப்பவர் நலனுறுவர்.

281. தேவனாகஇருந்துலகைப் படைப்பதும், இராமனாக வந்தாட்சி புரிவதும், காமனாகத் தோன்றி உலகையழிப்பதும், ஒரு பரம்பொருளேயல்லாது பலவன்று. அதுவே இறையெனப் படும். ஆகவே, மட்டற்ற உங்கள் ஆனந்த சாகரமாகிய அழி யாப் பொருளை அணுவளவேனும் அகலாதபடி காப்பாற்றி வைக்க முடியாமல் படிமீது உழன்று பரதவிப்பது பகுத்தறிவு பெற்ற மனிதர்களுக்கு ஒவ்வாதது.

282. செல்வர்களே! அரியதவத்தின் அந்தரார்த்தம் யாதெனில் ஆனந்தமென்னும் சீதையைக் காணுத ஆன்ம ராமன், அறிவாகிய லட்சுமணனைத் துணைகூடி, உலக வியவகாரமென்கிற ஊரெல்லாந்தேடி, அகங்கார மரங்களடர்ந்த கானகத்துள் ஐம்புலனென்னும் வேடுவர்களால் அபகரிக்கப் பட்டு, பந்த பாசமென்னும் அந்தகாரச் சிறையுள் அடைபட் டதறிந்து அடங்காமனதென்னும் அனுமனைக் காவலுக்கனுப்பி, சத்சங்கதத்துவ விசாரணைகள் செய்து, வீராவேசச் சேனைகளை அழைத்தேகி, இரவு பகலாகப் போராடி, சிறை மீட்டுச் சிற்சுகோதயத்தைப் பெற்றிருத்தலேயாம்.

283. விண்ணக வெளியாகிய பர்ணசாலையில் அமர்ந்து மண்ணுலக மாயாவிநோதங்களை மறந்து, தன்னுயிர் பிறவுயிர் என்ற பேதமற்று, சமநிலைநிற்கும் சற்சனர்கள்தான் பரம் பொருள் அடிசார்ந்து பரிசுத்த துரியபூமிக்குரிய வித்தெனப் போற்றப்படுவர். மேற்கூறிய தபோசக்தியைக்கொண்டே கல்வி பயின்று, கடமைபுரிந்து, உணர்ச்சியோடு இருந்து உலகில் உலவுதல் உயர்வுதரும்.

284. குருதிப் பெருக்கினுல் அடையும் சிற்றின்பச் செருக்கைப் போன்று, பேரின்பத்தை எவரும் வெகு எளிதிலடைந்து விடமுடியாது. ஏன் அவ்வாறெனில், அசுத்த உணவுகளை உண்டு ஆகாத எண்ணங்களை எண்ணிச் சதாபுலனலைவு பெற்று, மனதுணர்வு மாறி, மமதையுற்றவன் புணர்ச்சி இன்பத்திற்கு ஆளாகிவிடுகின்ருன்.

285. துன்பத்திகிரியிற் சுழன்று இவ்வூனவுடலும் மனதும் ஈடுபட்டு ஐம்புலனொடுங்கிய முடிவில், ஆனந்தத் தேனருவியாகிய நிறைபேரின்ப அமுதமருந்தவியலுமேதவிர, பேரின்பம் பேரின்பமெனப் பட்டவர்த்தனமாகப் பன்முறை பேசியும், எழுதியும் காண்பிக்கலாமேயல்லாது, அந்நிலை அடைவதென்ருல் எளிதல்ல. ஆனுல் அவ்வாறுயரிய பெரியார்கள் கிடையாதா எனக்கேள்வியெழின், உண்டென்று உரைத்துக் கண்டுகொள்வது அரிதென்கிருேம்.

286. ஜீவன்முத்தர்கள் அருளிய நன்மதிமொழிகளைச் சுவடிவடிவில் அச்சிட்டு உதவியும், பயனெய்தாதுபோனதற்கு காரணம் காண முயலும்போது, மகான்கள்எனப் பெயர் தாங்கிய சுயநலப் பேர்வழிகள், ஜால விளையாட்டிற்குரிய வீண் வேதாந்தங்களைக் கற்றுத் தலைவிரித்தாடத் தொடங்கிய படியால் அறியாமை வளர இடம் அதிகமுண்டாயிற்று.

287. தெய்வ வழிபாடின்னதென உணர ஆற்றலற்ற மக்கள், பழிபாவத்திற்கு அஞ்சாது கலிபுருடனுக்கு அடிமையாகி, உயிர்ப் பலி பூசையைப் பெரிதும் கையாண்டு வருகிறார்கள். ஒவ்வொருவரும் இது தவறென உணர்வதோடு தமது சந்ததிகளுக்கும் உணர்த்தி நல்வழி நடக்கச் செய்வது அவசியம்.

288. மக்களிடையே குற்றம்கண்டுபிடிப்பது ஒரு அரிய காரியமன்று. அவர்களின் குணக்கெடுதித்தன்மை உணர்ந்து திருத்த முயலுதலே நன்று. இவ்வாறிருப்ப, நாட்டு மக்களை நல்வழிக் கொணர நாடிய எவரும் சன்மார்க்கத்தை அன்போடு புகுத்த வேண்டுவதிருக்க, என்புருக ஏசிப் பண்படுத்த முனைவது இறுதியில் இன்னலாக வந்து முடியும்.

289. நீங்கள் அரிய தவம் செய்ய முனைந்து, அளவற்ற பவ வினைகளை ஒழித்து, மழலை மகத்துவம் பிறந்து, மகானுபவமுற்ற முடிவில்; சுகதுக்கமற்ற நிலை லபிதமாகும். அன்றே அக்கினி தகிக்கவும், ஆழ்கடல் அமிழ்த்தவும், சுழல் காற்றுத் துன்புறுத்தவும் செயலற்று, ஒன்றாகுமென்று அறிவீர்களாக!

290. இவ்வுலகச் சாக்கடையனைத்தையும் ஏற்றின்புற்று இயற்கை மாற்றம் அணுவுமின்றிய கருங்கடல், தனது கரையில் பேரலை மோதி மாசு படியாதவாறு தூசுகளை ஒதுக்குதல் போன்று, நீங்கள் சகபந்த இடுக்குள் அகப்படாமல் அமைதி பெருகிப் புகழ்ஓங்க வாழுங்கள்.

291. பூங்காற்றிலிருந்து புயற்காற்றெழுந்து சுழன்று சில தூரஞ் செல்லும்போது, வேகமொடுங்கிய முடிவில் முன்னிருந்த பூங்காற்றுடன் கலந்து விடுகின்ற தன்மை போன்று, பரமான்மமெய்ப்பொருள் ஜீவான்மபேதமடைந்து இகலோகக் காற்றாகிய சூறாவளியுட் சிக்கி, மனோவேகமொடுங்கிய முடிவில், பரமபத ஐக்கியமாகுமென்பதே ஒப்பத் தகுந்த உங்கள் போன்றோர்களுக்குச் செப்பத் தகுந்த திருவாக்காகும்.

292. வாழ்க்கைச் சக்கரஞ் சுற்றத் தொடங்கிய நாள் முதல் இதுவரை, நடந்தேறிவரும் அறநெறியனுபவ வரலாறுகளைக் கணக்கெடுக்குங்கால், ஒரு சில சிற்றின்ப அவாவுடைய சிநேகிதர்கள் வந்து, உண்டு சுகித்து உறங்கி விழித்துச் செல்வதில் உங்களோடு பங்கெடுத்துக் கொண்டுள்ளார்களெனக் காணலாம்.

293. இறுதி முடிவான விருந்தினராக வரவிருக்கும் உங்கள் உயிர்த்தோழர் ஒருவருண்டு; அவர் வரும் தருணத்தில் அன்புடன் எதிர் சென்றழைத்து வரவேற்று உபசரித்து, ஆன்ம விருந்தைப் பரிசளிக்கத் தயங்காதீர்கள். அவர் யாராயிருக்கலாமெனக் காண விழையின், அவ்வுத்தமன் நமது ஜகஜீவ விவசாய முதலாளிக்குத் தொழிலாளியாகத் தோன்றிய மரணசமுசாரியேயாம்.

294. ஜீவான்ம சிருட்டியமைப்பைக் கண்ணுறுங்கால், கற்பசிசுவாக வளர்ந்து, மழலை வடிவமாகப் பிறந்து, கௌமார திசைவந்தணுகி, வாலிபசேட்டைகளுக்கு அகப்பட்டு, வயோதிகத்தை வரவேற்றுத் தள்ளாடிமடிகிற தருணம்வரை உருவவடிவு ஐந்தடையாளங்களாகமாறி மறையுமென, பஞ்ச அங்கங்களையும் பிரித்துப் பேரின்பவழி ஏகுங்களெனப் புகன்ற முதுமொழி சிதைந்து, கணிதப்பிரதிகளைமட்டிலும் புரட்டிப் பஞ்சாங்க சாஸ்திரமெனப் பரவுதல் பரிதாபமே!

295. இன்பத்தை விரும்பி இறைவனை நாடி இறைஞ்சுகின்றார்களே தவிர, துன்பத்தை விரும்பி வரம் வேண்டுமென மக்களேன் விழைவதில்லை? துன்பமாகிய சிப்பியில்லாவிடில் இன்ப ஒளிபெற்ற முத்து எங்கிருந்து கிடைக்கும்? இன்னலை ஏற்றின்புறுவதே தன்னலங் கருதாத தயாநிதிகளின் சிறந்த சற்குண உயர்வு.

296. அழுகையிலிருந்தே அருளாடல் அனைத்தும் நடந்தேறி வருகிறதற்கு உதாரணமாக, இம்மண்ணுலகிற் பிறந்து யாதுமறியாத மழலை ஆரம்பத்தில், அகர ஒலிபற்றி அழ ஆரம்பிக்கின்றது. உற்று நோக்குங்கால், துக்கத்தைத் துணையாகக் கொண்டு வந்ததின் அறிகுறியேயெனத் தெற்றெனத் தெளியலாகும். ஆதலால் உங்கள் வாழ்க்கைப்படலத்தில் எவை வரினும் ஏற்றின்புறுவதே மிக்க ஆண்மையாகும்.

297. தாங்கொணா அங்க நோய் உங்களையணுகிப் போராடினும், பங்கமற்ற தங்கமாகிய நீங்கள், மங்களகரமான மனச்சாந்தியை மட்டிலும் விட்டுஅகன்றுவிடாதீர்கள். அசைவற்ற தாவரவர்க்கங்களிலிருந்து கிடைக்கப்பெறும் இனிய கனிவகைகள் அனந்தமெனினும், மலைவாழைக் கனிக்கெனத் தனி மதிப்புண்டாகிறது. அவற்றின் மேற்தோல் கெடினும் உள்ளீடு கெடாமல் உபயோகத்திற்காகுந் தன்மைபோல, உடல் கெடினும் உயிர் கெடாதெனக்கண்டு ஆனந்த நிலையிலிருக்கப் பழகிவருவீர்களாக!

298. மகிதலவெளியுள் மனேன்மணியென்னும் மாயையைத் தலைகீழாக்கிச் சுழலாநிற்கச் செய்து, தன்மயமாகிய பரசுகசாந்தியோடு கூடிவிளையாடி, உணர்வுள் உணர்வாகி நின்று நீங்கள் அறியாமைஇருளை அகற்ற வேண்டுமே அல்லாது, சாதாரணக் கலையறிவு மட்டிலும் போதாதெனக் காணல் நலம்.

299. உலகநலனுக்காக உயிர்வாழ்தல் சாத்தியப்படாது எனப்பயந்து பரோபகாரமின்றிவசித்து, வழிதவறி மடிவது, இக் கலிகாலச்சுழலில் கட்டுண்ட மக்களின் மதியற்ற பிற்போக்காகும். ஆகவே, எவ்வுயிரையும் இறையவதாரப் பிரகாச வெளியுள் நிறைவுற்றிருக்கக் கருதியவர்கட்கு இவ்வுலக பந்தபாசமாகிய ஓநாய்களின் தொந்தரவுகள் அதிகம் இராது என்பதை நாமறிவோம்.

300. வீடு இடிந்துவிழும்பொழுது, அதில் அமைந்துள்ள உத்தரம், தூண், ஓடு முதலிய யாவும் ஒருங்கே நொறுங்கி நாசமாகிவிடும். ஆனுல் ஒருஓடுமட்டிலும் நழுவிவிழுந்துடைவதால் அவ்வீட்டிற்கு அதிகமாகச் சேதமேற்படாததன்மை போன்று உங்களைக் காப்பாற்றுங்கள்.

301. ஆத்மீகசக்தியை வீடெனவும், உத்தரம், தூண், ஓடு போன்றவையே ஐம்புலனேடு கூடிய உடலும் மனதும் எனவுங்கருத்தூன்றி, ஓடுபோல் உருண்டுவீழக்கருதிய புலன்களை அடக்கச் சிறிதுகாலம் கழியுமெனினும், வீடுபோன்று உங்கட்கு விரைவினில் விதேக-கைவல்யத்தைத் தரத்தக்க சக்தியை இன்றே விடாது திடஉறுதியாய்ப்பற்றி அணுவளவு நேரமேனும் அகலாமல் நிற்கக்கடவீர்களாக.

302. அகங்காரசக்திகள் நிறைந்தமக்களிடையே அமைதி குடிகொண்ட ஓர் பரமசாதுவைக் காணுவதென்ருல் வெகு அரிதாகின்றது. கோடிக்கு ஒருவரையேனும் தேடிக்காணினும் மூங்கில்வனத்தினுள் ஓங்கிவளர்ந்த சந்தனமரத்திற்கு ஒப்பிடலாமெனல் மிகையாகாது. ஆனதுகண்டு உங்கள் உள்ளம் உவகை நிரம்பியதாகக் காட்சியளிக்கட்டும்.

303. நீங்கள்தான் ஜீவசஞ்சீவியாக இருக்கின்றீர்களே! வேருெரு ஔடதக் கரடியின்வாயில் ஏன் அகப்படவேண்டும்? சத்தியமின்றியபடியால் பத்தியம் காக்கவேண்டுவது அவசியமெனவே நிரூபிக்கப்படுகின்றது. இனி அவ்வாறில்லாது ஆத்மசக்தி லேகியத்தையே சதாகாலமும் உட்கொள்ளுங்கள். சகல வியாதிகளும் பறந்தோடிப்போகும்.

304. தபத்தை அபத்தமாக்கித் தரணியைத் தலைகீழாக்கும் கொடிய குணமார்க்கத்தை அறவேபோக்கி, விண்ணின்று ஒளிறும் மின்னொளிபோன்று தன்னுள் இலங்கும் பொருளொடு கலந்து கரைந்து உருவற்று ஒன்ருகிவிட உங்கட்குப் போதிய சக்தியுண்டாகும்போது, பேச்சற்றபெருமைகூட லபிதமாகும்.

305. பிறவாவரம் பெறக்கருதிய பெரியார்கள் சிவலிங்கப் பிரதிட்டை செய்தார்களெனக் கணித நூலாராய்ச்சியின் புகழ்ச்சியாகும். அவை யாவெனக் காணமுயலும்போது, அறிவுமயமாகிய அவரவர்களும் ஆத்மலிங்கத்தை வலஞ்சுற்றி வரவேண்டுமெனச் சொன்னவேதமாகும்.

306. இவைகடந்தபடியால், மங்களமாக எங்கும் நிறைந்துள்ள உங்களைப் பங்குபோடக்கருதிய பாழான மனது மேலானநிலையில் நிற்கவொட்டாமற்செய்து, நாள்தோறும் நரகவழிகளை நல்வழிகளெனக்காட்டி அரியபிறவி ஆபாசம் ஆக்கப்படுவதை நினைந்து நினைந்து உருகி நெருப்புமயமாக இருக்கப்பழகுங்கள்.

307. பிறப்பையும் இறப்பையும் நோட்டமிடுங்கால், அச்சம் எதிலிருந்து உதயமாகுமோ அதனுள் அகிலசுகபோகங்களும் அடக்கமாகும். கட்டுக்கடங்காத காமக் குரோதாதிகளைச் சத்துருக்களெனக்கருதி நாசம்செய்து ஜெயந்தரத்தக்க சாலச்சிறந்த ஆயுதம், யாம்கற்றுக்கொடுத்த பரப்பிரம்ம சைதன்யபாணப் பிரயோகமாகும். ஏனைய மார்க்கங்கள் எதுவும் எளிதாகாது.

308. உருவவடிவம் ஒருநாள் அழிந்தொழியும். உள்ளான்மசக்தியாகிய நீங்கள் ஒருபோதும் மாயமாட்டீர்கள். இவை பற்றிப்பேச எவருக்கும் நாவெழாதுபோவது சகசமேயெனினும், நாமின்றி வேருென்றில்லை எனக்காணும் முடிவையுடையவர்களுக்கு எளிதில் பழுதகன்று உண்மை பிரகாசிக்கும்.

309. கூர்மைமழுங்கிய ஆயுதங்களைப்போன்று உங்கள் ஐம்புலன்களும் சேட்டைபுரிகிற தருணங்கண்டு, அவ்வப்போது அறிவுச்சுடரொளியென்னும் சாணையில்தீட்டி தீட்சண்யமுறச் செய்துகொள்ளுங்கள். இல்லையேல் நல்லவைபோன்று சிறிது இன்பந்தந்து பலதொல்லைகளைப்புகுத்தித் துன்புறுத்தும்.

310. தனதுபுலன்களை அடக்கியாளத் திடவன்மை கிடையாதபோது பிறர்புரியும் குறைபாடுகளைத் திருத்த முயலுதல்

பலிதமாகாது. முயன்றும் பயனின்றியலேவர் சிலர். இவை நிகழ்கால நிலேயறியாத மக்களின் தன்மையாகும்.

311. திலகமிடுதலும் திருநீறணிதலும் மலமாயையறத் தவம் புரியும் பக்தர்களின் சின்னங்களாகும். இவையுணர ஆற்றலற்ற ஒருசிலர் பஞ்சாட்சர தூளி தங்களேச் சாற்றிச் சங்கையிழந்து பங்கமடைகிருர்கள். அவர்களுக்கும் உங்கள் அன்புததும்பிய அருள் மொழிகளேப் பங்கீடு செய்து உதவி தவநெறிதழுவ வழிகாட்டுங்கள்.

312. உங்களே நீங்கள் விட்டு விலகினுல் அறவழியில் ஓரணுவளவேனும் நன்மையடைய இயலாதுபோகும். மகிதல மாருட்டங்களிலொன்ருகிய மாந்திரீகத்தை மனத்திடனுகவும். சோதிடத்தைச் சக்தியாகவும், பண்டிதத்தை பேரறிவெனவும், பரதத்தை புலனமைதியெனவுங்கருதி அகவெளியுள் அமர்ந்து ஆனந்த நித்திரைபுரிதலே முமுட்சுத்வ மார்க்கமாகும்.

313. முகக்கண்முன்தோன்றி ஒளிரும் சைதன்னிய வடிவை நாளொருமுறை சிலநிமிடமேனும் அலேயும் மனதை அமைதியுறச்செய்து பார்த்துவந்தாலென்ன? மண்ணேயும் மரத்தையும்,பெண்ணேயும் ஆணேயும் பார்க்கப் பழக்கிய கண் களே விண்ணேப் பாரெனச்சொன்னுல் சாத்தியப்படாதென் பதும் உண்மையே! தன்னேயறிய முயன்றவர்களுக்கே அந்நி லேயில் நிற்கமுடியும்.

314. இருகரிய விழிகளுக்கிடையில் நின்றிலங்கும் அறிவு மயமே நீங்களாகும். சீவான்மாக்கள் அனேத்திலும் அன்பு மயமாகவே அமர்ந்திருக்கின்றீர்கள். அசையாத பரப்பிரம மாகிய நாமே அசையும் உருவச் சட்டையைப் போர்த்துளோ மென உணர்ந்து உயிர்மயமாகத் தொழிலாற்றுங்கள்.

315. சாந்த குணமும் சன்மார்க்க நாட்டமும் பெற்று மனக்குரங்காட்டமும் சிறிதடங்கி நடக்க அவாவுடையவர்க ளாகிய நீங்கள், உருளேக்கிழங்கிலும் உயிரில்லேயாவெனக் கேள்விபோடும் பேர்வழிகளேப் பின்பற்றிவிடாமல் சதா சைவ உணவுகளேயே உண்ணவேண்டுவது அவசியமாகும்.

316. நல்வழி தழுவிய மக்கட்கு அருளேப் பகிர்ந்துதவி அறவழி காட்டவுந் தயங்க மாட்டோம். தவழ்ந்தும் எழுந்தும், தடுமாறி நடக்குந்தன்மை ஒருவாறு நீங்குந் தருணத்தையே எதிர்பார்க்கின்ருேம்.

317. ஆதிசங்கரர் புகன்ற சுக்லாம் பரமென்னுஞ்சுலோ கங்களின் அந்தரார்த்தத்தைச் சில செல்வர்கள் நம்மிடம் வினவியபடியால் கீழே தருகின்றோம் கண்ணுறுவீர்களாக.

318. சுக்லாம்: இவ்வுலகம் சுக்கில சுரோணிதங்களால் உற்பத்தியாகியுள்ளதெனவும், பரம்: செகத்ரட்சகனாகிய பரம் பொருள் அம்பரம், பரம், பராபரமாக எங்கும் வியாபித்துள்ள தெனவும், விஷ்ணு: ஆசையாகிய மாயையே ஆட்சிபீடத்திற்கு அதிகாரியெனவும், சசிவர்ணம்: மக்களாகப் பிறந்த எவரும் ஓர் குலவர்க்கத்தைச் சார்ந்தவர்களெனவும், சதுர்ப்புஜம்: இயற்கைக் கரங்களானவை ஈகைக் கரங்களாயமைந்தவர் களே மனிதகுணமுடையவர்களெனவும், பிரசன்னவதன: இக வாழ்வை நாடிய மக்கள் நலந்தீதிரண்டையும் ஏற்று முக மலர்ச்சியுடன் வசித்தல்வேண்டுமெனவும், தியாயே: சகோதய பரிபூரணம் பெற இதய தியானத்தை மறந்து விடாதீர்களெ னவும், சர்வவிக்னோப: மேற்கூறிய நியதிவழுவாதிருப்பின் பிழையற்று இறையடி சார்ந்து, சாந்திஹே: சாந்த சாகரத் துள் மூழ்கி ஆனந்த முறலாமெனவும் பொருள் தந்து நிற்பது உணராத மக்கள், இச்சுலோகத்தைச் சுவர்க்கத் திறவுகோ லெனக் கருதி மயங்குகிறார்கள்.

319. இவ்வுயரிய சுலோகத்தைப் பொருள்படக் கூறவும் கேட்கவும் மக்கள் முயலாதிருந்தபடியால் மறைவுற்றிருந்து கால விருட்சங்கனிந்து, உதிருந்தருணத்தில் வெளிவந்தமை பற்றி அனைவர்க்கும் பெருமையேயாம். மேலும் பரிபாஷை களில் அருளிய உபதேசங்களைப் பகுத்துணர வேண்டுமே யொழிய புறக்கணிப்பது புத்திசாதுரியர்களுக்கு நன்றன்று.

320. மனமாசகலாத மக்கள் மாறுபாடான சொற்களைக் கொட்டியளப்பதுபோன்று, நீங்களும் உங்கள் திருவசனங் களைக் கறை படியச் செய்துவிடாமல்,நீதி நெறிபற்றிய அன்பு மொழிகளை ஆழ்ந்த கருத்தோடு உரையாடுங்கள்.

321. 'சிவாயநம' என்பதன் அந்தரார்த்தத்தையும் கீழே தருகிறோம். விழிகளின் மேற்பாகமாகிய லலாடவெளியில் நின்றிலங்கும் பிரமப் பிரகாசமே சிகாரமெனவும், கண்டத்தி னடியை வகாரமெனவும், நாசியினடியை யகாரமெனவும், நாவினடியை நகாரமெனவும், செவியினடியை மகார

மெனவும், உய்த்துணரும் பொருட்டு தத்துவ ஞானிகள் வகுத்துதவிய மார்க்கமாகும். ஆகவே, உங்களிதயம் அம்பர வெளியில் அமைதியுறலே நலம். சித்தம் + அம்பரமென்னும் அந்தரார்த்தமும் நாளாவட்டத்தில் சிதம்பரமென வழங்க லாயிற்று.

322. மேற்கூறிய தத்துவார்த்த ஆராய்ச்சிகளை ஆழ்ந்த மதியால் கணக்கிட்டு ஆன்மசுதந்திரத்தைப் பாதுகாத்து, அகங்கார ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்தி, சஞ்சலமாகிய மனது சாந்தியுறப் பாடுபடவேண்டுமேயொழிய, நேர்மை தவறி நடந்து நிலையற்ற பற்ருகிய நமனுக்கிரையாகி அழிதல் நலனாகாது.

323. நீங்களிந்த உருவ உடலிலிருந்தவாறே அருவ வெளியில் தாவிக்குதித்து வசிக்கப் பழகுங்கள். அவைதான் பந்தமகன்ற பெரியார்கள் மறைந்துலவி விளையாடிவரும் சொந்தப் பிரதேசமாகும். இவை நாமுங்கட்குச் சொல்லாமற் சொல்லிய சூன்ய நிலையெனக் காணுதல் மிகையாகாது.

324. நமதுள்ளத்தை விட்டகலாது நிற்கும் திறனுடை யவர்களைக் கரடு முரடான பயங்கரப் பாதையின் வழியாகவே அழைத்தேகுதற்கு ஆயத்தப்படுவோம். அவை சகித்துப் பின் பற்றிவராமல் அஞ்சிய பக்தியில்லாத மக்கள், ஞானசூனிய மார்க்கத்தை விரும்பி எவைமுயன்றும் பலிதமாகாது பரதவிக் கின்றனர்.

325. நாம் சுட்டிக்காட்டிய ஜோதிச் சுடரை விட்டுப் பிரியாவண்ணமிருந்தால் மட்டற்ற மகிழ்வெய்தப் பயனளிப்ப தோடு, ஆனந்தசாகர வீட்டிற்கழைத்தேகவுஞ் செய்யுமா தலால், தெய்வநியதியாகிய பரவடிவு ஒளிரும் திரிபுடையில் சதா தியானம் புரியப் பழகிவாருங்கள்.

326. நறுங்கனியருந்திய கிளிப்பிள்ளைகள் நச்சுக்கனி யருந்தச் சம்மதிக்காதவாறு, சிவகோசமிட்டுங்கள் சிந்தையை வீணாக்கிவிடாமல் பவசாகரத்தைக் கடக்க வேண்டுவதிருக்க, கரிய மேகங்கள் சூழ்ந்துள்ள விண்ணுலக வெளியில், கண்பார் வைக் கெட்டாத பரமண்டலத்தில் பறந்து திரியும் பச்சைப் புருவையிச்சித்து, இன்னும் கீழிறங்கி வரவில்லையே! என ஏங்குவதால் யாது பயனுளது?

327. நாதமும், விந்துவும் நாமேதானென ஓர் முடிவுக்கு வந்து விந்து ஜெயமுற்ருல் சிந்தை ஜெயம் பெறுமென்பதில்

ஐயமில்லை. அப்படியாயின் பரமபதபாக்கிய ஸ்தானத்திற்கு அருகதையுடையவர்களென உங்களை அடியேன் இதய கமலாசன மேடையிலிருக்கச் செய்வேன். இவை சீர்தூக்கிச் சிந்தனையுற நன்கு புலனாகும்.

328. அருமறை இரகசியங்களைப் பரிபாஷையாக எழுதி வைத்துள்ள சாகாக்கால், வேகாத்தலை, போகாப்புனர், மணியாடுங்கோணம் என்பவற்றின் அந்தரார்த்தத்தையும் அறிவிக்கின்றோம். அதாவது, சாகாக்கால்: சாகா-அழியாத, கால்-மூச்சு இதன் பொருள், சமதரிசன சக்திவாய்ந்த ஆத்ம ஞானத்தை மமதை அகங்காரமாகிய அக்கினி தகிக்கா வண்ணம், நடுநாடியிற் சுவாசத்தைச் சூட்சுமமாக ஊதி ஆனந்தமெய்தலெனக் காண்க.

329. வேகாத்தலை, வேகா-அகங்கார நெருப்பிற்ககப் படாத;தலை-சிரசு; இதன்பொருள்:என்றுமழியாத பரம்பொருளாகிய நாம் அறிவுப்பிரகாசமாகிச் சிரசாகிய கபால வெளியுள் நின்று, உலக முதல்வனாக ஒளிர்கின்றோமென்பதாம்.

330. போகாப்புனர், போகா-பிரியாத,புனர்-சேர்க்கை, இதன் பொருள்: மேற்கூறிய செம்பொருளாகிய தமது யதார்த்தவடிவை விட்டு அணுவளவேனும் இணைபிரியாது கலந்து நின்றால் பேரின்பவெழுச்சியில் உறங்காமலுறங்கலாமென்பதாம்.

331. மணியாடுங் கோணம், மணி—நாதத்திவலைகள் ஆடும்-புரளும், கோணம்-நான்மூலைவெளி, இதன் பொருள் உண்மைக் குரு பிரானையடுத்து திருவருட் தீட்சைபெற்ற மாணாக்கர் கண்மூடித் திறக்கும் போதெல்லாம் நாதவிந்துவாகிய திவலைகள் பரவெளியாகிய லலாடச் சதுர்க் கோணத்தில் காட்சிதருவதைப்பார்த்துப் பரமபத நாட்டத்திருப்பதாம்.

332. உங்களின் வாழ்வு மங்களமாகத் திகழவேண்டுமெனவே, இவ்வாறுயரிய இதோபதேச இரகசியங்களையெல்லாம் புகன்று வருகின்றோம்.உள்ளம் வெங்கலம் போன்ற திடஉறுதியும், வெண்மதிபோன்ற ஒளியும்பெற்று பிரகாசிக்குமாறு தபசியற்றுங்கள்.

333. குணமற்ற மக்கள்கூடி எண்ணற்ற ஸ்தாபனங்களை ஏற்படுத்தினாலும் அருட்சுடர் மன்றத்திற்கு இணையாகுமா? ஆசைமொழிகளை உபதேசித்துக் காசு பணங்களைப் பறிக்கும்

கபடவேடம் உள்ளத்துறவு பூண்டவர்களை எட்டிப்பார்க்குமா? ஆகவே, கிருபைப்பிரகாசச் சம்பத்தை சிதைவுற்றழியா வண்ணம் பாதுகாத்துக் கொள்வதே பக்தர்களுக்கு அழகுதரும்.

334. காரிருளை விளக்கக் கைவிளக்கு அவசியந் தேவைப்படுவது போன்று நாமென்னும் பரம்பொருளின் நடனதரிசனங்காண முனைந்த மக்களுக்கு, குருபக்தியே யாருமறியாத ரகசியப் பாதை வழியே அழைத்துச் செல்லும்.

335. நமது பொன்மொழிகளனைத்தும் உயரிய குணக் கடலோடு ஒப்பிட்டுணர்தல் வேண்டும். அன்னவர்களே அறிவுவளராத மக்கட்கும் இந்நன்னெறிகளைப் புகட்டிப் பின் பற்றுமாறு செய்து பேரின்ப எழுச்சிக்காளாக்குவர். இவை சிந்தனை செய்து தெளிவுறவியலாதிருப்பது புத்தி உயர்ந்த மக்கட்குப் புகழ்தராது.

336. சதாகாலமும் பரிபூரண அன்பை நமது அருட் களஞ்சியத் திறவுகோலாகத் தொடர்பேற்படுத்திக்கொள்ளுவதோடு,மேற்கூறியுள்ள மெய்யுபதேச நல்வழிகள் யாவையும் மீண்டும் மீண்டும் உங்களின் சிந்தனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுகின்றோம். அவைதான் சிரவண, மனன நித்தியாசனத்திற்கு உங்களை அழைத்துச் செல்லும்.

337. சிந்தனையற்றுச் சிறிதளவு நாழிகையேனும் அகக் கடற்கரையிலமர்ந்து சுகப்பூங்காற்று வாங்குங்களென நமதனுபவத்திலிருந்து அறிவுறுத்துகின்றோம். இவை விரும்பிய எவரும் முற்கூறிய அருள் மணிமண்டப வாசல் வழியாகத் தான் செல்லவேண்டும். வேறொரு பாதை கிடையா.

338. நீண்ட ஆயுளோடிருந்து ஆவனசெய்ய விரும்பிய எவரும், நித்திய நியமங்களைச் சரிவரச் செய்து நகைச்சுவை கொண்டு முகப்பொலிவுடன் உலவுதல் வேண்டும். இல்லையேல் சஞ்சல நோய்களும் அகலாமல் சகல நோய்களும் உடலைப் பீடித்து உழலச் செய்யும்.

339. பராபரத்திலிருந்து பரமும், பரத்திலிருந்து சத்தியும், சத்தியிலிருந்து சிவமும், சிவத்திலிருந்து நாதமும், நாதத்திலிருந்து விந்தும்,விந்திலிருந்து வெளிச்சமும், வெளிச்சத்திலிருந்து அறிவும், அறிவிலிருந்து விவேகமும், விவேகத்திலிருந்து வேகமும், வேகத்திலிருந்து உத்வேகமும், உத்வேகத்திலிருந்து உணர்வும், உணர்விலிருந்து உலகமும் தோன்றிய இகவிவகார முடிவின் காட்சியே சித்தாந்தமெனப்படும்.

**340.** இன்னலாகிய இரவுவழிநடந்து, அல்லலாகிய ஆரணியங்களைக் கடந்து,கவலையாகிய மிருகங்களுக்குத் தப்பி, பவசாகரத்தை நீந்தி, மனக்குதிரையைப் பிடித்து நிறுத்தி, சதுட்டயச் சீனியிணைத்து, தீவிரச் சவுக்காலடித்து, நம்பிக்கை லகானை இழுத்து விமரிசைவேகமாக நடாத்தி,வினைதீர்த்தாள் புரிக்குச் சென்று, ஜென்ம சாபல்ய மேடையையடைந்து ஆனந்தமுடன் அமர்ந்து, நீங்கள் இன்புற்றிருக்க வேண்டியே பலபோதனைகளைத் தந்துதவியுள்ளோம்.

**341.** நமது நல்லுபதேசவழி தழுவி நிற்பவர்கள் யாராக இருக்கலாமென யூகிக்கும்போது, இல்லற தருமத்திற்கேற்ற பிரமச்சரிய விரதத்தைப் பெரிதும் காப்பாற்றிய வீரர் களுக்கே தகுமெனல் மிகையாகாது.

**342.** காமக்குரோதாதிகளுக்கடிமையாகி இதுவரை யிருந்ததுபோலல்லாமல், இந்நூலைக் கற்று நற்பயனுற்றுப் பெருமகிழ்வெய்தும்படி நமதன்புக்குரிய வாசகர்களாகிய ஆண் பெண் அனைவரையும் வேண்டுகிறோம்.

**343.** திருடர்களுக்கு இரவு பயன்படுவதுபோன்று அறி யாத மக்களிடம் ஆபாசச் செய்கை மிளிர்வது கண்டு, இடை யிடையே சில வன்மொழிபுகலநேர்ந்துள்ளது. பேரறிவாளர் களாகிய நீங்கள் கருத்தொருமித்துணர்ந்து பிழை கருதாது இம்மணிமொழிகளை ஏற்குமாறு கோருகின்றோம்.

**344.** மகா மேரு பருவதமாகிய மலையுச்சியிலேறி இயற் கையழகைக் கண்டுஇன்புற இயலாவிடினும், அம்மலையின் அடிவாரத்திலிருந்து அழகிய சோலையளாவிய பூங்காற்றருவி யைச் சுவாச வழி பருகுந்தன்மைபோன்று, நீங்கள் அரிய தவம்புரிய முயலாதிருப்பினும், உள்ளன்பு வெள்ளம் பெருகி அரனருள் சேர எளியவழியொன்று உண்டு. அதுதான் இம் **மௌனானந்த மணிமொழிகளை** படித்துச் சிந்தித்துத் தெளிந்து கருணைவழிந்தோடி, கடமுள் உமைக் காண விழைவதேயாம்.



வெற்றி!

# 6. ஞானபண்டிதன்

எண்டிசையோர் கொண்டாடி
இனிதென்றுணர் ஞான
பண்டிதனே வாங்கிப்படி.

## பீடிகை

திருஞானவடிவு என்ற அழகிய நாமம் பையனுடைய பகுத்தறிவிற்கு மிகப் பொருத்தமாக அமைந்திருந்தது. அவனுக்கு வயது பன்னிரண்டு. பெற்றோரில்லாத அநாதைக் குழந்தைகளில் தானும் ஒருவனாகி, இரந்துண்டு வாழ்ந்தான்.

கலையறிவு கிடையாத இச்சிறுவனுக்குக் கருத்தறிவுக் கண்திறக்கப் பட்டிருந்ததால் உலகவிவகார உழல் நிலைகளைச் சதா சிந்தனைசெய்வான். சொற்பொழிவு செய்வோரைத் தேடியடைந்து, சரமாரியாகக் கேள்விகள் கேட்பான். சரியான விடை கிடைக்கப் பெருவிடில் அவர்கள் கூறுவன ஒவ்வாத மொழிகளென உதறித் தள்ளுவான்.

தெளிந்த குரு ஒருவரைத் தெருவிற் கண்டு குருவிற்கு அமைய வேண்டிய அடையாளங்கள் யாவும் அவரிடம் நிறைவாய் நிரம்பியிருத்தலை உணர்ந்து, அவரைத் தன் குடிலுக்கு அழைத்தேகி, ஆசனமொன்றில் அமரச் செய்தான்.

ஞானபண்டிதரின் முன்னிலையில் ஞானவடிவின் ஐயங்கள் அகன்றன. அவர்கள் பேசியவை யாதென நீங்கள் அறிய விரும்புவது இயல்பு தானே?

### 1. கடமையின் உயர்வு

மாணவன்:-

எனது ஞானதேசிக! ஏழைச் சிறியேனின் கேள்விகளுக்குத் தகுந்த பதிலைத் தயை செய்து அருளுமாறு வேண்டுகிறேன்.

குரு:-

எமது இமையா விழியாகிய பாலக! நமது அருளுரைகளைச் செவிமடுத்து, நினதுஐயம் அகன்றபின், நீ செய்யத் துணியுங் கடமைகள் யாவை?

மாணவன்:-

மதிவளராத மக்களை மயக்கும் மாபாதக மனிதர்களை நல்வழிப்படுத்துவதோடு, நாட்டு நலனுக்கேற்ற நற்பணிகளிலும் ஈடுபடுவேன்.

குரு:-

செல்வ! உலகிற்கணக்கிட முடியாத கபட வேடதாரிகள் செய்யும் சூழ்ச்சிகளைக் காலச்சக்கரத்திற் சிக்கிச் சுழலும் மக்கள் வரவேற்கக் காத்திருக்கும்போது, உனதெண்ணம் குறைவின்றி நிறைவேறுமாவெனச் சிந்தித்துப் பார்ப்பது மிக முக்கியமானதாகும்.

மாணவன்:-

முடியாத காரியம் படிமிசை கிடையாதென்பது இச்சிறியேனுடைய உளந்தளராத நம்பிக்கை. எனினும் அநுபவம் நிறைந்த ஆன்றோர் வழிகாட்டியாக அமைதல் சாலச்சிறந்தது.

குரு:-

பேசுவதெல்லாம் பிரணவ மொழிகளெனக் கூறுவதில் யாது பயன்? சொல்லழகிலும் செயலழகே பன்மடங்கு உயர்வானது என்பதை மறவாதே.

மாணவன்:-

ஐயனே! சொல்லும் செயலும் ஒன்றுபட்ட உத்தமர்கள் புரிந்த தொண்டின் பயன் யாது?

குரு:-

தேடிச் சுகித்துச் செத்தழிந்து போகும் வலிவிழந்த வாழ்வை ஒரு பொருட்டாயெண்ணாது, அறப்பணிகளில் ஈடுபட்ட அறவோரின் திருநாமங்கள் உலகுள்ளவரை நிலைபெற்று நிற்பதே அவர்கள் தொண்டின் வெற்றியாகும்.

## 2. வாழ்க்கை நோக்கம்

மாணவன்:-

ஐயனே! இல்வாழ்வை மேற்கொண்ட மாந்தர், எத்தகைய இலட்சியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்?

குரு:-

குழந்தாய்! பரோபகாரப் பணிக்காகத் தோன்றிய ஊனுடலைத் தனக்கென இயக்கி இகழ்வும் இடையூறும் பெருமல், புனிதப்பணி புரிந்து புகழுடலோடு வாழ்வதே இல்வாழ்வோரின் குறிக்கோளாயிருக்க வேண்டும்.

## 3. இகபரம்

மாணவன்:-

சுவாமி! இல்லறம் துறவறமென்னும் இரண்டினுள் எதனை மேம்பாடுடையதாகக் கருதலாம்?

குரு:-

இலௌகீக மேடையின் மீதேறி விவகாரச் சொக்கட்டான் விளை யாடும் மக்களை இல்லற நெறி தழுவியவர்களெனவும், ஆட்டத்திற்குப் புறம்பே நின்று மற்றவர்களை, 'விவேகமுடன் விளையாடி முடிவு காணுங் கள்' எனத் தனது அநுபவ நல்லுரைகளை அருளுகிற மெய்யடியார்களைத் துறவிகளெனவுங் கூறப்படும். எனினும் இல்லறத்தோடு இணைந்த துறவு நெறிதான் போற்றற்குரியது.

## 4. தொண்டும் தொண்டரும்

மாணவன்:-

பிரபு! பற்றற்ற தவத்தினையுடையோர் எனக் கூறிக்கொண்டே, பலவித துரோகச் செயல்களில் ஈடுபடுவது நியாயமாகுமா?

குரு:-

புதல்வ! அரிய தவயோகிகளான அருளுபதேச ஆசிரியர்கள், துவரா டையுடன், துளப மணிகளையும் தவவேட அடையாளங்களாகப் புனைந்து, தேசமக்களுக்குச் சிறந்த சேவை புரிய முற்படுவார்கள். ஆனால் பிசகு செய்யும் பேயரின் உண்மை நிலைமையை உணராது, அன்னாரைப் பெரியார்களென மதித்து மோசம் போவது பகுத்தறிவிழந்த மனிதர்களின் இயல்பாயுள்ளது.

## 5. செயலற்ற செய்கை

மாணவன்:-

சுவாமி! சிறிது நேரம் பேசப்பழகியவர்களெல்லாம் தம்மைத் தேசத் தொண்டர்களெனக் கூறிக் கொள்கிறார்களே, இப் பெயர் அவர்களுக்குப் பொருந்துமா?

குரு:-

மகனே! மக்களின் பரிதாப நிலையைப் போக்க வேண்டி, அவர்களின் அறியாமையால் கிடைக்கும் உதைகளையும், உதாசீன மொழிகளையும் உபகாரச் சம்பளமாக ஏற்றுப் பணியாற்றவல்ல, கலங்கா நிலையினையு டைய சித்தந் தெளிந்த பேரறிஞர்களே தொண்டர்களாவர். இதை விடுத்து, பலர்க்கெனப் பரிந்துரையாடி தனக்கெனத் தனசேகரஞ் செய் வோர்களைத் தொண்டர்களென அழைத்தல் தகாது.

## 6. சன்மார்க்கம்

மாணவன்:-

சுவாமி! சன்மார்க்க நெறியைத் தழுவி நடக்க வேண்டுவது முக்கிய மெனக் கூறுகின்றீர்களே? அதன் கருத்தென்ன?

குரு:-

நாட்டின் நலனுக்கு உழைக்காத துன்மார்க்கர்களான குடிகாரன், கூத்திக்கள்ளன், சூதன், வாதன் சோம்பலுடையோன் ஆகியோரின்

உறவை நீக்கி சற்சனர்களை அணுகி ஒழுக்கந் தழுவி உலகில் வாழ்வதே சன்மார்க்கமாகும்.

## 7. உணவு நெறி

மாணவன்:-

சுவாமி! ''உண்ணத்தகுந்தது சைவ உணவே'' எனக் கூறி, மாமிச உணவை வெறுத்து ஒதுக்குவதேன்?

குரு:-

புதல்வ! சத்துள்ள ஆகாரப் பொருட்களால் இரத்த விருத்தியும் உத்தம குணமும் வளர்கிறதெனத் தற்கால வைத்திய நிபுணருங் கூறுகின்றனர். உண்ணும் உணவும் எண்ணும் நினைப்பும் பரிசுத்தமாக இருந்தாலல்லாது பருப்புச் சாம்பாரும் பாயச உணவும் சைவமாகி விடாது. எனவே அசைவமகற்றிச் சைவம் கடைப்பிடி என்பதே ஆன்றோர் வாக்கு.

## 8. வேதாந்த-சித்தாந்தம்

மாணவன்:-

வேதாந்தம் சித்தாந்தமென வெகுகாலமாக வாதிட்டு முடிவு காணாதிருக்கின்றனரே, இதன் பொருள் யாது?

குரு:-

புதல்வ! சுருதி, யுக்தி, அநுபவ முடிவை நன்காராய்ந்து விதி யோடு போராடி வெற்றிகண்ட பெரியார்கள், தமது அநுபவங்களை நூல்வடிவிலாக்கித்தந்துள்ளதே வேதாந்தம். அத்தகைய நன்னெறியைப் பின்பற்றி நடப்பதே சித்தாந்தம். இவ்விரு பிரிவும் ஒரேவழி என்னும் உண்மையை உணராதவரே தர்க்கம் புரிவர்.

## 9. கடவுள் நிலை

மாணவன்:-

சுவாமி! கடவுளென்ற ஒரு பரம்பொருள் உலகெங்கும் நிறைந் துள்ளதெனக் கூறுகின்றனரே, அது உண்மையா? கற்பனையா?

குரு:-

மகனே! வெட்டவெளியாகி எங்கும் நிறைந்த பரஞ்சுடரை வெட்டாத சக்கரம் பேசாத மந்திரமெனப் போற்றிப் புகழ்வது பொய் யன்று. தெய்வத்தன்மைவாய்ந்த குருபிரான் திருவடி தீட்சை தரப் பெற்றதும் ஒளியுள் ஒளியாகிய நீலநிறச் சைதன்னியக் காட்சியை அறிவுக் கண்ணாலறிந்து ஆனந்தமுறலாம். இதுவே கடவுட் காட்சி.

## 10. ஆலய வழிபாடு

மாணவன்:-

சுவாமி! ஆலயங்களுக்குச் சென்று உருவவடிவங்களை வணங்கி அர்ச்சனைகள் செய்ய வேண்டுமா?

குரு:-

பாகவத புராணங்களைப் படிக்கத் தெரிந்த பிறகு, பாலர் பாடப் புத்தகம் தேவைப்படாததுபோல, திருவருள்பெற்ற மெய்யடியார்க்குக் கோவிலும் குளமும் கோவிந்த நாமமும் வேண்டுவதில்லை. ஆனால், பக்திவளராத மக்கட்கு ஆலய வழிபாடு மிகவும் முக்கியம்.

## 11. உலக வாழ்வு

மாணவன்:-

ஐயனே! கயமைகள் பெருகிய தற்கால உலகில் பயமின்றி வாழும் வழி யாது?

குரு:-

மரண பயமற்ற மனிதர்களாக வாழ்ந்த மகா யோகிகளின் வரலாறுகளை நீ படித்ததில்லையா? பந்தத்திற் சிக்கிய மனம் விடுதலை பெறச் சாதன சதுட்டயங்களை அநுட்டித்து வந்தால், தூல சூக்குமம் கடந்து காரண உடலைக் கண்டுபிடித்துவிடலாம். பின்னர் உலகில் பயமின்றி வாழலாம்.

## 12. சாதன சதுட்டயம்

மாணவன்:-

தேவ! சாதன சதுட்டயங்களின் உட்பொருளையும் அதனால் விளையும் பயனையும் அன்புகூர்ந்து அருளிச் செய்யுங்கள்.

குரு:-

கண்ணே! அரிதாகக் கிடைத்துள்ள இவ்வுடலை ஆரோக்கியமாக வைத்து இடைவிடாது பணிபுரிய நம் முன்னோர் கையாண்ட இயற்கைச் சாதனமே யோகாசனங்கள்.

பன்னிரண்டங்குலம் பாய்ந்து வீணாகும் பிராணனை நான்கு அங்குலமாக்கி ஆயுளை வளர்ப்பதே சதுட்டயம். இவற்றை எல்லோரும் தவறாது அநுட்டித்துப் பயன் பெறுதல் நன்று.

## 13. மந்திரம்

மாணவன்:-

சுவாமி! மந்திரவாதிகளென்போரிற் சிலர் மனித வாழ்க்கைக்குக் கேடு புரிவதாகக் கூறுகின்றனரே? அது உண்மையா?

குரு:-

சகல காரியங்களிலும் விபரீத எண்ணங்கள் பெருகி, எக்காலத்திலும், அறியாமை மிகுந்த பாமர மக்களை ஏமாற்றும் எத்தர்கள் காணப்படுவது உண்டு. இவ்வித எத்தர்களிற் சிலரே மந்திரவாத மாய வேலைகளில் ஈடுபடுகின்றனர். அறிவுச் சுடர் பெற்றுத் திகழும் ஆன்ம ஞானிகளிடம் மந்திர தந்திரம் பலிக்காது.

## 14. கால நிகழ்ச்சிகள்

மாணவன்:-

சுவாமி! கடந்தகால ஆகம புராணங்களும் நிகழ்கால அறிஞரின் நூல்களும் ஒரே தன்மையுடையனவா?

குரு:-

புதல்வ! உண்மை கடுகளவும் கற்பனை மலையளவுமாகச் செறிந்துள் ளனவே புராணங்கள் தவிர, நிகழ்கால நூல்களிற்பல உண்மைச் சம்ப வத்தை அடிப்படையாகக் கொள்ளாத கற்பனைக் கதைகளேயாகும். இவை ஒன்றிற் கொன்று கருத்தில் மாறுபடுவனவாம்.

## 15. வீரர்கள்

மாணவன்:-

சுவாமி! புகழுக்குரிய சுதந்திர வீரர்கள் யார்?

குரு:-

பாலக! நாட்டுச் சுதந்திரம் வீட்டுச் சுதந்திரம் எனப் பிதற்றித் திரியாமல், ஆன்ம சுதந்திரம் பெற்ற அடியார்களே புகழ்தற்குரிய வீரர்களாவர்.

## 16. அடியார்

மாணவன்:-

சுவாமி! ஞானியர்க்கு அடியார்களென்ற திருப்பெயர் யாரால் அளிக்கப்பட்டது?

குரு:-

குழந்தாய்! மனித சமுதாயத்தின் சிறந்த பணியாளனுகி கடமை யைத் திறம்பட ஆற்றி, மக்களுக்கு வாழும் வகையை வகுத்துக் கொடுத்த நல்லாரை, மாந்தர் அகமும் முகமும் மலர்ந்து ''அடிகளே வருக! வருக!'' எனச் சூட்டியதே அடியார் என்னும் திருப்பெயர்.

## 17. நரகமும் புண்ணியமும்

மாணவன்:-

சுவாமி! நரகம், புண்ணியம் என்பவை மெய்தானு?

குரு:-

புதல்வ! நோய்வாய்ப்பட்ட உடலுடன் தீயஎண்ணமும் தீயசெய் கையும், சதா கவலை நிறைந்த வாழ்வும் அமைதலே நரகம்.

நல்லுடலும், நல்லெண்ணமும், நற்செய்கையும் மனமகிழ்வும் அமையப் பெறுதலே புண்ணியம். இவற்றைத் தவிர வேறு நரக புண்ணிய லோகங்களில்லை.

## 18. முத்தி நிலை

மாணவன்:-

சுவாமி! ஆன்ருேர் தவம் புரிவதன் நோக்கமும் முத்தி நிலையும்யாது?

குரு:-

மகனே! இன்ப துன்ப மிரண்டிலும் ஒருமைப்பாடுடையராய், சதா மன அமைதியுடன் ஆனந்தமாய் வாழலே முத்திநிலே. இதை விடுத்து வாழ்வுப் போராட்டத்திற்குப் பயந்து, நாட்டுப் பணியினே நற்றவமாகக் கருதாது, ஊரை வெறுத்து, ஒட்டாண்டியாகி, காட்டையடைந்து கண் மூடியிருப்பது நல்ல தவமாகாது.

## 19. மக்களும் மாக்களும்

மாணவன்:-

சுவாமி! மக்களுக்கும் மாக்களுக்குமுள்ள வேறுபாடுயாது?

குரு:-

மகனே! நேர்மை, கலேயறிவு, அடக்கம், நல்லொழுக்கம், பகுத்துணர்தல் போன்ற நல்லியல்புகள் அமையப்பெற்ற மாந்தரே மக்களெனப் படுவர்; ஏனேயோர் விலங்குகளே ஒப்பர்.

## 20. ஊழின் பயன்

மாணவன்:-

சுவாமி! ஊழ்வினே, தலேவிதி எனக் கூறுகின்றனரே அதன் கருத் தென்ன?

குரு:-

மைந்த! யான், எனது என்னும் ஆணவப் பேயால் பீடிக்கப்பட்டு நல்லுரை பகர்ந்த சற்குருவின் அமுத மொழிகளேப் புறக்கணித்து, மனம் போனபடி மதிகெட்டலேந்து வாழ்வில் அவதிப்படும்போது, தன்குற்றத் தை மறைக்க, தலேவிதியின்மீது பாரத்தைப் போடுகின்றனர்.

இயற்கைத் தெய்வமாகிய அன்னே பராசக்தியின் அருள்பெற்று அவளுடன் கலந்து மகிழ்ந்து வாழ்தலே ஊழ்வினேயின் பயன்.

## 21. உயிர்ப்பலி

மாணவன்:-

சுவாமி! இறைவன் திருக்கோயிலில் வாய்பேசா உயிரினங்களே, இறைவன் பெயரால் பலியிடும் தீய வழக்கம் ஒழியாதா?

குரு:-

செல்வ! ''எல்லா உடலும் இறைவன் ஆலயமே'' என்ற உண்மையை உணராப் பாமர மக்களே ஆடு, கோழி போன்ற சிற்றுயிர்களே ஆலயங்களில் பலியிடுகின்றனர். இறைவன், ''நினேப்பவர் நெஞ்சகத் தையே இருப்பிடமாகக் கொள்பவன்'' என்ற அநுபவ உண்மையை அவர்கள் உணர்வார்களாயின் பலியிடுதலும், ஆடம்பரக் கொட்டு முழக்கமும் தானே அகன்றுபோம்.

## 22. உபசரிப்பு

மாணவன்:-

சுவாமி! தொண்டர்களுக்கு மலர் மாலைகளும் கைதட்டலும் தேவையா?

குரு:-

தலைவர், புலவர், முனிவர் போன்ற தக்கார்க்கும், நல்லன்பருக்கும் எலுமிச்சங் கனியைத் தந்து, அன்பு மலரைச் சொரிந்து வழிபட்டு நிற்றலே போதும். இதைத் தவிர, வேறு மலர் மாலையும், ஆரவாரமும் தேவையில்லை.

## 23. விஞ்ஞானி

மாணவன்:-

சுவாமி! ஆராய்ச்சியில் வல்ல விஞ்ஞானிகளைக் கடவுளெனப் போற்றலாமா?

குரு:-

அப்பா! ஆற்றுமணலைச் சோற்றுப் பருக்கையாகவும், காடுமலைகளைக் கறிபதார்த்தங்களாகவும், கடல் நீரைக் காப்பி தேநீராகவும் படைக்கலாமென ஆராய்ச்சி தொடர்ந்துகொண்டுதான் இருக்கும். ஆட்களைக் கடவுளாகக் கண்டு வணங்குவதைவிட அன்னாரின் அறிவுச் சுடருக்கு மரியாதை தருவதே மிக மேன்மையாகும்.

## 24. வாழ்வின் முடிவு

மாணவன்:-

வாழ்க்கையின் இறுதியில் நிகழும் வியப்பான நிகழ்ச்சிகள் யாவை?

குரு:-

குழந்தையாகப் பிறந்து, படிப்படியாக வளர்ந்து, இளைஞனாகி இன்பத்தை நுகர்ந்து, வளர்ந்த உடல் தளர்ந்து, முடிவில் மறைந்தொழிவதே வியப்பான நிகழ்ச்சியாகும். வேறு ஆச்சரியமில்லை.

## 25. தவநிலை

மாணவன்:-

சுவாமி! இறைவனை நாடித் தவம்புரிந்தால் இறவாவரம் பெறலாமெனக் கூறுவதில் உண்மை உண்டா?

குரு:-

செல்வ! ஓங்கார வெளியில் அழியாத ஒளியுள் ஒளியாகமாறி, ஒன்றுகக் கலந்து, உலகை மறந்தியற்றிய உயர் தவத்தால் தன்னையுணர்ந்த உண்மையுணர்வே சாகாதிருக்கும் சகச சமாதி நிலையாகும். இந்த இறவாநிலை ஆன்மாவிற்குமட்டுமே உரியது. ஊனுடலுக்கன்று.

## 26. காயசித்தி

மாணவன்:-

சுவாமி! சஞ்சீவி மூலிகைகளும் இறவா மனிதர்களும் இவ்வுலகில் உண்டா?

குரு:-

புதல்வ! பொதுமறையருளிப் புகழுடம்போடு உலகிடை நிலவும் வள்ளுவனும், சாமவேத நாயகனும், சிவயோகச் செல்வனுமான இராவணவேந்தனும், முறையே திருக்குறள், இசைமறை என்னும் இரு சஞ்சீவிகளை உலகிற்களித்து இன்றளவும் இறவாவரம் பெற்றவராய் மாந்தரின் இதயத் தாமரையில் புகழுருவோடு அமைந்துள்ளனர்.

## 27. எமதூதர்

மாணவன்:-

சுவாமி! எமதூதர்கள் உயிரைக் கவர்ந்து செல்லுகிறார்களெனக் கூறுவதில் உண்மையுளதா?

குரு:-

செல்வ! போகம், புத்தியைமறைக்கும் மது, பொல்லாஉணவு, கூடா ஒழுக்கம் இவற்றை மாந்தர் அளவுகடந்து மேற்கொள்வதால் நோய்களென்ற எமதூதர், கொஞ்சங் கொஞ்சமாக உடல்வலிவை உறிஞ்சி, மனைமக்கள் கதறியழ உயிராகியசத்தைப் பிரித்துக் கொண்டு செல்கின்றனர், அசத்தாகிய புற உடல், மண்ணாலோ, நெருப்பாலோ, உருமாறியழிகின்றது. இதுவல்லாது வேறு எமதூதர் எவரும் எருமைக் கடாவின்மீதமர்ந்து வருவதில்லை.

## 28. கற்புநெறி

மாணவன்:-

சுவாமி! கற்புநெறி தவறாது வாழும் ஆண் பெண்களுண்டா?

குரு:-

செல்வ! தெய்வீகக் காதல்வயப்பட்டவராய் பார்வையை உள்ளாக்கிச் சமாதி செய்யத்தெரிந்தவர்களே கற்பினைக் காத்துக்கொள்ளும் ஆற்றல் வாய்ந்தவராவர். இத்தகைய நிலை பெற்றவர் மனித சமுதாயத்தை ஊனுடலாகக் காணாமல் கடவுள் ஆலயமாகக் காண்பார்கள். இந்நிலையைப் பெறாதோர் கற்பு நெறியைச் செவ்வனே கடைப்பிடிக்கமுடியாது.

## 29. சடங்குகள்

மாணவன்:-

சுவாமி! சாத்திரம், சடங்கு, சகுனம் ஆகியவை எப்பொழுது அகலும்?

குரு:-

புதல்வ! அகத்திலே பரவியுள்ள அகவிருள் ஞானசூரியனின் கிரணங்களால் அகலும்போது, சாதகம், சடங்கு, சகுனம் இவற்றைப் பற்றிய வீண் பிரேமையும் நீங்கிவிடும்.

## 30. வளம்பெற வழி

மாணவன்:-

சுவாமி! பிணியும் வறுமையுமின்றி, மக்கள் வளமுடன் வாழும் வகையாது?

குரு:-

புதல்வ! செல்வாக்குடைய பெருந்தகையோர்கள் உயர்நோக்குடைய உத்தமர்களாகிப் பகுத்துண்டு வாழும் பண்பை வளர்ப்பார்களாயின் பஞ்சமும் பிணியும் பறந்தோடிவிடும்.

## 31. சாதிப்பேய்

மாணவன்:-

சுவாமி! சாதி, மத, நிறக்கர்வம் பாராட்டுவோரை என்னவென்று அழைப்பது?

குரு:-

செல்வ! வகுப்புவாதம், இனப்பிரிவினை ஆகியவை நிறைந்த கள்ள மனத்தினரை மாந்தரில் தாழ்ந்தோராக மதிப்பதில் தவறொன்றுமில்லை.

## 32. மறுபிறவியுண்டா?

மாணவன்:-

சுவாமி! மரணத்தின் பின் மறு பிறவியுண்டா?

குரு:-

செல்வ! மறந்த செயல்களை ஆலோசனை செய்து மீண்டும் அறிந்து கொள்வதுபோல, மாயப்பிரபஞ்சத்தின்பால் பற்றகலாமனதுடன் இறப்போர், அப்பற்றின் காரணமாக மீண்டும் உடற் கூண்டிற் புகநேரிடும். ஆனால், தன்னையுணர்ந்த தத்துவ ஞானியரை மறுபிறவி அணுகமாட்டா.

## 33. வாழும் வகை

மாணவன்:-

சுவாமி! தவம் புரிதற்கேற்ற முறைகள் யாவை?

குரு:-

புதல்வ! தினந்தோறும் வைகறையிலெழுந்து, மலசலங்கழித்து உன்னாலியன்ற யோகாசனங்களைச் செய். பின்னர், தூய நீராடி நல்லாடையணிந்து, பத்மாசனத்திலமர்ந்து சிந்தையைச் சிதறவிடாது, புருவமத்தியில் நிலை பெற்றிருக்குமாறு செய்து தியானத்தில் அமர்ந்திரு. பிறகு எழுந்து நின் கடமைகளை வெற்றிகரமாகச் செய்ய முற்படு.

## 34. அகக்கருவிகள்

மாணவன்:-

சுவாமி! ஆக்க வேலைகளில் ஈடுபடுகிற மெய்யன்பர்களுக்கு தேவைப்படுவன யாவை?

குரு:-

குழந்தாய்! உயரிய கடமையை ஒப்புக்கொண்ட அறிஞனிடம் அன்பு, அடக்கம், ஊக்கம், உணர்ச்சி, பொறுமை, நேர்மை, சர்வமத சம்மதம் ஆகிய அறநெறி ஆயுதங்கள் மக்களின் மதி நுட்பத்திற்கு ஏற்பக் கையாளக்கூடிய கருவிகளாக அமைதல் நன்று.

## 35. எதிர்காலத் தேவை

மாணவன்:-

எதிர்கால இடையூறுகளைச் சமாளிக்க எத்தகைய சக்திகளைக் கையாளுதல் வேண்டும்?

குரு:-

மக்களுடைய மனோ நிலை மிகக் குழப்பமுற்று, கட்சியும் புரட்சியும், புயலுமாக நிகழ்கால வாழ்வைப் பாழ்படச் செய்து வருவது கண்கூடு. இதனைச் சீர்படுத்த ஆத்மீக சக்திதான் தேவைப்படும்.

## 36. சூது

மாணவன்:-

சுவாமி! குதிரைப் பந்தயமும் லாட்டரியும் கூடாதெனக் கூறுகின்றார்களே, அவை சூதா?

குரு:-

குழந்தாய்! பொருளாவலால் பந்தயத்தில் வெற்றி தோல்வி காணப் புறப்பட்டு, பொருமை செறிந்த தீய எண்ணங்களையும் செயல்களையும் வளர்க்கவல்ல இவ்விளையாட்டுக்கள் நஞ்சினும் கொடிய சூதேயாகும்.

## 37. சாத்திரங்கள்

மாணவன்:-

சோதிடம், பஞ்சாங்கம், பட்சிசாத்திரம் முதலியன பார்ப்பதில் நன்மையுண்டா?

குரு:-

சோ-என்பது ஆத்மா; திடம்-என்பது நம்பிக்கை. ஆத்மசக்தியும் நம்பிக்கையுமே வாழ்வின் உயர்வுக்குக் காரணமாயுள்ளன. ஆகவே, பஞ்சாங்கமும் பட்சிசாத்திரமும் மனித வாழ்வில் எவ்வித மாறுதல்களும் செய்யச் சக்தியற்றனவாம்.

## 38. இராமனும் ஆத்மராமனும்

மாணவன்:-

சுவாமி! இராமன் கடவுளா?

குரு:-

அயோத்தி மன்னனான இராமன் சாதாரண அரசனே தவிரக் கடவுளன்று ஆனல், உங்கள் இதயத்துள்ளே சீவசாட்சியாக விளங்கும் ஆத்மராமனைக் கடவுளாகக் காணுதல் நலம் தரும்.

## 39. பத்துத்தலைகள்

மாணவன்:-

இராவணனுக்குப் பத்துத் தலைகள் எவ்வாறு அமைந்திருந்தன?

குரு:-

மகனே! அருளாளனான இராவணன் தனது எதிரிகள்கண்டு நடுங்கக்கூடியவாறு அளவிறந்த ஆற்றலைப் பெற்றிருந்தான். அதனைக் கண்டு மயங்கிய அவன் எதிரிகள் அவனைப் பத்துத் தலைகளையுடையவன் (அதாவது சாதாரண அரசரினும் பத்து மடங்கு வலிமை மிக்கவன்) எனக் கற்பனைக் கதையை அவிழ்த்துவிட்டுள்ளனர். தவிர, இதற்கு வேறொரு பொருளுமுண்டு.

ஒவ்வொருவரிடத்தும் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மச்சரம், டம்பம், ஈர்ஷை, தர்ப்பை, அசூயை ஆகிய பத்துத் தீய குணங்களும் பத்துத் தலைகளாக அகங்காரத்தால் தோன்றுவதுண்டு. இவற்றை (அருவனம்) அழித்தொழியாத காடு எனக் கூறுவதுண்டு.

## 40. விக்கிரகங்களின் உட்பொருள்

மாணவன்:-

ஆலயங்களிலுள்ள மூர்த்தங்களுக்கு யானைமுகன், ஆறுமுகன் என்றெல்லாம் புனைபெயர் சூட்டக் காரணமென்ன?

குரு:-

ஓங்காரவடிவம் யானையாகவும்,ஆருதாரங்கள் ஆறு முகங்களாகவும் உருவகம் செய்யப்பட்டுள்ளன. இதனை அனுபவத்தில் குருபிரான் துணைகொண்டு கான முயல வேண்டும்.

## 41. ஐயம் அகலல்

மாணவன்:-

ஞானவள்ளலே! தங்களுடைய திருவாய் மொழிகளைச் செவிமடுத்து என் அகத்தில் குடிகொண்டிருந்த ஐயங்கள் யாவும் அகலப்பெற்றேன். இனிமேற்பட எனது கடமைகள் எவ்வாறு திகழ வேண்டும்?

குரு:-

எமது மனமலராகிய மகனே! உலக பண்டிதன் உடல் நலம்பெற மருந்து தந்து உதவுதல் போல, அடியேனுடைய அருளுரைகளை ஏற்று உனது அகநோய்களகன்றமை பற்றி மிகவும் மகிழ்வு. நமது வினா விடைகளை மற்றைய மக்களும் கற்றுத் தெளிவுறும்படி, தொகுத்து புத்தக வடிவாக்கி ஞான பண்டிதனென்ற நற்பெயரிட்டு வெளியீடு செய்து நாட்டுப் பணியாற்றித் தெய்வீகக் காட்சி விளங்கித் திகழ்வாயாக!!

## கிளிக்கண்ணி மெட்டு
### வினுவிடை.

மாணவன்:-

அஞ்ஞானங்களகன்று மெய்ஞ்ஞானம் பெற்றேமென்ற
விஞ்ஞானக் கூட்டமெல்லாம் - குருவே
வீண்மரணமாவதென்ன - குருவே.

குரு:-

அழியாப்பொருளது வொன்றுளிபோ லிருக்குதகை
தெளியாத புத்தியினல் - குழந்தாய்
திகைப்புற்று மாளுகிருர் - குழந்தாய்.

மாணவன்:-

திகைப்புத் தெளிந்து மனம்பதைப்பற்றிருக்கவொரு
வகைத் தந்திரஞ் சொல்லுவீர் - குருவே
வையகத்து மக்களுக்கு - குருவே.

குரு:-

நானில மக்களுக்கு நாமுண்மை யெடுத்துரைப்போம்
வீணிலிதை மறுத்தால் - குழந்தாய்
வினைவந்து சூழுமடா - குழந்தாய்.

மாணவன்:-

வினைவந்து சூழுவதேன் விபரமதையெனக்கு
நினைவிலிருத்துமையா - குருவே
நிற்கும்நிலை சொல்லுமையா - குருவே.

குரு:-

சொல்லுவோம் கேள்மகனே வல்வினையகல வுந்தன்
கள்ளைப் பருகிவந்தால் - குழந்தாய்
கசடற்றுப் போகுமடா - குழந்தாய்.

மாணவன்:-

கசடற்றுப் போகுமென வசனித்த யென்குருவே
விசனப் படும்படியாய் - குருவே
வீணிலிதை நான்வெறுத்தேன் - குருவே.

குரு:-

வெறுத்ததினுலே யினிவருத்தப்படாதே கண்ணே
ஒறுத்துநீ பாராமலே - குழந்தாய்
உண்டிடுவாய் மூலகற்பம் - குழந்தாய்.

மாணவன்:-

கற்பமதை நானினிமேல் தப்பிதமெண்ணுதருந்த
எப்போதுமே யுலகில் - குருவே
இருக்குமா யிச்சடலம் - குருவே.

குரு:-

உடலை நிலைநிறுத்தி யுலகத்தில் வாழவல்ல
கடவுளடி காணவே - குழந்தாய்
கற்பமிது அற்புதமாம் - குழந்தாய்.

மாணவன்:-

அற்புதமானயிந்த அமிர்தத்தை நாமருந்தி
சொற்பநாளில் மடிந்தால் - குருவே
சுகமொன்று மில்லையன்றே - குருவே.

குரு:-

கற்பமதை யுண்டாலென்ன காயசித்தி பெற்றுலென்ன
அப்ப னழைப்பு வந்தால் - குழந்தாய்
அவசியம் போய்விடனும் - குழந்தாய்.

மாணவன்:-

போய்விட வேண்டுமென்று புகன்றிட்டீர் சுவாமிகளே
காயிலுதிர்ந்து விடில் - குருவே
கனியுண்ப தெவ்விதமோ - குருவே.

குரு:-

கனியுண்ண வேண்டுமெனில் தனிமையாய் நீ தவஞ்செய்
முனிவனுமாகிடலாம் - குழந்தாய்
மோசமுனக் கில்லையடா - குழந்தாய்.

மாணவன்:-

மோசமில்லை யென்றுரைத்த மாசற்ற என்குருவே
ஆசையை வேரறுக்க - குருவே
அதற்கேதும் மார்க்கமுண்டோ - குருவே.

குரு:-

பாருக்குளிருக்கும்வரை யாருக்குமே ஆசையுண்டு
மார்க்க மறிந்தாயானல் - குழந்தாய்
மனம்நிலை நிற்குமடா - குழந்தாய்.

மாணவன்:-

நிற்கும் நிலையுரைக்க பக்குவம் எனக்கில்லையோ
எக்காலந்தான் செல்லுமோ - குருவே
என் எண்ணமது ஈடேறுமோ - குருவே.

குரு:-

ஈடேற வேண்டுமெனில் ஓடாதே அங்குமிங்கும்
கூடான உன்னுடலில் - குழந்தாய்
குடியிருக்க நீ பழகு - குழந்தாய்.

மாணவன்:-

இருக்கப் பழகெனவே உருக்கமாய் சொன்னசுவாமி
கிறுக்குப் பிடித்தமனம் - குருவே
பறக்குதையோ பாருலகில் - குருவே.

குரு:-

பாருலகில் பாய்வதற்குன் பாசமதே காரணமாம்
கூறுவோம் கேட்டிடுவாய் - குழந்தாய்
கோபமதை விட்டிடுவாய் - குழந்தாய்.

மாணவன்:-

பாவமதையே புரியும் கோபமதை விட்டொழித்தும்
காமனவன் போராட்டத்தால் - குருவே
கண்ணிழந்து நோகிறேனே - குருவே.

குரு:-

கண்ணையுன்னுள்ளேதிருப்பு விண்ணுலகிலேயிருந்து
அன்னை வருவாளிறங்கி - குழந்தாய்
அருள் மொழியை நீ மறவேல் - குழந்தாய்.

வெற்றி!

# 7. சீர்திருந்து மனிதா!



ஏ! மனிதா!

1. செய்வதறியாது செய்த தீங்குகள் யாவையும் நினைந்து சீர் திருந்தி, அறிந்தும், திருந்தாது பிழை செய்கிற அறிவிலிகளை அஞ்சாது கண்டித்து திருந்தச் செய்வதே நினது சிறந்த கடமை.

2. தூக்கமே சுகமென உணரும் சோம்பேறிகளுக்குச் சுறுசுறுப் பூட்டி, ஆன்ம வீரர்களாக ஆக்கத்தக்க அறத்தொண்டனாகத் திகழ்வதே நினது பிறவிக்கு உரித்து.

3. நினது பேரறிவாகிய கடலில் குறையற மூழ்கி, குற்றம் கடப்பின், மாசற்ற தூயவனாக மக்களால் மதிக்கப்படுவாய். ஆதலால், நீ உனக்கு நல்லவனாக ஆசைப்படு.

4. கவலையாகிய விலங்கைக் கழற்றி எறியாதவரை, இனிய சுகமானது உதயமாகாது. ஆன்ம வலிமையோடு கூடிய அன்பும், பொறுமையும் உனக்கு முக்கியமாகும்.

5. அக்கிரமம் மிகுந்த மனிதர்களுக்கு அடிமைகளாகிய மக்களைப் பக்குவப்படுத்துவதாகப் பறைசாற்றி, மனைவி மக்களுக்காக மட்டிலும் தேடித் திரட்டும் திருட்டுத் தொழிலைக் கையாளாதே.

6. புன்னகை தவழும் இன்னுரையோடு நல்லறம் தழுவிய இல்லற மானது, மாற்றமுடியாத மனத்துயரோடு இயங்குமானால், கூற்றுவனோடு கூடியழிந்த கூண்டாய் முடியுமென்பதை மறக்கவேண்டாம்.

7. இழுக்கை மறைத்து ஒழுக்கமுடையவனாகப் பசப்பி உலகில் வசிக்கப் பிரியப்படுவாயாகில் நினது கடமைகள் யாவும் கொள்ளிக் கட்டையைக் கொண்டு தலையைச் சொறிந்த கதையாக முடியும்.

8. உள்ளக் கிளர்ச்சியிலிருந்து விழிப்பெய்தி உலகச் சமரசம் காண்பதை விடுத்து, புரட்சிக்கவிகளை மட்டிலும் படித்து கட்சிப்பிளவுகளை உயர்த்த மனங்கொள்ளாதே.

9. பகுத்தறிவை இழந்தவன் இகவாழ்வு, ''பருந்தெடுத்தேகிய'' மண்டுகமாகும். ஆதலால் நினது அறிவுச் செல்வத்தோடணுகி இல்லம் புகுதல் சிறந்த நலனைத் தரும்.

10. மூட நம்பிக்கையுடன் போரிட்டு வெற்றி கண்ட வீரனாகத் திகழாவிடில், தன்னம்பிக்கையற்ற வீணர்களிடையே காணப்பெறும் வெறுக்கத்தகுந்த வெட்கக்கேட்டை ஏற்பதில் உன்னையும் ஒருவனாகவே உலகம் கருதும்.

11. மக்கள் இடுக்கணைத் தடுக்கவியலாத மனிதனாகிய நீ அடுக்கு மொழிகளை மட்டிலும் புகல்வதால் பயன்தராது. ஒப்பற்ற நினது அரிய சேவையை உடனுக்குடன் உதவுவதுதான் மிகவும் உசிதமாகும்.

12. கோபவெறியால் குடிகெட்ட மனிதர்களை மனதிலெண்ணி, கிருபைக்குரிய பொறுமையை மேற்கொள்வாயேல், மக்கள் அனைவரி டத்தும் அன்புள்ள அபிமானியாகப் போற்றப்படுவாய்.

13. ஒளி மழுங்காத விழிகளையுடைய நீ, ஒழுக்க நிறையற்ற வனாகக் காண்பாயாகில், கற்பத்தில் கண்கெட்ட கபோதிக்கும் மேம்பட்ட வனென்று உன்னை எப்படிக் கருதமுடியும்?

14. அளவற்ற அற்ப விஷயங்களில் புகாதபடி, மனதை ''அந்தர் முகமாக'' திருப்பிவிடுவாயாகில், சிறந்த ஆத்ம ஞானியாகப் பிரகாசிக்கலாம்!

15. நரை, திரை, மூப்பாகிய முப்பிணிகளையும் போக்கலாமென உபயோகமற்ற வாய்வேதம் பேசுதலை விடுத்து, நினது அவயவங்களைப் பயன்படுமாறு பக்குவப்படுத்து.

16. கண்டவாறு அலைகிற பொறிபுலன்களைக் கட்டுப்படுத்த முடி யாமல் விட்டுக்கொடுத்து விடுவாயாகில், ஆபாசமகிய ஆசைக்கிடங்கில் வீழ்ந்து கரையேற முடியாதபடி தடுமாற வேண்டி நேரிடும்.

17. உயிர் பரவிய உலகை மட்டிலும் உத்தேசமாகக் கணிதம் செய்யாமல், மரணத் தருணத்திற்கு உதவும் ''உபசாந்த மஹா யோகத்தின்'' மத்திய ரேகைக்கு வர மனந்திரும்பு.

18. இலகுவாகிய இலவம் பஞ்சையொப்ப உலக விவகாரப் பாரத்தை துச்சமாகக் கருதிவிடுவாயாகில், நாட்டுப்பணிக்கு உகந்த நல்லவனென உன்னைத் தெரிந்தெடுக்கலாம்.

19. நரக வழிகளை அணுகி நலமென எண்ணிய நாஸ்திக மக்களை நல்லவராக்கும் பொருட்டு, நினது வாழ்க்கையை அர்ப்பணித்தாவது வெற்றிகாண்! புறங்காட்டாதே!

20. கற்பனை உலகைக் கடந்து, அற்புதமனிதனாக ஆகாதவரை அகங்காரக் கிளைகள் தாவி, மனிதத் தன்மையை மறைவுபடச் செய்யும். ஆதலால், அடக்கம் காத்து அவனியில் உலவு.

21. வச்சிர உடல் தாங்கிய வாலிபனாகிய நீ மன வலிமை அற்ற வனாகக் காண்பாயாகில், கோழை வயோதிகனினும் இழிந்தவனாகக் கருதுவதில் குற்றமில்லை.

22. கோடிக்கணக்கான செல்வத்தைத் தேடிச் சுகிக்கத்தெரிந்த மனிதா! உனது ஊனுடல் மண்ணாகி மடிவது திண்ணமென்பதை எண்ணா திருப்பது நினக் கழகாகுமா? அவசியம் ஆன்ம விசாரத்தில் இறங்கப் பிரயத்தனப்படு.

23. கல்வியறிவிலும் கணக்கற்ற பந்தத்திலும் மயக்குற்றிருக்கும் நினக்கு ஆன்ம சுதந்திரம் கிட்டாதிருப்பது பெருங்குறையாகும், அக்குறையை நிவர்த்திக்க முயற்சிப்பதே தக்க வழி.

24. உழைக்கத்துணிந்து பிழைக்கப் பிறந்தவன் ஊதாரிவேடம் புனைந்து உலகோர் இகழப் பெயர்தாங்கிப் பிச்சை எடுத்து உண்பது குற்றமாகும். அக்குற்றத்தைத் தெரிந்து திருந்த முற்படு.

25. மானிட உருவிலமைந்த ஆண், பெண், இருபாலருக்கும் வாழ்க்கைப்பங்கீட்டில் சம உரிமைகாண மனங்கொள்ளாராயின், அவர் கட்குச் சீர்திருத்த நெறியைக் கற்பிக்கக் கடமைப்படு. திடந்தவறாதே!

26. மனிதா! இப்பாருலக மாயையைப் பதரென மதித்து, நினது பருவ வயதென்னும் காற்றில் பறந்தோடச் செய்து தூயபணியிலிறங்கி வெற்றிகாண விழை. இதுவே, நமது இதோபதேசமாகும்!

27. வாழ்வென்பது ஒரு பூங்காவைப் போன்ற தோற்றமுடையது. வசந்த காலத்தில் புட்பங்களை மலர்வித்துப் புதிய சோபிதத்துடன் செடிகள் அசைந்தாடி அழகு பெறக் காட்சியளிக்கும். கோடை பிறந்தால் வாடி வதங்கி வாச மலரற்றுப் போகும். மீண்டும் வசந்த காலம் தோன்றி மறையும். இவைதான் வாழ்க்கையில் மறைந்திருக்கும் இரகசியம்.

28. உலகத்தில் பிறந்து வளர்ந்து வாழ்ந்து இறந்துபோகிற ஜீவ ராசிகளில், மானிடப் பிறவிதான் உயர்ந்த பிறவி என்பது நாதாக்கள்

கண்ட நான்மறையின் தீர்ப்பு! ஆதலால் கால வெள்ளமானது அடித்துச் செல்லுமுன் இறைவனுடைய திருவடிகளைப் பற்றிக் கொள்.

29. பிறந்த மாந்தருள் இறந்து போகுமுன் தாம் செய்யத் தகுந்த கடமைகள் யாதென உணர்ந்து பொறுப்பேற்ற கடமையைச் சிறப்புடன் ஆற்றி வெற்றி காண்பவர்களே மதிப்பிற்குரிய தெய்வீக மனிதர்கள்.

30. இவ்வுலகில் பிறந்த மனிதர்கள் எக் கடமைகளைச் செய்தாலும் சத்தியம் நிறைந்த விஷயங்களா என்று கவனித்து தீர்க்க தரிசனத்துடன் ஆற்றி வெற்றி காணவேண்டும்.

31. சொற்பநாள் வாழ்கிற வாழ்வானாலும் தற்பெருமை இல்லாமல் வாழவேண்டும். அப்படி வாழ்ந்தால் எப்போதும் அருளொளி மாதாவின் திருவடி நிழலில் ஆனந்தமாக வாழலாம் என்பதில் கிஞ்சிற்றேனும் ஐயமில்லை.

32. வயோதிகத்திற்கு முந்திய வாலிபத்தையும், வறுமைக்கு முன்னுள்ள செல்வத்தையும், மரணத்திற்கு முந்திய வாழ்நாளையும் இறுதி நாள் வருமுன்னமே நினைத்துப் பார்க்க வேண்டும்.

33. மனம் விரிந்த உயர்நிலை யெய்தினால் வேம்பு, கரும்பு என்ற வேற்றுமை தலைகாட்டாது, அற்ப மனதின் அசைவிற்கு அடிமையாகிய அறியாதவர்கள் பெற்றோர்களிடத்திலுங்கூட குற்றம் புரிந்து கெட்டவராகுவர்.

34. தன்னடக்கத்தோடு கூடிய தலை வணக்கமும் சாதுரிய மிக்க சகவாசமும், புலன் காக்கும் அறிவு வன்மையும் உடையவர்களே அறிவாளிகள். அறிவாளிகளுக்குரிய லட்சணம் இவையே.

35. உலகம் என்பது நிலையற்றுச் சுற்றி வருகிற ஓயாத மாயை. அதற்குள் அமைந்த அத்தனையும் சுத்தப் பொய்யாகி முடிகிற சூட்சமம். இவ்வுண்மையை நன்கு ஆராய்ந்து உணரும் அறிவுக் கண் உடையவனே ஞானி.

36. இயற்கை அழகைக் கண்டு இன்புற முடியாத பிறவிக் குருடனும் ஏகாந்த நிலையெய்தி இன்பங் காணாத மக்களின் வாழ்க்கையும் மாறுபாடற்ற வகையில் மதிப்பிடும்போது இரண்டும் ஒன்றே!

37. வஞ்சகம் உடையவர்களின் நெஞ்சில் பொறாமை அரக்கன் குடி புகுந்து அவர்களுக்கு அஜாக்கிரதையான காலம் பார்த்து வாழ்நாளாகிய சக்கரத்தை உருளவிடாமல் தடைசெய்து கெடுதிவிளைவிப்பான்.

38. கருஞ்சீரகத்தை கசக்கி நுகர்ந்தால் சிரசில் உள்ள சிலநோய்கள் அகலும். அதுபோல கசிந்துருகிக் கண்ணீர் பெருக்கினுல் கடவுள் அனுக்கிரகத்தைத் தனது உள்ளுணர்வினுல் சிறிதளவு உணர முடியும்.

39. சுவர்க்க லோகத்திலுள்ள சுகபோகங்களைப் பற்றிச் சொல்லவும், கேட்கவும், படிக்கவுமாகிப் பணிபுரிவதை மறந்து சும்மாயிருந்தால் சுகம் கிடைக்காது. அதுபோல் பால், பழம் சாப்பிடக் கண்ட கனவு பசித்த சமயத்தில் பலிக்குமா?

40. பிரிவற்றிருக்கும் பேரொளி ஒன்றுதான் அறிஞர்கள் வணங்கும் அழியாத தெய்வம். காரணம் உணராத பாமர மக்கள் கண்டதையெல்லாம் நினைத்து மனதடங்காமல் துதித்துப் பயன் கிடைக்காமல் துக்கித்துத் துன்பப்படுவர்.

41. மனித சமுதாயம் என்னும் ஜீவியப் படகு மாயை என்னும் கடலில் ஓடத் தொடங்கினுல் சஞ்சலம் என்னும் அலைகளால் சாயத்தான் செய்யும். குப்புறக் கவிழ்ந்து குடிகெடாதபடி பாதுகாப்பது படகோட்டியின் பக்குவத்தைப் பொறுத்த திறமையாகும்.

42. ஆற்றின் கரையோரமுள்ள மரமானது நீரோட்டத்தில் அகப்பட்டு வேரற்றுப் போவது போல் மனோவேகத்தினுல் உந்தப்பட்ட மனிதனின் உள்ளமும் நாளடைவில் பலமற்றதாகி ஆவியும் பறிபோகும்.

43. சந்திர மண்டலத்திற்குச் சென்று திரும்பியவன் ஒரு சமர்த்தனல்ல. அதற்கு மேலொரு சதாசிவமண்டலம் இருக்கின்றதே அதைக் கண்டு தரிசித்து ஆனந்தமடைவதுதான் அரிதிலும் அரிது.

44. பண்பு அறிந்த வைத்தியன் தன்னிடம் சிக்கிய பாஷாணத்தைப் புடமிட்டுப் பஸ்பமாக்கி விடுவான். அதுபோல அனுபவ ஞானமுடைய அடியார்களும் தம்மை அணுகும் ஐம்புலச் சேட்டைகளை ஞானம் என்னும் அக்கினிக்கு இரையாக்கி விடுவார்கள்.

45. துக்கம் விளைவிக்கத் தக்க செய்கைகள் யாவையும் சர்க்கரைப் பொங்கல் போல் எண்ணி அனுபவித்தால் எல்லை மீறிய தொல்லைகள் வந்து இடையூறு செய்யாமல் வேறென்ன செய்யும்? ஒழுக்கக் குறைவுடன் உயிர்வாழ்வது உசிதமாகாது.

46. ஆத்மநிதியாகிய அரும்பெரும்பொருளை அக்கிரமச்செயல்களில் செலவிடாமல் அளவுக்குள் அடங்கிய கட்டுப்பாட்டுடன் தன்னைத் தற்காத்துக்கொள்பவர்களே பெரியவர்களாவர்.

47. மனோவிகாரக் கடலைக்கடந்து கரையேறுங்கள் என்று மனமுருகப் புத்திசொன்னாலும் சாமானியமனிதர்களுக்கு அதனால் பலிதமில்லை. மன வலிமையுடைய மனிதர்களுக்குத்தான் அது மிகவும் எளிது.

48. ஒப்பற்ற சேவைசெய்வோருக்கு உறுதிதளராத உள்ளமே வச்சிராயுதம். நல்லனசெய்ய நாட்டமிருந்தால் நியாயநெறியை விட்டுப் பிறழக்கூடாது.

49. பந்தபாசம் என்பது கிழிந்துபோன பழைய கந்தைச்சட்டை. அதைக் கழற்றிஎறிய முடியாதபடி கட்டுண்டவர்கள் ஜெகப்பித்தர்கள். தத்துவ ஞானம்பெற்றால் எவரும் தப்பிக்கலாம்.

50. மகுடி ஊதத்தெரிந்த பிடாரனுக்கும் கடுகளவுகூடக் கர்வம் கூடாது. அப்படியிருந்தால் அவனிடமுள்ள அரவமே அவனைத் தீண்டி விடும். அகங்காரம் யாருக்கும் ஆகாதது. தனக்கு நிகரில்லை என்ற எண்ணமும் தலைகவிழவைக்கும்.

51. அபிப்பிராயபேதங்களைக் காணும் அளவுகோல்போன்ற ஆசாமிகள் அறப்பணி செய்வேன் என்று அரங்கமேறினாலும் அவர்களுக்கு ஆற்றல் இருக்காது. பொதுநலம்பேணும் புத்திசாலிகளுக்கே மட்டற்ற மரியாதைகளுண்டு.

52. உழல்கின்ற நிலையுடைய உலகமாந்தருக்கும், உயிருக்குயிராய் இலங்கும் பிரமவித்தைக்குமிடையே தடைசெய்கின்ற மாயையைத் தீவிர தவத் தியாகிகளால்தான் அகற்றமுடியும்.

53. புலி, கரடிகளோடு போராடிக் காட்டைத்திருத்தி நாட்டிற்கு உழைக்கும் நல்லவனுடைய சந்ததி வீட்டிற்கு உழைக்கவும் முடியாத வினையானால் அதை விதிவசமென்று எண்ணி வியக்காது வேறென்ன செய்வது?

54. தெய்வீகமுடைய மனிதனை எவராலும் தேடிப்பிடிக்கமுடியாது. அவன் பதுங்கியிருந்தாவது பணிசெய்துகொண்டுதான் இருப்பான். வீம்புபேசிச் சோம்பித்திரிவதை அவனிடம் காண்பது அரிது.

55. மைதீட்டிய கண்களின் ஒளியும் மரணத்தறுவாயில் மங்கியே போகும். அறிவுக்குப் பொருத்தமற்ற வகையில் அழகுக்கு அழகு அணிவிப்பது அறிவுடையவர்களுக்கு ஆகாது.

56. ஒருவன் உண்மைநெறியைக் கடைப்பிடித்தும் வெற்றிகாண இயலவில்லையென்றால் அதற்குக் காரணம் அகங்காரக் குப்பையும் அறியாமைவெறியும், வெகுளியும் சேர்ந்து அவனைவிட்டுப் பிரியாமல் கெட்டும் போவதற்குத் தூண்டுவதேயாகும்.

57. தனது வாழ்வு தழைப்பதற்காக ஏழைகள் வாழ்வுக்கு இடையூறு செய்து அடுத்துக் கெடுக்கும் குணமுடையவர்களை ஆகாத பாவிகளென்று அழைப்பதில் தவறில்லை. அவர்களின் பிற்காலச் சந்ததிகளுடைய வாழ்வும் சீர்கெட்டுப் பாழடைந்து போகும்.

58. அட்சயபாத்திரம் வைத்திருப்பவன் பிச்சை எடுக்கப் போகமாட்டான். அதுபோல ஆத்ம சாந்தியடைந்த அடியார்கள் அருட்செல்வாக்கும் அளவுகடந்ததே. அறம், பொருள், இன்பம் யாவும் அவர்களிடம் தேங்கிக் கிடக்கும்.

59. அறிவுச் சிதைவைச் சீர்திருத்த முடியாது அலைகிற ஆண்டிகள் போன்ருேர் ஆடம்பரமான வாழ்வை மேற்கொள்வதில் ஆச்சரியமில்லை. ஆணவம் அகன்ற பக்குவமான பக்தர்கள் அதில் சிக்குவதில்லை.

60. உண்மை நெறிக்குப் புறம்பானவர்கள் உபதேசம் கேட்பதில் பயன்கிடையா. நற்கருமத்தில் நாட்டமிருந்தால் நாளடைவில் ஞானத் தெளிவுடன் பல நன்மைகள் பெறலாம்.

61. சித்தத் திடமற்றவர்களுடைய வாழ்வு சீர் கேடடைந்து செயல் கெடும்போது அதை ஆண்டவன் செயலென்று அலறுவார்கள். சிவச் செயல் அற்ற ஜீவச் செயல் என்பதை அறிய அவர்களுக்கு ஆற்றலோடு கூடிய அனுபவம் இல்லை.

62. வறுத்து விதைத்த வித்துக்கள் பயிராகாதது போல குறுகிய குணமுடைய மக்களின் வாழ்வும் வளர்வதில்லை. சமரசஞானம் உடைய சற்சனர்கள் வாழ்க்கை என்றும் வளங் குன்ருது.

63. நச்சுப் பொய்கையின் கரையருகில் வைத்த அமுதகலசமும் நல்லவர்களோடு கூடிய நன்றி கெட்டோரும் காலப் போக்கில் எப்படியும் மாறுதல் அடையவே செய்வார்கள்.

64. அடையாளம் காணமுடியாத ஆண்டவனுக்கும் அவனடியார்க்கும் நீங்காத் தொடர்புண்டு. நிலையற்ற வாழ்க்கைக் கிடங்கில் கிடந்துழல்வோர்க்கு இறைவனின் திருவருள் சிறிதளவும் சுரப்பதில்லை.

65. எண்ணித் தொலையாத எண்ணங்களை எண்ணிப் புண்ணுன நெஞ்சிற்கு சாந்தி என்னும் மருந்தை அருளிக் காப்பாற்ற ஆண்டவன் காத்திருக்கிருன். ஆனுல் அதற்கு அருகதையுடையவர்கள்தாம் அவனியில் அதிகமில்லை.

66. சித்துவிளையாடல் போன்ற வித்தைகளில் மோசமாகஇராமல்

புத்துயிர் பெறுவதெப்படி என்று ஆய்ந்தொழுகுதலே அறிஞர்கட்கு அழகு. அடக்கமில்லாத வாழ்வு பயனற்றதாகும்.

67. பழவினையற்ற பக்தன் ஒருவனே பற்றற்று வாழ்வதற்குப் பழக முடியும். மற்றவர்கள் எல்லாம் அன்புக் கடவுளின் அடியினைத் தொழுது அறப்பணி செய்வதைக் கடைப்பிடித்தாலே போதுமானது.

68. ஆத்ம சாந்தியை வளர்க்க ஆசையுடையோர்க்கு அறநெறி தவறாத உறுதியும், ஒழுக்கமோங்கிய வைராக்கியமும் திரிகரண சுத்தியும் அத்தியாவசியமாகும்.

69. யாக்கை என்னும் கோவிலுக்கு அமைக்கப்பட்டுள்ள அன்பு என்னும் கதவை எப்போதும் திறந்து வைத்திருந்தால் வருவதெல்லாம் வந்து சாந்தியடைந்து திரும்பிச் செல்லட்டுமே! இதுதான் பேதமகன்ற பெரியோர்கள் இயல்பு.

70. மனக்கவலையின் போக்கை மாற்றியமைத்து வாழ்க்கையில் வாகை சூடிய லட்சிய புருஷர்களின் வரிசையில் இப்போதிருந்தே நீயும் இடம் பெருவிடில் மனித சமுதாய முன்னேற்றத்திற்கு மற்றொரு மார்க்கங் கிடையாது.

71. இப்புவியில் பிறந்த ஜீவராசிகளில் மனிதரினத்திற்கு மட்டுமே கவலை சூழ்ந்த வாழ்க்கையை இறைவனால் உரிமையாக்கப்பட்டிருக்கிறது. மனக்கவலையை மாற்றியமைத்த மகான்களால் நமக்காக்கி உதவிய ஞான நெறிகளை மக்களால் கடைப்பிடிக்க இயலாது கைவிடுகின்றனர். நீயாவது இனிமேல் பக்தி நெறிதழுவிப் பகவானுடைய கிருபைக்கு ஆளாகு!

72. தெய்வமாகிய பரம்பொருள் உன் உள்ளத்தை விட்டு ஒருநொடி நேரமும் விலகிநிற்பதில்லை. அதை உணர்ந்து அதுவாகி தியானிப்பா யாகில் இதயத்தில் இன்பம் பொங்குமென்பதில் ஐயமில்லை.

73. அழியாத இறையழகைப் புறக்கணித்து அற்பப் புலன்களுக்கு மக்கள் அடிமையாகித் தடுமாறுகிறார்கள். அப்படியல்லாமல் ஆழ்ந்த பக்தியில் ஈடுபட்டு அருட்செல்வத்தைப் பெற்றுக்கொள்.

74. தொடாதே! தொட்டதை விட்டு விடாதே!! என்று இதயத்தில் தூண்டிக் கொண்டிருக்கிறான் ஒரு கர்மவீரன். அவனுடைய கழலடி காணத் தவம் புரிவதுதான் கடைசித் தீர்மானம்!



வெற்றி!

# 8. நிறை நெறி மொழிகள்.

நற்றவ நிறைநெறி மொழிகளைக்
கற்றுணர்ந்திடக் கருத்தினில் நினை.

1. கலைவெகு பயில முயல்.
2. விரைவினில் பள்ளிக்கு ஏகு.
3. கற்பன மறந்துவிடாதே.
4. விற்பன்ன விவேகியாகு.
5. குருவினை உறுதுணையாக்கு.
6. ஒருவரைக் குறைபகராதே.
7. சிறுவரோடு உறவு பூண்.
8. பகிர்ந்து அன்னம் உண்ணப் பழகு.
9. பயம்தவிர்த்து அடக்கம் பேண்.
10. எறும்பிற்கும் இரக்கம் காட்டு.
11. சண்டைகண்டு அகல விலகு.
12. கிழவரை இழிவுரை கூறேல்.
13. சாதுவாய் உலகில் உலவு.
14. அழகுற மொழி உரையாடு.
15. வஞ்சகம் நஞ்சாய் முடியும்.
16. பொய்யுரை அணுவும் புகலேல்.
17. நல்லற நெறிகண் டொழுகு.
18. சற்சனர் நேசம் தவிரேல்.
19. தந்தை தாய் பாதம் தழுவு.
20. உடைநடை ஒழுக்கங் கார்.
21. திரவியம் தேடிப் புதையேல்.
22. பிறர்க் குபகாரப் பணி செய்.
23. ஒளிந்திருந்து ஒச்சை கேளேல்.
24. பழிப்புச் சொற் கிடங் கொடாதே.
25. சுக உணவுண்ணப் பழகு.
26. முகப் பொலிவு எதற்கும் காட்டு.
27. முக்கியக் கடமை ஆற்று.

28. உத்தம வழி பின்பற்று.
29. பத்தினித் தாயை வணங்கு.
30. பரத்தையர் அகத்திற்கு ஏகேல்.
31. அனைத்திலும் அவாவுருதே.
32. படித்ததைப் பலர்க்கும் பயன்செய்.
33. கடன்படக் கனவிலுங் கருதேல்.
34. தேவனை அறிவென் றுணர்.
35. கோவிலில் பலிகொடாதே.
36. தன்பிழை உணர்ந்து திருந்து.
37. திடனுற உடலைப் பழக்கு.
38. தீனியில் மித மிஞ்சாதே.
39. பொறுமையைப் பூஷணமாக்கு.
40. நித்திய காலமுஞ் சத்தியம் பேசு.
41. பயிலுங் கலையைத் துயிலிலும் ஓது.
42. தவமுறை தவருர் தக்கோராவர்.
43. மற்றவர் வாழ்வில் குற்றங் காணேல்.
44. இகபர மிரண்டும் மிகநல மென வுணர்.
45. உழுபயிர் செய் நெறி வழுவாதிருமின்.
46. மாயையை மறந்து ஈகையை விரும்பு.
47. இறக்குமுன் சிறந்த அறப்பணி ஆற்று.
48. உயிர் நின்றுலவும் உடலைத் திடன்செய்.
49. இன்ருே நாளையோ என்ருே மரணம்.
50. கோபச் சுடரால் ஆபத்தணுகும்.
51. வறுமை வரினும் பொறுமை குன்ருதே.
52. வஞ்சகர் உறவு நஞ்சினும் கொடிது.
53. உண்மையை நாடி உழைப்பது உயர்வு.
54. உருகாமனது கருகிய மலராம்.
55. பேராசை முடிவில் நாராசமாகும்.
56. அழுக்குள் மறைத்து தளுக்குரையாடேல்.
57. இழிச்செய்கை செய்யின் பழிச்சொல்லுயரும்.
58. போசன விதியொடு ஆசனம் பழகு.
59. நோய்பின் தொடர ஆயுளுங் குறையும்.
60. பாதகச் செய்கை காதகர்க் கியல்பு.
61. இலட்சியவாதிக்கு அச்சங் கிடையா.

62. வீணர்கள் புகன்ற வேதம் நன்றன்று.
63. பெற்றோர்க் கடங்கி குற்றேவலுஞ் செய்.
64. உனக்கு மூத்தோர்க்கு வணக்கஞ் செலுத்து.
65. மதவெறி அகற்றி மார்க்கந் தழுவு.
66. பிறந்த பொன்னாட்டில் சிறந்த பணிசெய்.
67. விரோதி என்றெவர்க்குந் துரோகஞ்செய்யாதே.
68. ஆசான் மொழிவதை இலேசாய் நினையேல்.
69. சதி செய்பவரை மதியால் அளவிடு.
70. அன்பு மிகுந்துள நண்பனைத் தெரிந்தெடு.
71. செய்கையிற் செய்தபின் ஈகையைப் பேசு.
72. இன்னுரை ஆற்றி அன்னக்கொடை கொடு.
73. தருமம் தவிர்ப்பவர் மிருகப் பிறவி.
74. உயிர்களை நேசித்து உலகில் உலவு.
75. சீவனின் வாழ்வைச் சிதைவு செய்யாதே.
76. ஒழுக்கமும் உயிரும் ஒருநிறையாகும்.
77. அன்புடன் ஏழைக்கு ஆவன செய்க.
78. ஓடி இறைவனைத் தேடி அலையேல்.
79. நீதிகண் டொழுகின் சாதிகள் ஏது?
80. தீண்டா மதமெனச் சான்றோர் உரையார்.
81. மடமையை அகற்றிக் கடமையில் இறங்கு.
82. கட்சிப் பிளவுகளை இச்சிக்காதே.
83. வீட்டுச் சஞ்சலம் இடுகாட்டிற் கிழுக்கும்.
84. நெஞ்சத்திற் சஞ்சலம் கொஞ்சமும் ஆகா.
85. புன்னகை தவழ இன்னுரை பகர்.
86. பத்தினிப் பெண்களை மூத்தரும் வணங்குவர்.
87. வித்தையும் சித்தும் விவேகக் குறைவு.
88. விலைமாதுறவு கொலையோ டொக்கும்.
89. பொய்யும் புறணியும் மெய்யைக் கெடுக்கும்.
90. கடவுள் என்பது உன்கடமையும் அறிவும்.
91. நாட்டுப் பணியை விட்டுக் காட்டிற்கு ஓடாதே.
92. பற்றற் றெழுகுதல் கற்ற கைம்மாறு.
93. கொலையுங் களவும் எம வலை யாகும்.
94. பாவக் கடலைத் தாவப் பழகு.
95. நிலைதவருக் குணம் தலைவரின் சால்பு.

96. புகைபிடிப்போர்க்குத் திகைப்பு நோயுண்டாம்.
97. ஆவதைப் பேணி ஆகாததை ஒழி.
98. காயம் அழியுமுன் தூயதைப் பேணு.
99. உலகிற் கழகு ஒற்றுமை நியதி.
100. உள்ளத் தழகு உறுதியின் விரதம்.
101. பிறப்பதும் இறப்பதும் உறுப்பின் ஏமாற்றம்.
102. இல்லற ஞானிக்கு இணையிலை உலகில்.
103. தேசாபிமானமே சிறந்த தவமாம்.
104. தூயவர் பணியால் துகளறுமுலகு.
105. அழகொடு விழிகளைப் பழக விடாதே.
106. உத்தமர்க் கழகு சித்தத் திடமே.
107. மனிதர்க் குயர்நிலை மனப்பண்படைதல்.
108. புண்பட்டுடலைப் புவிக்கிரையாக்கேல்.
109. ஐம்புலன் அசைவை அடக்கத் தவஞ்செய்.
110. நவவழி யடைத்து நாடியுள்ளூது.
111. குறையற உலகிற்கு அருளொளி உதவும்.
112. ஆத்மீகம் மனிதற் கவசியம் தேவை.
113. ஏழையாயினும் நீ கோழையாகாதே.
114. மாதமொரு முறை மௌனம் பழகு.
115. சிந்தையை வீணில் சிதறவிடாதே.
116. அற்பனென் றிகழா நற்பெயர் வாங்கு.
117. இறைவிளையாடலை இயற்கையிலுணரு.
118. மூலப் பொருளறி காலனை வெல்லலாம்.
119. கலைமகள் அருளில் நிலை நின்றோங்குக.
120. இச்சை அகற்றிட வரும் இலட்சுமி கடாட்சம்.
121. முற்றும் உணர்ந்தவர் குற்றங்கள் உரையார்.
122. தமிழ் ஆராய்வோர் தரணியிற் சிறந்தோர்.
123. கடல் அருகிருப்பவர்க்கு இடர் பசிநோயில.
124. நகரில் வசிப்பினும் இகபர சுகம் உணர்.
125. வேடுவர்கட்கு உயர் வீடுமுண்டு அதுநெறி.
126. அகக்கண் அசைவுற முகக்கண் காரணம்.
127. நீக்கற்ற பிரமம் போக்கற்று உளது.
128. பூதஜடத்தினுள் மாதவத்தோன் உளான்.
129. பிறந்ததும் இருந்ததும் இறந்ததும் கணக்கா?

130. உழைப்பினுல் உனக்கு அழைப்பிதழ் வருமே.
131. உடலெது உயிரெது திடமுடன் அறிந்து உணர்.
132. எமனுறும் பொழுது எதும் உமது எதிர்நில்லா.
133. உருவம் அழியும் முன் குருவை அறிந்து உணர்.
134. வாடைகள் புனேயினும் பாடையில் ஏறணும்.
135. ஆபரணங்களேப் பாமரர் அணிவர்.
136. சோம்பலே அதட்டி விரட்டு.
137. உறுதிதான் இறுதியில் உதவும்.
138. சொல்வதைச் செயலால் அறிவி.
139. பிறவிப் பிணியறு.
140. அரசர்க்கு அன்பே செங்கோல்.
141. கற்பு உனது இருகண்கள்.
142. உரிமை பெண்களுக்கு அளி.
143. குருபணி மிகநலம்.
144. என்றும் இருக்கிற ஒன்றே ஆதி.
145. ஜீவனேச் சிவனெனக் கருது.
146. தந்திரமாக உன் அந்தர நிலேநில்.
147. மனம் நிலே நிறுத்து.
148. மோன வீடேகு.
149. யோகத் திறன் தெரி.
150. அந்தர் முகத்துள் உன் சிந்தையை நிறுத்து.
151. கண்ணெளி பாயாது உன்னுள்ளே திருப்பு.
152. அன்றும் இன்றும் உள்ளென்றும் நின்றுஎரியுது.
153. ககனக்கண் திறக்க முயல்.
154. சிரசினுள் ஒளிர்விடும் மரகதமணி அறி.
155. சுழிமுனே திறந்து ஒளிகண்டு உனே அறி.
156. புருவத்து இடையினுள் அருவ தெரிசனம்.
157. ஜோதியைச் சுகப் பொருளென்று நினே.
158. இமையா விழிபெறு.
159. வெளிச்சம் உனக்குள் பளிச்சென்று ஒளிருமே.
160. உலகை மறந்து இரு.
161. வாசலும் அடைபட ஈசனுள் நடமிடும்.
162. அன்புடன் ஆதியைத் துதி செய்.
163. ஆழ்ந்த சுகக் கடலில் மூழ்கு.

164. பற்றற்று உயர் நிலை நாடு.
165. பரனுக்கோர், பங்கங் கிடையா.
166. வாதிடல் தீதெனக் கவனி.
167. உழல்நிலைக்கு ஒதுங்கி உலவு.
168. உள்ளத்துள் உறவு செலுத்து.
169. சத்தியம் சத்தாய்த் திகழும்.
170. அழகிய கருஊர் நமது ஊர்.
171. உணர்ச்சியோடு உண்மையை நாடு.
172. தொண்டரைக் கண்டு வணங்கு.
173. அறநெறி பிசகேல்.
174. அந்தகார வினைகளை வெந்து அழிந்தேகச்செய்.
175. உண்மையே சொல். பல நன்மைகளுறலாம்.
176. வேடத்தைக்கண்டு நீ மோசம் போகாதே.
177. ஆலம் பாலால் சடை நீளமாய் வளரும்.
178. அம்பல வாணனைக் கும்பல்கள் அறியா.
179. வாய்ஞானம்பேசிப் பின்பேய் போல் அலையேல்.
180. கள்ளக் குருக்கள் அல்லல் விளைப்பர்.
181. அயலார் என ஒரு செயலார் உளரோ?
182. ஒன்றென்றிருந்து எதும் நன்றென்று உளமகிழ்.
183. தடையருது ஒழுக்கத்து நடைபிசகாதிரு.
184. அன்பின்றி ஏழையைத் துன்புறுத்தாதே.
185. ஒருவழி நின்று உயர்பொருளினை நாடு.
186. கடவுள் தான் சகல உடலிலும் உலவுவர்.
187. ஞானிக்கு அழகு உளம்பேணிக்கொளலே.
188. வித்தை வேதாந்திதான் சித்திகளாடுவர்.
189. சிரசில் நுண்ணறிவு அரசியல் புரியும்.
190. தீபதரிசனம் பாவ விமோசனம்.
191. ஜெகத்தினில் உயிர்க்கு மகத்துவம் தவமே.
192. அதர்மத்தின் உயர்வால் சிதறுற்று அழிவர்.
193. அல்லிபோல் வீரமாய் செல்விகள் திகழணும்.
194. ஊழ்வினை ஒடுங்க பாழ்மனம் அடங்கும்.
195. நீதி நிழலைப் பற்றி நில்.
196. கடமையைக் கண்ணெனக் கருது.
197. இகத்தையும் பரத்தோடு இணை.

198. பழிப்புறப் பாரில் உலவாதே.
199. தவநெறி தழுவியுலவு.
200. அன்புடன் அறநெறி தழுவு.
201. அற்பர்கள் உறவை அகற்று.
202. விரைவினில் இறைவனை நாடு.
203. பலர் தொழும்படிக்குப் பணிசெய்.
204. கேள்வியில் கவனம் செலுத்து.
205. சத்துவ குணத்தை உயர்த்து.
206. பிறவி பின்னெடுக்கா வகைசெய்.
207. காமனுக்கு ஆளாகாதே.
208. கொடிய துர்ச்செயலை விலக்கு.
209. ஏழைகள் வாழ்வைப் பழியேல்.
210. நர குழி புக நினையாதே.
211. உன்னை நீ உணர்தல் மேன்மை.
212. காரணக் குருவைத்தேடு.
213. கர சிர வணக்கஞ் செலுத்து.
214. உத்தம மார்க்கங் கேளு.
215. உணர்ந்து பின் ஒப்புக்கொள்.
216. பேரறிவு ஒளியே பெரிது.
217. தபசியை அவசியம் வணங்கு.
218. ஆசையுள் அழுந்தி விழாதே.
219. அருளுலகுக்கு ஏகத் தவஞ்செய்.
220. அருளறிந்து அடங்கு.
221. பரவடிவு அருளைப்பற்று.
222. ஆதியுள் அருவமாம் ஜோதியுன் வடிவு.
223. ஞானத் தெளிவுறு.
224. கடவுள் நீயெனக் காண்.
225. உந்தியை நினைத்து சிந்தையில் வணங்கு.
226. உரம்பெறும் நரம்பு உணர்.
227. நாடியை உனதுள் தேடித் தெளிவுறு.
228. மேலாம் நிலைக்கு உயர் மூலாதாரமே.
229. எக்குவது உயிர்நிலை.
230. குண்டலிதுயில் எழக் கண்டறி பாதையை
231. சதா சாதனம் புரி.

232. கற்பங்கள் உண்பது நற்பரிபக்குவர்.
233. அமரிதான் ஆகாரம்.
234. அங்கையில் வாங்கி உன் கங்கையைத் திருப்பு.
235. ஒன்றும் இரண்டுடன் மூன்றும் மும்மூலமே.
236. அமுதம் உண்டு அருள் சேர்.
237. பொற்பதஞ் சேர்ந்திட அற்புத மருந்திது.
238. சூனிய வெளியில் உறங்கு.
239. பந்தமே படுகுழி.
240. சொகுசிலோர் சுகமில.
241. மடியால் குடிகெடும்.
242. பீதி பேயாய் வரும்.
243. கவலையே காலன்.
244. மிக மகிழ்வோடு இரு.
245. அமைதியே ஆனந்தம்.
246. சிற்றின்பம் சிதையும்.
247. அகங்குவிந்து இருள் தெளி.
248. ஒழுக்கமே உனது உயிர்.
249. உயிர் ஒன்றெனக் காண்.
250. உயிர் வதை கொடிது.
251. பாராயணஞ் செய்து ஆராய்ந்து ஒழுகு.
252. உருக்கமாய் அழுது அருட்கவிபாடு.
253. துர்க்குணம் தவிர்த்திரு சற்குணம் ஓங்கும்.
254. சோம்பல் அகன்றவர் மேம்பட வாழ்வர்.
255. பில்லி சூனியங்கள் இல்லவே இல்லை.
256. தெளிவாய் அகத்திரு. வெளியில் ஏகாதே.
257. இழிதொழில் புரியின் பழியோடு அழிவுறும்.
258. பெண், ஆண் உடம்பெலாம் மண் எனக்கருது.
259. ஆடவர் பெண்டிர் நாடகம் நடித்தல் வீண்.
260. மங்களமாக நீ எங்கும் நிறைந்திரு.
261. போற்றும் பொருள்களைத் தூற்றுவர் கயவர்.
262. உண்மைகண்டுட்கொள் நன்மைகள்பயக்கும்.
263. காந்தமலையினும் சாந்தமே பெரிது.
264. மங்களமுற வாழ்.

வெற்றி !

# 9. கருணைக் கண்ணீர்.

1. கட்டாணி முத்தே கனிரசமே யென்றிறைவன்
கழலடியைத் தேடியழுதேன்!
எட்டிக்கனிபோன்ற இல்லறத் துன்பமெனை
விட்டிடவும் வேண்டியழுதேன்!
பட்டிமாடெனத் திரியுமெனது மனமடங்கப்
பாவியான் கதறியழுதேன்!
கிட்டாத பரமபதம் கிட்டியே பேசாத
பெருமை பெற எண்ணியழுதேன்!
பட்டாலும் பணியாலு மெனதுடலைப் பேணுது
பரி நரி போலாக வழுதேன்!
எட்டாள தேசமும் சுற்றிவிளையாடிவர
வேண்டுமென வேண்டியழுதேன்!
துட்டர்களெலாம் கூடித் தூஷித்தெனைச் செய்த
துன்பமெலா மெண்ணியழுதேன்!
நிட்டையது பெற்று நினைப்பு மறப்பற்று யான்
நினைந்தழுத தாரறிகுவர்!

2. திடங்கொண்டு அடங்காத மாயையை வென்றிடநற்
திருவருளை நாடியழுதேன்!
உடல் நின்று ஓயாமல் உலகிற் குழைக்கவே
உறுதி பல செய்து மழுதேன்!
கடமைகளைச் செய்து கடைத்தேறலாம் வாங்களெனக்
கதறியே பதறியழுதேன்!
குடம்கொண்டு சொரிந்திட்ட தேன்போல அமுதமொழி
கூவியகம் குழைந்து மழுதேன்!
படமுடியா இடையூறு பலகூடி வந்திடினும்
பணிபுரிவேனென்று அழுதேன்!
மடமை இருள் குடிகொண்ட மக்களைத் திருத்தவே
மார்தட்டி நின்றுமழுதேன்!
விடமுண்ட கண்டனடி சேரலாம் வாங்களென
வேதாந்தங் கூறியழுதேன்!
நடனமிடு மிறைவனிரு பதமலரைத் தொழுதுலகில்
யானழுத தாரறிகுவர்!

3. காசற்ற கையாயிக் கலியுலகிலுலவியே
கடுந் தபசு செய்துமழுதேன்!
மாசற்ற மக்களைக் காணும லுளங்கலங்கி
மனது தடுமாறியழுதேன்!
கூசாமலே துறவியாகியும் குணங்கெட்ட
குடியர்களை யேசியழுதேன்!
ஆசார மில்லாத தபசிகளிப்படிமிசையில்
அளவிலாததற்கு அழுதேன்!
தேசாபிமானிகளைக் காணுமலெனதுகண்
தேடியே திகைத்துமழுதேன்!
நேச விசுவாசங்களில்லாத நெஞ்சர்களை
நினைந்து நினைந்துருகியழுதேன்!
ஏசாத பேர்களெளை யேசிவசை கூறினும்
இனிதினி தென்றெண்ணியழுதேன்!
ஈசவடிவாயுலக ஜீவரனைவரும் வருக
யானழுத தாரறிகுவர்!

4. ஆதி ஜெகசோதியாய் அன்னையாய் நின்றதிரு
அருவமதைப் பற்றியழுதேன்!
தீதிலாக் குணமுடைய மக்களனைவர்க்குமே
திருவளர வேண்டியழுதேன்!
வீதிகளில் விளையாடிவரும் பாடைப் பல்லக்கின்
விதி வசங்கண்டு மழுதேன்!
நீதி நெறி கிடையாத ராஜாங்கத் தண்டனை
நியதி கண்டலறி யழுதேன்!
வாதிட்டு வழிதவறி மடிகின்ற மக்களின்
வாழ்க்கையை யுணர்ந்துமழுதேன்!
சாதிமதமென வீறுபேசியே சண்டையிடும்
சளுக்கரைப் பார்த்து மழுதேன்!
காதினிலே மொழிகின்ற நல்லோர்கள் வார்த்தையை
கடந்தழிதல் கண்டுமழுதேன்!
ஓதி யுணர்ந்துலகெலாம்ஒரு ஒளியுளுய்கவென
யானழுத தாரறிகுவர்!

5. முத்தர்களெனக் கூறி முழு மோசம் செய்கின்ற
மூடர்களைக் கண்டுமழுதேன்!
சத்திய சன்மார்க்கமதைச் சண்டாளர் பழிப்பதைச்
சகிக்கமுடியாம லழுதேன்!
கத்திகளைத் தீட்டிஉயிர் போக்கியே உண்ணுகிற
கடையரினங் கண்டுமழுதேன்!
நித்தியமு மநியாய வழிகளிலே பொருள்தேடி
நின்றலைதல் கண்டுமழுதேன்!
பித்துலகர் சற்றுமறிவில்லாத வீணராய்ப்
புறம் பேசல் பார்த்து மழுதேன்!
எத்தனையோ புத்திமதி சொல்லியும் கேளாத
ஏழைகளுக்கிரங்கி யழுதேன்!
உத்தமர்கள் செய் கடமைகண்டு பொருமையுறும்
உலுத்தர்களு முய்யவழுதேன்!
சுத்த பரிபூரண வெளிதனிலே, ஒளியாகி
யானழுத தாரறிகுவர்!

---

6. மந்திரமெனக் கூறி மக்களை மயக்குகிற
மடமையை யொழிக்கவழுதேன்!
அந்தி பகலாய்ப் பிச்சையெடுத் தேங்கி நிற்கின்ற
அகதிகளைக் கண்டுமழுதேன்!
சிந்தையது கெட்டு அபிமான மதழிந்து சிலர்
சீரழிதல் கண்டுமழுதேன்!
பந்தமொடு படுகுழியுள் வீழ்கின்ற மக்களின்
பரிதாபம் பார்த்துமழுதேன்!
நிந்தனைகள் செய்பவரை வந்தனைகள் செய்துமே
நினைவுதடு மாறியமுதேன்!
கந்தலுடையோடு மடமாதர்கள் கையேந்திக்
கற்பழிதல் கண்டுமழுதேன்!
குந்தியிருந் தமைதியுறக் குடிசை கிடையாதவர்கள்
குணங்குறிகள் கண்டுமழுதேன்!
இந்தவித மாயடியேன் நெஞ்சகம் நினைந்துருகி
யானழுத தாரறிகுவர்!

7. பஞ்சமாபாதகர்கள் ஆலயங்களில் கொடிய
பலியிடுதல் பார்த்துமழுதேன்!
கஞ்சாவையுண்டு கண் விழிசுழல உழலுகிற
கயவர் மதி கண்டு மழுதேன்!
நெஞ்சாரப் பொய் பேசி நேசிக்கும் வம்பர்களின்
நிலைமைகளைச் சொல்லியழுதேன்!
தஞ்சமென்றவர் குடியை அடிமைக்குள்ளாக்கிய
தறுதலையைக் கண்டுமழுதேன்!
வஞ்சகம் பொருமை கொலைகளவு செய்பவர்கள்
வாழ்நாளை யெண்ணியழுதேன்!
அஞ்சாத படிமாயை யொடுகூடி யாடுகிற
அடியாரைக் கண்டுமழுதேன்!
கொஞ்சமும் தயையோடு தாட்சண்யமற்றவரைக்
கூடாமலொழுக வழுதேன்!
நஞ்சையமுதென உண்ட நாதாந்த மோனமே
நாமழுத தாரறிகுவர்!

---

(விருத்தம்)

பலபிழைகளறி யாதுசெய்த யிப்பாவியுடல்
மடியினுமோர் கவலையில்லை
சிலகாலிருந்தழியும் சீர்கெட்ட புவிச்செல்வ
மிலையெனவோர் கவலையில்லை
உலகமே தலைகீழதாயினும் முனதருளால்
ஒருபோதுங் கவலையில்லை
கலகநிலை யகலவும் கலியுலக மக்கள் ஒளி
காணவுமோர் கவலைதாயே!

---

வெற்றி !

# 10. கிருபைப் பிரகாசப் பொக்கிஷம்.

## 1. மக்கள் கடமை.

1. அரியகுரு திருவருளை உயர்த்த வேண்டும்
அன்புறுதி நேர்மையொடு பொறுமை வேண்டும்
2. சரியான சன்மார்க்கந் தழுவல் வேண்டும்
சற்சனர்க ளோடுறவு பூண வேண்டும்
3. திரிபுடையில் கிருபை விளையாட வேண்டும்
திடமுடனே ஐம்புலனை வெல்ல வேண்டும்
4. பெரியதவ யோகநிலைக் குயர வேண்டும்
பெண்முதலா யாசனங்கள் பயில வேண்டும்
5. உரிமையுள அருளொளிமா சபைகள் வேண்டும்
உணர்ச்சியுடனுபதேசம் புரிதல் வேண்டும்
6. பாரினி லஞ்ஞானவிருள் அகல வேண்டும்
பாமரர்மெய் யறிவுளராய்த் திகழல் வேண்டும்
7. பரிதியவ னெடுஞ்சுடராய் வாழ வேண்டும்
பரவெளியி லொருமையுடன் கலத்தல் வேண்டும்.

## 2. திருப்புகழிசைப் பாடல்.

1. உலகை நினைந்து நினைந்துழலாதே உடல்
பலகாலிருக்கு மெனக் கருதாதே—உயிர்
விலகி விடுவது கண்டலருதேயிது தவமாகும்.
2. அரனருளடி விட்டு நழுவாதே முது
குரவர் வகுத்த வழி தவருதே—சதி
தரவரும் மனிதரை யணுகாதே யிது மதியாகும்.
3. குருவினரிய உரை பிசகாதே புவிப்
பொருளில் மதிமயங்கி மடியாதே—சதா
அருவநிழலை யுன்னுள் மறவாதே யிவை யறிவாகும்.
4. சைவ உணவு தவிர்த் துண்ணுதே யொரு
தெய்வமின்றிப் பலதை எண்ணுதே—புலன்
ஐவகையு மொடுங்க இது தோதே ஜெய மிகையாகும்.
5. பீடி புகையிலையைப் பிடியாதே சுக
நீடிய ஆயுளையுங் குறையாதே—இனி
வாடிய நோய்களினுல் மெலியாதே இது முதலாக.

6. கடமை கடமை யென்று உளராதே உள்ளத்
திடமின்றியே பிறகு திரும்பாதே—கெடும்
மடமாதர்களுறவை விரும்பாதே இது நலனுகும்.

7. உத்தம ருறவை விட்டகலாதே உயர்
சத்திய நெறிகளைத் தாண்டாதே—திட
சக்தியுடனிருப்பாய் புவிமீதே இது முடிவாகும்.

## 3. பாப்பா மெட்டு.

1. பத்தினித் தவம் புரியு மெங்கள் பாப்பா சிலநற்
புத்திமதி சொல்லுகிறேன் கேளு பாப்பா
அறிவின்றி யோர் கடவுளில்லை பாப்பா உனது
குறியான மேல் நிலையில் நில்லு பாப்பா.

2. ஆத்மீக சக்தியைப் பெருக்கு பாப்பா பொய்மைச்
சாத்திரச் சுவடிகளைக் கட்டு பாப்பா
பாருலக மாய்கைகளைப் பாருபாப்பா நெடுநாள்
யாருலகில் வாழ்ந்தவர்கள் கூறுபாப்பா.

3. செய்கைக் குறைவது கூடாது பாப்பா நமது
சென்மமும் வீணுகிட விடாதே பாப்பா
குணத்தை உயர்த்திடவும் வேணும் பாப்பா கொடிய
குற்றத்தைத் தடுத்திடுதல் நன்று பாப்பா.

4. உடலைப் பிணியணுகிக் கொல்லும் பாப்பா ஆதலால்
திடனுற ஆசனங்கள் செய்யு பாப்பா
குருவை யருவ மதி லெண்ணு பாப்பா பொல்லா
வறுமை பிணிகள் பறந்தோடும் பாப்பா.

5. தயங்காமலே கடமை யாற்று பாப்பா முடிவில்
செயசீல ரென்று பெயரோங்கும் பாப்பா
விசனப்படுவதை விலக்கு பாப்பா சதாநீ
வசனத்தில் நீதி மொழி பேசு பாப்பா.

6. ஒற்றுமையை விட்டிடாதிருங்கள் பாப்பா நமது
நற்றவமும் நாடுமே செழிக்கும் பாப்பா
கற்றுணர்ந்த பேர்களனைவோரும் பாப்பா அகத்தில்
பற்றறக் கடமை செய்ய வேணும் பாப்பா.

7. ஞானத் தெளிவிலுயிர் வாழு பாப்பா நமக்குள்
ஆனந்த மிருக்கு தெனக் காணு பாப்பா
மாணவரும் மாணவியும் கேளுபாப்பா உறுதி
யானதொரு சற்குருவைத் தேடுபாப்பா.

8. மனிதப் பதர் செயல்கள் மோசம் பாப்பா மிகுதி
மாநிலம் விளைவதில்லை பாருபாப்பா
வஞ்சகம் பொருமை யொன்று கூடிப் பாப்பா நாட்டில்
பஞ்சமது மிஞ்சின தென் ருடுபாப்பா.

9. இல்லறந் துறவற மிரண்டும் பாப்பா பிரம
வல்லமையி னுள்ளடங்கி யாகும்பாப்பா
சொல்லுறுதி நல்லொழுக்க மெங்கள் பாப்பா இருப்பின்
எல்லையற்ற நற்புகழிலங்கும் பாப்பா.

10. ஆண்டவன் திருவருளைத் தேடுபாப்பா உலகில்
நீண்டநாளிருந்துமே நீ வாழுபாப்பா
சத்துருவென் றைம்புலனை வெல்லு பாப்பா சித்ர
முத்தனுக் கருகில் நின்று ஆடுபாப்பா.

### 4. ஆண்டவனருட் கீர்த்தனை.

அல்லாஹுவெனக் கூவி—அழைக்குமன்பர்
அருகிலிருப்பன் மேவி.

1. சல்லல்லாஹு ரசூல் முஹய்யதீ னுண்டவன் சொன்ன
சொல்லளவிலே ரகுமான்
நல்லடி தொழுது சதா (அல்)

2. பல்லாயிரம் படைப்பில் அல்லா ஒருவனல்லால்
எல்லாம் நபுஸம்மாரு
துள்ளா லழியுமென (அல்)

3. பொல்லாத காபீர்களைக் கொல்லாமலே கொல்லுவான்
நல்லோருடைய கல்பில்
வல்லவ னொளி கலிமா (அல்)

4. இல்லல்லாஹு ஹயாத்து நில்லாவுடல் மவுத்து
சில்லா நிலை நிறுத்து
நல்லருள் நபியை நத்து (அல்)

### 5. "கையறவிலாத நடுக்கண் புருவப்பூட்டு" என்ற இசை

1. விண்ணரசாய் நின்றிலங்கும் விஞ்சை மந்திர தீபம்
விதியுளோர்க் கருள்கிடைக்கு மகன்றுபோகும் கோபம்
குருமொழிகளை மறையெனதினங் கருதவேகும் பாவம்
குவலயத்தினில் புகழ் பெருகுமே அவர்களுடைய நாமம்
(விண்)

2. மற்கடக மனததனையுள் மடக்கிடாமலே வாழ்ந்து
மட்டரக மனிதர்களெனப் பலருமேசத் தாழ்ந்து

இக்கலியினில் மக்கள் யாவருஞ் சொற்றவறியே வீழ்ந்து
இடையினிலிகழ் பலபடுவர்களிதை யறிந்திடாராழ்ந்து. (விண்)

3. அற்பமாகிய மதியுள்ளோர்களு மரனருள் தனை நாடி
அரிய தவங்கள் புரிய நேர்ந்திடில் வருகுமே புகழ்தேடி
விற்பன விவேகரன்ரே வேத கீதங்கள் பாடி
விரைவிலிறைவனருள் பெருகுவ ரானந்தங் கொண்டாடி (விண்)

4. பேசியேசிப் பிழையகற்றுதல் பிரமமின்றி யாரு
பேயர்களிதை யறிய முனைந்தால் எளிதல்ல காண்பாரு
மாசறவேநன் மனமகிழ்வுடன் தகையுள்ளோரைச்சேரு
மானிடர்களிலவர் சிறந்தவரெனப் புகழ்ந்துமே கூறு. (விண்)

5. கள்ளமில்லா உள்ளமதனுள் கடவுளுண்டங்கு தேடு
கபட நாடக ஆண் பெண்களுடனுறவை விட்டுப்போடு
நம்பினோர்களைக் கழுத்தறுக்கிற நாகரீகக்காடு
நமதிறைவனினருள் பெருகிட வரும் விமலனின் வீடு. (விண்)

6. பந்தபாசம் வெந்தழல் போற் பாழ்நரகினிற்றள்ளும்
பற்றற உயர்தவம் புரிந்திடிற் பவக்கடலினை வெல்லும்
நல்லறிஞர் செய்கடமை நாட்டிலென்றுமே செல்லும்
நய வஞ்ச முள்ள நாவுள்ளோர்களை நமன்வதை செய்து
கொல்லும். (விண்)

7. ஒரு நிலையிலே நிற்பவர்கள்தானுயர் தெய்வீகவித்து
ஓர்மையற்றவர் பொருள்கள் தேடிட ஆடுவார்கள் சித்து
நலனுறவே நன்மார்க்க போதகரறிஞர் பார்த்து நத்து
நறுமலர் போல பாடிவைத்துளேன் பாடல் சித்ரமுத்து. (விண்)

## 6. "மயிலே நீ போய்ச் சொல்லிவா" என்ற இசை.

கிளியே நீ போய்ச் சொல்லிவா—பர
வெளியுள் ஒளியாய் நின்று ஜொலிக்கும் சாம்பவியிடம் (கிளி)

பழிபாதகக் கொடிய பரம சண்டாளருக்கு
எளியேனுரைத்த நல்ல மொழிகள் வீணுகினதை (கிளி)

உன்னையும் உலகமுத லென்னையும் படைத்தநம
தன்னைபரமேஸ்வரியின் அருகில் பறந்து சென்று (கிளி)

கல்லினுங் கடினமன முள்ளவரள விறந்த
தொல்லைகள் புரிந்துலகையல் லலுறச்செய்வதையும் (கிளி)

வஞ்சகமனிதர்களை மிஞ்சிட வொண்ணுதடக்க
அஞ்சலி லிறங்கிவரக் கெஞ்சிக் கெஞ்சிச் சொன்னேனெனக் (கிளி)

சத்தியமிழந்து சதா பித்தர்கள்பவம் புரிந்து
செத்தழிவதையே சித்ரமுத்தன் சொல்லச் சொன்னதாக (கிளி)

## 7. சாம்பவிமீது அருட்புலம்பல்.

1. ஜோதியே எந்தன் துணையே அருளொளியே
பாதியே எங்கும் பரந்தவளே —சாம்பவியே

2. கட்டிப் பிடித்துன் கழலடியை முத்தமிட
மட்டி மனமக்களுக்கு வசமாகலடி —சாம்பவியே

3. படித்தபடி நடக்கப் பழகாத பாதகரை
அடித்துத் திருத்தி உனக் காளாக்கு —சாம்பவியே

4. பொருளை விரும்பி புவிதனிலெலாம் அலைந்துன்
அருளை மறந்தோ ரறிவிலிகள் —சாம்பவியே

5. துவராடை கட்டித் துளபமணி பூண்டவரை
அவமானஞ் செய்தவர்கள் அசடரடி —சாம்பவியே

6. ஆத்தாள் மனோன்மணியே அம்பிகையே உன்பதத்தைப்
பார்த்திருந்த பேர்க்குப் பவமகலும் —சாம்பவியே

7. கங்கு கரையற்ற கருணை வெள்ளமாகவே நீ
எங்குமுயிர் மயமா யிருக்கின்ருய் —சாம்பவியே

8. இந்த உடலுலகம் எவர்க்கும் நிலையில்லையடி
சொந்தமம்மா உந்தனுக்கு சொகுசேநம் —சாம்பவியே

9. கண்ணைச் சிமிட்டாதுன் காரணத்தைக் கண்டிருக்க
விண்ணுலகிலுன்னருளும் வேண்டுமம்மா —சாம்பவியே

10. பட்சமுட னுன்பதத்தைப் பணிந்திடும் பாலகர்க்கு
அச்சமென்ப தங்கு அணுவுமில்லை —சாம்பவியே

11. கற்பமதை யுண்டு களிப்படையும் பேர்களை நீ
விற்பனர்களாக்கி விளங்க வைப்பாய் —சாம்பவியே

12. சைவசமயமதைத் தானழுவ விட்டதினுல்
தெய்வீக சக்தியின்னுந் தெளியலடி —சாம்பவியே

13. பார்க்குந் திசைதோறும் பரந்து நிறைந்தருவாய்
யார்க்கும் தெரியாம லாடுகின்ருய் —சாம்பவியே

14. ஞானவிழி திறந்துன் நாட்டியத்தைப் பார்ப்பவர்க்குத்
தேனருவி யாறு பாயுமம்மா —சாம்பவியே

15. சக்தி கௌரியுந்தன் சன்னதி யின்னதெனப்
புத்தியில்லா மக்களுக்குப் போதிப்பாய் —சாம்பவியே

16. வயிர்பிழைக்க மார்க்க மறியாத மானிடர்கள்
உயிர்வதைக்க என்ன உரிமையுண்டு —சாம்பவியே

17. கற்றறிந்தோர் செய்கின்ற குற்றங் கணக்கில்லையம்மா
பெற்றவளே நீ தான் பொறுத்தருள்செய் —சாம்பவியே

18. உலக நிலைமைதனில் உனதருளைக் காணமல்
கலக நிலையில் மக்கள் கலங்குகிருர் —சாம்பவியே

19. பேசுவது வேதாந்தம் பூசுவது வெண்ணீறு
காசுபணந் தேடுமிவர் கசடரம்மா —சாம்பவியே

20. குறும்புத் தனங்கள் செய்யும் குடிகேடரையுலகில்
துரும்பாய் மதிப்பேனுன் துணைதழுவி —சாம்பவியே

21. பணந்தேடிப் பொய்யான பாருலகை யாள்வதிலும்
குணமிருந்தால் போதுமடி குயிலே என் —சாம்பவியே

22. அசத்தியம் மேலோங்கி சத்தியம்தாழ் வுற்றதினுல்
வசத்திலுல கின்னும் வரலையம்மா —சாம்பவியே

23. காடுமலை ஏறிக் கடுந்தவங்கள் செய்தாலும்
வீடுபெற உன்னருளே வேண்டுமம்மா —சாம்பவியே

24. பக்கபல மில்லாத மக்களுக்கு எந்நாளும்
தக்க துணையிருப்பாய் தாயேநீ —சாம்பவியே

25. எத்தனையோ பிறவி பிறந்திருந்திப் பூவுலகில்
செத்து மடிந்ததல்லால் ஜெயமறியார் —சாம்பவியே

26. தள்ளாடிக் கோலுன்றித் தரணிதனில் வாழாது
பல்லாண்டு உன்னருளில் பதிந்திடச்செய் —சாம்பவியே

27. மாண்டு மடிந்தபின்பு மண்ணுகு மிச்சடலம்
கூண்டெடுத்த காரணமென் கூறுமம்மா —சாம்பவியே

28. மட்டிமன முள்ளவர்க்கு மார்க்கம் உரைத்தாலும்
எட்டிக் கனிபோல் இருக்குதம்மா —சாம்பவியே

29. முத்தே முழுவயிரப் பச்சை மரகதப்பவள
வித்தே உலக ஒளியறிவே —சாம்பவியே

30. ஆசுகவிபாடி அருள்தேர்ந்த மாமுனிகள்
தூசுபெற மாட்டேன் துணையேநம் —சாம்பவியே

31. கூரைவீடேறிக் குதித்துத் திருடினவென்
பேரையிங்கு சொன்னல் பெருமையில்லை —சாம்பவியே

32. குடியன் வெறியன் கொலைபுரிந்த சண்டாளன்
தடியனெனச் சொல்லியெனைத் தள்ளாதே —சாம்பவியே

33. அருவ உலகிலுந்தன் அதிசயத்தைக் காணநல்ல
பருவமதில் உன்னடியைப் பற்றினேன் —சாம்பவியே

34. இந்நூலைக் கற்போர் இதமகிழக் கேட்போர்
புண்ணியராய் விண்ணுலகில் வாழ்வரம்மா —சாம்பவியே.

## 8. கண்மணிப் புலம்பல்.

1. பார்த்தும் படுகுழியில் வீழ்ந்து புரண்டெழுந்து
வேர்த்து விதிர்விதிர்த்தல் விதிவசமோ - கண்மணியே

2. மாணிக்கமாக மதித்தெனது மக்களென்று
பேணிக்கையாகப் புகழ்ந்தது வீண் - கண்மணியே

3. வாய்திறந்து சொன்ன வழிபற்றி நில்லாதார்
சேய்போ லிருக்கையிலே செய்வதென் கண்மணியே

4. தொண்டு செய்வோமெனச் சொன்ன உறுதியெலாம்
வண்டுதும் தாவியம்போ லானதென்ன - கண்மணியே

5. அப்பப்பா சொல்லளவில் நில்லாத மக்களின்முன்
எப்பத்தா னெந்தனுக்கு அழைப்புவரும் - கண்மணியே

6. முன்னாலே போங்களென முகமன் பலபேசிப்
பின்னுற் தடிகொண் டடிப்ப ரிவர் - கண்மணியே

7. வந்தோ மிருந்தோம் வகையுணர்ந்து சத்தியத்தைத்
தந்தோமினிமேல் தடைகளில்லை - கண்மணியே

8. கெட்ட செயலுள்ள ஒட்டுவா ரொட்டிகளை
விட்டுப் பிரிந்திடணும் விரைவினில் நான் - கண்மணியே

9. இறைவி யருள் புரிவாள் எல்லோரும் வாழ்ந்திட வென்
குறையதனை யெண்ணிப் புலம்புகிறேன் - கண்மணியே

10. உண்ணுவிரத மிருந்தபடி நானிருந்து
மண்ணுய் மடிந்து ஒழிதல் நலம் - கண்மணியே

11. அழுகைதனை நிறுத்த வியலாத வென்னிதயம்
எழுது எழுதெனவே தூண்டுதே - கண்மணியே

## 9. ஞானசேகரச் சிந்து.

1. தங்கமெல்லாம் தங்கமல்ல தங்கமே தங்கம்-ஞானத்
   தங்கமுயர் தங்கமடி தங்கமே தங்கம்
2. அப்பரும் சுந்தரும் தங்கமே தங்கம் - அருளை
   எப்பவும் நமக்களிப்பர் தங்கமே தங்கம்
3. மாணிக்கர் சம்பந்தரும் தங்கமே தங்கம் - தவத்தை
   பேணிட வரமளிப்பர் தங்கமே தங்கம்.
4. எல்லாரும் நல்லவர்தான் தங்கமே தங்கம் - அவர்கள்
   வல்லமைகள் குன்றுவதேன் தங்கமே தங்கம்
5. பொல்லாத இவ்வுலகில் தங்கமே தங்கம் - வெகுபேர்
   போக்கிரித்தனம் புரிவர் தங்கமே தங்கம்
6. கல்லாத கவிகளைத் தங்கமே தங்கம் - மடையர்
   கண்டுகளி கூர்வதில்லை தங்கமே தங்கம்.
7. கற்புடமை இன்னதெனத் தங்கமே தங்கம் - உங்களில்
   கண்டறிந்தோ ருண்டுமோதான் தங்கமே தங்கம்
8. விற்பனவிவேக ரெல்லாம் தங்கமே தங்கம் - இறைவன்
   நற்புதல்வ ராகிடுவர் தங்கமே தங்கம்.
9. சொற்படி நடப்பதில்லை தங்கமே தங்கம் - உலகில்
   அற்பமதி யுள்ளவர்கள் தங்கமே தங்கம்.
10. நற்றவம் புரிவதற்குத் தங்கமே தங்கம் - உன்னிடம்
    பற்றேது மிருக்கலாகா தங்கமே தங்கம்.
11. குற்றமற்ற நற்குருவைத் தங்கமே தங்கம் - அறிந்து
    கற்றிடனும் ஞானவழி தங்கமே தங்கம்.
12. உண்மைக ளறிந்தபின்பு தங்கமே தங்கம் - உடலை
    மண்ணெனக் கருதவேணும் தங்கமே தங்கம்.
13. பொய்யுலகு மெய்யிதல்ல தங்கமே தங்கம் - கயிலை
    ஐயனை அறிந்துணரின் நங்கமே தங்கம்.
14. மையலில் மதிமயங்கித் தங்கமே தங்கம் - மனிதர்
    மாளுகிருர் பாவமையோ தங்கமே தங்கம்.
15. ஆதி பரம்பொருளிற் தங்கமே தங்கம் - கலந்தால்
    ஜோதிமய மாகிடலாம் தங்கமே தங்கம்.
16. வேத விதிகளைநீ தங்கமே தங்கம் - சிறிது
    சோதனை செய்தால் நலமே தங்கமே தங்கம்
17. ஞான விழிதிறந்து தங்கமே தங்கம் - புவியைக்
    காணலிலோர் பேதமில்லை தங்கமே தங்கம்.

18. சாண்வயிறு வளர்க்கநீ தங்கமே தங்கம் - இனிமேல்
வீண்பொழுது போக்கிடாதே தங்கமே தங்கம்.

19. அன்னையின் கட்டளையைத் தங்கமே தங்கம் - விரைவில்
எண்ணியே முடிக்கவேணுந் தங்கமே தங்கம்.

20. பொன்னுலக மென்பதிலே தங்கமே தங்கம் - நமக்கு
விண்ணவர் பழக்கமுண்டு தங்கமே தங்கம்.

21. மறக்க மனம்வருமா தங்கமே தங்கம் - மலைமேல்
இருக்கவழி கண்டபின்பு தங்கமே தங்கம்.

22. மானுபி மானமற்றுத் தங்கமே தங்கம் - சைதன்ய
மாடமதிற் கேகவேணும் தங்கமே தங்கம்.

23. மூவர்முதற் தேவரெல்லாந் தங்கமே தங்கம் - நமக்கு
ஆவன செய்திடுவார் தங்கமே தங்கம்.

24. சத்திய சம்பன்னருக்குத் தங்கமே தங்கம் - உண்மையை
நித்திய முபதேசிப்போம் தங்கமே தங்கம்.

25. கேட்டு நடப்பவர்க்குத் தங்கமே தங்கம் - கிருபை
வீட்டுவழி கிட்டுமடி தங்கமே தங்கம்.

26. உலக நிலைமைகளைத் தங்கமே தங்கம் - பார்த்துநீ
விலகி நடக்கவேணும் தங்கமே தங்கம்.

27. அஹிம்சை கடைப்பிடித்துத் தங்கமே தங்கம் - புவியில்
இம்சை தவிர்ப்பாயடி தங்கமே தங்கம்.

28. தொண்டாற்றிப் பெற்றசுகம் தங்கமே தங்கம் - அதிலே
நின்றுதவஞ் செய்யவேணும் தங்கமே தங்கம்.

29. சென்றவைகளைக் குறித்துத் தங்கமே தங்கம் - இனிமேல்
சிந்தனைகள் செய்யலாமா தங்கமே தங்கம்.

30. ஒன்றான உண்மையிலே தங்கமே தங்கம் - சத்நாம்
ஒன்றியதில் வாழவேணும் தங்கமே தங்கம்.

31. சைதன்ய பிம்பமது தங்கமே தங்கம் - உயிர்க்கு
மெய்மயமாய் நின்றிலங்கும் தங்கமே தங்கம்.

32. புத்தியில்லா மக்களுக்குத் தங்கமே தங்கம் - உயர்ந்த
சத்தியத்தைச் சாற்றலாமோ தங்கமே தங்கம்.

33. கள்ளமில்லா உள்ளமதில் தங்கமே தங்கம் - கடவுள்
வல்லமை நடம்புரியும் தங்கமே தங்கம்.

34. அறியாச் சிறுபிழையைத் தங்கமே தங்கம் - புவியில்
பெரியார் பொறுப்பரடி தங்கமே தங்கம்.

35. இகபர மிரண்டிலுமே தங்கமே தங்கம் - நீதி
மிகஒளி வீசவேணுந் தங்கமே தங்கம்.

36. மோன நிலையிலேதான் தங்கமே தங்கம் - தன்னையே
தானறிந்து கொள்ளலாமே தங்கமே தங்கம்.

37. நம்பிக்கை பூணுவதால் தங்கமே தங்கம் - நமக்கு
அம்பிகை பதங்கிடைக்கும் தங்கமே தங்கம்.

38. திடக்க முடையவர்கள் தங்கமே தங்கம் - எந்நாளும்
அடக்கத்துடன் வாழ்வரடி தங்கமே தங்கம்.

39. தரும குணமிருந்தால் தங்கமே தங்கம் - இளையாள்
அருகி லமர்ந்திருப்பாள் தங்கமே தங்கம்.

40. உல்லாசக் கப்பலிலே தங்கமே தங்கம் - சென்று
தள்ளாடி வீழ்ந்திடாதே தங்கமே தங்கம்.

41. குருபிரா னுந்தனுக்குத் தங்கமே தங்கம் - சொல்லிய
ஒருவழியில் நிற்றல் நலம் தங்கமே தங்கம்.

42. அங்கம் பொருளழியுந் தங்கமே தங்கம் - ஆன்மா
மங்களமாய் நின்றொளிருந் தங்கமே தங்கம்.

43. போனது போகவினித் தங்கமே தங்கம் - நல்ல
புத்தியா யிருக்கவேணுந் தங்கமே தங்கம்.

44. சாகாக் கலையறிந்து தங்கமே தங்கம் - ராஜ
யோகமே பயிலவேணும் தங்கமே தங்கம்.

45. வேகாத்தலை யின்னதென தங்கமே தங்கம் - அறிந்தால்
போகாப்புனர் பெறலாம் தங்கமே தங்கம்.

46. அடங்காப் புரவிதனில் தங்கமே தங்கம் - ஏறி
நடனம் புரிந்திடலாம் தங்கமே தங்கம்.

47. இந்திர லோகத்திலே தங்கமே தங்கம் - உபாய
தந்திரமாய் வாழ்ந்திடலாம் தங்கமே தங்கம்.

48. சந்திர சூரியர்கள் தங்கமே தங்கம் - நமக்குள்
வந்துதய மாகிடுவர் தங்கமே தங்கம்.

49. தன்னை யறிந்தவர்க்கு தங்கமே தங்கம் - உலக
மண்ணிலொரு ஆசையில்லை தங்கமே தங்கம்.

50. தீர்க்க தரிசனமாய்த் தங்கமே தங்கம் - சாம்பவி
காக்க அருகிருப்பாள் தங்கமே தங்கம்.

51. போசன விதிகளோடு தங்கமே தங்கம் - யோக
ஆசனம் பழக வேண்டும் தங்கமே தங்கம்.

52. ஏமாந்து போனவர்கள் தங்கமே தங்கம் - உலகில்
சாமான்ய மில்லையடி தங்கமே தங்கம்.

53. சத்துவ குணம் பெருகித் தங்கமே தங்கம் - ஜீவன்
முத்தியுற வேண்டுமடி தங்கமே தங்கம்.

54. சிற்றின்ப விச்சையிலே தங்கமே தங்கம் - மயங்கிப்
பற்றுறுதல் ஞாயமோதான் தங்கமே தங்கம்.

55. பேரின்ப வாழ்விலேநாம் தங்கமே தங்கம் - புகுந்து
சீரியதவம்புரிவோம் தங்கமே தங்கம்.

56. அட்டாள தேசமெல்லாந் தங்கமே தங்கம் - நிமிடம்
திட்டமாகப் போய்வருவோம் தங்கமே தங்கம்.

57. குருவில்லாச் சீடரெல்லாந் தங்கமே தங்கம் - முருகன்
அருளிற் கருகரல்லர் தங்கமே தங்கம்.

58. நாக்கை மடித்துயர்த்தின் தங்கமே தங்கம் - உனது
ஆக்கையும் மிகவலுக்கும் தங்கமே தங்கம்.

59. போக்கிழந்த பூரணத்தைத் தங்கமே தங்கம் - சிரசில்
தாக்கியே ஜெயம்பெறலாம் தங்கமே தங்கம்.

60. தபசிற் சிறந்தோமென்பர் தங்கமே தங்கம் - பொல்லாத
கபட நடிகரெல்லாம் தங்கமே தங்கம்.

61. பொருளை மிகவிரும்பி தங்கமே தங்கம் - அழியா
அருளை மறக்கலாமோ தங்கமே தங்கம்.

62. பித்துப் பிடித்தவர்கள் தங்கமே தங்கம் - வெகுபேர்
சித்தரெனச் சுற்றுகிருர் தங்கமே தங்கம்.

63. சந்நியாசி என்பவர்கள் தங்கமே தங்கம் - சன்மார்க்க
நன்னெறி புகட்டிடுவர் தங்கமே தங்கம்.

64. நாத்தீக மற்றுவிழத் தங்கமே தங்கம் - நமக்குள்
ஆத்மீக சக்திவேணும் தங்கமே தங்கம்.

65. உண்ணு விரதத்திலே தங்கமே தங்கம் - உலக
உண்மையெல்லாந் தோணுதடி தங்கமே தங்கம்.

66. கண்ணாலே காண்பதெல்லாம் தங்கமே தங்கம் - புழுதி
மண்ணேடு மண்ணுகுமடி தங்கமே தங்கம்.

67. அமர நிலையடைந்தால் தங்கமே தங்கம் - எவர்க்கும்
எமவதைக ளில்லையடி தங்கமே தங்கம்.

68. சாத்திரச் சுவடிகளை தங்கமே தங்கம் - புரட்டி
பார்த்ததினு லென்ன பயன் தங்கமே தங்கம்.

69. சூத்திரமறியவேனும் தங்கமே தங்கம் - அதனுல்
ஆத்தாள் அருள்பெறலாம் தங்கமே தங்கம்.

70. பழமுதிர் சோலேவளர் தங்கமே தங்கம் - நாடெல்லாம்
வளம்பெற வேண்டுமடி தங்கமே தங்கம்.

71. வாலிப சிங்கங்கட்கு தங்கமே தங்கம் - எதிர்காலச்
சோலிரொம்ப உண்டாமடி தங்கமே தங்கம்.

72. யுத்த முனையிலேதான் தங்கமே தங்கம் - போர்வீர
சித்தரென்று பேர் பெறனும் தங்கமே தங்கம்.

73. வருங்காலப் போர்ப்படலம் தங்கமே தங்கம் - அதிக
அருகிலிருக்குதடி தங்கமே தங்கம்.

74. சித்தத் தழுக்குடையோர் தங்கமே தங்கம் - உயர்ந்த
முத்தர்கள் நிலேயறியார் தங்கமே தங்கம்.

75. வாய்வேதமே பொழிந்து தங்கமே தங்கம் - முடிவில்
பேய்போ லலேவாரடி தங்கமே தங்கம்.

76. கோபக் கொடுமையினுல் தங்கமே தங்கம் - கொடிய
பாபச்சுமை உயருந் தங்கமே தங்கம்.

77. பொல்லாத பாவிகள்தான் தங்கமே தங்கம் - உலகில்
இல்லாததைப் புகழ்வர் தங்கமே தங்கம்.

78. பித்துப் பிடித்தலேதல் தங்கமே தங்கம் - ஜீவன்
முத்தருக் கிதுதகுமோ தங்கமே தங்கம்.

79. ஆலமர நிழல்போல் தங்கமே தங்கம் - நமக்கு
காலநிலே கைதருமா தங்கமே தங்கம்.

80. ஈருயிரு மோருயிராய்த் தங்கமே தங்கம் - இருந்தால்
யாருனேத் தடுப்பவர்கள் தங்கமே தங்கம்.

81. பொய்யாத மெய்தனிலே தங்கமே தங்கம் - நாமே
துய்யமனி போலொளிர்வோம் தங்கமே தங்கம்.

82. கண்ணிமையா நாட்டமுற்ருல் தங்கமே தங்கம் - நாம்
விண்ணிலே உலாவலாமே தங்கமே தங்கம்.

83. மட்டி மனமதனேத் தங்கமே தங்கம் - ஓடாமல்
கட்டிவைக்க மார்க்கமுண்டு தங்கமே தங்கம்.

84. உந்தியினுள் சிந்தனேயைத் தங்கமே தங்கம் - செலுத்த
சந்தடி செய்யாதடங்கும் தங்கமே தங்கம்.

85. தேடாத் திரவியத்தை தங்கமே தங்கம் - தன்னுள்
நாடவே கிடைக்குமடி தங்கமே தங்கம்.

86. மாருட்டப் பேயரொடு தங்கமே தங்கம் - வாதிட்டு
போராட்டஞ் செய்யலாமோ தங்கமே தங்கம்.

87. சுகதுக்கம் இரண்டினையும் தங்கமே தங்கம் - பகுத்துப்
பகலிரவு போலுணர்வாய் தங்கமே தங்கம்.

88. ஏழைகளாய் வாழ்ந்திடலாம் தங்கமே தங்கம் - உலகில்
கோழையென்றிருக்கலாமோ தங்கமே தங்கம்.

89. வறுமை பிணிவரினும் தங்கமே தங்கம் - உனது
பொறுமை தவறலாமோ தங்கமே தங்கம்.

90. கனிபோலமுதமொழி தங்கமே தங்கம் - பேச
இனிதாக நீபழகு தங்கமே தங்கம்.

91. புவனமதிற் பிறந்தாற் தங்கமே தங்கம் - விரைவில்
தவஞ்செய் தருள்பெறடி தங்கமே தங்கம்.

92. நாட்டை வெறுக்கலாமோ தங்கமே தங்கம் - இருண்ட
காட்டினுள் ளிருக்கலாமோ தங்கமே தங்கம்.

93. சும்மா இருப்பதற்கு தங்கமே தங்கம் - மௌன
சிம்மாசனம் பெறனும் தங்கமே தங்கம்.

94. உதாரணச் சொற்களிலும் தங்கமே தங்கம் - உனது
நிதானந் தவறலாகா தங்கமே தங்கம்.

95. மடமை மதியொழித்து தங்கமே தங்கம் - தேசக்
கடமை புரியவேண்டும் தங்கமே தங்கம்.

96. அறிவு மயங்கடவுள் தங்கமே தங்கம் - வேறொரு
நெறியுளதென் றெண்ணிடாதே தங்கமே தங்கம்.

97. இருப்பதொரு பொருள்தான் தங்கமே தங்கம் - எவரும்
மறுப்பதற்கு ஞாயமில்லைத் தங்கமே தங்கம்.

98. முத்தாரம் போலொளிரும் தங்கமே தங்கம்- இந்நூலில்
புத்திமதி மெத்த உண்டு தங்கமே தங்கம்.

99. கற்றுத் தெளிந்திடிலோ தங்கமே தங்கம் - உலக
பற்றறுத்து வாழ்ந்திடலாம் தங்கமே தங்கம்.

100. ஞானமணி யனைத்தும் தங்கமே தங்கம் - இதனுள்
காணக் கிடைக்குதடி தங்கமே தங்கம்.

101. சித்திர முத்தனுக்குத் தங்கமே தங்கம் - சாம்பவி
உத்தரவு தான்விடுவாள் தங்கமே தங்கம்.

102. அத்தனரு ளொளியில் தங்கமே தங்கம்
நித்தியந் துணைபுரிவாள் தங்கமே தங்கம்.

## 10. விகசித வெண்பா.

1. குற்றங் குறையின்றி குருநாதன் சொற்றவரு
நற்றவங்கள் செய்து நலனுற்றால் - பற்றறுத்து
தில்லைவளர் நாதன் திருவருளைக் கூடி
வல்வினைகளற்றிருக்கலாம்.

2. புகழினை நாடிப் புவியில் வசியாதே
அகமதிலே தங்கி யருள்சேர் - சகலவித
ஆட்டமுதல் மாயைக் கூட்டமெலா மொருநாள்
ஓட்டமிடு மென்ப துணர்.

3. ஐயறிவுந் தாண்டி அவனிதனில் மேலான
மெய்யறிவு பெற்ற மனிதா - தெய்வநெறி
கண்டு கலியுலகில் கடமைபுரி வான்வேண்டி
தொண்டுபுரிந் தாற்று செயல்.

4. எல்லையற்ற தேவ னிணையடியைப் போற்றி
பல்கலையின் ஞானம் பகுத்தறிந்தால் - தொல்லைபல
நீங்கி நிலம்புகழ நீடுநாள் வாழ்ந்து
ஓங்கித் தவம்புரிய லாம்.

5. வம்ச பரம்பரையின் வழிபுகழ நீஜீவ
ஹிம்சை யதைவிட்டு விலகு - சம்சயங்கள்
நீக்கி நிறைபேதம் போக்கிப் புனிதவுடல்
ஆக்கி அருந்தவங்கள் செய்.

6. மாந்தர்களிற் சிறந்து மகிதலத்தில் வாழின்
சாந்தமுடனே திகழல் வேண்டும் - நீந்திக்
கரைசேர் கலியுலகக் கடலைக் கடினமூல
உரைகடந்து ஒன்றி இரு.

7. நரமாம்சங் கொண்ட நாற்றவுட லுற்றமனம்
திரவியத்தி னுசை யொழியாது - பரமனருள்
வசமாவதற் றுலக வாழ்வுசத மாகுமெனக்
கசடர்க ளுலவுவது காண்.

8. கோடிபேர் கூடிக் கெடுப்போம் குடியெனினும்
பேடிபோ லோடி யொழியாதே - சாடியான்
எதிர்ப்பே னெவர்வரினு மென்றுறுதி பூணின்
சதிப்பகைக ளற்று விழும்.

9. ஏழையென யேசு இருக்கலா மெந்நாளும்
கோழையெனக் கூறநீ வாழாதே - பேழையினுள்
வைத்த தனம்போல வான்பொருளைக் காத்து
பூத்தமலர் போலுலகில் வாழ்.

10. மோனமணி மண்டபத்தைக் காணின் கவலையது
போனவழி காணாது போமே - வானவர்கள்
வருவர் வரந்தருவர் வாழ்க வகைபுரிவர்
அருவநிலை நீயுணர்ந்து பார்.

11. உண்மை யுணர்ந்து உழல்நிலையை விட்டேகி
கண்ணிமையா நாட்டத் திருந்தால் - விண்ணுலகக்
காட்சி பலகாணும் கருணைவழிந் தோடும்
ஆட்சி காமாட்சி யருளால்.

12. உத்தமர்களோடு உறவாடு நன்மையுண்டு
புத்தியற்ற போக்கிரி பின் போகாதே - சத்தியத்தைப்
பேசுவதைப் பேணு பேரறிவே தெய்வமென
தேசுறநீ யோர்நிலையில் நில்.

13. வந்ததென வாழ்வு மகிழாதே மற்றெதையும்
நிந்தனைகள் கூறி யிகழாதே - பந்தமதை
இன்றே வெறுத்து இறையினடி பெற்று
குன்றொளிபோ லோங்கி வளர்.

14. விண்ணை யணுகி விமலனருள் பெருகக்
கண்ணையகக் கண்ணாலே கண்டு - மண்ணில்
மாயா உலக மயக்கமிக மூடுதற்குள்
ஓயா துனதொளியைப் பார்.

15. குடும்பக் கவலையுனைக் கொலைபுரியு மென்பதறி
இடும்பைபல தந்துசதா ஏமாற்றும் - நெடும்புனலை
நீந்திக் கரையேற வேண்டி னனுதினமும்
சாந்திநிலை சார்ந்துலகில் வாழ்.

16. உடலை யுனதுனதென் றுற்றுற்றுப் பாராதே
சுடலை பிடிசாம்ப லதுவாம் - நடனமிட
வேண்டாம்நீ இந்த வினையுலகில் இப்போதே
மாண்ட ஜடமாகக் கருது.

17. அழியாத ஜோதி வடிவுடைய நீபாவக்
குழியதனில் வீழ்ந்து உழலாதே - பழிசாரும்
குற்ற மகற்றி குணம்பெருக்கி மேலுமிக்க
நற்றவங்கள் செய்வதற்கு நாடு.

18. புற்றீசல் போலப் புதல்வர்களைப் பெருக்கிப்
பெற்று வளர்ப்பதினுல் என்னபயன்—சிற்றறிவு
போக்கிப் பகுத்தறிவுண் டாக்கி யவனிதனில்
பாக்கியவா னுகவேநீ வாழ்.

19. மாண்டு ஜடலம் மண்ணுகிப் போவதற்குள்
காண்டற் கரியதவம் புரிவீர்—ஆண்டியென
ஏசமனங் கூச ஏற்றுண்ண லாகாது
ஈசனருள் தேடி யுழை.

20. நல்லமதி புகன்று நாமிருந்தாற் பாமரர்கள்
பொல்லாத செய்கை பலபுரிவர்—கல்லாத
மூடமதியாற் றேடிச் சுகித்து முடிவிலவர்
பாடதிகம் பட்டு மடிவர்.

21. அன்னை யருள்பெற்று அவனிதனில் வாழாமல்
தின்மை பலபுரிந்து தினந்தோறும்—மண்ணுலகோர்
அல்லல் பலவுற் றழிந்து அருளிழந்தும்
வல்வினைக ளூற்றுழல்வர் காண்.

22. மண்ணுலகினிற் பிறந்து மண்ணுலகிலே வாழ்ந்து
மண்ணுலகிலே மடிந்து போகாமுன்—நின்னுடைய
பக்திதனைச் செலுத்து பரமனிடம் நாளும்
முத்தியது கிடைக்கும் முனைந்து.

23. அருளதனை நாடிநல் லரியதவம் புரிந்து
இருளதனை யகற்றி இன்பமுடன்—மருளுலகில்
பொறுமை மிகப் பூண்டு புனிதமுடன் நாளும்
குருவுரையின் பற்றி நட.

24. ஏழைக் குழந்தைகளென் றெண்ணி இதயமது
கோழை படச்செய்தல் கூடாது!—வாழையடி
வாழை யெனவளர்ந்து வாழ்ந்து புவிப்பணிக்குத்
தாழைமடல் சான்றுணர்தி தான்.

25. யாக்கை உடலெடுத்த யாவருக்கும் ஒவ்வாத
போக்கைப் புறக்கணித்துப் புத்துயிராய்—ஊக்கமொடு
ஊழ்கடலைத் தாண்ட உயர்வெய்தும் உத்தமர்கள்
வாழ்க்கைக்கு நல்ல வழி.

26. இந்தப் புவியுலகில் ஏன்பிறந்தே னென்றுசதா
சிந்தனையி லாழ்ந்து சிவமாக—அந்தர்முக
யோகம் பயின்று மனமோகப் புலனசைவின்
வேகம் தவிர்ப்பீர் விரைந்து.

27. எங்கும் நிறைந்த இறைவன் திருவருளை
உங்கள் அறிவில் நிறைவாக்கி—மங்களமாய்
ஐந்தெழுத்தை ஓதினல் அழியாத் திருவளர்ந்து
சிந்தனையும் வாழ்வும் சிறக்கும்.

## 11. வினைதீர்த்தாள் பதிகம்.

1. தேனுறு பாய்ந்தமுதத் தெய்வீக வருள்பெற்ற
திருச் சேதுபதி நாட்டிலே
மானுங் குடியென்ற கிராமத்திலுயர் சக்தி
வினை தீர்த்த ஜெகதீஸ்வரி
காணுத காட்சிகண் டகமகிழ வடியன்திருக்
கண்ணுகி நின்ற உமையே
ஈனுத மலடியே யழியாத செல்வமே எனது
குறை சிறிது புகல்வேன்.

2. கடுக்கைநகர் வலசையிலோர் மடப்பள்ளிதனிலே நீ
படுத் துறங்குதல் நீதியோ
துடுக்கான உனதுதிரு விளையாட லாரறிவர்
தொல்லுலகி லுள்ள மனிதர்
மக்களொடு மரஞ்சூழ்ந்த சோலையுன தாலயம்
ஆதியாய் நின்ற சுடரே
திடுக்கிடும் சம்பவமங்கு நடப்பதழ காகுமோ
தேவியே யெங்கள் தாயே.

3. சிலகயவர் புரிகின்ற அறிவற்ற தன்மையால்
பலர் பரதவிக் கின்றனர்
கலகநிலை பெருகிவெகு கன்ருவி நோய்சூழ்ந்து
சண்டாளப் பஞ்ச மணுகி
நிலவுலகில் மழையருவி குறைவுற்று விளைவின்றி
யகதிகளு மிகுதி யாகி
அளவிலாத் துன்பமுறக் காரணமுங் கடைகெட்ட
கண்மூடிக் கயவரம்மா.

4. மனைதோறும் நின்றுசதா விளையாடு கின்றநின்
  மகிமைதனை யெவரு மறியார்
 துணையா யிருந்துலக மக்களுக்கு ஆதரவு
  துரிதமுடன் தருவ துணரார்
 தினையளவு முனதருளைச் சிந்தியா ரனுதினமும்
  செய்பிழைகளதிக மதிகம்
 வினைதீர்த்த பரிபூர ணனந்த வல்லியே
  விரைவில் வரமருள வருவாய்.

5. கோவிலென் பதன்பொருளைக் குடிகேட ரறியாது
  கொலை மிகுதி பெருகுதம்மா
 ஆவிபறி போகையிலே ஐயோவெனப் பதறி
  அளவிலா உடலழி யுதே
 தேவியேயிச் சீவவதையற் றஹிம்சை குடிகொள்ள
  சிறிதேனும் இடமில் லையா
 பாவிகளிப் புவியுலகில் வாழ்ந்திடுதல் நீதியா
  பரிசுத்த குல தெய்வமே.

6. பேராசைப் பேயர்களுன் புகழ்பெற்ற பெயர்பேசி
  புனிதமுற வழிக ளின்றி
 நூருயிரந் தர மிடறிவிழுந் தழுதழுது
  நோய் பிணிகட் காளாகியே
 தேருத சிந்தைதனைத் தேற்றினநற் றவத்தினரைத்
  திருடர் வெகு பழி கூறுவர்
 கூருத மந்திரமுன் வேலாயுத மாகிக்
  கொடியர்கரு வறுப்ப தென்றோ.

7. உருவத்தில் மானிடர்போற் தோன்றினு மவர்களொரு
  உத்தம மனித ரல்லர்
 மிருகத்துக் கொப்பான மாக்களறி வுற்றவரை
  மக்களெனப் புகழ லாமா
 திருவுற்ற மனிதராய் ஒருசிலரைக் காணலாம்
  அதுவு மிலட்சத்திற் கொருவராக
 அருவத்தி லெனைவந்து பருவத்தி லாட்கொண்ட
  அன்னை வினைதீர்த்த தாயே.

## 12. அழகிய நாயகியம்மன் பதிகம்.

### (கவி)

பழமுதிர் சோலைசூழ்ந்த பரனருளுயர் நந்நாட்டில்
வளமிகு வளர்ந்துநாளும் வறுமைநோ யகலவேண்டின்
அழகன்மா நகரில்வாழும் அழகியநாயகியே யுந்தன்
கழலடிநிழலி லெங்கள்கரங் குவித்திறைஞ்சு வோமே.

## ஆசிரிய விருத்தம்

1. ஞானனு பவமுற்ற பெரியார்க ளுதிக்கின்ற
நமதரிய தமிழ் நாட்டிலே
தேனறு பாய்ந்தமுதத் தெய்வீக வருள்பெற்ற
திவ்ய தலம் பலவற்றினுள்
ஆனலு மழகேச னரசாளத் துணைநின்ற
அன்னையே நீஇணை யற்றவள்
மீனம்பிகைக் கிளைய வாலாம்பிகைச் சுடரே
அழகிய நாயகி யம்மையே.

2. முருகனருளரு ளென்று வாய்ஞானம் பேசியூர்
முழுதுமலை பவர்களுண்டு
திருவருளை முழுதுமே கண்டு கொண்டோமெனத்
திரிந் தலைந்து மடிவதுண்டு
பொருளதனை யறியாத பேர்களிப் புவியில்வெகு
கவிதைகளை வரைவ துண்டு
குருவாகி யழகியநல் லருவாகி நின்றரிய
பரிகார மருள் தேவியே.

3. அலைகின்ற மனததனை அமைதியுறச் செய்வதற்
கணுவேனும் வகைக ளுணரார்
வலையிலகப் பட்டுள்ள மான்போல மனைமக்கள்
கவலையுட் பட்டு உழல்வர்
நிலைதவறி நின்றுநந்நீதிக்கு மாருக
நிட்டூரச் செயல்கள் புரிவர்
விலைதூசு கூடப் பெருதவிச் சகசண்டி
மனிதராற் பயனில் லையே.

4. நன்றுதீ துணராத கலிகால மிதனிலொரு
நலன்காண லரிதா குதே
அன்னிய மிகக்கருதி மமதைகளு முருவாகி
அடங்காப் பிடாரி வடிவாய்
தன்னிக ரில்லாம லகங்கார முன்னின்று
தருமநெறி பிசகி வீழ்வர்
இன்னிலம திருந்துனது பதமலர் துதிக்கின்ற
அடியவர்கட் கிடர்கள் புரிவர்.

5. ஆகாத அறிவிலிகள் கருவெல்லா மழியணும்
அவனிதனில் மழை பொழியணும்
வாகான பெரியாரைப் பின்பற்றி நடக்கணும்
வம்ச பரம்பரை பெருகணும்

சாகாத கலையூதி தவமதிகஞ் செய்யனும்
சண்டாளப் பவ மகலனும்
ஏகாந்த மாகவே இருந்துனது பதிகத்தை
இன்பமுடனே பாடனும்.

6. சாதுகளெனப் பெரிய பெயராயிருக்குது
சச்சரவு ஒழிய விலையே
வாதுகள் புரிந்துமுடி யோடுமுடி கொய்வது
வம்பரிடுந் துன்ப விளைவே
மாதுகளைக் கண்டுவாய் தாயெனவே சொல்லுது
மனம்வே றேதோ வெண்ணுது
சூதுவிளை யாடலுடன் துணைக்குனது பாடலும்
துட்டருடை செய்கை யிதுவே.

7. புத்திரர்க ளில்லையெனக் கத்துவது மொருபுறம்
குற்றஞ் செய்வது மொருபுறம்
முத்தியுற வூர்முழுதுஞ் சுற்றுவது மொருபுறம்
கத்தி தீட்டுவது மொருபுறம்
பத்தியிலே மூழ்கியும் சொத்துரிமை யொருபுறம்
வித்தியாசங்க ளொரு புறம்
சத்தியமே யில்லாத பூசைகளு மொருபுறம்
புத்தி யீனரின் போக்கிது.

8. உபதேச தீட்சைபெற் றறியாத அறிவிலிகள்
ஊர் முழுதெல்லாஞ் சுற்றியே
சுபசோக மந்திர மறிந்தவரெனச் சொல்லித்
தொல்லைபல விளைவிப்பர் காண்
கபகபெனக் கவிகள்பல கக்குவரவர்கள் வெகு
பக்குவிக ளெனக் கூறுவர்
சபல அவலட்சண சந்யாச வேடமிது
சத்தியமா யாகாது காண்.

9. பொய்பேச எள்ளளவும் வாய்கூசுவ தில்லையே
புறம்பேசல் போக விலையே
கைவரிசை காட்டியும் கண்களால் மருட்டியும்
கயவர் புவிவாழ்க்கை வாழ்வர்
மெய்வழியை யிவர்கட்கு போதிக்கலாகு மெனின்
வேம்பு போற் கசப்பாகுதே
துய்யனேயுன் னருள்மழையைப் பெய்திவர்க ளீடேற
அரிய வரமருள்தேவியே.

10. சிவவேட சித்தர்க ளுடைகண்டு பித்தர்கள்
பவரோக பீடை யுறவே
துவராடை சுத்த கவராட லென்பர்
நவநாகரீக மடையர்
தவநாடு பக்த தமிழ்நாடு பெற்ற
அவமான நீதி யிதுவே
எவரேனும் ஞானக் குறை கூறலாகா
தறிவீர்நன் குண்மைத்துறவை.

11. சத்திநீ வினைதீர்த்த சர்வபரி பூரணி
சதா சைவ தெய்வநிதிநீ
முத்திநில முதல்விநீ பக்தர்களுக் கருளும்நீ
பரமபத பாக்கியமும் நீ
நித்தியமும் மறவாத உத்தமர்கட் குயிரும்நீ
வித்தகர்கள் கவிதை நீயே
சித்திரமுத்தன் நாவில் நடனமிடு ஜோதியே
அழகிய நாயகி யம்மையே.

## (கும்மி மெட்டு)

1. பாசறை தீபதரிசனமாம் அதை
பார்த்தவர் பாவ விமோசனமாம்
நீ சற்றிதை
யோசித்துமே
வாபெற்றுய்யலாம் நற்றவம்
ஞான ஒளியுள் ளொளியாக உயர்
மோன முறலாம் கலியேக.

2. அன்னை யருளொளி மாமடமாமங்கு
தன்னை யுணரவும் மார்க்கமுண்டு
அன்ருடமும்
கொண்டாடிட
நின்ருலருளுண்டாகுமே
தெய்வ வழிபா டிதுவாகுமிதில்
ஐயமொன்றில்லை மெய்மாணவரே.

3. சதியகலவும் விதியை வெல்லவும்
மதிபுகழுமோர் நீதியுண்டு
பற்றற்றிடக்
கற்றுத்தெளி
குற்றத்தினை விட்டுப்பிரி
என்றுபந் தபாசங்கள் தானடங்குமங்கு
கண்டு நடந்தால் பயன் கிடைக்கும்.

4. மானுபிமான மிழந்து உலகினில்
வீணாகக் காலங் கழிக்காதே
யோகஞ்சிவ
யோகந்தெரிந்
தூகமுடன் தியாகம்புரி
மெய்யாய்நின் நாமம் புகழோங்கும்புவி
ஐயன்திரு வருளைத் தாங்கும்.

5. பொன்னுல கென்பது முன்னுள்ளேதானுயர்
விண்ணுல கென்பது முன்னுள்ளேதான்
புனிதத்தவ
மனிதர்க்கிது
அணியச் செயுநனி நற்றுரை
மற்றைய மாக்களறிவாரோ அவர்
தெற்றெனத் தேறி வருவாரோ.

6. இன்றிருந்த நந்நாள் நாளைக்கு ஏனில்லை
என்றெண்ணி யுள்ளந் தனிலூனி
ஒவ்வாதது
செய்யாமலே
எவ்வாறுயருய்வோமென
சிந்தை இளகிக் கண்ணீர் சொரிந்து உந்தன்
பந்த மனதைத் திடப்படுத்து.

7. ஏட்டிலெழுதின பாட்டைப் படிக்கலாம்
நாட்டிலுள்ளோர்கட் கெடுத்து முரைக்கலாம்
மட்டிப்புலன்
நிட்டைக்கெனக்
கட்டுக்கப்பட்டுள்ளதா
என்றுனை முன்னமே நீ காணு பிற
கொன்றென்றுலக மெலாந்தோணும்.

8. தேடிச் சுகிப்பதும் செத்துமடிவதும்
நீடிய மாந்தர் விளையாட்டு
அத்தன்பதம்
நத்துஞ்சித்ர
முத்தன்கவி நித்தம்படி
பேரின்ப வீடருகிற் கிடைக்குங் கெட்ட
பிறவிப் பிணியை வேரறுக்கும்.

## 13. அழகிய நாயகியம்மன் கும்மி

1. விண்ணவர் போற்றிடும் புண்ணிய பூமியில்
கண்ணொளியாம் சேது நந்நாட்டில்
பொன்பொருள் பொங்குமழகநகர்வளர்
அன்னையழகிய நாயகியே!

2. இராசன் சிரசிலிருந்தவளே இந்து
தேசமெல்லாம் புகழ் பெற்றவளே
நேசமாய் மக்களை ஆள்பவளே தாயே
மாசற்றழகிய நாயகியே!

3. கூவியழுதுன்னைக் கும்பிடும் பாலரைத்
தாவியணைத்து வரமருள்வாய்
தேவியுனதருள் சன்னதியிலெங்கள்
ஆவியழகிய நாயகியே!

4. நஞ்சை யமுதென உண்பவள் ஏழைகள்
சஞ்சலந் தீர்க்குந் தயாபரியே
வஞ்சக மற்றதோர் மன்பதைகளுந்தன்
தஞ்ச மழகிய நாயகியே!

5. வறுமை நோய்களகன்றிடவும் புவிப்
பொறுமை நின்று துலங்கிடவும்
இருளகன்றிட நாளுந் துணைபுரி
அருளழகிய நாயகியே!

6. அந்த மிகுந்ததோர் நந்தமிழ் நாட்டினில்
சிந்தை சிறந்த சிறுமிகளே
பந்தமகற்றிப் பரனருளெய்திட
சந்ததமும் பாடிக் கும்மியடி.

7. நன்னெறி நாடிநாம் நற்கதியெய்திட
உன்னதமாகவே யோரிடத்தில்
இன்னிசைக் கூவுங் குயிலெனக்கூடியே
தன்னையுணர்ந்திடக் கும்மியடி.

8. இன்னலைக் கண்டு மயங்காம லுயர்
மின்னலைப் போலவே முன்னேறி
உன்னதமாகவே உங்கள் திருப்பெயர்
பொன்னுல கெய்திடக் கும்மியடி.

9. அருளொளி சதா மேலோங்கிஇறை
கிருபை கண்டிட வேண்டுமெனின்
பொறுமையாகிய புட்பமணிந்துயர்
திருவருள் பெறக் கும்மியடி.

10. முத்திக் குரியதோர் செல்விகளே நீங்கள்
சத்திய ஞான விளக்கொளிபோல்
உத்தமமான மனதுடனுடியே
நித்தியமாகவே கும்மியடி.

11. பிறவி யென்பதுஞ் ஜோதி உயர்
பிரணவமென்பதுஞ் ஜோதி
கரணமரணமுஞ் ஜோதி யென்ற
கருத்துணர்ந்து நீ கும்மியடி.

12. வித்தகர் பாதம் மிகப் போற்றி ஜீவ
முத்தர்திருப் பதமும் போற்றி
சித்திர முத்தனுரைத்திட்ட கும்மியை
இத்தரணி யெங்குஞ் சொல்லியடி.

## 14. கன்னிக் கும்மி

1. குருவுரையின்படி நடந்துவந்தால்
குறையொரு போதும் வாராது
திருவருளங்கு பொங்கி வழியுமே
திடனுறுதி கேள் கன்னியம்மா.

2. பெற்று வளர்ப்பதில் குற்றமில்லை நல்ல
பேரிட்டழைப்பதில் குற்றமில்லை
நற்றவஞ் செய்வதில் குற்றம் புரிந்திடில்
நியாயமாகுமா கன்னியம்மா.

3. பிழைபுரிவதும் மன்னிப்புக் கேட்பதும்
பேதை மதியுள்ளோர் செய்கையிது
மழைபொழிவது போல எனதிரு
விழி யழுகுது கன்னியம்மா.

4. சீரிய பாம்பைப் பிடிப்பதென்றல் கையில்
சிரியா நங்கையின் வேர் வேண்டும்
கூரிய புத்தியும் திடனுமில்லையேல்
குடி நிலைக்குமா கன்னியம்மா.

5. கரும்புச் சாற்றினி லெறும்பு வீழ்குது
காரணம் கண்டு தெளியாமல்
இரும்படிக்கிற இடத்திலே கெட்ட
ஈக்களிருக்குமா கன்னியம்மா.

6. பல வருடங்கள் நிலமுழுதவன்
பழுது போகப் பொறுப்பானு
சில தினங்களில் திருடின செல்வம்
செல்லாதாகின கன்னியம்மா.

7. பட்டினி கிடந்து பாடுபட்டுநான்
பட்ட துயர்களை யாரறிவார்
துட்டும் பெருத பயங்கொள்ளிக் கோழைகள்
கொட்டிக் கவிழ்க்கிருர் கன்னியம்மா.

8. சத்திய வித்தை விதைப்பதென்ருல் நல்ல
உத்தமருற்ற துணை வேண்டும்
மத்திபமான மனிதர்களை நம்பி
மயங்குறேனம்மா கன்னியம்மா.

9. ஆயிரம் பேருண்டு நம்மிட மார்க்கத்தில்
அன்னை யருளை அறிந்தவர்கள்
காயிலே வெம்பி உதிர்ந்தது போலவே
காணுதொழிந்தனர் கன்னியம்மா.

10. வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம்
கட்டாத லிங்கமும் சொன்னுேமே
எட்டாத புட்பம் பறிக்குந் தருணத்தில்
விட்டு விலகுருர் கன்னியம்மா.

11. உடல் வளர்த்தவர்கள் பெரிதா உங்கள்
உயிர் வளர்ப்பவர்கள் பெரிதா
நடனசாலை யுலகத்திலே யிந்த
நயந் தெரிந்து கொள் கன்னியம்மா.

12. வீரமிகுந்ததோர் சிங்கமென் றெம்மிடம்
வேடிக்கையாகப் பலர் பேசி
ஆரண்யந் தன்னில் வசிக்கும் நரிக்கவர்
அஞ்சிப் பதுங்குருர் கன்னியம்மா.

13. நல்லவரோடு உறவாடியவர்
நலனறிந்து கடைப்பிடித்தால்
வல்லமை யொடு நெடுநாளுலகிலே
வசிக்கலாமம்மா கன்னியம்மா.

14. குஞ்சுப் பாம்பென்றெண்ணிப் பாலூட்டியதை
கொஞ்சி வளர்த்தேன் சிலகாலம்
அஞ்சிப் பதுங்கிப் புதரில் மறைந்திப்போ
நஞ்சைத் தருகுது கன்னியம்மா.

15. காக்கைக் கூட்டிலே முட்டையிட்டுக் குயில்
கபடமாக வசிப்பது போல்
மாக்கள் போன்ற நம்மக்கள் புரிவது
ஏக்கந்தருகுதே கன்னியம்மா.

16. நில்லென்று சொன்ன நிலை தவருமலே
அல்லும் பகலும் தவம் புரிந்தால்
அல்லலகற்றி அரனருள் சேர்ந்துநாம்
அழகாய் வாழலாம் கன்னியம்மா.

17. அருவமான தரிசனத்தில் சதா
ஆனந்தங்காணலா மென்பதுமெய்
உருவமான உலகத்தை யெண்ணியே
உழல்கின்ருரம்மா கன்னியம்மா.

18. பன்னிரண்டாண்டு தவம் புரிந்தும் பலர்
புண்ணிய லோக மடையாமல்
மண்ணிலிருந்தருள் மார்க்கமின்றியே
மடிந்து போகிருர் கன்னியம்மா.

19. உடுப்பணிதலும் கடுக்கன் போடலும்
உயிர்க்கொரு நன்மை தாராது
தடுத்து இச்சையைப் பிடித்துக் கட்டுதல்
தகுதியாகுமே கன்னியம்மா.

20. அருமை மானவ சிங்கங்களே உங்கள்
பொறுமை மேலுமுயர்கின்றதா
திருவருள் பெற்ற உள்ளமுடைமையே
நறுமணமலர் கன்னியம்மா.

21. அச்சமகந்தை ஒழிந்திட்டதா உடல்
வச்சிரதேகமு மாகினதா
இச்சகந்தன்னிலே ஜீவனனேத்திலும்
பட்சமிருக்கனும் கன்னியம்மா.

22. உங்களை நீங்களுணர்ந்தீர்களா மன
மங்களமாகவே நிற்பீர்களா
திங்களொளி போன்ற உங்கள் தவங்களை
பங்கஞ் செய்யலாமோ கன்னியம்மா.

23. போசனமுண்ண விதிகளையும் நல்ல
ஆசனம் செய்யும் முறைகளையும்
தூசனமின்றி நீ சாதனமுஞ்செய்வி
மோசன முண்டம்மா கன்னியம்மா.

24. பாமரர் செய்யும் விளையாட்டுங் கொடுங்
காமாந்த காரரின் பேயாட்டும்
ஏமாந்து போகும்படி யிருக்குமதை
யூகமாய்க் கண்டறி கன்னியம்மா.

25. பெருக்கப் பூசிய வெண்ணீறு மினித்
திருக்கிவிட்ட சடைமுடியும்
குருக்களென்ற பெயரொடு வந்துன்
உருக்குலைப்பரே கன்னியம்மா.

26. சுக்கிலாமம்பர மென்பாரே உன்னை
சொக்கி விடும்படி செய்வாரே
பக்கபலமில்லா மக்களிடத்திலே
எக்கியமும் செய்வர் கன்னியம்மா.

27. புரட்டுப்பேசி யுலகை மயக்கிடும்
திருட்டுச் சாமிகள் ரொம்ப உண்டு
முரட்டுத் தனமா யரட்டிப் பார்க்கிற
குருட்டுப் பாவிகள் கன்னியம்மா.

28. குற்றம் புரிந்தவரும் வாழ்க உயர்
நற்றவஞ் செய்தவரும் வாழ்க
கற்றவர் உற்றவர் மற்றவர் யாவரும்
பற்றற்று வாழ்கட்டும் கன்னியம்மா.

---

## 15. நடைச்சிந்து

1. உத்தமமானவர்களே — உங்களுக்குநற்
புத்திசொல்லஓர் விருப்பமிப்புவியுளே......

2. செப்படிவித்தைகள் செய்ய — தப்பிதமுள்ளோர்
எத்தனையோ சித்தரென்று வெளிவருவர்......

3. தண்டுகமண்டலங்களும் — சடைமுடியும்
தரித்தகாசாயமுடன் புலித்தோலும்......

4. வாகடஞ்சோதிடமும் — அத்துடனவர்
வாயாற்பிதற்றிடும் வீண்வேதங்களும்......

5. அளவிடமுடியாது — அவர்களிடம்
பாமரர் பதிலுரைக்கவியலாது......

6. பால்பழமமுதளித்து — தட்சணையாகப்
பணமுங்கொடுப்ப ரந்தோபரிதாபம்......

7. ஐயோ அதுமட்டுமா — அறிவிழந்து
அவமானமாய்க் கற்பையுங்கடன் கொடுப்பர்......

8. இப்படிப்பட்ட கயவர் — உலகி
லெத்தனையோயித்தகியுரைத்திடத்தகா......

9. அத்தனருள்பெற்றேரை — உங்களின்
ஆழ்ந்தகருத்தாலறிந்து தாழ்ந்து பணிந்து......

10. அனுபவவழிகாட்ட — அவைபின்பற்றி
அரியதவம்புரிவீர்புவியோரே......

11. ஆண்டவனருளொளியில் — நீங்கள்
நீண்டநாள் பேரின்பமுற வேண்டுமெனிலோ......

12. சித்திரமுத்தனுரைத்த — கவிகள்தனை
புத்தியுடன் கற்றுணரின் முத்தியுறுவீர்......

13. சித்தத்தெளிவிலிதைநாம் — மக்கட்கு
எடுத்தியம்பினே மிதிலேதுந் தப்பிதமுண்டோ......

14. தந்தனதனதனன — தனனதனச்
சிந்துநடையிற் படித்து சிந்தனை செய்வீர் - தந்தனதனதனன



வெற்றி !

# 11. தேசத்தந்தை காந்திஜியின் திருவருட்புலம்பல்.

சாற்றுக் கவி.

1. தேசத்தின் தந்தையே மாசற்ற உன்னுடலைத்
தீண்டினவன் பொல்லாதவன்
கூசத்தா னில்லையோ குண்டுனது மேலெறியக்
குலுங்கலையா அவனுள்ளிதயம்
பாசத்தை நீத்தஉன் பரலோகப் பிரார்த்தனையை
பாவியவ னறியவிலையோ
மோசத்தைச் செய்தவனிவனல்ல யமனு குமிதுவு
முனது சூழ்ச்சிதானோ.

2. பாடுபட் டல்லவோ பலனறிய வேண்டுமெனப்
பழமொழிக ளறிந்த பிரபு
நாடுதர வேண்டுமென வாடியும் வதங்கியுமுன்
வாழ்நாள் கழித்த பிரபு
கூடுவிட் டேகுமுன் கொடிபிடித் தரசுரிமை
தேடியே தந்த பிரபு
வீடுபெற் றெங்குநீ சென்றயோ அங்குமெனை
ஓடிவரச் செய்வாய் பிரபு.

3. ஒன்றைப் பிடித்துலகில் நின்றிட்ட பேர்களை
உன்போலக் கண்டதிலையே
கன்றைப் பிரிந்தபசுப் போற் பலதேசமுங்
கதறியழச் செய்தல் நலமோ
அன்றைக்குனைத் தந்த அன்னை பாரதமாதா
அழைப்பிதழும் வந்துள்ளதோ
இன்றைக்கிருந்து மறு நாளைக் கில்லாமல்நீ
சென்றதிது வெகு மாயமே.

4\. உலகுதனிற் பிறந்தாலும் உன்னதப் பிறவியாய்
காந்திபோல் பிறக்க வேண்டும்
சில நிமிடமாவது அஹிம்ஸாவின் மந்திரம்
செம்மையாய் ஓத வேண்டும்
நலமிகுநம் பாரத நாட்டுக் குழைத்துப்புக
ழுடம்பெய்தி மாள வேண்டும்
நிலவுலகி லவதார புருஷனுங் காந்தி புகழ்
நீடூழி வாழ்க வேண்டும்.

5\. ஏந்தியே நம் மெந்தையின் சாந்தமது குடி கொண்டு
சகலருமே ஒற்றுமையுடன்
காந்திய சகாப்தமதில் பாந்தவ்யமாகவே நாம்
பரிசுத்த வாழ்க்கை வாழ்ந்தால்
தீந்தொழில்கள் நம்மிடஞ் சேராதிருக்கவே
திருவருளை யருள் புரிகுமே
சாந்தியுலகா மொளியில் நீந்தி விளையாடியே
தரிசனமுந் தந்தருளுவார்.

6\. உண்ணாத விரதமெனச் சொன்னாலுமே யுலகம்
கண்ணருவி சோர விடுமே
விண்ணவர்களும் நாட்டு மன்னவர்களுங் கண்டு
வியப்படைந்த துளை யல்லவோ
அண்ணலே யுன்னுடைய பொன்னுலக வாழ்வினை
அறியவுரை செய்த லெளிதோ
பன்னெடு நாளாயுனது பாதமறவாதுற்ற பாலன்
சித்திர முத்தனே.

7\. காந்தமது இரும்பதனைக் கவர்ந்திடுவதல்லாது
காவோலை மட்டையல்ல
பூந்தளிரைச் சூழ்ந்திடுதல் வண்டினங்களல்லாது
மண்டூகத் தவளையல்ல
மாந்தர்களுள் மாணிக்கம் காந்தியே யல்லாது
மதிப்பிடவும் மற்றொன்றில்லை
சாந்தமலை குடிகொண்ட காந்தியே உன்னிருதாள்
சந்ததமும் வாழி வாழி.

(பராபரமே என்ற மெட்டு)

1. கார்மேக வண்ண கலியுலக மாகுருவே
மார் பதிற் குண்டுருவ மறைந்தீரோ — காந்திஜியே

2. பொக்குவாய் மூலம் புகழ் மொழிகளைக் கேட்ட
மக்களெல்லாந் துக்கத்திலே மயங்குதே — காந்திஜியே

3. அருள் மழையைக் கொட்டி யவனிதனி லுள்ளவரை
மருள் நீங்கச் செய்த மணிவிளக்கே — காந்திஜியே

4. சத்திய வேதமதைத் தரணியிலுள்ளோர்க் களித்த
புத்திக் களஞ்சியமே புண்ணியனே — காந்திஜியே

5. வருடக் கணக்கி லுன்னை வைத்த சிறைக்கூடத்திலும்
பொறுமை யிழக்காத புண்ணியனே — காந்திஜியே

6. உன்னையிழந்து உயிர் வாழப் பெற்றதினால்
கண்ணை யிழந்தவர்க ளானோமே — காந்திஜியே

7. எறும்பு முதல் யானை யெவ்வுயிரைப் பார்த்தாலும்
உருவ மெலா மொருங்கா யுறங்குதே — காந்திஜியே

8. உன்னைப் போலினி யுலகு தனிலோர் புருஷன்
மண்ணில் பிறப்ப தென்றாலரிதல்லோ — காந்திஜியே

9. தீண்டாத ஜாதியெனத் தினையளவு மிங்கிருக்க
வேண்டாமெனப் புகன்ற விமலனே. — காந்திஜியே

10. வெளுத்த முகமு மிடை சிறுத்த உடலும் நடையும்
பழுத்தபழமே யுன்னைப் பார்ப்பதெப்போ — காந்திஜியே

11. நேத்திரம் போலும் தன்னிரு பேத்திகளையும் பிரிந்து
மாத்திர மாய்ப் போன வகை புகலாய் — காந்திஜியே

12. கங்கை, யமுனை முதல் காசி, இராமேஸ்வர முன்
அங்க அஸ்தி நீராட அறிகின்றோம் — காந்திஜியே

13. நேரு பிரதமர்க்கு நிழல்போல நீயிருந்தாய்
யாரு யினியவர்க்கு ஆதரவு — காந்திஜியே

14. தாத்தா உனதுருவைச் சந்தித்த பாலரெல்லாம்
பார்த்துப் பரதவித்துப் பதறுகிறோம் — காந்திஜியே

15. அடிமைத் தளை நீக்கி ஆதரவு தந்த எங்கள்
குடிவிளங்க வந்த குலக்குருவே —காந்திஜியே

16. சிரசிருக்க வாலாடா தென்றுலகம் பேர்போன
அரசியலுக் கேற்ற எங்களாதிக்கமே —காந்திஜியே

17. யார்க்கு முனதழகைப் பார்க்க வெகு பேராவல்
போர்ப்பந்தரில் பிறந்த புகழே நம் —காந்திஜியே

18. உருக்கமுடனே யமுதுன் திருப்பதத்தைக் காணுமல்
கிறுக்குப் பிடித்தலைந்து போவேனே —காந்திஜியே

19. எந்தையே தாயே யெங்களுயிரே தேவே
வந்திருந்து எங்களோடு வாழ்வாய் நீ —காந்திஜியே

20. கோடானு கோடியுன்னை கூடி நின்று பார்த்த முகம்
வாடாமல் வாடி மயங்குதையோ —காந்திஜியே

21. உத்தமனே உன் முகத்தை யொரு நாளுங் காணுத
குற்ற மிருந்தாலுஞ் சித்ர முத்தனையாள் —காந்திஜியே.

(நொண்டிச்சிந்து மெட்டு)

தந்தன தன தான தன தனன
தந்தன தன தன தன தாஞ

மண்ணுலக மாமுனியே—எங்கள் மாதவக் குருவே யுங்கள்
ப்ாதமே துணை

இந்நில உலகினிலே—இனியுனைப்போல் மண்ணிலொரு
புண்ணியரைக் கண்ணறியுமோ

கலியுக அவதாரா—உனது காருண்யங்களைப் புகழ
யாராலியலும்

அரசியலாதிக்கமே—எங்களுக்கிந்த அவனிதனிலுதித்த
மாணிக்கமே

உங்களுக்கிது தகுமோ—எங்களை இந்த இயம்பொண்ணு
துக்கத்தில் விட்டுப் போகலாமா

இந்திர ஜாலக்கார—அஹிம்ஸா மந்திரத்தைத் தந்திரமா
யோத வந்தாயோ

ஜோலி முடிந்து போச்சோ—யெங்களுக் கொன்றும்
சொல்லாமல் போவதற்கு நேரமாச்சோ

அழுது புலம்புரேமே—அஞ்சாதீரென்றுன் அசரீரி
தந்தெங்களை ஆளு தாத்தா
துரியாதீதப் பூமியில்—ஐயனேயுந்தன் சூக்கும உடல்
நெடுநாள் வாழ வேண்டும்
சித்திரமுத்து நானே-- உனதுபுகழ் செப்பிடத்துணிந்த
வகையெப்படி யெனில்
இரத்தின ஒளிதனிலே—புற்றிலுள்ள வெத்தனையோ சர்ப்ப
மெல்லா மிரை யெடுக்கும்
அப்படிப் போல அடியேன்—உனதருளின் ஒளியிலிதை
அழுது எழுதுகிறேன்
குறைகளிருப்பதியல்பே---இருப்பினுமுன் குழந்தை யல்லோ
வதனைப் பொறு தாத்தா
தந்தன தன வாழி—நமதருமை தாத்தா புகழ் உலகில்
வாழி வாழி.

## கன்னிக் கும்மி.

1. கும்மியடித்திடக் கன்னிமாப் பெண்டுகாள்
கூந்தலை வாரி முடியுங்கடி
நம்மிட காந்தியினுத்ம சாந்தியை
நாடிக் கும்மி யடியுங்கடி.

2. காந்தி பிறந்த நம் தேசத்திலே நல்ல
சாந்தி யுலவணு மென்று சொல்லி
யேந்தி யிரு கையுங் கூப்பித் தாத்தாவுக்கு
தாந்திமி தோமென ஆடுங்கடி.

3. காந்தி மகானெரு பூமானுமவர்
கலி யுலகவதாரனடி
ஏந்திழை மார்களே வாருங்கடி யவ
ரெளிய வாழ்வைப் பின் பற்றுங்கடி.

4. முண்டுக் கதர் முழங்கா லளவு மவர்
மூக்கள வுக் கொரு கண்ணுடி
சிண்டு முடிந்த வழுக்கைத் தலை வாயில்
பல்லில் லாச் சொல்லையுங் காணமடி.

5. தங்கம் பொன் வெள்ளியிலும் காந்தி
நல்ல சலவைக் கல்லிலுமே காந்தி
எங்கு மிருக்கிற தேசத்தின் தந்தைக்கு
மங்களம் பாடிக் கொண்டாடுங்கடி.

6. அசத்தியக் கருவேரை யறுத்தவர்
சத்திய வித்தை விதைத்தாரே
உத்தமனாகிய காந்தி யடிகளை
விட்டுப் பிரிந்த நாம் பாவியடி

7. சத்திய வேதப் பிரகாரமையன்
உத்தர விட்டபடி நடந்து
வித்தியாச மெதும் பாராட்டாமலே
நித்தியங் கும்மியடியுங்கடி.

8. கிழவர் வாங்கிக் கொடுத்த சுதந்திரம்
இளைஞர் கையிலிருப்பதினால்
பலவிதத் தினாலே உயிர் துறப்பினும்
பாரத பூமியைக் காப்போமடி.

9. கெட்டித் தனமாகப் பேசோமே யினி
விட்டுக் கொடுக்கவு மாட்டோமே
கட்டுக் குள் சிக்கிக் கிடந்திட்ட மக்களை
தட்டி யெழுப்பிய தாத்தாவே.

10. ஆயிரத் தெண்ணூற் றெண்பத்தியாறிலே
அண்ண லுலகி லவதரித்து
தாயினடிமை விலங்கைத் தறித்ததும்
போன புதுமையைப் பாருங்கடி.

11. கள்ளமில்லாத மகாத்மா உள்ளத்தில்
கதருடை ஜோதியுண்டாச்சு
வல்லமை யுள்ள சுதந்திர ராட்டினம்
எல்லோருஞ் சுற்றுவோ மென்பாரே.

12. ஆட்சியை வாங்கியும் தந்தாரே நமக்
காளு முறை களைச் சொன்னாரே
காட்சியைக் கண்டு களிக்காமலவர்
மோட்சத்துக் கேகினார் பாருங்கடி.

13. என்றைக்குக் கண்டு மகிழ்வோமோ அவ
ரண்டையிலே யொன்றி வாழ்வோமோ
மன்றுள் நின்றாடிய மாதவனே யெங்கள்
தந்தையைத் தாவெனக் கேளுங்கடி.

14. பிறந்திருந்து மிறந்து போனதும்
பேருலகில் கோடான கோடியடி
சிறந்திருந்த நம் காந்தியடிகளை
மறந்திருப்பவரில்லையடி.

(பாப்பா மெட்டு)

1. காந்திஜி யின்றெங்கிருக்கிறா—ரப்பா—அதன்
காரணத்தைச் சொல்ல வேணு—மப்பா.

2. சாந்தி யுலகத்திற்கு—பாப்பா—ஒரு
சங்கதி யாய்ப் போயிருக்கிறார்—பாப்பா.

3. எப்பொழுது வந்திடுவா—ரப்பா—அதை
யெங்களுக்குச் சொல்ல வேணு—மப்பா.

4. சத்தியஞ் சிதைவுறுகில்—பாப்பா—அவர்
உத்தரவிட வருவார்—பாப்பா.

5. இத்தனையவசரமாய் அப்பா—தாத்தா
யேனதற்குள் செல்லவேணு—மப்பா.

6. தெய்வ சபைக்கிவரை—பாப்பா—அங்கு
தேர்ந்தெடுத்தழைத்ததனால்—பாப்பா.

7. சுதந்திர இந்தியாவில்—அப்பா—தாத்தா
துணையா யிருந்தாலென்ன—அப்பா.

8. நிரந்தரமா யெவர்க்கும்—பாப்பா—நேருவை
நேமித்து வைத்திருக்கிறார்—பாப்பா.

9. குற்றங்கள் புரிந்தவரை—அப்பா
விட்டுவிடச் சொல்லுவாரே—யப்பா.

10. அப்படிக்கு யிப்ப யில்லை பாப்பா—நேரு
சட்ட திட்ட மிட்டபடி—பாப்பா.

11. தாத்தா போன சங்கதியை—அப்பா—இப்படிக்
கோர்த் தெழுதிச் சொன்னவரா—ரப்பா

12. சித்திரமுத் தென்னுமவர்—பாப்பா—இந்தப்
புத்தகமியற்றியவர்—பாப்பா.

13. இப்பொழுது யெங்கிருக்கிரு—ரப்பா—தாத்தா
பொற் பாதந் தொழுதுரைத்தோ—ரப்பா

14. அழகங்குளத்திலே தான்—பாப்பா—நல்ல
அருளொளி மடத்திலேயாம்—பாப்பா.

---

## உலகச் சூழ்நிலை

போராட்டம் போராட்டம் போராட்டமே
பொழுதெல்லாம் மனதோடு போராட்டமே

பாராட்டத் தகுந்ததோர் மனிதஜென்மம் வீணய்
நீரோட்ட வீழ்ச்சிபோல் சுழலுதம்மா - தாயே

சுழலுதம்மா வாழ்வு சுழலுதம்மா சுத்த
சூன்யமாய் உலகமே சுழலுதம்மா - தாயே.

வெற்றி !

# 12. அருளொளிமலர்.

நம்பிக்கையுடைய நல்லவர்களுக்கு
தும்பிக்கையுடையான் துணையுண்டாகும்.

## 1. கணபதி தெய்வப் பாமாலே.

### வெண்பா.

1. புகழ்பெருகு மெய்யருள்சேர் மணியாட்சி தன்னில்
திகழ்தும்பி மாமுகவன் மீது—மகிழ்வாய்த் [வளர்
துதிபாடிப் போற்றித் தொழுமன்பரின் மாயா
விதிவிலகி யோடி விடும்.

2. கண்ணின் ஒளியே கருத்தறிவே கற்றவர்க்கு
விண்ணின் விளக்கே விகசிதமே—மண்ணுலக
மாணிக்கக் கல்லே மதியாத் திரவியமே
காணிக்கை யானுனக்குக் காண்.

3. விக்கின விநாயகனுல் எக்கவலேயும் நீங்கத்
தக்க தருணமிது தானுகும்—பக்குவமாய்
நீதிவிரதமதை நினேந்தோர் நன்னெஞ்சில்
ஆதியந்தங் காட்டும் அருள்.

4. நின்னேயான் தேடி நிலேகுலேந்தேன் இந்நாளில்
முன்வந்து நில்தேவா மூஷிகனில்—இந்நிலத்து
ஓயாக் கவலே பிணியோடத் திருவளரத்
தூயாநின் தாள்தான் துணே.

5. வையம் புகழுமென தையா நினேச்சிரசில்
வைத்தே பூசித்து வருகின்றேன்—வைகை
நதியோடி வீழும் கடல்போன் றென்னுள்ளம்
துதிபாடி யென்றும் தொழும்.

6. ஏழையேன் ஏங்கியழும் வேளே வந்துன்
தாளேத் தலேதாங்கத் தந்து—வாழை
மரமீன்ற கன்றுபோன் றெனேநீ யாளாக்கிப்
பரமபத மருளப் பார்.

7. அப்பா கணேசா அடிமை உனதருளால்
முப்பாழுந் தாண்டி முடியேறி—இப்பாரில்
உன்னையான் போற்றி உயிர்வாழச் செய்யாயேல்
என்னைப் படுபாவம் எரிக்கும்.

8. பெருச்சாளி வாகனத்தி லேறும் பெருமானே
நெருப்பான மேனியொடு நெஞ்சத்துள்-திருக்கண்ணை
திறந்து இகவாழ்வில் தீங்கின்றி மெய்யொளிர்கச்
சிறந்த வரந்தருதல் சீர்.

9. வேதத்தின் வித்தாய் விண்ணவர்க்குத் தெய்வமாய்
தீதற்ற நெஞ்சில் திருவிளக்காய்—மாதவத்தின்
அருளாய் ஒளிர்கின்ற ஐயன் விநாயகனைப்
புருவ நடுநிறுத்திப் போற்று!

10. ஏகப் பரம்பொருளாய் எங்கும் நிறைந்திருக்கும்
நாகவிநாயகனை நம்பித் தொழுபவர்க்கு-யோகநலன்
எல்லாம் கிடைப்பதுடன் எல்லையற்ற தெய்வீக
வல்லமைகள் தேடி வரும்.

ஆசிரிய விருத்தம்

1. கணபதியென்றுனை நாளும் கைகூப்பித் தொழுமன்பர்
கருத்தில் நிறைகின்ற பொருளே
கடவுளை முன்வலம் வந்து ககனமயிலோன் காணக்
கனிவாங்கி யுண்டபொருளே
கரிமுகவனுகி ஒளியாகி வெளியாய் நின்றுன்
கருணையோடு கழல்கைகொடு
கந்தவடிவேல் தமையனென்ற பொருளேயுலகக்
கண்மணி கணேச வடிவே.

2. தும்பிமுக னுன்னடியை நம்பினேன் ஏழையெனைத்
துன்ப மணுகாது கொடிய
துட்டர்களெல்லாம் கூடிக்கெட்டலையும்படி என்னை
துயர் பலது செய்காலையில்
துண்டிக்கும் வாள்கொண்டு எண்டிக்கு மதிர்ந்திடத்
துரிதமுடன் ஓடிவருவாய்
துக்கமிகு சூழாது பக்கபலமாகியுறு
துணைவா கணேசவடிவே.

3. முத்திக்கு வித்தான சத்சிவ பாலனே
முனிவர்புகழ் யானை முகனே
முக்கோண வட்டமுள வெட்டவெளி தன்னிலே
முட்டாமல் நின்ற முதலே
முப்பத்து முக்கோடி தேவர்தொழு பாதனே
முழுபேழை வயிறுளனே
முப்பாழ் கடந்து மனம் அப்பால் சுகம்பெறுக
முன்வா கணேச வடிவே.

4. எந்நாளும் உன்னுடைய சன்னிதி தனைச்சுற்றி
எனதுபாவ தோஷ மகல
எந்தையே யானழுது கண்ணீர் உதிர்ப்பதை
எள்ளளவு கூட நினது
எளியவாகனத்தேறி வரவேணுமென்றதொரு
எண்ணமுனக் கில்லாததேன்
எமவாதனைக் கஞ்சி ஏங்குறே னிதுசமயம்
எதிர்வா கணேச வடிவே.

5. தித்திக்கும் தேனான தெள்ளமுதமே யெங்கள்
தில்லை நடராஜன் மகனே
திக்கற்றவெனக் கொரு பக்கபலமான வரம்
திருவாய் திறந்தருளுவாய்
தினகால முண்டுறங்கி உடல்மாண்டு போகுமுன்
திருவருளினுறவு தந்து
திவ்யசுகபர வாழ்வு அருளுமென தையனே
திகழொளி கணேச வடிவே.

6. நல்லவைகள் செய்துலகில் நான்வாழ நினையாத
நஞ்சு நான் கொடிய நஞ்சு
நம்பிக்கை யற்றவனாய் வெம்பித்திரிந்து நந்
நடத்தையை இழந்த நஞ்சு
நற்றவமெய்ஞ் ஞானிகளைக் குற்றமிகக் கூறியே
நயவஞ்சம் செய்த நஞ்சு
நஞ்சான பாவியான் கூடாத படுபாவி
நலன்செய் கணேச வடிவே.

7. புலையன்யான் அறிவிலியன் பொய்மாயையைக் கூடி
புகழ்கெட்ட மடைய னையா
புறம்பேசி மறைவாக மாபாதகத் தொழில்கள்
புரிந்து வாழ்ந்திட்ட மடையன்
புனிதநிலை சார்ந்த மெய்யடியார்க்குப் பணிசெய்து
புத்துயிர் பெறாத மடையன்
புருவநடு நின்றொளிரும் பெரிய பரஞ்சோதியே
புவிநிறை கணேச வடிவே.

8. நிலையாத புவிவாழ்வை அழியாதென் றெண்ணியான்
நினைவு நிலையற்ற மடையன்
நின்று நின்றுழன்றோயா நிட்டூரம் செய்துசிவ
நிமலனை மறந்த மடையன்
நிச்சயமா யிப்புவியி லிச்சைமிகு கைக்கொண்டு
நிறையறி விழந்தமடையன்
நிபுணமணியே பரம சுகஞான மௌனகழல்
நிழல்கொடு கணேச வடிவே.

9. பொங்கிப் புசித்துலகை வஞ்சிக்க எண்ணி நகை
பொட்டுப் பட்டணிந்த உடலும்
பொல்லாத பேராசை பெருகிமிகு தனந்தேடப்
பொய்மிகுதி சொன்ன நாவும்
பொருளாசையா லுலகில் அருளாசை யில்லாமல்
பொறுமைக ளகன்ற நெஞ்சும்
பொதுநெறிகட் குதவாத பொறிபுலனைக் கொய்கு
பொற்பத கணேச வடிவே [வாய்

10. மக்கட்குத் தொண்டனென மதிப்பெய்தி வாழாத
மனிதன் மதியீன மனிதன்
மறுபிறவி யணுகாம லரியதவஞ் செய்யாத
மனிதன் மதியீன மனிதன்
மழலைமதி யுடையசிறு நாயேனு மவர்களிலும்
மட்டரக மான மனிதன்
மங்காத புகழ்தரவா வெங்கள்குல தெய்வமே
மனமலர் கணேச வடிவே.

11. சுகவாழ்வு பெறவென்று வரமொன்று தந்தென்னை
சுத்தபரி சுத்தனுக்கி
சுயசக்தியோடுனது பரசக்தியுந் தந்து
சுலப தப வழிகளருளி
சுறுசுறுப்புடன் நின்றுசெய் தொண்டில் வெற்றியை
சுதனெனக் கருள்தேவனே
சுந்தரத்துதிக்கையொடு அந்தரத்திலாடுகின்ற
சுரர்புகழ் கணேச வடிவே.

12. மூஷிகவாகன மேறிநீ யென்முன் வரவேண்டும்
மூதேவியோட வேண்டும்
மூக்குவழி போக்காகும் வாசிவசமாகியுள்
மூச்சாகி நடக்கவேண்டும்
மூலாதாரப் பொருளுக் காதாரமாய் தவத்தீ
மூட்டியே தீரவேண்டும்
மூவுலகெலாம் புகழமா கவிதைப் பாக்கடலில்
மூழ்கவை கணேச வடிவே.

## 2. ஆதீஸ்வர ஜோதி விருத்தம்.

1. ஆதிபரமேஸ்வரா அழியாத தெய்வமே
அன்புவளரிதய மலரே
ஆனந்தநடனமிடு மய்யநின் பொன்னடியை
அடையுதற் காசைமிகுதி
ஆலமுண்டரக்கர்கரு வறுத்தகுல தெய்வமே
அருள்நெருப்பான வடிவே
ஆர் துணையுமில்லாம லழுமேழை யெனைவந்து
ஆதரிமெய் ஆதீஸ்வரா!

2. கட்டாய முன்னடியை எட்டிப்பிடித்திடக்
கருதினேன் கருணை நிதியே
கண்பார்வைக்கெட்டாத விண்ணுலக வெளியுளே
கலந்து விளையாட வேண்டிக்
கருவிலெனை யுரு வாகச் செய்யாதிருக்கநின்
கடைக்கண்பார் கருணுகரா
கலங்கித்தவித்தலறும் ஏழையென் கரந்தாவக்
கழல்கொடு மெய் ஆதீஸ்வரா!

3. தந்தையே நினையன்றித் தரணிதனி லினியாதும்
தகுமென்ற தெய்வமிலேயே
தட்டுண்டு தடுமாறிக் கெட்டுநான் போகாமல்
தற்காப் பதுனது கடமை
தருமநெறியாய் நிற்கும் தாயும்நீ தமரும்நீ
தரணிபுக ழறிவும்நீயே
தஞ்சமெனக் கெஞ்சினே னுனதுபத மலரடியைத்
தருவாய் மெய் ஆதீஸ்வரா!

4. பாராளும் மன்ன னொடு பல ஜீவராசிகளும்
படிமிசைமேன் மடிதல் கண்டு
பாழானவென் மனது பதறித் தவிக்குதே
பரமபத பாத ஒளியைப்
பாராதிருக்கிற கண் பதையாய்ப் பதைக்குதே
பட்டிறந் தழியு முனமுன்
பாதாரவிந்தமெனக் காதாரம் தந்துலகப்
பற்றறு மெய் ஆதீஸ்வரா!

5. மக்கள் பலகோடி உனக்குண்டான போதிலும்
மரண பயமுடைய நாயேன்
மறவாமலுனது திரு நாமமதை யோதிடவும்
மனதமைதி யணுவுங் கிடையா
மழையற்ற பயிர் பட்டபாடு நான் படுவதை
மறுக்க ஒரு மார்க்கமிலேயோ
மதிபோலுமுனது பதம் தோயாம லெனது சிரம்
மயங்குறேன் மெய் ஆதீஸ்வரா!

6. சத்தியம் தவறினவ னென் றெண்ணி என்னே நீ
சதமற்ற வாழ்வி லதிகம்
சந்தோஷமாக்கி மனே மக்களிடம் சிக்கியே
சஞ்சலக் குழியுள் வீழ்த்தி
சர்வ பரிபூரண ஒளியு ளொளிமயமாகிச்
சகசநிலே சாராமலும்
சகலவித கவலேகளும் தந்ததினிப் போதுமே
சம சுகமெய் ஆதீஸ்வரா!

7. உறவினர்கள் சதமென்று ஓயாது விருந்திட்டு
உன்னை யான் மறந்த பாவி
உண்மைநெறி தழுவி நின் றுலகிற்குழைக்காமல்
உடல்நலனிழந்த பாவி
உறுதிநிலை தவறி வீழ்ந்துனது மெய்யடியாரை
உபசரிக்காத பாவி
உழலான படுகுழியுள் விழுமாறு செய்யாதே
உயிரொளி மெய் ஆதீஸ்வரா!

8. இறைவா நின்னருளொளியைக் கிடையாதென்றள
இடையூறு செய்த பாவி [வற்ற
இனியமொழி புகலாமல் மனை மக்களைத் திட்டி
இல்லறமிழந்த பாவி
இடியுண்ட நாகம் போலெனைக் கண்ட ஏழைகளின்
இன்பம் பறித்த பாவி
இணையற்ற பரசிவமே யெனைவிட்டு நீங்காமல்
இருப்பாய் மெய் ஆதீஸ்வரா!

9. வகை கண்டு அரியதவம் புரியாத பாவி யான்
வழிதவறி யழுத பாவி
வஞ்சகம் மிகப்பேசி நஞ்சான பாவி யான்
வன்மையை யிழந்த பாவி
வழக்கோர மாய்ச்சிலரை வஞ்சித்த பாவியான்
வறுமை சூழ்ந்தழுத பாவி
வனமிருகம் போலான மாபாவி யெனினுமெனை
வந்தாள் மெய் ஆதீஸ்வரா!

10. குறையாயிரமுண்டு இருந்தாலு மவையுனது
குறுநகையில் நீருகுமே
குஞ்சரமுகன் முருகன் தந்தையே நிகரற்ற
குவலய மெய்ஞ்ஞான ஒளியே
குணமான மலைமீது விளையாடும் பக்தர்க்கு
குருவாகி வந்த பொருளே
குறிவேறு உனையன்றி யிலைதேவா என்னிடம்
குடிகொள் மெய் ஆதீஸ்வரா!

11. சிந்தைமிகத் தடுமாறி வாழ்ந்திந்தப் புவியில்நான்
    சிக்குண்டேன் போதும் போதும்
சிரித்தென்னை வெறுத்தவர்கள் பலருண்டு போதுமினி
    சிவபக்தி போதும் போதும்
சிவயோகவழி நின்று தவம்செய் துன்தாளினைச்
    சிறிதளவு பெறுதல் போதும்
சினம்போகக் கவலை பிணிவறுமைகளெலாம் போகச்
    சித்தமது தெளிதல் போதும்!

12. என்றைக்கு மிருக்கின்ற ஒன்றைக் கண்டுய்யவே
    எனதிதயம் போராடுதே
எப்பொழுது மிப்படியில் தப்பித மிலாதொழிய
    எந்தை நின்பத மலரினை
எய்தாத போதுசிரம் கொய்தேனும் சாகுவேன்
    எவை வரினும் பின்வாங்கிலேன்
எழுசலதி வரம்மிகுதி தரவேண்டுமப்பனே
    எமதருள் மெய் ஆதீஸ்வரா!

13. நடனமிடு முனது திருமலரடியை நம்பி நலம்
    நாடிவரும் மக்களிதயம்
திடமாகி அசையாத ஜெயசீல சிங்கமாய்த்
    தீர்க்காயுளுடைய உடலாய்
கடமைகளி லில்லறமே நல்லறமெனக்கண்டு
    கலங்காத தொண்டராகி
விடமுண்ட கண்டனை வல்வினையகல வேண்டினுல்
    வருகும் சௌபாக்கியம் வருமே!

14. அறநெறி பின்பற்றிய நல்லன்பர்க்கு அன்பனும்
    அடியேனை யாளதாக்கி
பிறவாத வரம் தந்து பேதை யெனைக்காப்பதுன்
    பேரொளியி லொருபகுதியே
இறவாத சஞ்சீவி மருந்தருள் உனையன்றி
    இறைவா வேறுலகிலுள்ளதோ
துறவுநெறி தழுவிய மெய்யுபதேச ஊழியன்பால்
    துணைபுரிவாய் பிழைகளகல!

### 3. மகாமாரியம்மன் பதிகப் பாமாலை — வெண்பா

1. சத்தியாய் சிவமாய் சர்வபரி பூரணமாய்
எத்திசையுங் காண எரிசுடராய்—சித்தி
தருகின்ற தெய்வமாய்த் தாயாய்க் குருவடிவாய்
சர்வஒளி யாவாள் அனைத்துள்.

2. புள்ளிமான் கானில் புலிகண்ட வாருகி
கள்ளமுள மாந்த ருறவாகி—வெள்ளப்
பெருக்கிலடி பட்டுப் புரண்டு வேரற்றமரம்
நறுக்குண்ட துண்டானேன் நான்.

3. ஆலயங்கள் சென்று அழியாப் பொருளுன்னை
காலம் கடக்குமுனம் காணேன்—ஞாலம்
துக்கவிருள் சூழ்ந்து சுழல்வது காண்கின்றேன்
இத்தருணம் காக்க இரங்கு.

4. தேன்சுவையே, தித்திப்பே, தெள்ளமுதே எங்கள்
வான்பொருளே வருவாய் விரைவாக--யான்பாவி
கண்குளிரக் கண்டு கடைத்தேறி இக்கலியில்
விண்ணர சோடொன்றி விளங்க!

5. மகமாயி எங்கள் மனமலரே மானிலத்துப்
பகலொளி போன்றுள்ள பகவதியே—இகபரத்துச்
சொற்றடங்கா மோனச் சுகமே, சுகக்கடலே
நற்பதவி தந்தால் நயம்.

6. விதிவசமென் றெண்ணி மதியிழந்து பொல்லாத
சதி புரிந்த சண்டாளன்யான்—நதிதேடி
மூழ்கியும் ஏகாத மோகாந்த காரவினை
பாழ்படவே நின் கடைக்கண் பார்.

7. கயமை உறவாகி கடமைகண் டாற்ருமல்
மயங்கி உழல்கின்றேன் மாதாவே—ஜெயம் தந்து
ஏந்தி எடுத்து இணையற்ற நின்பதத்தை
தாந்திமித்தோ மென்ருடித் தா.

8. அம்பிகையே எங்கள் ஆரமுதே தெய்வீக
நம்பிக்கை யில்லாத நாயேனை—வெம்பி விழும்
காயாகிய வாருய்க் காலங் கடத்தாமல்
சேயாமெனக் குன்னருள் செய்.

## ஆசிரிய விருத்தம்

1. பலதேவஸ் தலந்தேடி யோடியும் காணாத
   பரமரகசியச் செல்வமே
   பரிபூர்ண வரமருளத் தருணமது தவறியதால்
   படுபாவி ஏழையடியேன்
   பதர்காற்றி லடிபட்டுப் பறந்தேகும் தன்மையாய்ப்
   படிமிசையி லிடிசுவரெனப்
   பக்கபலமுந்துணையு மில்லாம லேங்குகிறேன்
   பகவதியே மாரியுமையே!

2. வாக்கு வன்மையில்லாத போக்கிலியெனும் பெயரை
   வாங்கினேன் இளவயதினில்
   வாதாடிப் பலரோடு மல்லாடிப் பொல்லாத
   வாயாடி யாகிமுடிவில்
   வாழப் பிறந்த உடல் மாளப் பயந்திதயம்
   வாடும்போதுனை நாடினேன்
   வாகான மாசிம்ம வாகனந் தனிலென்முன்
   வா காக்க மாரியுமையே!

3. பாண்டு, தொழுநோய், குன்மத்தால் மாண்டுபோன
   பாடைமரமேறி வருதல் [பிணம்
   பார்த்துமிச் சண்டாளக் கண்ணின்னும் கடைகெட்ட
   பாதகம்மிகச் செய்யுதே
   பாருலகிலெனைப்பற்றிப் பலரேசப் படுகுழியுள்
   பாயாது மனம் பண்படப்
   பாலகனுனைக் கெஞ்சினே னெனது அன்னையே
   பாதமலர்தா மாரியுமையே!

4. கல்லாத மூடர்களில் யானுமொரு கயவனாய்
   கண்டவரெலா மிகழவே
   கலகநிலை பலவாறு விளைவித்தும் ஏழைகளின்
   கர்மவினைக் காளாகினேன்
   கலிகாலக் கடலலையுள் மோதுண்டு கத்தினேன்
   கடவுளிலை யெனக் கூறினேன்
   கரும்பிலுயர் பாகுவாய்த் தித்திக்கும் தெய்வமே
   கட்டழகி மாரியுமையே!

5. ஏமாந்த பேயனென மோகாந்தப்படி பற்றி
ஏக்கற்ற மதியையுடையேன்
ஏட்டிலெழுதிய பாட்டைப் பாடுவேனல்லாது
ஏதேனும் பொருள் கண்டிலேன்
ஏனிந்த ஊனுடலைத் தாங்கினே மென் றெண்ணி
ஏங்குறேனிதுசமயம் யான்
ஏழைமதியேனுன்னை நம்பினேனருள் புரிக
ஏகாந்த மாரியுமையே!

6. பாடான வெகுபாடு படுமாறு செய்திந்தப்
பாதகனின் ஊனுடலினை
பாய்கட்டிக் கடலோடிக் கலம் சாய்ந்த வாருகப்
பாருலகி லனியாயமாய்
பாவ வழி யறியாமல் விழுமாறு தள்ளுதே
பாழான காம வெகுளி
பால வடிவான சிறு நாயேன் கடைத்தேறப்
பாராய் மெய் மாரீஸ்வரி!

7. தரணிதனில் உழல் நிலைகள் பல சூழ்ந்து ஓயாத
தடையிடையி லெனது வாழ்வு
தடுமாறி விழுமாறு செய்யுதே என்செய்வேன்
தயை செய்து எனை யாதரி
தஞ்சம் புகுந்தழுதும் தாளாத சோதனைகள்
தருவதும் தகுதியாமோ
தனி முதலா யுலகிலொரு தாயாகி யொளிர்கின்ற
தங்கமே யெங்களுயிரே!

8. சீடமுறை தவருத சிறியேனை யாள்தற்குச்
சீக்கிர மென்னிதய மதனுள்
சீமை முழுதும் திகழும் செக சோதி நீ யென்று
சீமாட்டி யுனைக் கண்டிட
சீலமிகு மெய்ஞ்ஞானத் தேசிகன் துதிக்கின்ற
சீவரட்சக தேவியே
சீதேவியும் பெரிய பூதேவியும் புகழும்
சீர்பெற்ற மாரியுமையே!

9. காரணப்பொருளாகிப் பொதுவெளியிலருளொளியாய்
காட்சி தரும் கருணை வடிவைக்
காணுமலிதுநாளும் வீணுகி வாழ்நாளிற்
காதகன் மெய் மறந்தேன்
காட்டெருமை மிருகமதி சூழ்ந்தெனது கடமைமிகு
காரிருளில் சிக்கி வெகுநாள்
காலங் கடத்தினதைப் போலினியு மாகாமற்
காப்பாய் மெய் மாரீஸ்வரி!

10. அறியாமையாற் செய்த பிழையாயிரமுண்டு
அன்னைநீ, பொறுத்தல் வேண்டும்
அன்பு மயமாக சகசீவ வுயிரனைத்திலும்
அருளொளியைக் காணவேண்டும்
அற்ப மதியுடையோரை யணுகாமலன்பரின்
அரிய மொழி கேட்க வேண்டும்
அகமலரிலுறை பரம கிருபை வடிவேயெங்கள்
அம்மையே மாரியுமையே!

11. மாயாவி சூழுலகி லோயாத கவலை பிணி
மாளாது குடிகொள்ளுதே
மாண்டுருவம் மண்ணுகி மடியுமுன் உனதுதிரு
மாபெரிய கண்பார் வையை
மாநிலம் புகழெய்தும்படி தந்து பயபக்தி
மாருும லோங்கி யொளிர்க
மாதா நீ வரந்தருக வாதாயே, என்னகம்வாழ்
மாரியே பரமேஸ்வரி!

12. கடவுளடி கண்டுய்ய வேண்டுமென்றனுதினம்
கண்மூடி இருந்த பேரும்
கலிகாலப் புவிவாழ்வில் பொருள்தேடிப் பெருமை
கனமாடி கட்டிஞேரும் [பெறக்
கண்டவர்கள் கொண்டாடும்படி யோக வித்தையால்
ககனவழி பறந்த பேரும்
கட்டாயமாய் மாண்டு போவார்க ளாதலால்
கழல் கை கொடு மாரீஸ்வரி!

13. காலநிலை கண்டு நற்கடமை செயமுடியாத
காட்டேரியான நாயேன்
காமாந்தகாரமது சிரமேறி யறிஞரைக்
காணுமலேசும் நாயேன்
காட்சி பல காணக்கண் மயங்கி யழகொளி கண்டு
காரியமிழந்த நாயேன்
காரணப் பொருளான பரதேவியேயெனைக்
காப்பாய் மெய் மாரீஸ்வரி!

14. வாழையடி வாழையென எண்ணியானிப்புவியில்
வாழாத மா பாதகன்
வாகான பெரியாரை யண்டி யருளுரை பேசும்
வாஞ்சை கிடையாப் பாதகன்
வாதாடியடியரிடம் மாசாபம் பெற்றுலகில்
வாடியழும் மாபாதகன்
வாடாத மனமலரே எனைநாடி இதுவேளை
வாவா மெய் மாரீஸ்வரி!

15. அய்யோ யான் என்செய்வேன் பொய்யான புவிமீது
அழுந்தி மெய் நொந்த புழுக்கள்
அக்கினி வயப்பட்டவாறு துடியாய்த்துள்ளி
அழுதொன்றும் பயனில்லையே
அருளோடு உறவாட முடியாதபடி வாழ்வில்
அணுவேனுமாசை கிடையா
அரும்பிறவி வீணுகுமுன முனது பதமலரை
அருள்வாய் மெய் மாரீஸ்வரி!

16. வஞ்சகம் குடிகொண்ட நெஞ்சுளேன் மாமாயை
வலைவீசி மக்கள் பொருளை
வகையின்றி யெற்றிமிகு பற்றினேன் பொல்லாத
வன்கணேன் புவிமீதினில்
வள்ள லென்றிறுமாந்து வாழ்ந்திட்ட குற்றத்தை
வறுமை, பிணி சூழ உணர்ந்தேன்
வலுவிழந் தழிந்து யான் போகாமுன் எனை நாடி
வந்தாள் மெய் மாரீஸ்வரி!

17. கூசாமலுண்மைக்குத் தொண்டனுகி யான்
கூடாத செயல்கள் நீக்கிக்
கூரைவீ டெளியவர்கள் குடிசையெனம தியாமல்
கூடியுறவாடி மகிழ்வாய்
கூன் குருடரேழை பரிதாபகர நிலேகண்டு
கூப்பினேன் கரமுனதுதாள்
கூருத மந்திர மென்றெண்ணியுனே வருகவெனக்
கூவினேன் மெய் மாரீஸ்வரி!

18. விஞ்சை மொழியுணராத குருவையுறுதுணேகொண்டு
வினே மிகச் சூழ்ந்து, சூழ்ந்து
விலே மாதர் வலேசிக்கி வீணுன மனிதன் யான்
விதிவசமெனக் கூறியும்
விளக்கொளியிலகப்பட்டுச் சுற்றி வீழ்ந்தழிகின்ற
விட்டில் போலாகியழுதேன்
விரைவிலென தருகில் சுரர் புடை சூழ மெய்ஞ்ஞான
விழி திற மெய் மாரீஸ்வரி!

19. பிள்ளே, பெண்டீர், சுற்றம் பெரும் பாரமாகுதே
பிணி, கவலே போர் செய்யுதே
பிழை வேறு புரிய மனம் சிறிதேனுமஞ்சாது
பிய்த் தென்னேத் தின்னுதையோ
பித்துலகில் எத்தனேயோ செத்தழிதல் போலயான்
பிறந்திருந்தழியே னினி
பிந்தவிடா தென்னுயிரை உன்னருளி லொன்றவை
பிறையொளிர் மெய் மாரீஸ்வரி!

20. இதுவரை நின் பொன்னடியைப் பிடியாத பாவியான்
இறந்தென்ன இருந்துமென்ன?
இன்பமொடு துன்பமும் இணேயற்றதாய் நின்று
இடையூறு செய்தலழகோ?
இதுகாறும் யான் பாடுபட்டதும் கெட்டதும்
இறைவிநீ யறியாததோ?
இப்புவியி லெனேயாள முக்கியமாய் இது சமயம்
இரங்கியருள் மாரீஸ்வரி!

21. மக்கமதில் மிக்கபுகழ் பெற்ற நபி நாயகமும்
மகிமை மிகு ஏசு முதலாய்
மனமாசிலாச் சீவகாருண்யப் புத்தர்மிகு
மட்டற்ற இந்து சமணம்
மதபேதமில்லாத சுகபோக வாழ்வருள
மனைதோறும் பரஞ்சோதியாய்!
மக்களனைவர்க்கு மருள் வடிவான தெய்வமே!
மகமாயி, மாரி உமையே!

22. குக்கலது கக்கினதை நக்குவது போலெனது
குணமற்ற வாழ்வு மிகுதி
குறையாகி மறையாமல் நிறைவாகி யெந்நாளும்
குன்றொளிபோல் நின்று மிளிர்க
குருவற்ற சீடனெனப் பயனற்றுப் போகாமல்
குவலய மெய்ஞ்ஞான ஒளியாய்
குலமணியே நீ எனது இதயமதி லுதயமாய்க்
குடிகொள் மெய் மாரீஸ்வரி!

23. தவமிகுதி கிடையாத உலகுபடு குழியுள் விழத்
தலைகீழாய்ச் சுழலுதையோ
தடுமாறி வீழ்ந்திடில்யான் தப்பிக்க முடியாது
தஞ்சம் நீ தஞ்சமம்மா
தமியேனை இதுதருணம் தாயே நின் கழல் தந்து
தற்காக்க வரவில்லையேல்
தரணிதனி லனியாய மாய்மாண்டு போகுவேன்
தருவாய் நல் வரமீஸ்வரி!

24. சித்தரோடு முத்தரையும் பக்தியொடு மறவாதென்
சிந்தைதனில் காண வேண்டும்!
சிறியதனுள் பெரியதெனச் செப்பிய நன் முது
சிதையாம லுணர்தல் வேண்டும்! [மொழியைச்
சின்மயமே தன் மயமென் றெண்ணியே சாபல்யம்
சினம் போக்கி யடைதல் வேண்டும்!
சிம்ம வாகனமேறி வா வா பேரின்பம்
சிறக்க மெய் மாரிமுத்தே!

25. கலியுலகில் மெய்யான தெய்வங்கள் பலவெனினும்
 கண்கண்ட தெய்வம் நீயே
கண்ணே கண்ணுள்ளான ஒளியே எனக்குற்ற
 கவலைபிணி யோடவருள் செய்
கட்டளை கடந்தடைந்த கஷ்டமினிப்போதுமே
 கடமைதனில் திடம் தந்தருள்
கற்பகமே இப்புவியில் எங்கள் குலதெய்வமே
 கருணையுள மாரியுமையே!

26. கிள்ளைகாத் தேமாந்த இலவமர மொப்ப யான்
 கிழவடிவு பெற்ற பிறகு
கிறுகிறுப்புடன் வாதநோய் சூழ்ந்து தடியூன்றிக்
 கிரமமதி தவறி முடிவில்
கிள்ளாடி மூர்க்கமெலாம் தள்ளாடிப் போம்போது
 கிட்டுமா நினதிருபதம்
கிண்கிணி சிலம்பொலிகள் சப்திக்கும்படி யென்முன்
 கிருபைவர மருள் மாரியே!

27. கொன்றவர்களைக் கொல்லும் சண்டாளச்செயலென்று
 கொலை களவை யுணராமலே
கொக்கரித்திடும் கோழி சேவலுடன் ஆடுகளைக்
 கொட்டு முழக்கொடு வெட்டினேன்
கொண்டாடத் தெரியாமல் நின்ருடிப்பேய் போன்று
 கொடியதீச் செய்கை புரிந்தேன்
கொதிநெய்போ லெனதுள்ளம் பதறுவதை
 கொற்றவளே மாரியுமையே! [எண்ணினுல்

28. கோடானுகோடிமுறை கும்பிட்டுன் சன்னதியில்
 கோரமுள பலிதந்துளேன்
கோயிலெனும் உண்மைதனை யுணராத மதீயீனன்
 கோலாகல மாடினேன்
கோழை மனதுள்ளயான் ஏழையென நீ கண்டு
 கோரின வரங்களருள்வாய்
கோபாக்கினித் தணலுக் காளாக்கினுல் சகியேன்
 கோபாலன் தங்கையுமையே!

29. புண்ணும் புலாலினை நீ யுண்பாயென்றெண்ணி யான்
 புத்திகெட்டுனை வணங்கினேன்
புருடார்த்த குணங்கெட்டுப் போக்கிரியென்றிகழ்
 புகழ்கெட்டலைந்த நாயேன் [பட்டு
புட்டிச் சாராயங்களைக் குட்டித்தெய்வத்திற்கென
 புதிராய்க் குடித்த மடையன்
புரளிபல செய்துள்ள பொல்லாத மடையனெனைப்
 புனிதமுறச் செய் மாரியே!

30. சரியைமுதற் படி தாண்டிக் கிரியை வழிபற்ருத
 சண்டாளன் சண்டாளன் யான்
சன்மார்க்க நந்நெறியைச் சார்ந்துய்ய முடியாத
 சண்டாளப் பாவியடியேன்
சற்புத்திரனென்ற பெயரோங்காமலுழல்கின்ற
 சனிதோஷச் சண்டாளன்யான்
சற்சனரைத் தூஷித்த சண்டாளனென்ருலும்
 சர்வேஸ்வரியெனை யாளுவாய்!

31. சாணோறமுழம் கீழே நழுவி விழுந்தழுகின்றேன்
 சாந்துணையு மிதுசாபமோ
சாலோக சாமீப முணராத பிழையென்னைச்
 சார்ந்திடர்கள் பல செய்யுதே
சாத்திரங்களைப் புரட்டிப் பார்த்தாலும் படித்தாலும்
 சாடுதே ஊழ்வினையெனை
சாம்பவியே யேழையெனைக் கண்பார்க்கவேண்டு
 தாயே எம்மாரீஸ்வரி! [மென்

32. மதவாது பலபேசிப்பிள வேற்படுத்தினேன்
 மற்கடகப் பிடிவாதன் யான்
மதியற்ற ஓநாய்போல் கெதியற்ற வாருகி
 மனவேதனை யுற்றயான்
மனிதான்மத் தன்மையது கிடையாத படுபாவி
 மண்மீது நடமாடுறேன்
மக்களனைவர்க்கு மருளொளியான தெய்வமே
 மகமாயி மாரீஸ்வரி!

33. மானிலமெலாம் புகழுமன்னே பரதேவியே
 மாணிக்க மணியின் ஒளியே
மாயாவிநோதமுள நாயாகவும் எருமை
 மாடாகவும் வாழ்கிறேன்
மாக்களறிவிலும் கெட்ட கேடாகிய முடிவில்
 மாண்டொழிந்து மண்ணுகுவேன்
மாதாபிதா சுற்றம் முற்றுமெனேப் பற்றுமுன்
 மா தபசு தா தேவியே!

34. தீங்கொன்றும் செய்யாமற் திருவருளே நாடி நாம்
 தீரமுட னுலவ வேண்டும்
தீட்டியவாள் கையேந்திச் சிற்றுயிரைக் கொல்கின்ற
 தீத்தொழிலே மறக்க வேண்டும்
தீனரட்சகர்களெனப் பார் புகழப்பார்மீது
 தீர்க்காயுள் பெறுதல் வேண்டும்
தீபதெரிசனம் சித்திரை யேழினிலே கொண்டாடி
 தீவினே களகல வாழ்வோம்!

மாரியம்மனின் வரப்பிரசாத வாழ்த்து.

1. மாரி பரமேஸ்வரியே எங்கள் தாயே
மாந்தர்கள் இம்மண்ணுலகில் நீண்டகாலம்
சீதேவி குடி புகுந்த மனேயில் வாழ்ந்து
சீரிய சற்குணம் பெருகிச் சிறப்புண்டாகி
காரிய காரண முணர்ந்து கடமையாற்றிக்
காலநிலே கண்டறிஞ ருறவு பூண்டு
வானவரும் புகழ மனமகிழ்வாய் நீங்கள்
வாழ்க வென வாழ்த்திட நீ வருவாய் தாயே!

2. சத்தியமும் நித்தியமும் நீதா னம்மா
சகலவித சம்பத்தே எங்கள் தாயே
உலகமதைப் படைப்பவளும் நீதானம்மா
உத்தமிகள் கற்புநிலே நீதான் தாயே
வறுமை பிணி கவலேகள் தீர்ப்பா யம்மா
வலிமையுள்ள வச்ர உடலளிப்பாய் தாயே
மறுபிறவி யணுகாத மார்க்கம் கூறி
மக்களே நீ வாழ்த்துதற்கு வருவாய் தாயே!

3. பூமிமுதல்ஆகாயம் நீ தானம்மா
பூர்வீக சாம்பவியே எங்கள் தாயே
ஆதிபரஞ்சோதி யெல்லாம் நீ தானம்மா
ஆறறிவாய் நிற்பவளும் நீ தான் தாயே
சூரர்களின் வீரமெல்லாம் நீ தானம்மா
சூதுகளில் வெற்றிமயம் நீ தான் தாயே
சந்திரரும் சூரியரும் நீ தானென்று
சந்தேக மற வாழ்த்த வருவாய் தாயே!

4. ஊனுடலும் உளமகிழ்வும் நீ தானம்மா
ஊக்க மொழி பகர்பவளே எங்கள் தாயே
புலனுணர்வும் புத்துயிரும் நீ தானம்மா
புண்ணியமும் புதுமைகளும் நீ தான் தாயே
கலைமகளும் விலைமதியா மணியும் நீதான்
கண்ணிலுள்ள ஒளிவடிவம் நீதான் தாயே
முத்திநிலை தருபவளும் நீ தானென்று
முனிவரொடு வாழ்த்துதற்கு வருவாய் தாயே!

4. கிருஷ்ணப் பாமாலை.

1. மாயா உதாரா பரதேவா நினக்கெந்தன்
மானிடப் பொய்யுடம்பை
மாணிக்க மாமுத்துக் கோமேதகக் கற்கள்
மாசோதி ஒளியினதிகம்
மாசற்ற நீலநிற நின் மேனியோ டொன்ருய்
மாருமல் கலந்துறையவே
மாதா பிதா குருபோன்றெம திதயம் வாழ் நரசிம்ம
மாகிருஷ்ணத் தெய்வீகமே!

2. செகம்புகழ மனங்கொண்டு மதிகெட்டமடையன்யான்
செய் தொழிலிழந்த ஏழை
செல்வமிகத் தேடவகை யறியாதயேழையான்
செட்டின்றிக் கெட்ட எளியேன்
செக்கிலகப்பட்டபவ மாடாயுழைத் துலகில்
செயலற்ற ஏழையடியேன்
செடி பூண்டு கொடிமேவு மலைமேடு போலானேன்
சென்மவினை தீர்கோவிந்தா.

3. பெண்ணுசை பொல்லாததென்றெண்ணுத பாவியான்
   பெரும் பிழைகள் செய்த பாவி
பெருமைதருமரிய தவம் புரியாத பாவியான்
   பெற்ருேர்க்காகாத பாவி
பெரியாரை நிந்தித்துச் சிறுவரோடுறவாடிப்
   பெயர்கெட்ட மாபாவி யான்
பெட்டியுளடங்கிய பொன்கட்டியே கருணை மழை
   பெய்வாய் மெய்க் கிருஷ்ண தேவா.

4. தினகாலமும் செத்தபிணம் போன்றிவ்வுலகின் மிசை
   திடனற்ற பொம்மையாகித்
திரிந்தென்று மலைகின்றேன் ஐயோ யானென்செய்
   திக்கற்ற பாவியானேன் [வேன்
திருப்பாற்கடல் மிசைதுயின்ருலும் நின்கண்ணைத்
   திறந்தெனைப் பார்மாயவா
திவ்யபரிபூரணமே அருளொளியி லுறவாகித்
   திகழ்கின்ற மாயக் கண்ணு.

5. அட்டாள தேசமதை யாண்டாலும் அளவற்ற
   அழிபொருளைத் தேடினுலும்
அண்ணுந்து பார்க்க முடியாதபடி மேனிதனில்
   அணிமணிகள் கொண்டபோதும்
அன்பற்ற நெஞ்சொருக்கால் புண்பட்டுப் போகுமென
   அறியாத படுபாவியான்
அக்கினி நரகக்குழியுள் புக்குமுன் எனைக்காப்பாய்
   அரிராமக் கிருஷ்ண மயமே.

துடிக்கும் மயிலில் நடக்கும் புண்யனே என்ற இசை.

6. பறக்கும் கருடப் பட்சியேறும் வரதா
பலபேர் கொண்டாடப்
பாலனுக்கொரு வரந்தர அரிதா — ஐயா
பாரு உன் பதஞ்சேரு மெந்தனைக்
காரு கண்களி கூரு முன்னொரு
காலம் காளிங்கன் மீதிலாடியவா—கசடனுன
கம்சனைக் கதையாலே சாடியவா. (பற)

7. மறக்கேன் உன்பதம் இரக்கமுமிலையா
மாயா செவ்வாயா
மான் மழுதரித்தோன் மகிழ்தூயா—அடியேன்
மானிட உடலே விலகிட
மானில முனையே புகழ்ந்திட
மாசிலாதொரு மரகதமணியே—நின் மதுரமான
மறுமொழி பகர் நரசிம்ம கிருஷ்ணு. (பற)

8. சித்திரை மாதம் திகதி யேழினிலே
சிவனடிகள் புகழும்
சிறந்த தீபதெரிசன மகிமை—இப்புவிதனில்
சிந்தை நொந்து நைந்து மனிதர்
சிதைந்திடாமலே தினந் தினமொளி
காணக் கவலை வறுமையகலுமே கட்டாயமாகக்
கருணைமிகுதி யுலகில் திகழுமே. (பற)

## 5. மகாலெட்சுமி மாலை

(வெண்பா)

அன்னை மகாலட்சுமிக்கு அடிமை புகுந்தவரை
பின்னமின்றிக் காக்க விரைவாக—அன்னமதில்
ஏறிக் கிருபைவரம் தேடித் தரவருவாள்
தேறியிரு நெஞ்சே தினம்.

### ஆசிரிய விருத்தம்.

1. இறைவனருள் குறையாது நிறைவாகி நிலைநிற்க
இணையற்ற துணையாக நீ!
இகவாழ்வி லகமகிழச் சுகபோகம் வேண்டினேன்
இதுசமய மதிவிரைவினில்
இப்பிறவி யானதினி மறுபிறவி புகுமுன்னம்
இனிய வர மருள வருவாய்!
இந் நாள் முதற்றொடங்கி என்னுளு மென்னுடைய
இதயமதி லிருலெட்சுமி!

2. தருமநெறி தவறாத தவத்தொண்டர் இல்லத்தில்
 தனலெட்சுமி உன் பெயர்
அன்புடனே ஏழைபசி யாற்றுபவரில்லத்தில்
 அன்னலெட்சுமி உன்பெயர்
செப்பிய மெய் மொழிகளிலேசெல்வாக்கையளிக்கின்ற
 ஜெயலெட்சுமியு முன் பெயர்
கலை பயிலும் வித்தையில் நந்நிலையாகி நிற்கின்ற
 கருணை லெட்சுமி அன்னையே!

3. விற்போரில் எப்பொழுதும் பிற்போகா மன்னர்களில்
 வீரலெட்சுமி உன்பெயர்
வேதாந்த சித்தாந்த தத்துவமே ஒன்றான
 விஜயலெட்சுமி உன்பெயர்
அரியதவம் புரிந்திறைவனடிசேர அருள்புரிவாய்
 அஷ்டலெட்சுமி அன்னையே!

4. பொய் புகலா நாவுடைய மெய்யடிய ருபதேச
 பொன்மொழியி லுறைபவளும் நீ!
பொறுமை குடிகொண்ட சிவயோகியர்க ளுணர்ந்த
 பொருளாகி நிற்பவளும் நீ! [மெய்ப்
பொல்லாத துட்டர்களை நல்வழி திருத்துகின்ற
 பொது விதியும் நீதிகளும் நீ!
பொறியைந்தும் அறிவொன்றி யுனையென்றும் மறவாத
 பொற்பதங் கை கொடு லெட்சுமி!!

## 6. பத்ரகாளியம்மன் பாடல்

செந்தில் வடிவேலவன் மேல் என்ற இசை.

1. அன்னையே மகமாயி எங்களின்
அம்பிகையே தேவி
உன்னைக் கும்பிடக்கை மேவி
வரந் தந்திடென்று கூவி அழும்
எந்தனைக் கண் பார்த்திடாவிடில்
நொந்து போகு மென் ஆவி(அன்)

2\. காமனுகிய காலனை யுந்தன்
கருணை வாளினுல் வெட்டு
கடல் மடைபோ லருளைக் கொட்டு
செய்த பவவினை யெலாம் பட்டுப்பறந்
தேகிடவரம் கோரி யுன்னிரு பாதம்
தொழுதேன் தொட்டு(அன்)

3\. பக்தர்கள் மனக்கவலை யகல
பார் புகழ்ந்திட வந்து
பரசாந்த மதனைத் தந்து
குறை சிறிதில்லாமலே வெந்து உயர்
நற் றவவழி பற்றிடும்படி சற்றென்
சிரசில் குந்து(அன்)

4\. சித்தம் தெளிந்த தவத்தினர்களே
செய்வீர் தேசத் தொண்டு
சிவ சைவ சமயம் கண்டு
தெய்வ ஒளியதிலேதா னுண்டு எனத்
தனிமுதல்வனைத் தானுணர்ந்திடில்
தரணிவாழ்வு தான் நன்று (அன்)

5\. ஆகாத செயல்கள் பரவி
அக்கிரமம் மித மிஞ்சி
மக்கள் அருளில்லாமலே அஞ்சி
அலைந் தழிந்து போவதை நெஞ்சில் நினைந்
துருகி மௌன நிலையிலிருந்து
எழுதினே னுனைக் கெஞ்சி (அன்)

6\. உழல் நிலைகளை யுலகிலிருந்து
உடனடியாகப் போக்கு
நினது கிருபை யொளியுண் டாக்கு
மேன்மை நிலைக்கு மக்களைத் தூக்கு ஞான
ஒளிபெறும்படி செய்வாய் இந்த
உலகமீதினில் யார்க்கும் (அன்)

ராகம் ஆனந்த பைரவி தாளம் ஆதி

7. பத்திர காளி யென்னும் உத்தமியே உனது
புத்திரர்களபயமே—புவிநிறைந்து
சத்தியாய் நிற்கும் தெய்வமே.

—சரணுநு பல்லவி—

தாமரைக் குளமதிலோர் பூமலரெனப் புகழும்
நாமமே இந்நாநிலமும் சேமமே பெறத்தகுந்த—பத்
பஞ்சமா பாதகங்கள் மிஞ்சியுன் மக்களெல்லாம்
அஞ்சியே அழிவதினுல் கெஞ்சினேனருள்புரிவாய்-பத்
அடக்கமில்லாதபடி நடக்கும் மடையர்களை
மடக்கியொடுக்கியுல கிடுக்கண் ஒளித்திடுவாய்—பத்

(கும்மி இசை)

8. அந்தமிகுந்த நம் செந்தமிழ் நாட்டிலே
ஆலயம் எண்ணிற் கடங்காது
சிந்தை தெளிந்துமே மக்கள் வணங்கிடச்
சிறந்த சந்நிதி காணுங்கடி

9. பாரததேவி தான் பூரணசோதியாய்ப்
பாருலகெங்கும் நிறைந்தோங்கி
காரணமாகவே கண்கண்ட தெய்வமாய்க்
காட்சி தரும் பத்ரகாளியடி

10. காளிகா தேவிநம் மன்னையர்க்கு இனிக்
கோழி கடா பலி கூடாது
நாமினி நல்லமுறையொடு தெய்வீக
நாட்டத்தைப் பற்றுவோம் வாருங்கடி

11. பால் பழங் கொண்டுமே வாருங்கடி
பரமேஸ்வரி பாதத்தில் சேருங்கடி
சீரிய ஞானவழி கண்டிறைவியைச்
சிந்தனை செய்து வணங்குங்கடி

12. மாக்கள் மதி போக்கி மக்களாய் வாழவே
ஆக்கம் பெருகிட வேண்டு மென்று
ஊக்கந் தவருதுல கிலுளவரை
மார்க்கந் தழுவியே வாழுங்கடி

பல்லவி

13. சத்தியந் தழுவி நில்லுங்கள்—நமது
பத்திரகாளிபதத்தை நித்தியந் துதித்துலகில்
சத்தியந் தழுவி நில்லுங்கள்.

சரணம்

பஞ்சமும் பிணியு மிதமிஞ்சியே போகாதபடி
நெஞ்சினில் நினைந்துருகிக் கெஞ்சியே சிரம்பணிந்து (சத்)

கள்ளமும் பொல்லாக் கபடும் அல்லலைத் தருமென்றெண்ணி
நல்லதைச் செய்யத் துணிந்து நாட்டினிலிருக்கும்வரை(சத்)

பொய்களும் பொருமைகளும் தெய்வீகபக்திக் கிடையூறு
செய்கு மெனவே மதித்து மெய்வழி கடைப்பிடித்து (சத்)

பல்லவி

14. தேவி நின்திருவருள்பெறத் தேடினேன் நெடுநாள்
தேடினேன் நெடுநாள் காணுதுவாடினேன் நெடுநாள்
(தேவி)

சரணுநு பல்லவி

என்பிறவிப் பிணியகல அன்புடனிப்புவியில் வாழ
அன்னையே நானுனை யழைத்தும் மனமிரங்கலையா
மனமிரங்கலையா மைந்தனென்மேல் வர்மம் நீங்கலையா
(தேவி)

பாதகங்கள் குடிபுகுந்து வாதைமிகப் புரிகுதையோ
தேகமிது விழுமுன முந்தன் திருவடி நிழல்தா
திருவடி நிழல்தா பொய்யாத புகழுடல் தரவா (தேவி)

ஆசை மிகப் பெருகி மோகமாகிப் படுகுழியுள் வீழ்க
அம்பிகையே எனை விடாது ஆதரிதாயே
ஆதரி தாயே அருள் பரமேஸ்வரி நீயே (தேவி)

புள்ளிக் கலாப மயில் பாகன்-என்ற இசை

15. தாமரைக்குளம் சிறந்த ஊரு சிவகாமி பத்திரகாளி
யவள்பேரு—திரு
நேத்திரம் போல் நின்றிலங்கிப்
பிரார்த்தனைக்குரியவளாய்

வாழ்த்தியே வரந்தருவாள் பாரு—சிரம்தாழ்த்தியே
வணங்கிவரம் கோரு (தாமரைக்)
ஆதிபரமேஸ்வரியை நாடு நல்லநீதியோடிருந்தருளைத்
தேடு—தாயே
அந்தரி துரந்தரியென்
றெந்த நேரமும் துதித்து
நேர்த்தியாகவேயுலகில்வாழு—பலர்பார்த்துனைக்
கொண்டாட வரம் கேளு (தாமரைக்)
மட்டரகமுள்ளவர்கள் கூடிக் கடாவெட்டியே பலியிடு
வாராடி—இது
கெட்டதெனவே மதித்து
விட்டிடும்படிக்குனது
பொற்பத நிழலருள்வாய்தாயே—மக்கள் நற்கதியடைந்
திடவே நீயே (தாமரைக்)
பொங்கலிடும் நாட்களிலே ஆஹா தாயே எங்களின்
குறை தவிர்ப்பாய்வாகாய்—தேவ
மங்களம் முழங்கிடமும்
மாரியும் பொழிந்திடவே
அன்னையே வரந்தருதல் வேண்டும் இனி உன்னையன்றியார்
துணைதான் மீண்டும் (தாமரைக்)

## தீபாவளிப் பண்டிகைப் பாட்டு

1. தீபாவளிப் பண்டிகை தான் பாப்பா—தமிழர்
திருவிழா விற் சிறப்பு பாப்பா
ஆபாச செய்கையின்று பாப்பா—நமக்கு
ஆகா தெனக்கருது பாப்பா.

2. குடியன் வெறிய னெனப் பாப்பா—பலரும்
கொடிய மொழி புகல்வர் பாப்பா
மதுபான வஸ்து வெலாம் பாப்பா—உண்டு
மனந்தடுமாறலாமா பாப்பா.

3. கண் சுழல நாபுரளப் பாப்பா—தள்ளாடி
மண்டைகளுடையுமடி பாப்பா
சண்டைகள் பிடிக்கலாமா பாப்பா—அறிஞர்
கண்டுனை இகழும்படி பாப்பா.

4. கோழிகளும் ஆடுகளும் பாப்பா—வெட்டிக்
கொண்டாடுதல் கொடிது பாப்பா
காலையிலும் மாலையிலும் பாப்பா—பரம
ஏழைகட்குச் சோறிடலாம் பாப்பா.

5. எண்ணை முழுக்கிடலாம் பாப்பா—புதிய
வண்ண உடை கட்டிடலாம் பாப்பா
உண்ணுவதும் எண்ணுவதும் பாப்பா—இன்று
அன்னை பரமேஸ்வரிக்கு பாப்பா.

6. தெய்வீக நாளிதடி பாப்பா—உயர்ந்த
செய்கைகளைச் செய்தல் நலம் பாப்பா
வையகம் புகழ் தமிழர் பாப்பா—சைவ
மெய் வழியை நாடிடணும் பாப்பா.

7. இதுவரை செய்த பிழை பாப்பா—போதும்
இனியும் பிழை புரிந்தால் பாப்பா
அனிதமாய் உன்னுடலும் பாப்பா—கெட்டு
அவதிக்குள்ளாகுமடி பாப்பா.

8. நாகரீகக் காலமடி பாப்பா—சமுகம்
வேகமாய் முன்னேறுதடி பாப்பா
தமிழும் தமிழுலகும் பாப்பா—என்று
தான்சிறந்து வாழ்ந்திடுமோ பாப்பா.

## 7. திரௌபதையம்மன் துதி-வெண்பா

1. மெய்யறிவு பெற்ற மிக்கோர் நன் நெஞ்சத்துள்
தெய்வத் தெளிவுதரும் திரௌபதையை—தூயமன
மக்கள் மிகப் போற்றி வணங்கிக் கிருபைபெறத்
தக்கது தானிந்தத் தலம்!

2. ஐவர்க்குப் பத்தினியே அழியாத் திருவருளே
கைதொழுத பக்தர்க் கரும்பொருளே-பொய்யுடம்பின்
மாயை யழுக்ககற்றி மாற்றுயர்ந்த பொன்னுக்கிச்
சேவையுனக் காளாகச்செய்!

3. துருபதனின் புத்திரியாய்த் தோன்றி யருச்சுனனைப்
பருவமதில் மாலையிட்ட பைங்கிளியின்—திருவடியைக்
கட்டித் தழுவிநிதம் கண்ணீ ருதிர்ப்பவர்க்கு
நட்டம் விளைவிக்கான் நமன்!

4. பெரியார் சபைநடுவே பேதையர்கள் மானபங்கம்
புரியத் துயிலுரிந்த போதுனது—அரியபொறிக்
கண்திறந்து பார்த்துக் கனசபதம் செய்தவளே
உன்னருளை எங்கட் குதவு!

5. பார்முழுது மொன்ருய்ப் பரவிப் பகலிரவாய்
பேர்தெரியா வாறிருந்த பேச்சியரே—கார்முகிலன்
தங்கையே யெங்களுக்குத் தாயே தனிமுதலே
சங்கரியே நின்தாள் சரண்!

6. அன்னை திரௌபதையின் ஆறுதுதி வெண்பாவை
நன்னயமா யுள்ளுருகிப் பாடினல்--இன்னலெலாம்
பஞ்சாய்ப் பறக்குமிறை பாதம் மிகத்தோணும்
அஞ்சாத் திடமருளு மாம்!

## 8. திருமுருகன் புகழ்மாலை.

(வெண்பா)

1. தந்தைக் குபதேசம் தந்த தவத்தணலைச்
சிந்தை யடக்கிச் சிரம்தாழ்த்தி—வந்தித்தோர்
வறுமை கவலைபிணி அணுகா வரமருளக்
குருவாகி நிற்கும் குகன்.

2. புள்ளி மயிலேறும் புனிதா மறைபுகலும்
வள்ளி தெய்வானை மணவாளா—கள்ளமிலார்
இதய மலர்த்தேனே இணையற்ற தெய்வீகம்
சுதனெனக்குத் தந்தாற் சுகம்.

3. கருணையிலா நாயேன் கலியுக வாழ்வினிலே
இருவினைக்கு ஆளாகி யிருந்துந்தன்—திருவருளைப்
பற்ருது கெட்டேன் பவசாகரச் சுழலால்
முற்றுமெனைக் காவாய் முருகா.

4. கரிமுகவ னுக்கிளைய கந்தா உனைக்காணும்
உரிமை யெனக்குண்டென்ற உண்மை—தெரிய
வருவாய் கலாப மயில்மிசைமே லதி விரைவில்
குருவே யென்னப்பா குகா.

5. பணந்தேடி யோடி உனைநாடாப் பாவி
குணங்கெட்டு நின்ற கொடியன்—மணல்வீடு
கட்டி விளையாடுகின்ற கதைபோற் புவிவாழ்வு
விட்டொழியு முன்வா விரைந்து.

6. வஞ்சகம் பொறுமை வகைமோசம் செய்யும்
நெஞ்சிரக்க மற்ற நினைவுமற—தஞ்சம்
புகுந்தழுத ஏழைக்குப் புத்துயிர்தா கந்தா
மிகுதியுளம் கண்டு மிளிர்க.

7. ஊமை சப்பாணி யுடல்கடந்த நாயேன்
தீமை பலசெய்யத் துணிகின்றேன்—ஆமையுறு
முடங்கிடல்போன் றையா என் ஐம்புலன்கள்
அடங்கிக் கிடக்க வருள்செய்.

8. மனதடங்கி மாயா உலக விவகாரம்
தினம்புரிய மார்க்க மறியேன்—வனவேங்கைப்
புலிகண்ட மான்போன்றென் புத்தி தடுமாறி
வலியிழந்தேன் கந்த வடிவே.

9. யாக்கை யழியாமுன் அரனருளைப் பற்றி
ஏக்கந் தவிர்த்தே இனியுலகில்—ஊக்கம்
புவிப்பொருளை நாடிப் பொய்யாய் முடியாமல்
கவிக்கடல்போற் பொங்கி யெனைக்கா.

10. மங்களமே பொங்கி மக்கள் வளம்பெருகி
எங்கும் கிருபை மிகமிளிர்க—திங்கள்
ஒளிபோன் றிலங்கி உலகி லுலவியுளம்
தெளிய வரங்கேட்பீர் தினம்.

11. ஆண்பெண் ணிருபால ரிதயம் தளராமல்
வீண்கடமை யாற்ற விழையாமல்—காண்பீர்
கலியுலகத் தெய்வீகக் கந்தன் கழலடியை
வலிமையுளோர் போற்றும் வகை.

12. ஆனந்தம் வேண்டுமென தையா வெனக்கூறி
வேண வரங்கேட்க விரைந்தால்—ஞானஒளி
தருக மயிலேறி வருவான் முருகபிரான்
அருளுறவு கூடி அகத்துள்.

13. சத்தியத்தைப் பேணும் சற்சன ரிப்புவியில்
அத்திமரம் பூத்த வாரும்—நித்தியமும்
ஆலயங்கள் சென்று அரிய திருப்பூசை
சீலமுடன் நெஞ்சாரச் செய்.

14. தேவர் குருவெங்கள் சிவசண்முகப் பெருமான்
சேவற்கொடி தாங்கும் செல்வன்—ஜீவன்
அனைத்து மவனடியி லிணைத்து வளர்புவியை
நினைத்துக் கரங்கூப்பி நில்.

15. மனிதான்ம சக்தியது மங்கி யொழியாமல்
புனிதமுறச் செய்தல் புகழாம்—இனியேனும்
கந்தக் கடவுளடி காணக் கருணையுடன்
சிந்தை திடங்கொள்ளல் சீர்.

16. அறம் பெருக ஆயுள்வளர அதிவிரைவில்
திறம் பெருகத் தெய்வமிரங்க—குறவர்குல
வள்ளி மணாளன் வடிவேலன் வெண்பாவைக்
கள்ளமின்றிக் கற்கக் கடவீர்.

17. சுத்தம் சுகவாழ்வு தந்து பயன்காண்க
உத்தமர்க் கிவ்வெண்பா உதவும்—பக்தியாய்
நித்திய ஜோதி தீப தெரிசனத்தைச்
சித்திரை யேழிலிலே காணச் சிறப்பு.

18. வேலாயுதனழகு வெண்பாக்கவிபாடி
நாலாறு வேத விதிபுகலும்—தூலாதி
மூலப் பொருளான முன்னோன்ருள் போற்றிக்
காலக் கடலைக் கட.

19. அன்பின் மயமே அழியாத் திரவியமே
இன்பமிகு தேனே இதயமலர்—பொன்பூங்கா
வனமே வரைகடந்த வற்ரு நீரூற்றே
மனவலிதா கந்த மணியே.

20. பற்றகன்ற ஞானி பகர்மொழியே பண்புடைய
கற்றறிஞர் கண்ட கனிரசமே—நற்றவங்கள்
உயர்ந்து உலகிலுளோர் ஓயாக் கவலைபிணி
துயரகல நீதான் துணை.

21. முருகா நினதுபதம் முழுதுணர்ந்த நெஞ்சில்
குருவாகி வந்து குடிகொள்—மறுபிறவி
புகுவாதிருக்கப் புகலாய் பிரணவத்தை
தகுதியுள தாகத் தரணி.

22. சோதி யழகாய் சுகமவுன மேனிலையாய்
ஆதிபரமா யளவிறந்த—நீதிவெளி
எங்கும் நிறைந்த இறையே குறையகலத்
தங்கமயி லேறிவரந் தா.

23. பகுத்தறிவுப் பஞ்ச மகற்றிப் பரமபதம்
வகுத்துணர்ந்து வாழ்தல் நலம்—மிகுத்துலக
அருட்பணிக ளாற்ற ஆர்வமிலா ருந்தன்
கிருபையொளி கிட்டாத கீழ்.

24. தவமும் தவமுடையார் தந்த சுருதிகளும்
சிவசமய பக்தர்க் குதவும்—குவலயத்து
மாந்தர் சிலருனது மகிமை புகழாத
தீந்தொழில்நூல் காண்பர் தினம்.

25. மாயை இருளில் மயங்கி மடியாமற்
சேயை யுனக்கடிமையாக்கி—தாயை
வேல்தருக வேண்டி விரைவி லரக்கர்குணம்
ஆல்படர்தல் போலாகா தாக்கு.

26. கந்தா கடம்பா கலியுலக மெய்ஞ்ஞானத்
தந்தைநின் செந்தாமரைக் கமலம்—தந்து
சிரமே னடம்புரியச் செய்வா யெனஎனது
கரங்கூப்பிக் கைதொழுதல் காண்.

27. பாராளும் மன்னனும் படியில் மடியாமல்
ஏராள காலமிருப்பதில்லை—தீராத
ஆசையகற்றி யென தையா நினதுபதப்
பூசை செயச்செய் பிறவிபோம்.

28. இமையா விழிதிறந்துன் ஏகாந்த வீட்டில்
அமையாத தேன் கண்டருந்த—சுமைபோன்ற
உலக் விவகார உழல் நிலையுள் தள்ளாமற்
சுலபவழி யொன்றெனக்குச் சொல்.

29. நாசிவழி புகுந்து நடக்கும் திருவாசி
ஊசிமுனே வாசல் திறந்து—தேசிகநின்
அந்தரங்க வீட்டில் அடங்கச் சிவயோக
மந்திரத்தைக் கூறு மருகா.

30. அப்பா முருகா அவனிதனில் நீயிலேயேல்
தப்பாய் முடிந்து தலேகீழாம்—ஒப்பாத
செய்கை களேந்து சீராக நின்கருணேத்
தெய்வஒளி தந்துலகைத் தேற்று.

31. படமுடியாத் துன்பம் படினும் பகவநினே
விடமுடியா தென்ற விரதம்—கடமுளகால்
பிடிப்பேன் பிரணவத்தைப் படிப்பே னமுதமது
குடிப்பேன் தினமும் குகா.

32. சண்முகா உன்னேச் சரண்புகுந்த அன்பர்க்கு
உண்முகமாய் ஐம்புலனும் ஒன்றுமே—ஜென்மம்
முத்திநிலே யெய்த முனேந்து தவம்புரிந்துன்
சித்திபெற்ற பேர்க்குச் சிறப்பு.

33. பொருளுறவு போதுமெனப் புவிவாழும் மாந்தர்கள்
அருளுறவு கொள்ளா திருந்தால்—இருள்சூழ்ந்து
ஐயோ! சிலநாளில் ஆன்ம வலியிழந்தும்
செய்தொழிலில் இல்லே சிறப்பு.

34. மடமை மிகச்சூழ்ந்து மக்கள் மதிமயங்கிக்
கடமைகளில் பின்னடையா வாறு—திடமுடைய
உடலு மிருதயமு முணர்வுபெற வேண்டின்
நடனமயில் வாகனனே நம்பு.

35. அறியாமை யச்சம் ஐயம் அகங்காரம்
நெறிதவறி வாழ்கின்ற நிட்டூரம்—பொறிபுலன்கள்
அசைத லருளுறவை அழித்த லிவையாவும்
திசை பரவி நில்லா தினி!!

## ஆசிரிய விருத்தம்.

1. சண்முகா நானுனது தொழும்பனுகாமலே
 சண்டாளருறவு பூண்டு
 சற்சனர்களைக் கண்டு சந்தேக மிகுதியாய்
 சவம்போலிவ் வுலகிலுலவி
 சரியான தவ வாழ்வு தெரியாம லருளென்ற
 சம்பத்தை இழந்த பாவி
 சர்வ பரிபூரண மெய் மயிலேறி வரவேண்டும்
 சரவணபவத் தெய்வமே!

2. மட்டி மனம் மாமாயைக் குட்டிச்சுவர் போன்று
 மண்ணிலொரு புண்ய மின்றி
 மற்போர் மிகப் பொருதி எப்போதுங் கூடாத
 மமதைகுடி கொண்ட வெறியன்
 மங்காம லோங்குபுகழ் தங்காம லென் பெயரை
 மதியாமலுலகி லிகழ
 மறுபிறவி புகும் பேதை யாகினேனுகையால்
 மயின் மிசைவா முருகையனே!

3. துட்டுக்கும் கூடாத கெட்ட செயல் பல செய்து
 துன்புற்ற துட்டனையா!
 துடியான விளையாடல் பலவாறு யானுடித்
 துக்கமிகச் சூழ்ந்த துட்டன்!
 துயர்தாங்க முடியாம லழுமேழை மக்கட்குத்
 துணைகள் புரியாத துட்டன்
 துகளற்ற மனதுடையனிலை யெனினும் மயிலேறித்
 துரிதமாய் வா சண்முகா!

4. வேலாயுதா உனது கழலடியைத் தொழ மனது
 வேதனைகள் நீங்கவிலையே
 வேட்டை நாய் காட்டிலலைகின்ற கதையைப் போல
 வேடிக்கை மிகச் செய்யுதே
 வேறேது மொரு கதியுமில்லையே என்செய்வேன்
 வேண வர மருள வருவாய்
 வேதாந்த போத குருவான எமதையனே
 வேகமொடு வா சண்முகா!

5. தொல்லைதனைக் கண்டஞ்சிக் கெஞ்சினேனிதுநாளும்
   தொகுதிதல மிகுதி தேடித்
   தொலைதூர மலைந்தும்யான் கண்டபய னென்றில்லை
   தொண்டனுனக் கடிமை யையா
   தொட்டுனது பாதமதை விட்டு விலகாதபடி
   தொடர்ந்தருளோ டுறவாடியும்
   தொள்ளாயிரந்தரம் யானிடறி வீழ்ந்துழலாமல்
   தோம்தோமெனவா வேலவா!

6. பல்லாயிரங்கோடி அண்டமுத லெங்குமாய்
   பரந்து நிறைந்தொரு குருவென
   பச்சைநிற மயிலேறி வருவாயென் துயர்தீரப்
   பரந்தாமனிளைய மருகா
   பக்குவமெனக்கில்லை யென்றெண்ணி மௌனியாய்
   பதுங்கிநீ யிருப்பதழகோ
   படிமீதிலொரு நொடியிலுயிர் விடுவேனுகையால்
   பகவானே வா சண்முகா!

7. கொலைகளவு குடிகாமம் கூடாதென் றெண்ணுமல்
   கொள்ளைகளடித்த திருடன்
   கொஞ்சமும் நெஞ்சகமிரங்காத குருடன்யான்
   கொடுமைகள் புரிந்த திருடன்
   கொட்டுமுழக் கொடுதாலி கட்டிய நன்மனைவி மனம்
   கொதிக்கவசை சொன்ன திருடன்
   கொக்கரித் திடுசேவற் கொடியுடைய நினதுதாள்
   கொடு கந்த வேலையனே!

8. புள்ளிமயிலேறி ஒரு வள்ளி தெய்வானையுடன்
   புனிதாநீ வரும்வருகையை
   புதுமையொடு காணக்கண் இமையாதிருக்குதே
   புகழ்பாடநா நாடுதே
   புலிபாயுமானுலும் அஞ்சாத நெஞ்சமொடு
   புத்துயிர் மிகப்பூணுதே
   புல்லறிஞுனை வெனை உன்னருளி லொன்றியே
   புக்கவை குகக் கடவுளே!

9. உத்தமர்கட்காகாதபடி யேழையென்னை நீ
உழல் நிலையுள் தள்ளிடாமல்
உறுதுணை இருந்தென்னைக் காப்பதுன் கடமையே
உமையவள் திருப்புதல்வனே
உண்மைக்குழைக்காத உருவமொடு உணர்வற்ற
உளுத்த மரமென உணர்கிலேன்
உயர்கதியெனக் கருள வருவாய் மாமயிலேறி
உலகொளி சுப்ரமண்யனே!

10. செந்திநகர் மேவிய மெய்யெந்தையே எனையுனது
செகஜோதி ஒளியுள்ளொளியாய்
செய்திடல் வேண்டுமென வேண்டினேன் உனதுதிருச்
செந்தாமரைப் பதமலர்
செல்வமதிலும் பெரிய சீரென எனக்கருளிச்
செப்புவாய் திருத்தாரகம்
செலவிட்டு ஆன்மாவை யான்கெட்டுப் போகாமல்
செயல் கொடுமெய் முருகையனே!

11. சுகவாழ்வுபெற நெடுநாள் உனைநாடு மேழைக்குச்
சுகபோக வாழ்வை யருளிச்
சுந்தரமிகுந்த பரமானந்த மெய்ஞ்ஞானச்
சுபசோப ஞான வழியைச்
சுட்டியும் சொல்லொணு அதீத வெளியுளே
சும்மா இருக்க அருள்செய்
சுவாமிமலை வளரு மெங்கள் குலதெய்வமே
சுப்ரமண்யக் கடவுளே!

12. அன்புள்ள மக்களுனைக் கொண்டாடும் நன்னுளாம்
அஞ்ஞான இருளகலும் நாள்
அரியதிரு நாளாகும்படி சித்திரை யேழினில்
அருள் விமோசன நாளென
அவனிமுழுதும் தீப தெரிசன மெனக்கூடி
அனைவரும் கிருபை பெறுக
அன்னையருட் பாலகனே பன்னிருகை வேலவனே
அகமலரி லுறை முருகனே!

13. மால்மருகனுன திருமருகா உனைத் தொழுதும்
மாபாவம் போராடுதே
மாதா கொடுத்த வடிவேல் கொண்டெறிந்துனது
மாசற்ற பத சேவைதா
மாகாளி பெற்ற ஜெயபர சுப்ரமண்யனே
மாயாவி யாவுமொழிய
மாது குற வள்ளியொடு தெய்வானையைக்கூடி
மாமயில் மேல் வா சண்முகா!

14. முக்கண்ணனுக்கிளைய மகனே உனக்கடிமை
முடிதாழ்த்த யானெண்ணியும்
முப்பாழ் கடக்க முடியாதபடி அப்பப்பா
முறையிட்டும் பயனற்றதை
முக்கிய முணர்ந்து மனதெக்கவலையும் நீக்க
முருகா நீ வாராததேன்
முச்சந்தி வீதிவழி பச்சைமயில் மீதேறி
முன் வா குகா சண்முகா!

15. பற்றற்றிருந்துலகில் கற்றறிஞரோடு யான்
பணி புரிய வரங்கள் வேண்டும்
பலகாலு மறியாது பிழை செய்தபேய்நெஞ்சம்
பதருதிருக்க வேண்டும்
பல்லாண்டு வாழ் வகையை உள்ளாழ்ந்துணர்ந்து
பண் பட்டிருக்க வேண்டும் [யான்
பக்கபலமாகி மிகுதக்க வரம் நீ தருக
பறந்து வா மயில் வாகனு!

16. வஞ்சித்துத் தெய்வானை தேவிக்குத் தெரியாமல்
வள்ளியை மணந்த கதையும்
வனவேட ரறியாம லஞ்சிநின் றுருமாறி
வளர்வேங்கை மரமானதும்
வளையல் விலை கூறியூர் தெருவீதி வலம்வந்த
வகை சான்று பல துண்டுமே
வல்லமை யெனக்கருளி வழி புகல இது சமயம்
வருவாய் மெய்ஞ்ஞான முருகா!

17. தண்டாயுதபாணி யென்ற நின்றிரு நாமம்
தகும் தகும் தரணியே தகும்
தந்தைக்கு மகனுகிக் குருவாய மைந்த நீ
தனேயனேயு மாட் கொள்ளுவாய்
தருமநெறி பின்பற்றி யரியதவம் புரிய உனேத்
தஞ்சமெனக் கெஞ்சியழுதேன்
தட்டாது நின்ற சிவ அட்டாங்கயோகமது
தருவாய் மாமயில் வாகனு!

18. செந்திவடி வேலனுனேச் சிந்தைநெகிழ்ந் தழுதழுது
செப்பினேன் கோடி மந்திரம்
செந்தாமரைப் பாதம் எந்தையே இதுகாறும்
செய்தபசிற் கண் கண்டிலேன்
செல்வமே ஜெகம்புகழும் தெய்வமே இனிஎனது
ஜென்மமது சேமமடைய
சென்றநாள் வீணுகிப் போனது போலாகாமல்
ஜெயங்கொடு வேல் வெற்றி முருகா!

19. கலியுலக மெய்ஞ்ஞானக் கடவுளே உனேத்தொழுதும்
கள்ள மனதுள்ள கள்ளன்
கபடமுடனுரையாடிக் கல்லாத பாமரரைக்
கலங்கியழச் செய்த கள்ளன்
கண் கொண்டு வலேவீசிப் பலமாதரிடம் சென்று
கற்பழிந்திட்டகள்ளன்
கருணே சிறிதில்லாத கள்ளன் யான் எனினுமெனேக்
கடைக்கண் பார் கந்தவடிவே!

20. அடியார்கள் செய் தொண்டில் விளேயாடும் வெற்றி நீ
அன்பர்க் குள்ளன்பு மலர் நீ
அப்பனெடு அம்மை நீ அழியாத பொருளும் நீ
அரகரத் தெய்வீகம் நீ
அங்கும் நீ இங்கும் நீ ஆனந்தக் கடலும் நீ
அங்கமதி லான்ம ஒளி நீ
அத்துவித பேதாதி வித்தைதரும் குருவும் நீ
அருள் மய மெய்ஞ்ஞான முருகா!

21. பம்பரச் சுழல் போன்று இல்லறத் துயரில் யான்
படும் பாடு சிறி தில்லையே
பக்திவை ராக்ய மதிலதி தீவிரம் பெற்றுப்
பவசாகரம் தாண்டியான்
பரம ரகசியம் கண்டு உறவாட வேண்டிநின்
பத மலரைக் கை யேந்தினேன்
பருவமிது தவருமுன் பாருலக மெய்ஞ்ஞான
பண்டிதா வரந் தருகவா!

22. குற்ருலம் பரங்குன்றம் கதிர் காமம் பழனி முதல்
குன்றேறி விளையாடியும்
குருவாய் மெய்யடியார் களிதய மதிலுறைகின்ற
குவலயமே புகழாண்டியே
குற்றங்கடிந் தெனது நற்றவம்செய் நெஞ்சத்துள்
குடி கொள்வதுனது கடமை
குணமணியே குகைவாழும் குருமணியே இனியெனது
குறைதவிர் குகக்கடவுளே!

வேறு சந்தம்.

23. ஆதி அருவநிலையாகிப் புவிபரவும்
ஐயனே நீ வருக வருக!
சோதி செய செயவெனக்கூவி வருபவர்கள்
வாழ்வே நீ வருக வருக!
நீதிநிலவொளியே சேயேன் உடலுயிரே
தாயே நீ வருக வருக!
வீதிதனிலுலவு சாதி குறவரின்
மாதுடனே வருக வருக!
ஓதியுனையறியாப் பாவிபடியுலகில்
பவம் புரியாதருள வருக!
காதிலெனது மொழிகேளாதது தகுமோ
கண்ணேமுன் வருக வருக!
பாதிமதி சடையோன் பாலா எனையுனது
பார்வைபெற வருக வருக!
சேதிமிகவுளது வாதேனிதுவரையும்
வருவாயென் முருகையனே!

24. குகனே உமையவளின் மகனே கலியுலக
வரதா நீ வருக வருக!
பரனே நரர்கள் தொழும் திரனே அருளதனைத்
தரவே நீ வருக வருக!
முருகா யெனது சிரமிசை மேலுனதுபதம்
படவே நீ வருக வருக!
குருவே மயிலின் மிசை யழகாய் நடனமிட
விளையாடி வருக வருக!
அடியார் பவ மகலும் படியாய்க் கருணைவிழி
யுடனோடி வருக வருக!
பதியே பரம பத நிதியே யழியாத
பாக்யமே வருக வருக!
உருவே உலகிலுள் திருவே இறவாத
உயிரே நீ வருக வருக!
சிறியேன் அறிவிலியென் பிழைபோ யகலவென
வருவாயென் முருகையனே!

25. அன்பே அரியமண மலரே அடியேனின்
அப்பா நீ வருக வருக!
கண்ணே ககனவெளி விண்ணே கணக்கற்ற
கற்பகமே வருக வருக!
சத்தே விலைமதியா முத்தே சகச நிலைச்
சம்பன்ன வருக வருக!
கோவே குணம் நிறைந்த குன்றே குருமணியே
குகனே நீ வருக வருக!
ஐயா உலகமிது பொய்யே யெனவழுதேன்
துய்யனே வருக வருக!
தேனே அருள்வடிவக் கோனே ஒன்றுனதிருத்
தேவனே வருக வருக!
வறுமை, பிணி, கவலை நீக்கும் பரம்பொருளே
வருகவென தருகில் வருக!
வடிவேலவனே நீ, நெடியோனுடை மருகா
வருவாயென் முருகையனே!

26. மகிதல மக்களை மாண்புளோ ராக்கிட
மனமகிழ ஓடி வருவாய்!
பஞ்சமா பாதகங்கள் பறந்துலகிலற்றிடச்
சஞ்சீவியாகி வருவாய்!
காருண்யமற்றவர்கள் கருணை மலர் பெய்திடக்
கடிகைக்குளோடி வருவாய்!
பாமர மானிடரைப் பகுத்துணரச் செய்யவே
பறந்து மயிலேறி வருவாய்!
வேற்றுமைகளின்றி சுப, வாழ்க்கையது நல்கிட
வேத குருவாகி வருவாய்!
சாத்திரம் சடங்குகளில் சற்குணச் சக்தியாய்ச்
சார்ந்தொளிரக் காண வருவாய்!
மாதமும் மழை பொழிய விளைவதிகமாகவே
வாழ்த்தி வரம் தருக வருவாய்!
சத்தியமே தரணிபுகழ் நித்தியனே சாந்தநிறை
சௌபாக்கிய மருள வருவாய்!

27. அன்னை பராசக்தியின் சன்னிதியை நாடியமெய்
யடியார்கள் வாழி வாழி
ஆலயமெனக்கணேசனரு ளொளியைக் கண்டவர்கள்
அனைவரும் வாழி வாழி
கோயில்களிற் கொடிய கொலை பலிகள் புரியாத
குணமுடையோர் வாழி வாழி
சிவத்தலமெலா மேகிச்சிந்தைய தடங்கின
சிவபக்தர் வாழி வாழி
பந்தமென்ற படுகுழியில் வீழாத வீரர்களிப்
பார்புகழ வாழி வாழி
சற்சனர்கள் கூடியே சன்மார்க்கம் புரிகின்ற
சபைகளெல்லாம் வாழி வாழி
கற்புடைய மாந்தர் வெகுவிற்பனர்களாகியே
கருணைபெற வாழி வாழி
கற்றவர்கள் நாடியே சற்குருவென் றேற்றிடுமுரு
கையனே வாழி வாழி.



வெற்றி !

# அருளொளி கண்ட மக்களுக்கு அறவுரை.

மகனே! இத்துடன் இணைத்துள்ள வசன காவியங்களின் விஷயங்களைக் கற்றுத் தெளிவதுடன், உயரிய இருபத்தொரு விதமான யோகாசனப் பயிற்சிகளையும், பின்வரும் "ஆசன முறை" என்ற அத்தியாயத்தில் ஓவியத்தின் மூலம் சித்தரித்துக் காட்டியுள்ள பிரகாரம் முறைதவருமல் அனுஷ்டித்து, அதனால், கிடைக்கப்பெறும் ஆனந்தத்தையடைந்து, உனது உன்னதப் பிறவியை ஈடேற்றி உலகில் ஆதவனைப் போன்று பிரகாசிப்பாயாக!

## 1. தன்னம்பிக்கை.

கவி.

உம்பரினுலகைநாடி உன்னதத்தவமேசெய்து
சம்பிரதாயமான சரவணப்பொய்கைவாழும்
தும்பிமாமுகவன்றம்பி துணையருள் பெருகத் தன்னை
நம்பினுல் நாளும் ஜோதிநாட்ட முற்றறியலாமே.

(குரு) எமது ஞானக்குழந்தாய்! நீ உலக விஷயங்களை நம்பி ஏமாந்து போவதைப் பார்க்கிலும் உன்னை நம்பினுல் பலவித நன்மைகள் பெற்றுய்யலாம். நம்பிக்கையென்ற மலரில் விசுவாசமென்னும் பிஞ்சுண்டாகி வைராக்கியக் காயாக முற்றி, பக்திப் பழமாகப் பழுத்து அக்கனியருந்தி அருள் பெற்று ஆனந்தமுறலாம். துன்பக் கடலைக் கடந்து கரையேற நம்பிக்கையென்ற படகேயல்லவா துணைசெய்யும்.

(மாண.) எம் ஞானப்பிதாவே! உலகிலுள்ள எவரும் எக்காரியங்களைச் செய்யினும் விடா முயற்சியுடன் செய்து வெற்றி பெறுகின்றுர்களே! நம்பிக்கையென்ற சக்தியினுல் தானே அவையும் நடைபெறுகின்றன.

(குரு) அறிவனே!புவிவாழ்வை நாடிப் பொருளீட்டுதலில் நம்பிக்கையைச் செலுத்தி தேடிக்குவிக்கும் மாயச் செல்வங்கள் அனைத்தும் இறுதியில் அவநம்பிக்கையாக அழிந்தொழி

கின்றதல்லவா? உன்னையறிந்து உயரிய சாதனஞ் செய்து இறைவனைப் பற்றவிரும்பின், தன்னம்பிக்கையே சாலச்சிறந்த தாகும். கள்ளமில்லாத உன் உள்ளத்தை உறுதிப்படுத்த பின் வருமாறு தியாச்சியத்தை மனனஞ் செய்து அதிகாலையில் யோகாசனத்தில் காட்டியுள்ளபடி சிரசாசனஞ் செய்யும் பொழுது, அகத்தாலுச்சரித்து உன்சித்தத்தை மிகத் திட ஞக்கிக் கொள்ளல் நன்மையாகும். உன்னை உயர்த்த இவ்வுச் சரிப்பு ஒரு உயரிய உபாயமாகும்.

உச்சரிப்பு......

''ஆயிரங்கோடி அழியாத அருட்சக்தியும், கோடானு கோடி குறைவுருத் திருவருளும் நமக்குண்டு; யுகமும் ஜகமும் சர்வமுகமும் நமதகத்துள் ஐக்கியமாய் அடங்கியுள்ளன; நமக்கு கவலை, வறுமை, பிணி முதலிய கொடிய வாதனைகளும் கிடையா. மலர்ந்த முகமும், குளிர்ந்த பார்வையும், திறந்த ஞானமும், சிறந்த சொல்லும், பரந்த நோக்கமும் எமக்கிருக் கையில் ஹே! மனமே!! உன் ஊக்கங் குறைந்தேக்கமுருதே'' என மேற்கண்ட பிரகாரம் தியாச்சியங்களை உள்ளத்தால் அதட்டி, உனது மனத்தால் உச்சரித்து, சதா ஆனந்தமாக இருக்கப் பழகு. இது சாதாரணம் என்று எண்ணிவிடல் வேண்டாம். சித்தத்திடமுடையவர்கள்தான் எவற்றிலும் ஜெயசீலர்களாய்த் திகழவியலும்.

## 2. போஜன விதி.

கவி.

கடுங்கனலொக்குங் காலப் பசிதனைக் கருத்திலுன்னி
கொடும்புலாலினையகற்றிக் குறைபட அன்னங்கொள்ளின்
திடமுறுந்திரேகமிக்க ஊழ்வினை அல்லல்யாவும்
சடுதியிற் தவத்தாலேகும் என்றிடிற் பாலதாமே.

(குரு) குழந்தாய்! எக்காலத்திலும் பசி தீபனமென்னும் அக் கினி கண்டுதான் நீ அன்னமுண்ண ஆயத்தப்படவேண்டும். அதிலும், சைவாம்ச உணவை மிதமிஞ்சிடாது சிறிது குறைத் துண்ணல் வேண்டும். ஏனெனில் மிஞ்சுவதெல்லாம் நஞ்சாய் விடுமல்லவா?

(மாண.) எமது ஞான வள்ளலே! உலகச்சுகபோக வாழ்க்கையில் ஆழ்ந்திருக்கும் போஜனப்பிரியர்களுக்கு இவ்வாறு உரைத்தால் ஏற்காதே! மாமிச பட்சணங்களை சதாவுட் கொண்டு மகிழ்வுற்றிருப்பவர்களுக்கு சைவாம்ச உணவென்ருல் அன்னவர்களுக்குச் சங்கடமாகவன்ருே தோன்றும்!

(குரு) புத்திர! மண்ணை உட்கொண்டு வயிற்று நோயுற்ற மழலைக்கு மாதா மருந்தல்லவா கொடுக்க முற்படுவாள்! மருந்தின் கசப்பை யறிந்த குழந்தை ஆரம்பத்தில் அழத்தானே ஆரம்பிக்கும்! அழுங்குழந்தையைக் கண்ட அன்னை இனிய தின் பண்டங்களைக் கொடுத்தால் நோய் மேலும் அதிகரிக்கும் அல்லவா? கணப்பொழுதேனும் ஓர் நிலையில் அமையப்படா மனதிற்கு, உணவுக்கேற்ற குணம் அமையுமாதலால், இறைவனை நாடி உள்ளம் கசிந்துருகித் துதிப்பதற்கு இடங்கொடாமல், பிள்ளை, பெண்டிர், தனம் தானியமென பல தொல்லைகளைக் கொண்டு குவித்த வண்ணமாகவே இருக்கும். தெய்வீக சக்தியை உணர்ந்து, உண்மையோடு உறவாட விரும்பிய உன்போன்ருேர்கள், ஆகாத அறுசுவையிச்சைகளை நீக்கி சைவ உணவை அருந்தி தவநெறி நிற்றல் வேண்டும்.

## 5. யோகாசன முறை.

கவி.

சீரியசான்ருேர் சொற்ற வாசனமியற்றினுக்கால்
பேரியபிணிகளற்றுப்பிரணவமுதயமாகி
நேரியநாடி மூன்றுள் நெடுநடு நாடிசுத்தி
தேறினல் குறைகளற்று திருவருள் பெருகுமாதோ!!

(குரு) எமது ஞானசேகரா! பற்பல ஊர்வம்புகளையும் உதாரணக்கதைகளையும் வெட்டித்தனமாகப் பேசி வீண் காலங் கழித்து இரவு நேரத்தைப் போக்கி, சிறிதுநேரங் கண்துயின்று சூரியனுதயமாகியும் எழுந்திராது புரண்டு படுக்கும் சோம்பற் பழக்கத்தை ஒழித்துவிடல் வேண்டும். காலமறிந்து கண் துயின்று காலை நான்கு மணிக்கெல்லாம் நித்திரை விட்டெழுந்து, சுறுசுறுப்புடன் கடமைகளாற்றல்தான் உன்போன்ருேர்களுக்கழகு. நீ ஒவ்வொரு நாளும் படுக்கைஅறையிற்

சயனிக்குமுன் இறைவனை வணங்க மான்தோல் அல்லது தர்ப்பாசனத்திலிருந்து சிறிது நேரம் தியானம் செய்து பிறகு இடதுகைப்புறமாக சாய்ந்து படுத்தல்வேண்டும். மிதமிஞ்சிய தூக்கத்தைவிட்டு,லலாட வெளியாகியதிரிபுடை ஸ்தானத்தில் மனதை ஆனந்தமாக நிறுத்தி நித்திரைசெய்தல் வேண்டும். உருண்டு புரண்டு உடம்பால் உறங்கும்சமயம், இரவு நாழிகை 25 (மணி 4) அந்நேரங்கண்விழித்தல்,கடவுளைத்துதித்தல்,அதி துரிதமாய் மல்லாந்தபடியே நேராக எழுந்திருத்தல், எழுந்து வெளியில் சற்று உலாவி மலஜல பாதையை உபாதையின்றிக் கழித்தல், எக்கிக்குலுக்கி மலஜலப்பையில் பழமையானது தங்கிடாமல் நௌலிஉட்டியாணு வென்ற ஆசனத்தைக் கொண்டு,குடலை நன்ருய் சுத்தி செய்து கொள்ளல் வேண்டும். இம்முறையைக் கடைப்பிடிக்க உன் வாழ்க்கையில் நிகரற்ற இன்பமெனக் கோடல் சால்பு.

செல்வா! உனதாருயிர் தங்கிய பூதவுடலை நன்கு திருத்திப் பங்கமுருது வைத்திருந்தாலல்லவா இறையருளை நாடி உழைக்க மிகவும் இடந்தரும். ஆகவே மேடுபள்ளமில்லாத சம தரையில் பின்வரும் புகைப்படங்கள் மூலம் உனதான்மநேயர்கள் புரியும் யோகாசன முறைகளைக்கண்ணுற்று வரிசைக்கிரமமாக அதிகாலைதோறும் நீ பழகி வரவேண்டும். போஜன விதியை அனுசரியாமலும், தீய புகைக்குடி பழக்கங்களை கைவிடாமலும் ஆசனமுறைகளை ஒன்றைவிட்டொன்றைத் தாறுமாருய்ப் பழகி வெகுபேர் வெற்றியடையாமல் விசனமுறுகின்றனர்!

(மாண) அண்ணலே! மக்களை மயக்கும் சர்க்கஸ் விளையாட்டிற்கும், இங்கு தாங்கள் இயம்பியுள்ள யோகாசனத்திற்கும் பேதமற்று இரண்டும் ஒன்ருய்த் தோன்றுகிறதே! ஆசனத்திலேதும் அந்தரங்க நன்மைகளுளதோ? அருளவேண்டும் ஐயனே.

(குரு) புத்திப்புதல்வா! தெய்வீக சக்தி பொருந்திய யோகாசனத்திற்கும் மக்களைமயக்கும் சர்க்கஸ்விளையாட்டிற்கும் பேதாபேதம் பெரிதுமுண்டென உன் மழலைமதியால் அறியாய் போலும்! சர்க்கஸ் விளையாட்டு பாமர மக்களை ஏமாற்றிப் பொருளீட்டும் ஜெகஜால வித்தைகளில் ஒன்று. யோகாசனம் ஒவ்

வொன்றும் உனதுடலின் உள்ளுறுப்புகளைச் சுத்திசெய்வ தோடு மனமுமடங்கி, அகமுகமாகி ஆத்மஞானத்திற்கு அஸ்தி வார பீடமாக அமையுமென்பதை நீ நன்கறிந்து கொள் வாயாக!

முக்கிய குறிப்பு.

இங்கு கூறியுள்ள யோகாசன விளக்கம், புகைப்படத்தின் மூலம் சித்தரிக்கப்பட்டு புத்தகத்தின் இறுதியில் அமைக்கப் பட்டிருக்கிறது. ஆகவே, நன்கு கவனித்து முறையே பயின்று பயனுறவும்.

— ஆசிரியர்.

## 4. கற்பசாதனம்.

கவி.

தீதகன்றருள்சேர் ஞானந்தெளிந்திடக் கேண்மின்தில்லை
நாதனையறிந்துகூடி நற்றவம்புரிவான்வேண்டி
போதகக்குருவிதாகும் புகலொணு கற்பமார்க்கச்
சாதனப்பழக்கத்தாலிச்சகவிவகாரம்போமே.

(குரு) எனது புத்திக் களஞ்சியமே! சித்தந்தெளிய மருந் தொன்றுளதென நமது மூதாதைகள் செப்பேட்டிலெழுதி வைத்துள்ள சாசனத்தை இக்கலியுலகில் குணம் நீத்த மக்க ளால் குப்பைமேட்டில் எறியப்படுகின்றதே! அந்தோ! என் செய்யலாம்!! பொன்செய்ய மருந்துதேடியுழலும் மக்கட்கிவை பொருந்தாதல்லவா? அரிய பிரம்ம பதத்திற்கழைத்துச் செல் லும் அதியற்புத ஒளடதமென யாரறிவர்! உப்புநீர் உவர்நீ ரெல்லாம் நன்னீராக மாறிவரும் உன்னீரை (அமரியை) நீயேனும் சற்றும் தயங்காது அடக்கத்தோடருந்தி அரிய தவம் புரிவாயாக!

(மாண) சுவாமி! பெரியார்களெல்லாம் மிகமறைவாகப்பாடல் களில் பொதிந்து வைத்துள்ள இரகசியத்தைப் பகிரங்கமாய்ப் பகர்ந்துள்ளீர்களே! உலகங்கேட்டு இதை ஒப்பி நடக்குமா?

(குரு) மகனே! போற்றும் பொருளைத்தூற்றி, தூற்றும் பொ ருளைப்போற்றி, சுடுகாடே சுவர்க்கவீடெனத்திரிந்தலையும் ஒரு சிலரே இவ்வுண்மையை ஒப்புக்கொள்ளாரே தவிர, உன் போன்று உண்மையை நாடிய உத்தமர்களுக்கு இவை

பொருந்துமன்றே! காசிநதியில் மூழ்கி, கால்நடையாக இரா மேஸ்வரத்திற்குச்சென்று, இந்துமகாசமுத்திரமும்,வங்காளக் குடாக் கடலும் சங்கமமாகிற (தனுஷ்கோடியில்) சேதுபந்த னத்தில் ஐயருக்கு படியரிசியும் பருப்பும் கொடுத்து, அவர்கள் உரையாடும் சமஸ்கிருத சுலோகங்களை சுவர்க்கத் திறவுகோ லெனக்கருதி, பாத நமஸ்காரஞ் செய்தும் கடலுக்குள்மூழ்கி, கரையேறிநின்று மெல்லிய கன்னத்தில் தப்புத்தப்பென அறைந்து குற்றங்கள் நிவர்த்தியாயின வெனக்கருதி, வீடு சேரும் வேடிக்கைகளைக் கண்டு நீ உன் மழலை மதியால் தீர்த்த நதியாடல் இவைதானெனக் கருதிவிடாதே!

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு
வார்த்தை சொல்லசற்குருவும் வாய்க்கும் பராபரமே''

என்ற தாயுமானசுவாமிகள் பாடலுக்கிணங்க நாமிங்கு மேற் கூறிய ஒன்றைப்பிடித்து ஒரு நிலையுற்றால் மற்றவையாவும் முற்றுமுணர உனக்கு எளிதாகும் மகனே!

அரிய சாதனம் புரியக்கருதிய ஆரம்ப அப்பியாசியாகிய உனக்கு திருவருளிடைஞ்சலும், சிற்சில இன்னல்களும் தோன்றுவதியல்பே. அவைகளனைத்தையும் பொருட்படுத் தாது, உனது பக்தி விசுவாசத்தை நற்றுணையாகக்கொண்டு அனுஷ்டானங்களில் அணுவும் வழுவாது இறைவனின் இணையடி பெற்றுய்வாயாக!

## 5. யோகப் பயிற்சி.

கவி.

ஆகம நூற்களோதி யரும்பொரு ளறியா மாந்தர்
ஏகநாதனைச்சார்ந் துண்மையெழுந்தரு ளொளியேவீச
வேகமோடிணை யிலாத வெம்புயல் தாக்கிராஜ
யோகமே பயிலுமார்க்கப் போதனை புகல்வோமம்மா!

(குரு) மாணவ சிரேஷ்டா! யோகமார்க்கங்களை ஆராயுங் கால் வாசியோகத்தைப் பல கூறுகப் பிரித்து மக்கட்கு பயன் படுமாறுகூறியுள்ளார்கள். அவை இராசயோகம், சக்தியோ கம், தாந்திரீயயோகம், அடயோகமெனப் பலவகைப்படும். இவற்றில் சிறந்தவை நடுநாடிகண்டு ஊதிப்பயிலும் இராஜ

யோகமேயாம். நமது குருபிரான் நாக்கைத் தாழப் போட்டு மூச்சை மூக்கிலிழுக்குமாறு நமக்கு உபதேசியாது நடுநாடி பற்றி சிவராஜயோகம் பயிலவே அருளியுள்ளார்கள். அவற்றை மிக விபரமாக கீழேயுரைக்கப் புகுவதால் நீ நன்கு கவனிப்பாயாக! அதிகாலையில் நான்கு மணிக்கெல்லாம் படுக்கை விட்டெழுந்து மலஜலத்தைச் சுத்தமாய்ப் போக்கி முற்கூறிய யோகாசனங்களை முறைதவருமல் அனுஷ்டித்து மனமும் பிராணனும் மற்போர் பொருதும்படியாய் அபான முதல் கபாலம்வரை, உனது உடலோடு குடல் முழுவதையும் நன்கு சுத்தி செய்து கொள்ளல் வேண்டும். பின் ஐந்து நிமிடம் வெளியிலுலவி ஆயாசம் தீர்ந்து, குளிர்ந்த ஜலத்தில் நீராடி ஈரமுலர்த்தி, பூஜையறைக்குள் சென்று, மான்தோல் அல்லது தர்ப்பாசனத்தில் அமர்ந்து, பத்மாசனமிட்டு சிரசு உடல் நிமிர்ந்து உட்கார்ந்து, இறைவனைநாடி ஏகாக்கிரமுற்று சித்தந்தளர்வுருமல் மிகமகிழ்வுடன் பின்வருமாறு யோகம் பயில முயலவேண்டும்.

நவத்துவாரங்களின் வழியாய்ப் பிராணனை இறுத்தி இரேசிக்கவும். (வெளிவிடவும்) வெளிச் சென்ற பிராணனை சற்றுநேரம் பரவெளியில் தங்க வைத்து நௌலி அலசி பின் உள்ளே வரும்படியாகப் பூரிக்கவும் (உள்ளிழுக்கவும்) சற்று நேரம் களைதெளிந்து மறுபடியும் இரேசிக்கவும். இரேசித்த சுவாசத்தை ''ஸோ'' என்ற சப்தம் தொனியுற நடுநாடி மார்க்கமாக உள்ளுக்கிழுத்து குடலைநிரப்பி, கண்டத்தினின் றும் ஜலத்தை விழுங்குவதுபோன்று கடக்கென்று விழுங்க வேண்டும். விழுங்கிய நிமிடமே நாக்கை உள்நாக்கோடேற்றி தாழ்போட்டு, மூலாதாரத்தை மேலேதூக்கி, நவத்துவாரங் களையுமடைத்து விடல்வேண்டும். அப்பொழுதுதான் அன்னை குண்டலி விண்ணுலகை நாடி வீறிட்டெழுந்து விளையாடக் காணலாம்.

(மாண) சுவாமி! மருள்நீத்த பெரியோர்களெல்லாம் எழுதிப் போந்த யோகத்தையும், தாங்கள் கூறிய நடுநாடியோகத் தையும் ஒப்பிடுங்கால் நவத்துவாரங்களை அடையாவிடில் யோக சித்தியடைய முடியாதென்றல்லவா தோன்றுகிறது! அதன் விவரம் எவ்வாறென்றருளின் நலம் ஐயனே!

(குரு) மகனே! இவ்வீன உடலில் எழுபத்தீராயிரம் நாடிகள் ஓடிப்பரவியுள்ளன. அவைகளில் உத்தமமான நாடிகள் பத்தேயாகும். அதிலும் நவத்துவாரங்களை நாடி, ஒன்பது நாடிகள் ஒன்றி நிற்கின்றன. செல்லாநின்ற உரம்பெற்ற ஒருநாடியே நடுநாடியெனப் பெயர் பெற்று, சுழிமுனை சூட்சமாக உந்திக் கமலத்தில் அந்தர்முகமாய்ச் சுருண்டுள்ளது. மகானுபவர்களால் குண்டலினி எனவும் மறைபொருளாய்க் கூறப்பட்டுள்ளது. யோகம் பயிலும்போது உனதரிய பிராணனை மிகத் தந்திரோபாயமாய் மேற்கூறிய உந்தியினுள்ளிருத்தி, சூட்ச நரம்பைத்தட்டி எழுப்ப சக்தியுண்டாயின் அன்னை மனோன்மணி, அம்பிகை, கௌரி, சாம்பவி சதா உதயஞ் செய்து உன்னையாட் கொள்வாளென்பது உறுதி. இந்த யோகத்தில் வெற்றிபெற்று சீரியசித்தனாகப் பிரகாசிக்க வேண்டுமாயின் கீழ்வரும் பத்திய பாகத்தைக் கடைப்பிடிப்பதவசியம். அவை யாவன, ஆகாரம் அரை ($\frac{1}{2}$) நித்திரைகால் ($\frac{1}{4}$) ஆசை அரைக்கால் ($\frac{1}{8}$) கோபம் வீசம் ($\frac{1}{16}$) அச்சமும் மாதரிச்சையும் பூஜ்யம் (0) அறவொழித்தல்; மூலாதாரத்தைச் சதா மேலேயெக்கிப் பழகுதல்; நாவைமடித்துக் கபாலவெளியை அடைக்கப் பழகுதல்; இவை மேற்கொண்டொழுகுவதைத் திடீரெனச் செய்ய முற்படாது, சிறிதுசிறிதாகச் சதா பயிற்சித்து யோகப்படியேறி திங்களைப்போற் பிரகாசித்து ஆன்மஞான மடைவாயாக!

ஒருசிலர் நூற்களிலெழுதியுள்ளயோகங்களை அனுபவமுள்ள ஆசானின்றியும், அரியசாதன அனுஷ்டானங்களின்றியும் எதேச்சையாய் அனுஷ்டித்து, வயிற்றில் சுவாசந் தங்கியும், குடல்நோய் அதிகரித்து மூலம் வெளித்தோன்றியும், இவ்வாறு பற்பல அல்லல்களுக்கு ஆளாகின்றனர். அவ்வாருகிய விஷ வியாதிகள் நமது நடுநாடி யோகத்தில் உண்டோவென நீ ஐயுறுதல் வேண்டாம். அஸ்திவாரம் பலமாயிருந்தால் அதிக உயரமாக மேல்மாடி எழுப்பலாமல்லவா? முற்கூறிய சத்தியந்தளராத பத்தியபாகமும், உனது சித்தத் திடமாகிய சிநேகிதனும், போஜன விதியாகிய அன்னையும், ஆசன

முறையென்ற ஆசானும், சிரசாசனமாகிய சீமானும், நௌலி உட்டியாணவென்ற சீமாட்டியும், உனது பக்கத் துணையாக இருக்கையில் நடுநாடி யோகத்தில் எவ்வித விக்கினங்களின்றியும் நீ வீடு பெற்றுய்வாயென்பது உண்மையே!!

## 6. ஞானப்பிரகாசம்

கவி.

அரியநல்லொளியதாகி ஆதியா யருவாய்நின்ற
பரிதிபன்னணையான்றன்னை பகர்வதற் கெளிதோபாரிற்
குருவினையடுத்து மேலாமுயருபதேசம் பெற்றுத்
தருவெனவோங்கி ஞானம் பெற்றிடாத் திறனுண்டாமோ.

(குரு) தபசிரேஷ்டா! மண்ணுடன் விண்ணும் கலந்தொளிர்வதுபோல, கண்ணுடன் காண்பான் கலந்தொளிர்வதை மகிதல மக்கள் கண்டுங் காணாதிருக்கின்றார்களே! பரமண்டல மாயாசக்தியோடு கூடியாடிய பாதத்தை பருவதிசையிலன்றோ பற்றிப்பிடித்துக் கொளல்வேண்டும்! ஒருயரிய சற்குருவினால், 'உபநயனம்' 'உபதேசம்' 'உபவாசம்' 'உபந்நியாசம்' என்ற படிகளொவ்வொன்றையும் நன்கு புகட்டப்பெற்றுணர்ந்தால், எந்த இடுக்கண்களையும் தாண்டி இறையருள் பெற்றுய்யலாம். இவ்வாறல்லாது, தற்கால உலகப்போக்கை உற்று நோக்குங்கால் தன்னை உணரும் மார்க்கம், பெரிதும் பிற்போக்காகவே போய்க்கொண்டிருக்கின்றது. அருள் ததும்பிய பெரியார்கள் இயம்பியுள்ள பொன்மொழிகளும் புறம்பாகக்கருதப்படுகின்றன!

ஆகவே, பிறவிநோயகற்றக் கருதிய நீயேனும் இரகசிய வஸ்த்துக்களை சற்குருவாலறிந்து, அநித்திய வழிகளையொழித்து நித்தியவஸ்துவையுணர்ந்து நிலைநிற்பாயாக!

(மாண) பிதாவே! தாங்கள் புகட்டிய வழிகளொவ்வொன்றையும் பின்பற்றினால் எளிதிலிறைவனருளைப் பெறலாமெனினும், காயத்திரி ஜெபம் முதல் சஷ்டி விரதங்கள் போன்ற மார்க்கங்களனுஷ்டித்து ஞானத் தெளிவுறலாமென சாஸ்திரத்தில் படித்திருக்கிறேனே சுவாமி, இவை உண்மையா?

(குரு) அறிய உரைப்போமாக. திருவுற்ற நெற்றியுள் பிரகாசிக்கும் ஆன்மச் சுடரை குருபிரான் நயனவாசலைத்திறந்தறிவிக்கக் கண்டானந்தமுறவேண்டிய திருக்க, பூணூலைத்தரித்து உபநயனமென்று காயத்திரீ மந்திரங்களைச் செபிக்கின்றூர்கள். கூடாதவைகளையகற்றி, குணந்தரத்தக்க பதார்த்தங்களை உட்கொள்ளவேண்டிய உபவாசத்தைச் சதாகொள்ளாது, அமாவாசை, சஷ்டிபோன்ற சில தினங்களில் மட்டும் பாவம்பட்டினி கிடந்து வாடுகின்றூர்கள். இவ்வாறு பழமையான பாடங்களைக்கற்றுங் கேட்டும் வீண்காலங்கடத்தாது நீ கடைத்தேறும் வழியைக்கண்டு பின்பற்றுவாயாக!

அதோ! உனதருகிலமைந்துள்ள ஞானகாயத்தில் நடமிடும் அம்பிகை மனோன்மணியைப் பார்த்து பரமானந்தமுற, உனதிருவிழிகளும் இமையாத நாட்டம்பெறவேண்டும். கண்ணிமையாத நாட்டமுற்றூல் கலியுகவரதனினாட்டங்காண எளிதேயாகும். கேட்டுத் தெளியவோ ஏட்டிலெழுதவோ இவை இயலா. முருகனழகு அழியாப்பொருள் குறைவுருச் செல்வம், மாசற்ற மாணிக்கம், தேடாத் திரவியம், தோன்றுத்துணை, ஒவ்வொருவர் உள்ளும்புறமும் சூழ்ந்திருக்கும் ஆதியந்தமற்றவன், அடியார்களுக்கடியன், அவனை வழிபட முயலுமெவரும் முகக்கண்ணை மூடி அகக்கண்ணால் இறைவன் மலரடி காண மன்றுடல் வேண்டும்.

இங்களித்துள்ள உபதேச மணிகளை உன்புத்தியால் பொறுக்கி, நுண்ணறிவென்னும் நூலில் கோர்த்து, விவேகமாகிய ஆபரணமாக்கி உனது வஞ்சகமற்ற மார்பிலணிந்து, உண்மையைத் தெளிந்து, உனது புகழுடம்பு குன்றுது திகழ்வாயாக!

## 7. மறைந்த மாணிக்கம்.

கவி.

இறையவ னருள்பெற்றேங்கி இணையிலாத்தவமேசெய்து
குறையறக் களைந்த மேலோர் குவலய மக்கட்காக
முறையுடனுரைத்த வுண்மை முற்றிலும் சிதையாசற்று
மறைந்தொளி மங்கலான மாணிக்க மணிகள் காண்பாம்.

(குரு) நீதிப்புதல்வா! பன்னெடு ஆண்டுகட்கு முன்னே நமதருள் ஞானப்பிதாக்கள் உலகிற்களித்த பொன்மொழிகளளவு கடந்தன. அவற்றுள் பலமறைந்தும், சிதைந்தும் சிதறுற்றும் கிடக்கின்றன. அப்படிப்பட்ட இரகசியத்தை இங்கு சிறிதெடுத்துக்காட்ட யாம் முற்படுவதால் உன் கூரிய மதியாலூன்றிக் கவனிப்பாயாக! ஆலயங்களுக்குச் சென்று வழிபடுமெவரும், ஆரம்பத்தில் கணேசனைக் கண்டு தோப்புக்கரணம் (உக்கி) போடுவதியல்பல்லவா? அதன் காரணம் யாதென உனக்கிதுவரை தெரியுமா? ஆடியலேயும் மனதை அடக்க முடியவில்லையே! என அவர்களையறியாமலேயே அங்கங்குலுங்க பன்முறை குந்தியெழுந்து நெற்றிகளில் குட்டிக் கொண்டுதான் மூலஸ்தானத்துள் பிரவேசிப்பார்கள்.

இதனுட்கருத் தென்னவெனின் மனமென்ற மாதா தங்கியிருப்பது கண்ணென்ற இடமெனக் கண்டறியும் பொருட்டு கண்ணே + ஈசன் என சொல்லாமலே சொல்லியுள்ளார்கள், அவை மட்டுமா? கண்ணை + உள்ளே + புதை-கண்காட்சியாம் என்றெல்லாம் வெளிப்படையாக வுரைத்த அரிய திருமொழிகளை, இக்கலியுலகத் திருவிளையாடலுக்கேற்ப அச்சொற்கள் கணேசனெனவும், கண்ணுள்ளபோதே கண்காட்சியாமெனவும், மழுங்கச் சொற்களாக நழுவி நிற்கின்றன. மூலஸ்தானத்துள் விக்கிரகாராதனைக்கு வேண்டுவனவெல்லாம் செய்து முடித்து, இறுதியில் தீப ஆராதனை பார்க்கும் பொழுதுதானே அனைவருக்குமானந்தம் ஏற்படுகின்றது? தீப ஒளியைக் கரங்கொண்டு தொட்டுக் கண்களில் ஒத்திக்கொள்ளும் காரணம் யாதென நீ யிதுவரையிலுமறிந்தது உண்டா? இவ்வாறழகிய ஒரு ஜோதி உன்னுள் சதா பிரகாசித்துக் கொண்டிருக்கின்றதென, அண்மையிலுண்மையை யுணர்ந்து கொள்வார்களெனக் கருதியே பெரியார்கள் ஆலயங்களை ஏற்படுத்தியுள்ளார்கள். இன்னும் உன்போன்றோர்கள் மழலை மதியாகவே யிருத்தல் தகுமா? ஜோதியுள் மூழ்கு. சுகம் பெறலாம்!

(மண) எமதையனே! தாங்கள் கூறிய இரகசியப் பொன்மொழிகளை ஆன்றோர்கள் வெளிப்பட எங்ஙனம் கூறிப்போந்தனர்? ஐயமகலப் புகலல் நலம் சுவாமி!

(குரு) அருட்பாலா! இவ்வரிய பொன்மொழிகளை அறியா மையிருள் சூழ்ந்துள்ள அனைவரிடத்தும் சாற்றினால் நீர்மே லெழுத்துக் கொப்பாய் முடியுமெனக் கருதியே, குழந்தைகள் வீதிகளில் கூடி விளையாடும்போது, பெரியோர்களும் குதூ கலத்துடன் கூடியாடி, காருண்ய வள்ளல்கள் இரகசியமனைத் தையுங் கள்ளங் கபடமற்ற பஞ்சணை போன்ற சிறுவர்கள் நெஞ்சத்தில் பதிந்துறையுமாறு உபதேசித்தனர். இவ்வரிய பிர்மவித்தை விருத்தியடையாது குடத்துள்ளேற்றிய விளக் கானதற்குக் காரணம் பெற்றோர்களே. மழலைச் சொற்களால் உண்மையை உச்சரிக்கும்போது, அவையசங்கதம், அவ்வா றுரையாதே என அதட்டி அந்த சொற்றொடர்க்கேற்ப வேறு மொழிகளை இசைபடச் சொல்லி மறைத்ததால் உண்மை மனோபாவஞ் சிதைவுற்று, அஞ்ஞானம் நிறைந்து, தெய்வா னுக்கிரகங்களுங் குன்றி, பரதவிக்க ஏதுவாகிறது.

இவையனைத்தும் உன் சித்தமாகிய வெண்ணையை பக் தியென்ற நெருப்பிலிட்டுருக்கி, அன்பாகிய தெளிவிறுத்து, ஆனந்த இதயத்துள்ளூற்றி கவனமாகிய கண்ணைத் திருப்பி, மௌனமாயிருந்துன்னையறிவாயாக! என்ற அறிகுறியேயாம்

## 8. கையும் மெய்யும்.

கவி.

ஐயனந்தரங்கவீடு அவனியோ ரறியவேண்டி
கைதனில் வகுத்தாஈசன் கருணையை விளம்பக்கேண்மின்
துய்யமுக்கோண மானதுள்ளமே யிவைதாமென்று
மெய்யுளே யமைத்தவுண்மை விளங்கவிங்குரைப்போ
[மம்மா.

(குரு) அறிஞனே! ஆலய வழிபாடுகளிலும், பெரியோரைக் கண்டிறைஞ்சும்போதும் இரு கரங்களையுங் கூப்பி வணங்குத லனைவருக்கும் சர்வசாதாரணப் பழக்கமல்லவா? அதன் மர் மம் இன்னதென நீ உணர்ந்திருக்கின்றாயா? ஆனாலும் நாமிங்கு பகிரங்கமாய்ப் பகரப் போகின்றோம். நீ ஆழ்ந்த கருத்தோடாராய்ந்துகொளல் சாலச் சிறப்பாகும். மகனே! நமதிருதயம் வாழைப்பூ போன்றும், கொட்டை நீக்கிய முந் திரிப் பழம் போன்றும், சற்றிடதுபுறம் சாய்வாக அமைந்து

அதனுள் பரவெளியாகிய முக்கோண வடிவுடன் தலைகீழாய் ஒவ்வொருடல் உள்ளும், அமையப் பெற்றிருப்பதாகச் சகல ஞான நூற்களிலும் படித்திருக்கின்றோமல்லவா? அவ்வரிய இரகசியமாயுள்ள சிதாகாய முக்கோணவடிவை, உனதழகிய இருகரங்களிலும் அமைந்துள்ள விநோதத்தைக் காண பரமானந்தமே யென்பது சற்றும்மிகைபடாது.

கையில்+ஆகாயம் என்று முதியோர் புகன்றமொழி நாளடைவில் கைலாயமெனப் பலரும் புகலலாயிற்று. நம தன்பிற்குரிய இறைவனுறைவிடமாகிய உள்ளம் முக்கோண வடிவாயமைந்துள்ளதென, மக்கள் வெளிப்படையா யுணரும் பொருட்டே அற்புதமுடனமைத்து அழகுடன் திகழப்படுகின்றது.

## இருதய சிதாகாய அம்சம்



(மாண) எந்தையே! சிதாகாயத்தின் இரகசியத்தை இறைவன் ஒவ்வொருவருள்ளத்திலும், கரத்திலும் அமைத்திருக்கிருரென்று விளம்பிக்கொண்டே போனுல் அடியேன் அறிவது எங்ஙனம்? தெளிவுடன் சாற்றல் வேண்டுமையனே!

(குரு) இதோ சித்திரத்தைப்பார்! கீழே சொல்வதையுங் கவனி. உனதிருகரங்களேயும் இப்பிபோன்று கூப்பி விரல்களே

நன்ருய் ஒன்றுபடுத்தி பிரித்துவிடாது விரித்துப்பார். கட்டை விரலோடு கட்டைவிரலும், ஆள்காட்டி விரலோடு ஆள்காட்டி விரலும் சேர்ந்து முக்கோணச் சாயலைத் தந்து நிற்கின்ற தல்லவா? இந்த சூட்சும அட்சரத்தை மகான்கள் வெளிப் படையாகச் சொல்லாமல் 'ஜின்முத்ராங்க' மெனக் கையை விரித்து கட்டைவிரலோடு ஆள்காட்டி விரலின் அங்குலக் கோட்டில் பொருத்தி, தியானத்திலமர்ந்திருப்பார்கள். நாம் வெளிப்படையாக எடுத்தியம்பியிருக்கின்ருேம்! ஆகவே, தியானபீடத்தைக்கண்டு அதிலமர்ந்து ஆனந்தமுறுவாயாக!

## 9. ஆழ்ந்த தியானம்.

கவி.

பாழ்மனமடங்கிடாது பகிர்முக மலைவதாலே
ஊழ்வினைவசமுங்கூடி உறுதியுமிழக்கா வண்ணம்
கேள்வியிற் செவிசாய்த்துந்தன் கெடுமதி யகலவேண்டின்
ஆழ்ந்ததோர் தியானபீடத் தமர்ந்திடல் மேன்மையாமே.

(குரு) எமது சற்குணசீலா! சாந்தியுலகென்னும் சைதன்ய சாகரத்தில் சதா நீந்தி விளையாடும் மார்க்கமொன்றுளது, சொல்வோம் கேட்பாயாக! வாதும்சூதும் தீதென்றறியாச் சிறுவயதில் வீதியிற் சென்று உன்சிநேகிதச் சிறுவர்களோடு ஆடியஆட்டமனைத்தும், உனது அருவ ஞானத்திற்குரியதென நீ இன்னும் அறியாதிருக்கின்ருயே! குழந்தைப் பருவத்தில் கண்பொத்தி விளையாடிய இரகசியம், கண்ணும், மூச்சாம், காதுங்கூடவேயாம் என்றவை உனது தியானத்தினறிகுறி யைக் காட்டுகின்றது. இவ்வுச்சரிப்பை ஏதோ ஒரு பழமொழி யென உலக மக்கள் கருதுவதுபோல நீயுமொருவாறு கருத லாம். ஆனுலவை அப்படியல்ல, அதனுண்மையை புலனுக்கு வதுதான் உன்போன்ருேர்களின் சிறந்த அறிவு.

(மாண) சுவாமி! தியானத்திலும் ஆழ்ந்த தியானமென ஒன்று உளதோ! அவ்வுன்னதமான உயர்ந்த தியானத்திலமர்ந்து ஆனந்தமுறும் மார்க்கத்தையும் இயம்பவேண்டுமையனே!

(குரு) செல்வா! முற்கூறிய இதயசிதாகாயத்தில் ஆழ்ந் திருக்குமாறு உனது மனதை ஏவினும் வெளியே திரிந்து வீணுவதற்கே சதா ஓடியுழலும். உதாரணமாக அரசன் தனது குடிகளைக் கண்காணித்து ஆட்சிபுரிவதுபோல, உனதைம்புல சேஷ்டைகளை அறிவெனும் அரசனுல் கண்காணித்து, மன தை அந்தர்முகநாட்டமாய் நிறுத்தி மேலேசொன்ன முக் கோண சிதாகாயத்தை அகக்கண்ணுல் ஸ்தாபித்து, கண்களை மூடி, மூச்சைச் சமப்படுத்தி, நடுநாடி மார்க்கத்தில் சீராயூதி, செவியுணர்வென்னும் நுணங்கிய கேள்வியை இதயபீடத்தில் செலுத்தி, தந்திரோபாயமாய் அந்தருலகை நோட்டமிடு தலே தியானமாகும்!

ஆழிய கடலில் மூழ்கி அழகிய முத்தெடுப்பதற்கும், நீரில் மேலே நீந்தி அற்பமீன் பிடிப்பதற்கும் எவ்வளவோ ஏற்றத் தாழ்வென்பதை நீயறியாததா? இதயக் குகையிலாழ்ந்து மூழ்கு. வெளியிலெதுவுங் கிடையா!

## 10. நிறைந்த நிஷ்டை.

கவி.

வேதநூல் கற்ருலென்ன விரித்துரை சொன்னுலென்ன
மாதவ முனிவனென்று மக்களால் புகழ்ந்தாலென்ன
சோதனை யுலகுதாண்டி சுகமதிலடையப் போமோ
நீதனித் தேகமாகி நிறைந்திடல் நிஷ்டையாமே.

(குரு) எமதிதயமலரே! முற்கூறிய அத்தியாயங்களில் சொல் லியபடி அனைத்தையுங் கடைப்பிடிப்பதோடு, நிமலன் திருவடி பெற உயரிய நிஷ்டை கூடும் மார்க்கமும் நீ அவசியம் அறிய வேண்டுமல்லவா? கிறுகிறு வானச்சுழலெனச் சுற்றிவீழும் பிள்ளைகள் விளையாட்டை நீ அறிந்திருப்பாயல்லவா? 'யார் மேலேபட்டாலும் என் மேலே குற்றமில்லை' என்று அப்பிள்ளை கள் பாடுகின்ற பாடலும், முன்னுள்ள பிரம்மஞானிகள் நமக் கெடுத்தியம்பிய ஒரு முக்கிய உரையாகும். அதன் பொருள் யாதென விளம்புவோமாக!

ஆறின்மேலே (ஆருதாரத்தின் மேலே) பாட்டாலும் (உழைப்பினாலும்) ஏழின்மேலே (சகஸ்திரஸ்தலந்தாண்டி மேலே) குற்றமில்லை (ஜகபந்தமில்லை) என்ற அரிய பொருளமைந்துள்ள திருவாக்காகும். மூலாதாரம்முதல் ஆருதாரங்களையும் கடந்து, சகஸ்திரஸ்தலத்தையுந்தாண்டி ஞானகாயத்துள் கலந்தபொழுது குற்றமாகிய குண தொந்தங்களற்று, நிஷ்டைகூடிச் சதா சுகஜீவியாயிருக்கலாமென்பதே இதனுண்மையாகும். நரமாமிச பிண்டமாகிய நாற்ற உடலை நாமெனக் கருதி உரிமை பாராட்டிய ஜீவன் ஜென்மசாபல்யவழி ஈதென்றுணராது, பற்பல சந்தேகத்துக்குட்பட்டு, மரணத்தையே இறுதியில் கைம்மாருகக் கொள்ளப்பட்டது. தன்னையுணரும் ஞானமே தத்துவமென எத்தனையோ சுருதிகளிலிருந்து ஆதாரங் கூறினும் மக்கள் தன்வழிநிற்றல் அசாத்தியமாகின்றது! நீயேனும் மேற்கூறிய மார்க்கத்திலணுவேனுந் தவறிடாது ஒழுகுவாயானால், உலகநன்மைக்கொரு உதாரணமாகவே நீ பிரகாசிப்பாய்.

(மாண) எமது ஞானோதயக்கிருபா! பலநூல்களிலும் வெட்டவெளியில் நிட்டைபழகு என்று சுருக்கமாகத்தானே கூறப்பட்டிருக்கின்றது? தாங்கள் நிறைந்த நிட்டையென்று சொல்லுகிறீர்களே, அவை மிகச் சிறப்புளதோ? கிருபை செய்தருளல் வேண்டும் சுவாமி!

(குரு) கண்ணே! உனது மாசற்ற கேள்விக்கு மகிழ்வுறுகின்றோம். எனினும் கெட்டித்தனமாக உனதுமனது சதா நிட்டையைவிட்டுப் பிரியாதிருக்க வேண்டும். தட்டுத்தடுமாறி அலட்சியமாகக் கருதி விட்டுவிடுவாயானால் பெரிய குற்றத்திற்காளாகுவாய். ''ஆத்தாள் அறைவீட்டிலே, அப்பன் அம்பலத்திலே'' என்பதற்கிணங்க தன்னை அற்பமெனக் கருதி மனமயக்கங் கொள்ளாது, அறிவுச்சுடராகிய நீ, பின்வருவனவற்றை வினயத்தோடுன்றிக் கவனிப்பதே நலம்.

அறிவுமயமாகிய நீ, அந்தரமாகிய ஏகவெளியை நாடி, மனமாகிய தோணியில் ஐம்புலச் சேட்டையென்னும் சரக்கை ஏற்றி, ஞாபகமென்ற கணக்களிடம் ஒப்படைத்து, புத்தியாகிய காவலனைப் பின் துணைக்கனுப்பி, உபசாந்தமென்ற

பாயை விரித்து, அகங்காரமென்ற சுக்கானைத் திருப்பி அநித்தியலோகக் கடலைக் கடந்து, சத்தியலோக மாகாணத்தின் துறைமுகம் பிடித்து, சிரத்தையென்ற கூலிகளையேவி சரக்கை இறக்கி, ஏகைகபஞ்சகஜில்லா, பேரிளமையூர் தாலுகாவில், ஆனந்தபுரி என்ற ஊரிலிருக்கும், நித்யமங்கள நாதனிடம் ஒப்படைத்து, உனது தொல்லைகளையெல்லாம் ஒழித்து தூங்காமற்தூங்கிச் சுகம் பெற்று, எங்கும் நிறைந்து, நீயே அவனுயிருத்தல் நிஷ்டையாகும்.

இவ்வரிய உயரிய உண்மையை ஆன்றோர்கள் தராதரந் தெரிந்து, தன்னையுணர முற்படும் பகுத்தறிவாளர்க்கன்றி, ஏனையோர்களுக்கெடுத்தியம்புதல் தகாதென மறைத்து வைத்தனர். யாம் காருண்ய மேலீட்டால்அணுவேனும் மறைவில்லாமல்முடிவான ஓர் நிலையைப் பகிரங்கமாகப் பகர்ந்துள்ளோம். பற்றிப் பிடித்துப் பரமபதஞ்சேர்வது உன் ஊழ்வினை வசத்தாலாகும்!

## 11. கபட சந்நியாசம்.

கவி

நாடகவுலக வாழ்வில் நடிகர்போல் நவிலொண்ணுத
வேடமே புனைந்துவீணர் வேதநூற் கவியில்நான்கு
பாடமே மனனமாக்கி பாமரர்தமை யேமாற்றத்
தாடகைய்யு ருவாய்வந்த மூடராம் கயவரந்தோ!

(குரு) எமது சத்திய சம்பன்னனே! இம்மாநிலத்தில் உண்மையை மறைத்து உள்ளத்தில் கள்ளத்தைப் பூண்டலையும் போலிச் சந்நியாசிகளைப் பற்றி கொஞ்சம் உனக்கெடுத்தியம்புவோம். அறிந்து கொள்வாயாக! அன்னவர்களின் கபட நாடக நிலையை பாமரமக்களறிவதென்றல் சாத்தியப்படாது. அவர்கள் குடிப்பது கள்ளு, சாராயம்; புகைப்பது கஞ்சா, அபின்; பூணுவது பொய்யுங் கொலையும்; உள்ளொன்று வைத்து புறமொன்றுபேசித்திரியும் இக்காதகர்களை உண்மை உடையோரென்று உன்போன்ருேர் கருதுவது சாலப்பிசகாகும். ஏனெனில், அவர்கள் நடிக்கும் அரிச்சந்திர நாடகத்தைக் காண விநோதமே. அவர்களுடன் கொஞ்சநாளிருந்து

பழகினுல் திண்டாட்டமே. சிற்றின்பச் சேற்றிற்கிடந்துழலும் ஜீவான்மாவை, பேரின்ப வாழ்விற்கேகும் மார்க்கம் இஃதோ, அஃதோவென கையை நீட்டிச் சைகை காட்டிக் கொண்டிருக்கும் காரியக் குருமார்களிக்கலியுலகில் கணக்கிலடங்காது மலிந்துலவுகின்றனர்!

பாசபம்பரத்தில் ஆசைக் கயிற்றைச் சுழற்றி மோசச் சுழலில் வீசி விளையாடிவரும் வேடிக்கை கொஞ்சமல்ல, துவேஷம் அணுவும் அறியாத பாமர மக்கள் இவர்கள் புரியும் செப்படி வித்தைகளைக் கண்டு, மதிமயங்கி பாதாளப் படுகுழியில் வீழ்ச்சியுறுகின்றனர். எவரையும் நன்கறிந்துணர்ந்து நம்புமாறு எச்சரிக்கின்ருேம்!

(மாண) எம் ஞானத்தந்தையே! அன்னவர்களும் தங்களைப் போலவே தாடி சடைகளை வளர்த்து, வெண்ணீறணிந்து, துளபமணிகளும், துவராடையுமணியப்பெற்று, துறவிகளைப் போலத் தோற்றமளிக்கின்ருர்களே, போலிகளென்றும் பெரியோர்களென்றும் அறிவது கடினமன்ருே சுவாமி!

(குரு) மகனே! இம்மாசற்ற மொழி, நமது மனமகிழ்ச்சிக் குரியது. உத்தியோகங்களுக்கேற்ற உடையணிதல் போல தவவேடதாரிகளுக்கு இச்சின்னம் அவசியமே. துவராடையணிவது இல்லற சிற்றின்பத்தை நீத்ததின் குறி; துளபமணியணிவது ஜீவகாருண்யக்குறி; வெண்ணீறணிவது சைவசமயக்குறி; சடைமுடி வளர்ப்பது புவிவாழ்விற்கேற்ற பொய்ப் பொருளின் மேல் இச்சை கொள்ளேன் என்றதன் குறி; இவ்வடையாளங்களின் உண்மையை உணராத பகுத்தறிவற்ற பாமரப் பரதேசிகளும், சிவசின்னம் பூண்டு தெரு வீதிகள் தோறும் அலேவதால் உன்போன்ற உத்தமர்களுங் கூட உண்மையை அறியவியலாது போவது சகஜமே.

நீ உண்மையுடையவர்களாய்த் திகழும் மெய்ஞானிகளை அறிவது எவ்வாறெனின், அன்புடன் அழைத்து பால்பழம் அல்லது கூழ் களியேனும் கொடுத்தால் அமுதமென உட்கொண்டு ஆனந்தமோடு ஆசிகூறிச் செல்வர். அவர்கள்தான் ஜீவன்முக்தர்கள். அவ்வாறல்லாது காசுபணங்களை முடிகட்டு

வோர் பந்தபாசத்திலீடுபட்ட பாமரமக்களேயல்லாது பரம சாதுக்களல்லவென்பதை நீ அறிவாயாக! பசித்தோர்க்கு அன்னமும், தவித்தோர்க்குத் தண்ணீரும், மானத்தைக் காப் பாற்றும்பொருட்டு வஸ்திரமும் கொடுப்பதே பிரம்மச்சர்யத் தைத் தழுவிய துறவிகளுக்கு இல்லறமக்கள் செய்யவேண்டிய கடமையாகும். இஃதன்றிக் காசு பணங்களைக் கொடுத்தால் அவர்கள் புரியும் பஞ்சமாபாதகங்களில் இல்லற மக்களுக்கும் பங்குண்டென்பதை நீ அறிவாயாக!

நாம் உன்போன்ற உத்தமர்கள் வேண்டுகோட்கிணங்கி சென்னைமுதல் கந்தகோட்டம், திருவொற்றியூர், சிதம்பரம், திருவரங்கம், மதுரை, இராமேஸ்வரம்போன்ற புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று ஆங்காங்கும் அருள் ஞானிகளடங் கிய சமாதிபீடங்களைக் கண்டானந்தமுறத்தரிசித்து, இடை யிடையே சில சந்நியாசங்களைச் சந்தித்து துறவுமார்க்கமின் னதென உணர்த்தியும் திரும்புங்கால், திருப்பரங்குன்ற ஸ்த லத்தில் சென்ற சர்வசித்து வருடம், கார்த்திகை மாதம் 3ம் தேதி (19-11-47) யில் சூரசங்காரத் திருநாளன்று, முருகபி ரான் அருள்பெற அங்கு தோற்றமளித்த கூட்டங்களில் நாலி லொரு பாகம் சந்நியாசமே. அப்படிப்பட்ட அமோகமான கூட்டத்தை நோட்டமுறுங்கால் உண்மையோடுகூடிய ஒரு அடியாரைக் காண்பதரிதாகிவிட்டது. அன்றங்குள்ள நிலைமை யையும், உலக மக்களிற்பலர் ''சந்நியாச வேடம் புனைந்து நல்லோரைப்போன்றுறவாடி, எம்மை மயக்கிப் பொருளைக் கவர்ந்துவிட்டானே!'' என்று அவதியுறுவதையும் மேலும் அடாத காரியங்களைச் செய்வதைக் கண்டுபிடித்துத் தூற்றப் படுவதையும் அறிந்து, உண்மைத்துறவை உதாசீனம் செய் யும் வேடதாரிகளும் மலிந்துள்ளனரே என்று அகங்குழைந்து, சீர்தூக்கியே இதை வெளியிடலானேமேயல்லாது மற்றெரு மனத்துவேஷமாய்ச் சொன்னேமல்ல.

ஆண்டி, பரதேசியென்று ஊரூராய்த்திரிந்து பலபழிகளுக் காளாவதோடு, அரிய தவத்தின் மகத்துவமுங் குன்றி வீழ்ச்சி யுற்றதினுல் சந்நியாச வேடத்தைக் கண்ணிலேகண்ட உன் போன்ற உத்தமர்களாகிய ஆண், பெண்ணனைவரும்,

உண்மை யுணரும் ஆற்றலின்றி, சிவவேடம் புனைந்த எவ ரையும் காமாந்தகாரங்கொண்ட போலிகளென ஏளனஞ் செய்ய முற்படுகின்றனர். ஒருசிலர் செய்யுங் கூற்றுவச் செயல் களை நாட்டு மக்கள் பார்த்து நகைக்கவும் ஆகிவிட்டது. ஆத லால் இவ்வித ஆபாசமான வேடம் மறைந்து உண்மையாகிய உயர்தவம் நிலை நின்றோங்க அன்னை சாம்பவி அருள்புரி வாளாக!

## 12. கடவுளென்பது உன் கடமையும் அறிவும்.

(குரு) எமது ஞானக் குழந்தாய்! பின்வரும் விஷயங்களை நன் காராய்ந்துணர்வது, சாலச்சிறந்ததாகும். தற்கால நிலைமை யைக் கவனிக்குங்கால், மெய்யை மறுத்து பொய்யைப் புகழ்ந் துயர்பறை சாற்றித் திரிந்தலையும் பேர்வழிகள் நமது புண் ணிய பூமியில் மிகமிக மலிந்துலவக்காண்கின்றோமன்றோ? அன்னவர்களை நீ இன்னாரென அறிந்துகொள்ள விருப்ப முறுவாயெனக் கருதியே இங்கெடுத்து விளம்புகின்றோம்.

கண்ணே! அறிவே கடவுளெனக் கண்டகமகிழ்வுற, நாட் டிற்குப்பல கடமைகளாற்ற வேண்டியிருக்க, சிலர் கடவுளே கிடையாதென வாதிட்டு மடிபிடித்துலகில் அடிபிடிகலகங்கள் விளைவித்து மேலும் அறியாதமக்களைச் சரியான மார்க்கத்திற் செல்லவிடாது தடுக்கின்றார்களே! அக்கொடிய நாஸ்திக வழியை நீ பின்பற்றிவிடாதே. இது உனக்குச் சிறந்த அறி வென நீ கொளல் சீர்மை.

(மாண) சுவாமி! கடவுளென்ற புகழ்மாலையை கழுத்திலாபர ணம்போன்றணிந்துகொண்டு. பாமரமக்கள் ஆலயங்களுக் குச் சென்று, பல அடாத காரியங்களைத் தகாத முறையில் சதா செய்து வருவதால், அவர்களை ஆங்கு செல்லாதபடி தடுத்து நல்வழியொழுகுமாறு செய்யவே, கடவுளென ஒன்று கிடையாதெனவும், இயற்கையால் யாவும் நிகழ்வதெனவும் எடுத்துரைத்துத் திருத்துவதாகவே சிலர் சொல்லுகின்றார் களே, இவை உண்மைதானே?

(குரு) மெய்யன்ப! இத்துன்ப உலகில் தோன்றி மறையும் யாவும் இயற்கையே, ஆயினும், எறும்புமுதல் யானைஈறாக எவ்வுயிரும் பிறந்ததுமுதல் இறந்தொழியும் வரை மான

அபிமானமற்று, உலகிலுலவுவதைப் போலல்லாது, மனித ஜடம்பெற்ற மக்களை வெட்கமாகிய துக்கம் விடாது சூழ்ந்து கொள்வதை நீ அறிந்ததில்லையா? மழலைவடிவில் மாதா மடி யிற்தவழ்ந்து விளையாடிய காலங்கடந்து அறிவோடுனது உருவமும் உயரவுயர, உனதியற்கையுடலில் செயற்கையுடை வந்து இடையில் சேர்ந்து கொண்டது ஏனெனச் சிறிது சிந்தித்துப் பார்!

பிறந்தவை யனைத்துமியற்கையே, நடந்தவையாவுமியற் கையேயென வேதாந்தம் பேசுவதுண்மையெனின், நாமும் மேற்கூறிய விலங்கினங்களைப்போன்றிருக்கலாமே! செயற்கை யாடையை ஏனிடையில் அணிதல் வேண்டும்? அவை மக்கட் பிறவிக்குரியதல்லவென்பது உண்மையல்லவா? அறிவுச் சுட ரோங்கிய நீ உனதறிவை மறுத்து, அறிவிலியென்ற பெயர் பூணுது அவனியிலுயரிய இலட்சியங்களை நாடி, உரிமையைக் கருதாது கடமையைப் புரிதலே கடவுள் தோற்றமாகும்!

இவ்வாறில்லாது கண்ணுடி வீட்டிற்குட் சென்ற ஞமலி போன்று, அறியாத மக்களின் பண்படாத மனதைப் பல விதத்திலும் மருண்டு தியங்கச் செய்வதழகாகுமா? இவை கடமையாகுமா? நிகழ்காலத்தில் பாட்டாளிமக்களுக்கு பசியே கடவுளெனவும், முதலாளிகளுக்கு பணமே பகவானெனவும், இப்பாருலகில் காட்சியளிப்பது கண்கூடல்லவா? பசியாலலறி யழுங் குழந்தையை அழாதே! அழாதே!! என்ருல் எவ்வா றழாதிருக்கும்? வாரியெடுத்து, மடிமீதிருத்தி, அன்னை அமுத மருந்தச் செய்தாலல்லவா மழலை மகிழ்ச்சியுறும்! சீர்கேட டைந்த மக்களைத் திருத்தியமைக்க முற்படமுயன்ற கடமை யாளர்கள் கல்வியறிவற்ற மக்களிடம் கடவுளே கிடையா தெனத் திடீரெனத் திகைக்குமாறு, தடித்த மதியாலடித்துத் திருத்த முயல்கின்ருர்களே! அப்படியாளுலவர்கள் கதி என்ன வாகுமென்பதை நீயே உணர்ந்து முடிவுகட்டிக்கொள்ளல் வேண்டும். ஆனுல் நீ அறியாமையைப் போக்க நாட்டிற்கு உரிமையோடுழைப்பது உறுதியாயின் சீரிய முறையில் நேரிய வழிகளை, உன் கூரிய மதியால், உயரிய உதாரணங்களை, மிக அன்புடனனைவரும் ஆமோதிக்கத்தக்கதாய்ப் புகட்டி

அறியாமைச் சிறையிலகப்பட்டுள்ள மக்களை வெகு உபாய தந்திரமாக மீட்பாயாக!

கண்ணே! நாட்டுப்பணிபுரிதல் மிக எளிதென்றோ இது வரை எண்ணியிருந்தாய்? அப்படிக் கருதுதல் தவறு. உன் ஆழ்ந்த மதியும், சாந்த குணமும், சதாகாலமும் உனதிடம் காட்சியளிக்கவேண்டும். சில அறிவு மழுங்கிய ஆசாமிகள் கடமையென்ற கங்கணத்தைக் கரத்தில் அணிந்துள்ளதாக வாய்ச்சாலகத்தை சொற்பூடணமாகப்புகழ்ந்து, வாயளவில் வர்ணிக்கிறார்களேயன்றி, அன்னவர்களின் நிலையைச் செயல ளவிற் பார்ப்பின் மேற்படியார்களின் வாழ்க்கையே சீரழிந்த சிங்கார மாளிகைபோல் தோற்றமளிக்கின்றது. மாற்றாந்தாய் மக்கள் போன்று நாட்டுப் புல்லுருவியாகிய மாறுபாடிகளைப் பின்பற்றி, உன்போன்றோர் நடித்தல் தகுமா? பிசகு, பெரி தும் பிசகு. உலகிலுனது சொல்லும் செயலும் ஒருங்கமைந்து, உணர்ச்சிததும்ப உயிர்வாழ்ந்து, உணர்ச்சியோடு உயரிய தொண்டாற்றி, உணர்ச்சியோடு உயிர்விடலே உன்போன்ற ஆண் பெண்களின் மேன்மைமிக்க கடமையாகும். இவை உணர்ந்து பரதகண்டத்தில் பணிபுரிவான்வேண்டி நீ சத்திய விரதம் பூண்டுகொள்வாயாக!

## மாணவர்கட்கு அறிவிப்பு.

நமது ஆருயிர்ச் செல்வர்களே! பல ஞான நூல்களிலும் மறைபொருளாக எழுதிய பரம ரகசியங்களை நாம் இந்நூலில் உங்கட்கு மிகத்தெளிவுடனும் சுருக்கமாகவும் எளிதிலுணரு மாறு எடுத்து இயம்பியிருக்கிறோமல்லவா? ஆயினும், ஆதியோ டந்தமாகப் படித்து உண்மையைத் தெற்றெனத் தெளிந்து உயர்கதியடைய முயற்சிப்பது உங்கள் கடமையல்லவா? ஆதலால் பின்வரும் விஷயங்களை நன்கு அறிவீர்களாக!

1. தன்னம்பிக்கையென்ற அத்தியாயத்திற் கூறியபடி அதிகாலையில் சிரசாசனத்தில்நின்று தியாச்சியத்தை உச்ச ரித்து உங்கள் சித்தத்தைத் திடப்படுத்திக்கொள்ள வேண்டும்.

2. போஜன விதியில் சொல்லியபடி கடுகு நல்லெண் ணெய் முதல் மது மாமிச பட்சணங்களை நீக்கி சைவாம்ச உணவை நீங்கள் உறுதியாய்க் கடைப்பிடிக்க வேண்டும்.

3. யோகாசனத்தை ஓவியத்திற் காட்டிய வரிசைக் கிரம மாய்ப் பழகிவருவதோடு கற்ப சாதனத்தையும் மிக மகிழ்வுடன் காலையும் மாலையும் அடக்கத்தோடனுஷ்டிக்க வேண்டும்.

4. நடுநாடி மார்க்கத்திற் சொல்லியபடி ஆரம்ப அப்பி யாசிகள் பிராணனை மூன்று மாத்திரை முதல் வாரத்திற் கொரு மாத்திரையாக உயர்த்தி அப்பியாசிக்க நாவை நன் ருய் மேல்தூக்கி மடித்துப் பழகிக் கொள்ள வேண்டும்.

5. கையிலே காட்டிய மெய்யாகிய முக்கோண வடிவான சிதாகாயத்தை தியான பீடமாக சதா கொள்வதோடு உங்களு யர் குருவினுல் உபநயனகாலத்தில் கண்ணுற்ற அருள்ஜோதி யை அனவரதமும் கருத்துற்று பிரகாசிக்கச் செய்யவேண்டும்.

6. ''கடவுளென்பது உன் கடமையும் அறிவும்'', என்ற அத்தியாயத்தில் அறிவித்துள்ளபடி நீங்கள் கருணையுள்ளம் உள்ளவர்களாகத் திகழ்ந்து, உங்களாப்த நேயர்களோ டொன்றுபட்டு, உங்கள் வாக்கும் மனமுஞ் செயலுஞ் சீர் பெறக் கடமையாற்றுவதற்குரிய காலங்கருதி, அறியாமை இருளிற் சிக்கிய பாமர மக்களை நல்வழி நடாத்தி, புகழுடம் பெய்தி உத்தம வீரர்களாக உலகில் மிக விழிப்புடன் திகழல் வேண்டும்!

7. மேலும் நிலையற்ற பொய்யாகிய இப்பூதஜடத்தை மேற்கூறிய மெய்யான மார்க்கத்தை அனுஷ்டிக்குமாறுங்க ளறிவைத் தூண்டுவதோடு, அங்கலட்சணங்களின்அமைப்பை யுங் கண்ணுற்று, ''ஹே மாயாவிநோத ஜடமே! இவ்வுலகில் என்றும் நிலையாயிருப்போமெனவா எம்மை ஏமாற்றுகின்ருய்? உயிர் மயமாகிய எம்மைத் தவிர மற்றனைத்துமிறந்து போ வது நிறைந்த உண்மை, இதை மறந்து விடாதே!'' என அறிவுச் சுடராகிய நீங்கள் சதா சிந்தித்து வருவீர்களாயின் பந்தமொழிந்து, பரமபதம் பெற்று ஆனந்தமயமாகிவிடுவீர் களென்பது உறுதி!

8. அடக்கத்தோடிருந்து ஆத்மஞானத்தையடைய விரும்பிய நீங்கள் நாமிங்கருளிய நல்வழியில் நிற்கத் தவறி, ஆங்காங்குமோடி அலைந்து அவதியுற்றால், கிஞ்சித்தேனுஞ் சாந்தி நிலையை அணுகும் சக்தியற்றுப்போமென அறிவீர்களாக!

ஆகவே, இந்நூலைக் கற்றும், நம்மிடம் நேரில் வந்துண்மைகளை உணர்ந்தும், நிலைதவறாது நிற்கும் நமதருட் குழந்தைகளாகிய உங்கட்கு மிகவும் விசுவாசத்தோடுயரிய ஞானப் படிகளைப்பற்றித் துன்பக்கடலைக் கடந்து கரைசேர நேர்வழியனைத்து மறிவிப்போமெனவும், அதிலெதுவும் பேதமில்லாது நமதன்னை சாம்பவியறிய உத்தம மாணவர்களாகிய உங்கட்கு சத்தியவாக்களிக்கின்றோம். இஃது உண்மை! உண்மை!!

இங்ஙனம்,
அருள்வடிவிற்கடியன்,
சித்ரமுத்து.

---

## உத்தமர் புரியும் பூசை.

முத்திவீட்டுக்குரிய புத்திரர்களனைவோரும்
சத்தியவள் கர பூசையை
நித்தியமுந்தவறாமல் பக்தியுடன் செய்துவரின்
உத்தமியாள் சிவகாமியும்
சுத்தியுடனே ஞானப்பிரகாச வரமருளச்
சொகுசுடனே ஆடிவருவாள்
சித்திரமுத்தன் சொன்னசத்திய நல்வழிகூடும்
புத்தியுள்ள ஜெயசீலரே.

---

வெற்றி!

# பிரார்த்தனைப் பாடல்கள்

## அருளொளித் தத்துவம்

அருளொளிச் சுடர்நன் ரேங்கி
அவனியிற் பரவும் போது
திருமகள் திகழ்ந்தஞ் ஞானம்
தீர்ந்துமெய் ஞானம் நல்கும்
தருவென மக்கள் தோன்றி
தளர்விலாக் கடமை யாற்றி
குருபரன் கிருபை பெற்றுக்
குறைவின்றி வாழ்வர் தாமே!

## அருட்ஜோதி வணக்கம்

ஜோதி ஜோதி ஜோதி ஜோதி
ஜோதியே ஜெக ஜோதியே
ஆதி ஆதி ஆதி ஆதி
ஆதியே அருள் ஆதியே!

நீதி நிழலில் அன்று மின்றும்
நின்றிலங்கும் ஜோதியே
நிமல வடிவில் உலக முழுதும்
நிறைந்த எங்கள் ஜோதியே!

விண்ணுலகமும் மண்ணுயிர்களும்
வேத விதியும் ஜோதியே
கண்ணுளாடும் மணியும் ஒளியும்
கருணை வடிவும் ஜோதியே!

அன்பு மயமும் அறிவிலுயர்வும்
ஆன்ம ஞானமும் ஜோதியே
அரிய தபசு புரிய நமதுள்
எரியும் ஜோதி ஜோதியே!

திரு பெருகிய அருளொளி மயத்
தீப ஜோதி ஜோதியே
கிருபை பெருகி குருவருள் பெற
வருக வருக ஜோதியே!

கணபதியொடு முருகனும்
கலைவாணியும் பரஞ்ஜோதியே
கதிர் மதியொடு உலகளாவிய
காரணப் பொருள் ஜோதியே!

## திருவருள் வணக்கம்.

தருமநெறி தழைத் தோங்க தவங்களோங்க
திருமகளின் கிருபை நன்கு நாட்டிலோங்க
பருவமழை பொழிந்து விளைவதிகமோங்க
செறுபகைகள் அகன்றுலகில் அமைதியோங்க
கருணையொடு கண்மூடிக் கரங்கள் கூப்பி
அருளொளியை அனுதினமும் வணங்குவோமே.

## ஜெகந்நாத முனிவர் துதி.

இப்புவியில் சன்மார்க்க முயர்ந்தஞ்ஞான
இருளகன்று ஆத்மசுட ரோங்கிமக்கள்
தப்பிதமிலாது அருள்வாழ்க்கை மேவத்
தவநெறியைத் தரவல்ல ஞானயோகி
ஒப்புயர்விலாத குரு சித்ரமுத்தை
ஒளிபெறச் செய்தளித்த சிவக்ஞானமேதை
செப்பரிய கருணைவடி வானஜோதி
ஜெகந்நாத முனிவர்கழல் சென்னிசேர்ப்பாம்.

(வீர அருட்பிரகாஸ் சுவாமிகள்)

## நமது இலட்சியம்.

ஆழிசூழ் உலக மெல்லாம் அமைதிமேவ
ஆகாத பகை யொழிந்து அன்புண்டாக
ஆராத கவலை பிணி அகன்று போக
ஆக்கமொடு மக்கள் குலம் அழகாய் வாழ
ஆண்டவனை வேண்டுதல் செய்து அருளைநாடி
ஆனந்தத் தவநிலையை அணுகுவோமே!

## தியான மந்திரம்.

சிவயநம ஓம் நமசிவய, நமசிவய ஓம் சிவயநம
சிவயநம ஓம் நமசிவய, நமசிவய ஓம் சிவயநம.
அமைதி (மௌனம்)
சிவாயநம — உபாயமிது — அபாயமில்லை.

## வெற்றிப் பாடல்.

வெற்றி வெற்றி வெற்றி வெற்றி
வெற்றி வெற்றி வெற்றியே!
நற்றமிழ் அறிவுற்றவர் பணி
முற்றும் வெற்றி வெற்றியே.

சத்தியத்தின் எல்லையின்
சமயபேதத் தொல்லைகள்
அத்தனையும் அற்றிட
ஆற்றுங் கடமை வெற்றியே (வெற்றி)

உபாய தந்திர உழல் நிலை
மாயை மந்திர சக்தியும்
அபாய மென்கிற உண்மையை
உணர்த்து வோர்க்கு வெற்றியே (வெற்றி)

ஆற்றலோடு போற்றும் புனித
அன்பு மருளும் கூடியே
சாற்றற்கரிய அறிஞர் கருமம்
நாற் றிசையிலும் வெற்றியே! (வெற்றி)

## மங்களம்

மூவர் வாழி மங்களம் புகழ்
முனிவர் வாழி மங்களம்
சீவர் வாழி மங்களம் சிவ
பக்தர் வாழி மங்களம்

நாடு முழுதும் மங்களம் அருள்
ஞான சபைகள் மங்களம்
அறநெறிகளும் மங்களம் புவி
அறிஞர் கடமை மங்களம் (மூவர்)

திரு வருளொளி மங்களம் மக்கள்
தீர்க்க வாழ்க்கையும் மங்களம்
ஆத்ம நாதனும் மங்களம் அருள்
இராம லிங்கமும் மங்களம் (மூவர்)

ஜெய ஜெய ஜெய மங்களம்
ஜெக நாதருக்கு மங்களம்
சித்தர் புலவர் மங்களம்
ஜீவன் முத்தர்கட்கும் மங்களம்
மங்களம் சுப மங்களம் உல
கெங்கும் புகழ மங்களம் (மூவர்)



# மதிப்புரை.

நேரிசை வெண்பா.

குத்திரகூ டங்கி கொளுத்தாமல் ஆசனத்தே
சித்திரமுத் துச்சாமி செய்யோகம்—முத்தி
தருமெனவே மக்களுக்குத் தண்கவியாற் றந்தான்
குருமதி மாலையெனக் கூர்ந்து.

உலகில் மக்கள் பதிநிலையை அடைய, மார்க்கம் நான்கினுள் சரியை, கிரியை, கடந்து யோகத்தின் உறுப்பாகிய எட்டினுள் இயமம், நியமம், ஆசனம், என்ற மூன்ருவதாகிய ஆசனத்தினுடைய சிறப்புகளை படரூபமாகவும் மனமடங்கப் பிராணுயாமம் முதலியதும் சந்தப்பாக்களில் மிக இனிமையாக சித்ரமுத்து சுவாமி அவர்கள் குருமதிமாலையென ஓர் அரிய நூலை இந்தக் காலத்திற்கு தந்தது மிகவும் போற்றற்பாலது. இந்நூல் உலகிற்குப் பயன்தரும் என நம்புகிறேன்.

இங்ஙனம்,

சென்னை, அறநெறிஞான பானு,
தமிழ்ப் புலவர்,
28-4-1949. சிவ. முருகேசஞ் செட்டியார்.

# யோகநெறியும் யோகாசனங்களும்.

1. யோக நெறியின் உட்பிரிவுகள் எட்டு. அவற்றுள் மூன்ரும் பிரிவு ஆசனங்கள். இவ்வாசனங்கள் நோய்களைப் போக்கி, உடலை உரம்பெறச் செய்து, வலிவும் வனப்பும் பெற்றுநீடிய ஆயுளோடு வாழ உதவுவதோடு யோக சித்தியைப் பெறவும் துணைபுரிகின்றன.

2. ஆசன சித்தி, பிராணயாம சித்திபெற உதவி, படிப் படியே, பிரத்தியாகார, தாரணை, தியான, சமாதிநிலை ஆகிய உயர் நிலைகளைப் பெறவும் வழிகாட்டுகின்றது.

3. இவ்வுலகின் இன்பங்களைச் செவ்விய முறையில் துய்ப் பதற்கும் இறைவன் அருளைப் பெற்றுப் பேரின்பநிலை அடை தற்கும் நோயற்ற யாக்கை மிக இன்றியமையாது வேண்டப் படும். இந்நோக்கத்தைப்பெற ஆண், பெண் இருபாலாரும் யோகாசனங்களைப் பயில முன்வருவீர்களாக.

4. ஆசனங்களையடுத்து முத்திரைகளென்ற ஒருவகைப் பயிற்சியுளது. அது இருபது வகைப்படும். அவையும் ஒரு வகை ஆசனங்களே. ஆனல், அவை பிராணயாமத்திற்குரிய படிக்கட்டுகளாம். இப் படிக்கட்டுகளின் வழியே சென்று தான் பிராணயாமசித்தி என்ற அரியணையில் நாம் அமர முயல வேண்டும்.

5. இம்முத்திரைகளுள் மூலபந்தம், சாலந்தரபந்தம், உட்டியாண பந்தம், ஆகிய மூன்றையும் கையாள்வது எவ் வாறு என்பதை ஆசிரியர்பால் கேட்டுணர வேண்டும்.

6. இவ்வாறு, ஆசிரியர் துணையோடு யார் இம்மூன்று முத்திரைகளையும் கையாளவல்ல திறனைப் பெற்றிருக்கிருர் களோ, அவர்கள் கண்டிப்பாகப் பிராணயாம சித்திபெறத் தக்கவரென்பது திண்ணம்.

7. இப்புத்தகத்தில் பிறிதோரிடத்திற் கூறப்பட்டுள்ள கற்பசாதனை முறையை ஆசிரியர்பால் கேட்டுணர்வதே தக்கது. அதன் விதிகளைத் தெளிவாக எழுத்தில் விவரிக்க முடியாது. பயன்பெற விழைவோர் குருவின் அருளைநாடி அதனை அடைவீர்களாக.

8. அப்பியாசிகள் ஊனுணவு, சுருட்டு, சிகரெட், புகை யிலை முதலியன உபயோகித்தல், கள், பீர்,பிராந்தி அருந்தல் கூடா. இவற்றை விட்டொழித்தவர்கள்தான் ஆசனத்தின் நற்பயன்களைப் பெறமுடியும்.

# 1. பவன முத்தாசனம்.



பவன முத்தாசனஞ் செய்யப் பருவயிறு கரையும்
கவனனுமாகக் கை கால்களுரம் பெறுங்காண்.

செய்முறை:- விரிப்பில் மல்லாந்து படுத்து இரு கால்களையும் உந்தியில் அழுத்திக் கைகளை மாற்றி வலப்புற உள்ளங்காலை இடக்கையாலும் இடப்புற உள்ளங்காலை வலக் கையாலும் பிடித்திழுத்தல்.

பயன்:- பருத்த வயிறு கரைந்து, தொடை கைகால்கள் வலிவடையும், காய்ச்சல் அகலும். மூச்சைக் கும்பித்துச் செய்யக் குணந்தரும்.

## 2. கருணாபீடாசனம்.



கருணாபீடாசனத்தைக் கால்தூக்கிப் பின்வளைத்துக்
குருவருளைச் சிந்தித்து நில்.

செய்முறை:- மல்லாந்து படுத்துக் கைகளைத் தலையின் கீழே வைத்து, கால்கள் வளையாமல் சித்திரத்தில் காட்டிய வாறு தலைக்குப் பின்னால் தரையைத் தொட்டு நிற்றல்.

பயன்:- வயிற்று உப்பிசம், கெட்ட ஏப்பம், அசீரண வாயு ஆகியன நீங்கி முள்ளந்தண்டு வலிமைபெறும். மூச்சை ரேசித்துப்பயிலவும்.

## 5. சர்வாங்காசனம்.



துன்புற்ற நோயகலத்துணையாமிச் சர்வாங்கம்
இன்புற்றிடத் தொடர்ந்து செய்.

செய்முறை:- விரிப்பில் மல்லாந்து படுத்துக் கால்களை நேராக மெதுவாகமேலே உயர்த்திச்செங்குத்தாக நிறுத்தி, கைவிரல்களால் இடுப்பிற்குமேலுள்ள முதுகுப்பக்கத்தைத் தாங்கி நிற்றல்.

பயன்:- மார்புவலி, கனவில் விந்து கழிதல், நித்திரை யின்மை, காசம், இளைப்புநோய், குட்டம் யாவும் நீங்கும். மூச்சைச் சாதாரணமாகச் சுவாசிக்கவும்.

## 4. கீசகாசனம்.



மாசற்றவுந்தன்மனதை நிலைநிறுத்திக்
கீசகத்தை நேசனெனக்கொள்.

செய்முறை:- மல்லாந்து படுத்துக் கால்களை மாற்றி, சித்திரத்திற் காட்டியவாறு தலைக்குக்கீழ் வைத்து, கைகளைக் கிரமமாக இட, வலப்பாகங்களில் இரண்டு தொடைகளின் மேல் கொண்டுபோய் முதுகெலும்பிற்குக் கீழ்வலக்கை மணிக் கட்டை இடக்கை விரல்களாற் கெட்டியாய்ப் பிடித்துக் கொண் டிருக்க வேண்டும்.

பயன்:- காசம் வயிற்று உப்பிசம், பித்தம் இவை நீங்கி முள்ளந்தண்டு வலிவுறும். மூச்சை ரேசகமாகச்செலுத்தவும்.

## 5. பச்சிமௌதாசனம்.



அச்சமற்றுள்ளம் அமைதியுற வேண்டின்
பச்சிமௌதாசனமே நன்று.

செய்முறை:- மல்லாந்து படுத்துக் கைகளைக் காதுகளை ஒட்டி நீட்டிய பின்னர், கால்கள் எழாமல், கைகளிரண்டையும் காதுகளோடு இணைத்துக்கொண்டே மெதுவாகக் கால்களின் பெருவிரல்களை இருகை விரல்களாலும் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு, குனிந்து முகத்தால் முழங்காலைத் தொட வேண்டும்.

பயன்:- வயிற்று நோய்கள் யாவும் நீங்கி, கைகால், தொடைகள் வலிமைபெறும். சோகையகலும். மூச்சைக்கும் பித்துப் பயிலப்பயனுண்டு.

## 6. மாரீசாசனம்.



நாரியர்கள் மோகம் நசித்துத்தவமோங்க
மாரீசனாசனமேமேல்.

செய்முறை:- கீழே அமர்ந்து இரு கால்களையும் நீட்டிச் சித்திரத்திற்காட்டியவாறு ஒரு காலை மடக்கி, இரு கைகளையும் மடக்கிய காலோடு இடுப்பைச் சுற்றிக் கோர்த்துப் பிடித்துக் கொண்டு,வயிற்றை எக்கி மெதுவாகக் குனிந்து முழங்காலைத் தொடவும். இவ்வாறே கால்களை மாற்றி மாற்றிப் பயிலுக.

பயன்:- பருத்தவயிறு, மலக்கட்டு இவை நீங்கி, நாடி சுத்தி ஏற்படுகிறது. மூச்சு கும்பகத்தில் இருத்திப்பயிலப் பயன்தரும்.

# 7. பற்குணாசனம்.



நற்குணமேலோங்கி நரம்பை முறுக்கேற்றும்
பற்குணத்தை நாளும் பயில்.

(கரம் மாற்றிப் பயில்க)

செய்முறை:- இரு கால்களையும் நீட்டி அமர்ந்த பின்னர், இடக்கை விரல்களால் வலக்காற் பெருவிரலைப்பற்றிக் கொண்டு, இடக்காலை வலக்கையாற் பிடித்து, நெஞ்சை ஒட்டி வளைத்து வில்லைப்போலாக்கிப் பார்வையை நேராக்கவும்.

பயன்:- தோள்களும் கைகளும் வலிமைபெறும். மார்பு நோயகலும். மூச்சுக் கும்பகமாக்கிப் பயில்க.

## 8. பத்மாசனம்.



பத்மாசனத்திருந்து நிமிர்ந்து நடுநாடி
உத்தமமாயூதல் நலம்.

செய்முறை:- விரிப்பில் அமர்ந்து காலே மடித்து வலது தொடையின்மேல் இடக்காலும் இடது தொடையின்மேல் வலக்காலும் பொருந்தும்படி அமர்ந்து உள்ளங்கால்கள் மேல் நோக்குமாறு செய்து, குதிகள் உந்தியைத் தொட்டுக்கொண் டிருக்க வேண்டும்.

பயன்:- சுவாசப்பை விரிவடைந்து மார்பு அகன்று இதய சம்பந்தமான நோய்களகலும். கூன் விழாமல் முதுகெலும்பை நோக்கி, மூச்சைச் சமப்படுத்தி, சிவராசயோகத் திற்கு உறுதுணையான நடுநாடியை எழுப்ப உதவும். சுவாசம் கும்பித்திருத்தல் குணம்.

## 9. வலிவமனாசனம்.



கலியுலக வாழ்வின் கடமையது புரிய
வலிவமனம் பற்றியிழு.

(கரம் மாற்றிப் பயில்க)

செய்முறை:- பத்மாசனத்திலமர்ந்து கைகள் முதுகுப் பக்கமாக ஒன்றையொன்று பற்றியிழுக்குமாறு செய்து, பார்வையை நேராக்கவும்.

பயன்:- இடுப்பு, தோள், மணிக்கட்டு, தொடைகள் உரம் பெறுகின்றன. மூச்சை சாதாரணமாகச் சுவாசிக்கவும்.

## 10. கோமுகாசனம்.



காமுறுதல் கோபங்கவலை பிணியகற்றக்
கோமுகத்துக்குண்டு குணம்.

செய்முறை:- பத்மாசனத்திலமர்ந்து கைகள் தலைக்கு மேலே ஒன்றையொன்று பற்றியிழுக்குமாறு செய்து, வயிற்றை எக்கிப் பார்வையை நேராக்கவும்.

பயன்:- விலாவெலும்புகளும் தோள்களும் வலிமை பெற்று, நுரையீரலைப்பற்றிய நோய்களகலும். சுவாசம் சாதாரணமாகச் செல்லுதல் நலம்.

## 11. பத்தபத்மாசனம்.



பத்த பத்மத்திலிருந்து பரனை நினைந்துருகி
சத்தியமொன் றென்றே யிரு.

செய்முறை:- பத்மாசனத்திலமர்ந்து, முதுகின் பக்கமாகக் கைகளை மாற்றிக் கைவிரல்களால் காற்பெருவிரலைப் பிடித்துக்கொண்டு பார்வையை மூக்குநுனியிற் செலுத்துதல்.

பயன்:- அடிவயிற்றின் சகல நோய்களும் நீங்கி, மார்பு விரிந்து வலிவுறும், குன்மநோய் நீங்கும். சுவாசத்தைப் பூரித்துக்கும்பித்து ரேசித்துப் பயிலப் பயனுண்டாம்.

## 12. யோகமுத்ராசனம்.



நா, கண், செவி, மூக்குடலும் அமைதியுற
யோகமுத்திரைக் குண்டு உணர்வு.

செய்முறை:- பத்தபத்மாசனத்திலமர்ந்து, இடுப்பின் கீழ்ப்பாகம் எழாமல் மெதுவாக முகத்தைத் தாழ்த்தி நெற்றி யால் தரையைத் தொடுக.

பயன்:- விந்துநட்டம், மூத்திரக்கடுப்பு, மலக்கட்டு, தலை வலி நீங்கும். மூச்சுக் கும்பித்துச் செய்தல் வேண்டும்.

## 13. பத்மலோலாசனம்.



பத்ம லோலாவுனது பாவமகற்றி யுயர்
முத்தியுறச் செய்யும் முனைந்து.

செய்முறை:- பத்மாசனத்திலமர்ந்து கைகளைத் தரையில் ஊன்றி, மூச்சையிழுத்து கைகள் மட்டும் தரையில் ஊன்றி நிற்க, மற்ற பாகங்கள் எழுந்து நிற்குமாறு செய்தல்.

பயன்:- மூலம், பௌந்திரம் பேன்ற நோய்கள் நீங்கி, தோள், கழுத்து, விலாவெலும்புகள் பலமடையும். மூச்சைக் கும்பகத்தில் நிறுத்தவும்.

## 14. நௌலியாசனம்.




குடலலசிநாளும் நௌலி பயின்றுவர
உடலுயிரோ டொன்று மிதுகாண்.

செய்முறை:- நின்றுகொண்டாவது, அல்லது விரிப்பில் பத்மாசனத்தில் அமர்ந்தாவது வயிற்றை எக்கி, பின்னர் கைகளை முழங்காற் சிப்பிகளிலூன்றி, வயிற்றிலுள்ள காற்றை வெளிவிட்டு வயிற்றைப் புடைக்குமாறு செய்தல்.

பயன்:- கிருமிகள் நாசமடைந்து மலசுத்தியாகி, வயிற்றின் சகல அழுக்குகளும் நீங்கிக் குண்டலினி எழுச்சிக்கு உதவும். மூச்சை ரேசித்துப் (வெளியே விட்டு) பயிலவும்.

## 15. உட்டியாணாசனம்.



உட்டியாண பந்தமுள் ளுடலைச் சீர்திருத்திக்
கெட்டியுறச் செய்யும் விரைந்து.

செய்முறை:- நின்றுகொண்டாவது விரிப்பில் அமர்ந்தாவது, முழங்காற் சிப்பிகளில் கைகளை அழுத்திக் கொண்டு இயன்றவரை வயிற்றை முதுகை ஒட்டி உள்ளிழுக்கவும்.

பயன்:- பருத்தவயிறு, மலக்கட்டு, தேவையற்ற கொழுப்பு இவை நீங்கப்பெற்று மூலாதாரத்தில் சுருண்டு கிடக்கும் குண்டலியைத் தட்டி எழுப்ப உதவும். சுவாசம் ரேசகமாக வெளிச் செலுத்தவும்.

## 16. மச்சேந்திராசனம்.



நச்சரவம் பூண்டோனரு ளாலுனையறிய
மச்சேந்திரமே வளைதல்மாண்பு.

செய்முறை:- பத்மாசனத்திலமர்ந்து படுத்து, கைவிரல்களால் காற்பெருவிரல்களைப் பிடித்துக்கொண்டு, தலையைத் தோளை ஒட்டிப் பின்புறமாகத் தாழ்த்தி ஊன்றுதல். அத்துடன் பத்மாசனத்துடன் சர்வாங்கமாக உயரத்தூக்கி மேல் உதறவும்.

பயன்:- கழுத்துப்பிடிப்பு, நரம்புப்பிடிப்புகளகன்று, கழுத்துத் தசைகள், கழுத்துக் காய்கள், பிடரி நரம்புகள் ஆகியன வலிவு பெறும்.

## 17. பாதாசனம்.



வாதநோயோடி வலுவுண் டிரு கரமும்
பாதாசனம் பயின்று பார்.

செய்முறை:- கால்களைச் சேர்த்து நேராகநின்று ஒரு கையை இடுப்பில் வைத்துக்கொண்டு, இடதுகாலை நேராக நீட்டி இடக்காற் பெருவிரலை வலது கைவிரல்களால் பற்றிக் கொள்க. இடக்காலை நீட்டும்போது வலக்கால் வளையாது நிற்றல் வேண்டும். இவ்வாறே, கால்களை மாற்றி மாற்றிப் பயில்க.

பயன்:- வாதம், திமிர்ப்பிடிப்பு நீங்கி, கை,கால், இடுப்பு வலிவுறும். வெட்டை வாய்வுகள் நீங்கும்.

## 18. ஹஸ்தாசனம்




ஆக்கமுடன் ஹஸ்தாசனம் பயில யெந்நாளும்
ஊக்கமுனக் குண்டாத லுண்மை.

(கால்மாற்றிப் பயிலவும்)

செய்முறை:- பக்க வாட்டமாக நின்று கைகளை முதுகிற்குப் பின் கட்டிக்கொண்டு கால்கள் வளையாமல், நெற்றியால் முழங்காற்சிப்பியைத் தொடவும். கால்மாற்றிப் பயிலுக.

பயன்:- பாரிச வாய்வு, கை கால் இடுப்புவலி நீங்கி, மார்பு, கழுத்துத் தசைகள் உரம் பெறுகின்றன. மூச்சை பூரகமாக்கிப் பயில்க.

## 19. மயூராசனம்



மயில்போலுடலை நிறுத்திமயூரமது
பயிலப்பவமகன்று போம்.

செய்முறை:- முழந்தாளில் அமர்ந்து உள்ளங் கைகளை ஊன்றி முழங்கைகளின்மீது மெதுவாக வயிற்றைச் சாய்த்துக் கால்களை வளையாமல் நேராகப் பின்புறமாக நீட்டி மயிலைப் போல் நிற்கவும்.

பயன்:- அசீரணம், மலச்சிக்கல், வயிற்றுவலி, சுரம், நீங்கும். சுவாசத்தை ரேசித்துப் பயிற்சிக்க நலமுண்டாம்.

# 20. சிரசாசனம்.



சிரசாசனமுனது சீமான் இறைவ னுயர்
வரமருள நல்லவழி.

செய்முறை:- முழந்தாளில் அமர்ந்து, கைகளைக் குவித்துத் தலைக்கு அணையாக வைத்துக்கொண்டு ஒவ்வொரு காலாக உயர்த்தி, சித்திரத்திற் காட்டிய நிலைக்கு வரவும்.

பயன்:- தலைவலி, நீர்க்கோவை, கண்ணோய்கள் நீங்கப் பெற்று, தேகமெங்கும் இரத்த ஓட்டம் நன்கு பரவி, மூளை தெளிவுபெற்று அறிவு வளர்ச்சியோடு ஆயுளும் நீடிக்கும். மூச்சைரேசக பூரகமாக சுவாசிக்கவும். கும்பித்தல் பயன் தராது.

# 21. சர்ப்பாசனம்.



பிடரிநரம்புறுதியாகிப் பேரின்பமுறத்
திடனுள சர்ப்பாசனஞ் செய்.

செய்முறை:- குப்புறப் படுத்துக் கைகளைப் பக்கத்தில் வைக்கவும். பின் முழங்காலின் கீழ்ப்பாகங்கள் எழாமல் தலை, கழுத்து, மார்பு இவற்றை மெதுவாயுயர்த்தி, கைகளில் உடலின் பளுவைத் தாங்குமாறு செய்து நேராய் நிற்கவும்.

பயன்:- கூன் அகன்று கழுத்து, பிடரி நரம்புகள் வலிவு பெறும், குதிக்கால் நோய்கள் அகலும்.

# THE GREATNESS OF THE HOLY ASH.

Flat 8, 24, Manion Avenue,
Rose Bay Sydney,
New South Wales 2029,
Australia,
22-7-1967.

*Dear Swamy Chithramuttu Adigal,*

First of all I must apologize for keeping you so long in replying to your letter. You will understand, I know when I tell you that I did not know what to think about the Holy Ash, Being brought up in the Christian faith it was strange to me. But knowing that there are many things which I do not understand, and being always open to learn, I put the little packet away carefully with your letter and decided to wait and see what the future would bring.

One day I was sitting meditating with a friend of mine, who is clairvoyant, and she told me that she had received a message from spirit telling me to hold the little packet of Holy Ash in my hands when concentrating on sending out the Healing thoughts to sick people.

This I did one day to a sick friend and when I met him the following week, he told me that he was in great pain that particular day, and that it went suddenly and he knew that it was my concentrating for healing for him. You will no doubt have the answer to this. As for myself. I have so much to learn, and many things I do not understand.

I do thank you very much for honouring me by writing and for your gift of Holy Ash. Also your prayers for me.........

The great Divine Spirit bless you and all your good work.........

I often think of you and see you in my mind's eye.

Yours very sincerely,

(*Sgd.*) *Mrs. Vera Mc. Crow.*

(This is a copy of a letter received by Swamijee from a devotee resident in Australia)

# வினை தீர்க்கும் சஞ்சீவியான விபூதி பிரசாத மகத்துவம்.

(தவத்திரு. சித்ரமுத்து அடிகளுக்கு அவருடைய பக்தையான ஆஸ்திரேலிய மாது வரைந்த கடிதத்தின் தமிழாக்கம்)

24, 8ம் மாடி, மனியன் அவன்யூ,
ரோஸ் குடா, சிட்னி,
நியூ சவுத் வேல்ஸ் 2029, ஆஸ்திரேலியா.

அன்பிற்குரிய சுவாமி சித்ரமுத்து அடிகள் அவர்களே!

நீண்ட காலமாக தங்கள் கடிதத்திற்குப் பதில் வரையாமைக்கு முதற்கண் மன்னிப்புக் கோருகிறேன். திருநீற்றைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது. கிறிஸ்தவ நம்பிக்கையில் வளர்க்கப்பட்ட எனக்கு இது ஒரு புதுவிஷயம். உலகில் நான் அறியவேண்டியவை அனேகம். அவற்றை அறியவேண்டும் என்ற ஆவலும் எனக்குண்டு. அதனுல் தாங்கள் எனக்கு அனுப்பிய திருநீற்றுச் சரையை (மடிப்பை) தங்கள் கடிதத்துடன் பக்கு வமாக எடுத்து வைத்து அதன் பிரயோசனத்தைப் பொறுத்திருந்து பார்க்கலாம் என்றிருந்தேன்.

ஒருநாள் நான் எனது தோழி ஒருவருடன் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தேன். அப்போது அவர் தான் ஒரு அசரீரி கேட்டதாகவும், நோயுற்ற ஒருவர் குணமாக வேண்டும் எனப் பிரார்த்திக்கும் போது, என்னை அந்தத் திருநீற்று மடிப்பை கைகளில் வைத்திருக்கும்படி சொல்லச் சொன்னதாகவும் கூறினுர்.

இதனை நான் ஒருநாள் எனது நோயுற்ற நண்பர் ஒருவரின் சுகத்தை நாடிப் பிரார்த்திக்கும்போது செய்தேன். அடுத்த வாரம் நான் அந்த நண்பரைச் சந்தித்தபோது, தான் அந்த குறிப்பிட்டதினத்தில் அதிக நோயினுல் வருந்தியதாகவும், திடீரெனத் தனக்குக் குணம் ஏற்பட்டதாகவும் அது என்னுடைய பிரார்த்தனையால் தான் என்பதை தான் உணர்ந்து கொண்டதாகவும் அவர் கூறினுர்.

இதற்கான காரணத்தை நிச்சயமாக தாங்கள் அறிவீர்கள். என்னைப் பொறுத்தவரையில் நான் தெரிந்துகொள்ளவேண்டியவை அதிகம் இருக்கின்றன.

என்னை ஒரு பொருட்டாக மதித்து எனக்கு கடிதம் எழுதியதோடு திருநீற்றை அனுப்பியமைக்காக, பிரார்த்தித்ததற்காக நான் உங்களுக்கு எனது நன்றியைக் கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்.

எல்லாம்வல்ல பரம்பொருள் தங்களையும் தங்கள் சேவைகளையும் நலமே ஓம்பிட வேண்டுகிறேன். நான் நித்தம் உங்களை நினைத்து என் அகக் கண்களில் காண்கிறேன்.

என்றும் உங்கள் உண்மையுள்ள,

22—7—1967. திருமதி. வேரா மக் கிரூ.

VICTORY.

# THE GLORY OF MALAYSIA.

Where Mother Nature has enriched herself with beauty
Where people who serve are the first citizens
Where duty is the watchword for all,
Where people love only the worthy and the noble
There is Malaysia.

Where there is Co-operation and no separation
Where Subash, the son of Bharat, commanded,
an army and pealed out 'Jai Hind'
Where people condemn parties without principles
Where the parties unite to rule the people with love
There is Malaysia.

Where there is plenty and
Where no sign of poverty
Where the land is full of the brave who volunteers for wealth
Where people spread His unlimited grace to all
Where people found new meanings to the ancient arts
There is Malaysia.

Where fertile lands and industry are abundant
Where lead, rubber and coconuts are always full
Where the harbours are busy and the ships are many
Where both imports and exports are always plenty
There is Malaysia.

Where skilled, talented and wise ministers govern,
Where people adore the feet of Lord Muruga
Where many Saiva saints and seers meditated
Where glory is spread by Lord's grace
Where people gather to follow their Guru and get his blessings
Where there are ever so many advantages
There is our nation and that is Malaysia.

So, try to ponder over this honourable piece
and set it into music
won't you dear?

## மலைநாட்டின் சிறப்பு.

( பச்சைமலை பவழமலை என்ற இசை )

1. இயற்கையன்னை அழகுதிகழ இனிமைபொங்கும் நாடு
முயற்சிகொண்டு உழைப்பவர்க்கு முதன்மைதங்கும் நாடு

2. கடமையைத்தம் உடைமையாகக் காண்பதிந்த நாடு
மடமையற்ற மக்களை மதிப்பதிந்த நாடு

3. ஒற்றுமையாய் வாழ்வதற்கு உகந்ததிந்த நாடு
வேற்றுமைகள் யாதும்தலை காட்டிடாத நாடு

4. பரதநாட்டு வீரர்சுபாஸ் படைதிரட்டிய நாடு
கரங்கள்நீட்டி ஜேஹிந்தென்று திறமைகாட்டிய நாடு

5. லட்சியமற்ற கட்சியெதையும் அலட்சியம்செயும் நாடு
பட்சமுடனே கூட்டணி அரசாட்சிபுரியும் நாடு

6. புசிபுசியெனக் கசியவிருந்து போடத்துணிந்த நாடு
பசியெனும்பிணி பறந்துபோகிற பக்குவமுள்ள நாடு

7. திரவியங்களைத் தேடிடவரும் தீரர்நிறைந்த நாடு
பரமனருளை அறநெறிகளால் பரப்புகின்ற நாடு

8. பழமையகலப் புதுமைபுகழ வலிமைதந்த நாடு
கழனிவிளையும் நிலமுந்தொழிலும் உள்ளதிந்த நாடு

9. ரப்பர்ஈயம் கொப்பரைகளும் எப்பவுந்தரும் நாடு
கப்பலதிகம் துறைமுகங்களில் காட்சியளிக்கும் நாடு

10. ஏற்றுமதியும் இறக்குமதியும் மிகுந்ததிந்த நாடு
ஆற்றலறிவுத் திறமைவாய்ந்த அமைச்சரமைந்த நாடு

11. தெய்வமாகிய முருகனருளைத் தெளிந்துவணங்கும் நாடு
சைவசமய ஞானிகள் அருந்தபசுசெய்த நாடு

12. திருவருள்நிறை அருளொளிபுக ழோங்கிடும்நந் நாடு
கிருபைநமக்கு கிடைக்கும்படிக்கு குருநெறிதனைக் கூடு

13. இன்னும் பற்பல நன்மைகளோடு இலங்குமிந்த நாடு
கண்ணியமிகும் இக்கவிதையைக் கருத்திலிருத்திப் பாடு.

—சித்ரமுத்து அடிகள்.

## சுவாமிகளால் எழுதப்பட்ட சில அருளுபதேச பொன்மொழிகள் நிரம்பிய கடிதங்கள்.

வெற்றி !

ந. கருப்பையா,
பாரிட்பண்டார்,
மலேசியா.

ஞானசேகர! நீ நீடூழி வாழ்க வாழ்க! மகனே உனதூனுடலைச் சுற்றியுற்றுப்பார். பரவெளியாகிய நீயே தென்படுவாய்.

உத்தம! உலகம் வேறு நீ வேறெனவா கருதியிருக்கின்ருய்? அவை தவறு, ஊனக் கண்ணிற்கு ஒவ்வொன்றும் வேற்றுமையாகவே தோற்றமளிக்கும். அதுயாவும் மாயை.

மகனே! நீ அதைக்கண்டு மருண்டுவிடாதே. சாந்தியுலகெய்த முயலு, வெற்றி உன்னுடையதே.

புதல்வ! இப்பொய்யுலக வாழ்வும், புவிப் பொருளுயர்வும், தடபுடலான வேடமும், தவிடுபொடியாகிவிடுமென்பதை நீயறியாததா? இது போதுமென மகிழ்ந்து இறுமாந்திருப்பவர்கள் போலல்லாது காட்சிப் பொருளில் ஆட்சி பெற்று அதுமயமாகி நிற்பாயாக.

குழந்தாய்! நினதுடல் இடைவிடாக் கடமையிலீடுபட்டுழைப்பி னும், அகவிழிதனித்து சன்னியாசத்தைத் தழுவி நிற்கட்டும். காட்டிற் கோடிக் கண்களைமூடிக் குகைக்குள் புகுந்து குந்தியிருப்பதும், தண்டு கமண்டலமேந்தித் திருவோடெடுத்தலைவதும் துறவல்ல. அஞ்சாத நெஞ்சத் துறவுற்று ஞானதீரனுகி, நெறிபிறழாத வழிகளை வகுத்து உலகிற்குதவுவதுதான் சந்நியாசமெனப்படும். இவைகண்டருந்தவம் புரிவாயாக!

கண்ணே! உன்னையுணர்ந்த உனக்கிவ்வுலகில் யாதுகுறை? சதா சகசநிலையாகிய மேலேநில் கீழிறங்காதே. நலந்தீதிரண்டையுமுனது காலடிநிழலினுள்ளடக்கமெனக் கண்டின்புற்றிரு. ஆடலுலகென்னும் குளத்தினடியில் அழலுண்டென்பதிலையமுண்டோ? உண்டென்றுணர்ந்து ஒரு நிலைநிற்கக் கடவாயாக!

அருளொளி மடம்
அழகன்குளம்
26-4-50

மெய்யுபதேச ஊழியன்,
சித்ரமுத்து.

வெற்றி!

அருளொளி ஞான சபை,
மதுரை.

எமதிதய மலர்களே! நீங்கள் இறையருள் பெற்றினிது வாழ நமதாசி உரித்தாகுக!

ஐம்புலனொடுங்கி அறிவு நிலையில் மனதொன்றிய முடிவே நிர்விகல்ப சமாதியெனப்படும். அதற்குரிய ஞானப்படிகளை குருபிரானு லருளப்பெற்றுச் சாதனைசெய்து பயனெய்தவே, ஜனசந்தடியற்ற ஓரிடம் முக்கியமெனச் சிறந்த மெய்ஞ்ஞானிகள் கருத்து.

அரியதவத்தாலுயரிய கடமைகளை முடித்து, அருளுலகடைந்த யோகிகளுடலைக் கல்லறையுள் வடக்குமுகம் அல்லது மேற்கு முகமாக பத்மாசன பீடத்தமர்த்தி பாசறையுள் ப்திவு செய்தமைத்தல் நியதி.

அன்றுதொட்டு அப்பாசறையுள் கற்பூர தீபதரிசனமல்லாது எவ் வகை முகாந்திரங்களைக் கொண்டும், பால் பழம் புட்பம் போன்ற இதர வஸ்துக்களை ஆங்குபயோகிக்கலாகாதென யாமுணர்ந்துங்கட்கறிவித்த அருவவழிபாடாகும்.

சித்ரமுத்து.

வெற்றி!

அருளொளி ஞான ஆஸ்ரமம்,
திருச்சிராப்பள்ளி.

நமதரிய குழந்தைகளே! நீங்கள் நீடு வாழ்க! வாழ்க!! அடியேன் திருக்கரந்தொட்டுத் திறந்த பொன்னுலக வீட்டின் கதவு மறுபடியும் தவறுதலாகத் தாளிட்டுப் பூட்டிக் கொள்ளாதவாறு, பரிபூரண நம்பிக்கை யோடு பாதுகாத்துங்களை உணர்வீர்களாக!

தருணகாலத்தில் விதைத்த வித்துக்கள் பயிராகிப் பலன் தருகிற போது அனுபவிக்கலாமென அகமகிழ்ந் தெதிர் பார்த்திருந்த விவசாயி, பருவத்தில் மழையின்றி பயிர்கள் கருகி பாழாகினதுணர்ந்து பரிதவித்த தன்மை போன்று, உங்கள் அரிய துரிய பூமியிலொரு பாகமாகிய பரம ரகசியப் பண்ணையில், யாம்விதைத்த ஜோதி விதையை நீதிவிருட்சமாக நீங்கள் வளர்த்துப் பிரகாசிக்கச் செய்யாமல் அலட்சிய புத்தியாக வீண் காலங் கடத்தி விடாதீர்கள்.

செல்வர்களே! கரதீட்சையை மட்டிலும் பெற்ற ஒரு சில மழலை மதியுள்ள மக்கள், நம்மிடமுள்ள தசதீட்சைகளையும் பெற்றுக்கொள்ளாமல் நீங்கி விடுவார்களானால், அவை அவர்கள் துரதிர்ஷ்டவசமெனல் மிகை யாகாது. ஆதலால் நம்மையணுகி அண்மையில் இன்னும் பல உண்மை களை உணர்ந்து கொள்வீர்களாக.

அருளொளிமடம்
அழகன்குளம்
14—2—51

மெய்யுபதேச ஊழியன்,
சித்ரமுத்து.

வெற்றி!

**"கருணை நிறைந்த உள்ளம் கடவுள் வசிக்கும் இல்லம்."**

**இறையருள் இலங்கும் இலங்கை மக்கட்கு நன்மதி மொழிகள்.**

மக்களே!

1. இம்மண்ணுலகில் பிறந்த மக்களாகிய உங்களுடைய சுபவாழ்க் கையில் அணுகக் கூடிய மன வியாகூலமாகிய மாபெரும் இருளை ஆத்ம தியானமாகிய தெய்வானுகூல ஒளியால் அகற்றி விரைவிலமைதி காணுங்கள்.

2. எரிமலை கக்கிய அக்கினிக் குழம்பினுமிக்க தவச் சுவாலையை இகழ்ச்சியாகக் கருதி மாயையுலக மயக்கம் தலைக்கேறிய மக்களால், உலக நலனுக்கு உதவி செய்கின்ற பேரறிஞர்கள்கூட கிருபை கிடையாத வர்களாகி விடுகின்றார்கள்.

3. துன்ப உலகைத் திருத்தி இன்ப உலகாக்கலாமெனத் தவங் கிடந்த புனித மனிதர்களுடைய அனுபவங்களை மதி மொழிகளாகத் திரட்டி நமக்களித்துள்ளார்கள். அவற்றைக் கற்கவும் பேசவும் தெரிவ தோடு, உணர்ந்தொழுகவும், உங்கட்கு உயர்வைத் தரும்.

4. காட்டையழித்து நாட்டை உண்டாக்குங் கால், புலி கரடி களோடும் போராடி வெற்றி கண்ட பாட்டாளி மக்களின் வீரச்செயல் பாராட்டத்தக்க தெனினும், ஒழுக்க நெறி நிற்கக் கற்காத குற்றத்தால் புகழற்றது.

5. கருணை மனதில்லாத மனிதர்கள் கூடி கடவுட் பெயரால் கோபுரமெழுப்பிப் பஜனை செய்வது பால்பழமுண்ணக் கனவு கண்டு பட் டினிகிடந்த கதையை ஒக்கும், ஆதலால் அனைத்துயிரிலும் இரக்கங் காட்டி அன்போடு இறைவனை நாடுங்கள்.

6. தேச பக்தர்களாகிய நீங்களனைவரும் தெய்வ பக்தியைக் கடைப்பிடித்து ஆத்மீகப் புரட்சி செய்வீர்களானல், நமது நாட்டு மக்கள் ஆரோக்கிய உடலையடைந்து நூருண்டு வாழும் சேமத்தைப் பெற்றுய்ய முடியும். இதில் ஐயமில்லை.

7. ''காப்பது விரத''மென்ற சித்தாந்தத்தை மட்டிலும் பேசிச் செயலில் ஒழுகாத மக்கள் சிலரை வேதாந்த வெளிச்சத்திற் கழைப்ப தென்ருல் மிகச் சுலபமல்ல. நாளடைவில் உங்கள் நல்லுபதேச மொழி களால் திருத்திவிடலாம். அதற்குங்கள் முயற்சி தான் வேண்டும்.

8. சுத்தமான இரத்த ஓட்டத்தை நகக் கண்களையழுத்திக் காண்பதுபோல, அகக் கண் திறக்குமிடத்தை அழுத்தத் தெரியாமல் மக்கள் அலைகின்றனர். ஆனல், இல்லற தரும நெறி தவருது நிலை நிற்கும் மக்கட்கு ஆசானெருவன் வந்து வழி காட்டுவான்.

9. நுணங்கிய அறிவும் இளகிய மனதும், ஏகாக்கிர சித்தமும் உள்ளத் திடமுடைய உத்தமர்கள் பேரின்ப நம்பிக்கையைச் சிறிதும் இழக்க மாட்டார்கள். வள்ளுவர், புத்தர், ஏசு, நபிநாயகம் முதலிய சமய குரவரனைவரையும் தம்முள் சமம் காண்பார்கள்.

10. 'கற்றவர்க்கழகு ஒற்றுமை'என்பதை உணர்ந்த நீங்கள் இன வேறுபாடின்றி இனிது வாழ்ந்து நற்குணமக்களென்றுலகில் புகழ் தாங்கி ஞல், உங்களுடைய பின் சந்ததியும் சர்வ வல்லமைகளோடு கூடிய மக்களாவார்களென்று யாம் வாழ்த்துகின்ருேம்.

11. எமதரிய செல்வர்களே! அடியேன் ஆயிர மைல்களுக்கு அப்பாலிருந்து உங்கள் ஊழியனென்ற முறையில் உரிமை பாராட்டி, நமது நன்மதிமடலை வரைந்துங்கட்கு அனுப்புகின்ருேம். குறைகாணின் சமம் செய்தல் தகை.

உங்கள் நலன் காண விழையும் விசுவாச ஊழியன்,

சித்ரமுத்து.

உத்தமமே உய்யும் வழி. வெற்றி 3-11-54

எமது தவப்பாலகன் அ. நடராசா அவர்களுக்கு யாமாகிய உங்கள் நலன் கருதிய அடியேன் எழுதிய மடல்: நலம், நலமறியப் பதில் வருக.

பாலக! நமது அருளொளி நிலையத்தின் தலையாய மைந்தனும், உங்கட்கு வழிகாட்டியுமாகிய நமது தவசிரேஷ்டராம் கார்த்திகேசு அவர் கட்கு மற்றய நமது நிலையக் குழுவினர்களுக்கு ஆதரவளிக்கும் எமதறிவுச் சிகரமாம், பூபதிதாசர் முதலாக உத்தமர் வயிரவப்பிள்ளை யாவர்க்கும் குறிப்பாக இலங்கை மக்கட்கும் ஏழையடியேனுடைய ஆசியும், அன்பும் உரித்தாகட்டும்!

ஏனப்பா! நல்ல உள்ளத்தில் சர்வ வல்லமைகளும் உண்டாகாமல் தேங்கி நிற்குமா?

எமது இதய மலர்களாகிய நீங்கள் எழுதியபடி, இலங்கை வானெலியில் அடியேன் பேசவேண்டுமானுல், மனிதப் பிறவியின் புனிதத் தன்மைகள் என்னும் பொருள் பற்றி 10 நிமிடம் பேசுவதற்கு ஆவன செய்யுங்கள். அதற்குள் நமது நன்மக்கள் அடங்கி யொளிர்தல் நலன் தருமல்லவா? இன்றே எழுதி முடித்துவிட்டோம்! உங்கள் விருப்பம்போல் சில நாட்களில் உங்களுடைய பார்வைக்கு அனுப்பி வைக்கின்ருேம்!

எமது கண்ணின் மணிகளாகிய அங்குள்ள உங்களுடைய துரித மாகிய தெய்வீகப் பணியை மலாய மக்களும் கண்டு மகிழ்கின்றனர். நீங்கள் செய்யத் துணிந்த தொண்டு அண்டர் கோனுக்கு அர்ப்பணமாகட் டும் என்றுங்களே வாழ்த்துகின்ருேம்!

சித்ரமுத்தன்.

நன்மையுண்டாம் வெற்றி 22-11-54

எமது தவப்பாலகன் அ. நடராசா அவர்கட்கு யாமாகிய உங்கள் நலனறிய நாடிய அடியேன் எழுதிய மடல். மகனே, நீங்களும் உங்க ளுடைய நீதிநிலேயம் சார்ந்த குழுவினர்களும் நலமே வாழ, நமது அருள் கலந்த ஆசி உரித்தாகட்டும்.

செல்வ! நாமங்கு வந்து சேர்ந்ததும் மக்களுடைய அழைப்பிற் கிணங்கி அருளுபதேசம் செய்யலாம்! ஆதலால் தலேயங்கம் தயாரிக்க வேண்டியதில்லே.

எமதிதய மலரே!! அடியேனுடைய கடமையின் நோக்கமானது, மக்களிடையே கிருபையைப் பரவச் செய்வதொன்றேயாகும். மேடைப் பிரசங்கங்கள் பயன் தராதல்லவா? மெய்யுபதேசமே உங்கள் போன்ற எமது மக்கட்கு உய்யும் வழியை உணர்த்தத்தக்கதாகும்.

பாலக! அழைக்குமிடங்களெல்லாம் சென்று, ஆரம்பத்தில் ஒளிவழி படு வணக்கம் செலுத்தி, இரண்டாவதாக மக்களே வாழ்த்தி நல்லுரை பகர்ந்து, மூன்ருவதாக யாவரும் எழுந்து நின்று இறைவனே நாடி மௌனப் பிரார்த்தனே செய்து, நான்காவதாக மங்களப் பாக்களேப் பாடி மக்களே வாழ்த்தி யனுப்பி வைப்பது தான் நமது தெய்வீக முறை. இது தான் மக்கள் மனதைப் பண்படச் செய்யும் ஆத்மீக மார்க்கம். மற்றவை யாவும் சொற்பொழிவோடு நிற்கத்தக்கதே!!

உத்தம! நீங்கள் வகுத்த நீதிநிலையம் மனித சமுதாயத்திற்குப் பொதுவுரிமையாகவும் நீங்கள் ஆற்றத் துணிந்த தொண்டு பொதுத் தொண்டாகவும் நம தருளொளியானது ஒரு பரம் பொருளாகிய உண்மை யாகவுமிருப்பதால் பல பிரிவற்ற பக்தி நெறியை மக்களிடையே பரப்ப வேண்டும்!! இவையுங்களால் உணர முடியும்.

குழந்தாய்! சத்தியம் ஒன்றை தலையங்கமாகக் கொண்டு எத்த னையோ மக்கட்குப் பணியாற்றலாம்! ஆதலால் நமது நிலையக் குழுவினர் முதலாக எமதிதயக் குகையில் வாழவிருக்கும் மக்களிடமெல்லாம் மேற் கூறிய சத்தியத்தைத் தாரகமாகக் கருதிக் கையாண்டால் நன்மையுண் டென நமது வாழ்த்தைச் சொல்லுங்கள்!

நமது நிலையத்தலைவரும், அருளொளி கண்ட மைந்தருமாகிய இல்லற ஞானிக்கு எமதுளங் கனிந்த ஆசியைச் சமர்ப்பியுங்கள்! அவர் யாராக இருக்கலாமென்ற இரகசியத்தைச் சில காலங்கடந்து நீங்கள் அறிந்துகொள்ளலாம்.

சித்ரமுத்தன்

சத்தியமேதுணை! ஜெயம் 24-11-54

எமது அருளொளித் தனையர் கார்த்திகேசு அவர்கட்கு யாமாகிய அடியேன் வரைந்த மடல். நலம், நலமறிய உங்கள் மடல் வருக.

மகனே! நாம் டிசம்பர் மாதம் 10ம் திகதி வெள்ளியன்று உங்கள் போன்ற இலங்கை நகர் மக்களைக் கண்டு அருளுபதேசம் புரிதற்கு பிரயாணமாகி வருவோம். ஆடம்பரமற்ற முறையில் அடியேனை நீங்கள் அழைத்தேகுவதுதான் மிகவும் நலமாகவிருக்கும். நமது அருளொளி நிலையக் குழுவில் அங்கம் வகிக்கும் மக்களால் இவ்விஷயமுணர முடியும்! கடமைக்கெதற்குப் புகழழகு.

செல்வ, நமது அருளொளி விளக்கை அணையாமலெரியச் செய் தற்கு, சத்தியமொன்றுதான் துணையாக நிற்க வேண்டும்! மற்றைய டம்பங்கள் யாவும் துன்பம் விளைவிக்கத் தக்கதேயாகும். மேடைப் பிரசங் கங்களுக்கவை தேவைப்படுகின்றது. மகனே! நமக்கெதற்கு!!!

உத்தம! யாமருளிய ஞான பண்டிதனென்ற நூலில், உபசரிப் பென்ற தலையங்கத்தின்கீழ் கண்ட பிரகாரம் உங்கள் ஊழியனென்ற முறையில் நம்மை வரவேற்பதுதான் மிகவும் உசிதமாகும். செயலழகு காண்பதே சிறப்பு.

மகனே, நாம் நீங்களாகிய காரணம் நீங்கள் நாமாகவேண்டிய ஊழின் வலியே.

சித்ரமுத்தன்

நன்மையுண்டாம் வெற்றி 27-11-54

வாழ்க திருவருள் வையகமெங்கும்

எமது தவப் பாலகர்கள்! ச. கார்த்திகேசு அவர்கட்கும் அ. நடராசா அவர்கட்கும் யாமாகிய அடியேன் வரைந்த மடல்!

மக்களே! நீங்கள் வாழ்க வாழ்க!

மக்களே! நாமங்கு வருகின்ற முக்கிய நோக்கமானது அருளுபதேசஞ் செய்து, சத்தியவித்தையும் இலங்கை மக்களின் பக்குவத்திற்கேற்ப விதைத்துப் பயிராக்கக் கருதியேயாகும். மற்றையவர்களைப் போன்றன்று.

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுவர் சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர். (குறள்)

மக்களே! மேற்கண்ட பாவுக்கிணங்க, மக்களின் பக்குவ நிலையை நன்கு உணர்ந்து ஆவன செய்யத் தயங்கமாட்டோம்! பல இடங்களுக்கும் தலையங்கங்கள் கொடுத்துப் பேசுவோமானால், அது வீண் பிரசங்கமாகவே காணப்படும். பயன்தராது. ஆதலால் ஆங்காங்கும் அடியேன் அருளுபதேசம் செய்ய வருவதாக மக்கட்கு அறிவியுங்கள். இதுதான் நமது கடமைக்கு உயர்வையளிக்கும். இதன் உட்பொருளையும் உங்களால் உணர முடியும்.

நமது நிலையக்குழுவினர் யாவர்க்கும் நமது அருள்கலந்த ஆசியைச் சமர்ப்பியுங்கள்! அமைதியாக ஆவன செய்வோம். அவசரம் வேண்டாம் வெற்றி காண்போமாக!

சித்ரமுத்தன்

## நூற் சிறப்பு

1. சித்தர்களும் முத்தர்களும் வித்தகர்களும் ஞான
உத்தமர்கள் போற்று மிந்நூல்

2. பிறப்பும் இறப்புமற்று பேரின்பசாகரத்தில்
சிறப்புறச் செய்யு மிந்நூல்

3. பொருளாசை யற்றுலகில் உயர்பெருமை நல்கிட
அருளாசை யூட்டு மிந்நூல்

4. யோகாசனஞ் செய்துன்னுடலை வலுவாக்கென
வேகமாய்ப் புகட்டு மிந்நூல்

5. முற்றுந்துறந்த முனிஞானிகள் நற்சாதனையை
கற்கத் தெளிவாக்கு மிந்நூல்

6. நுண்ணறிவதை ஞானக்கண் ணெனவிளம்பும் நம
தன்னையருள் பெற்ற யிந்நூல்

7. கல்விமிக்க் கற்றுலகில் கருணையுடன் வாழுமென
நல்வழி காட்டு மிந்நூல்

8. ஒற்றுமைகளோங்கி மனவேற்றுமை களற்றுவிழ
நற்புத்தி கூறு மிந்நூல்

9. மோனவிழிபெற்ற எமதானந்தத் தந்தையாம்
ஞானபிதா தந்த திந்நூல்

10. திருவருளடங்கிய நற்பொக்கிஷமெனப்புகழும்
அருளொளி யாமிந்நூலே.

சி. மு. ஜெகந்நாதன்,
[அருளொளி மடம், அழகன்குளம்.]

## வணங்குகின்றோம்!

### பல்லவி

போற்றி வணங்குகின் றோம்—மனமகிழ்ந்து
போற்றி வணங்குகின் றோம்! (போற்றி)

### அனுபல்லவி

வேற்றுமைகள் ஒழிந்து நாற்றிசையும் தழைக்க
விரும்பிப் பணிபுரியும் அருந்தவ மணியுனைப் (போற்றி)

சரணம்

சுந்தரப் புன்னகைத் தேன் சிந்தும் அருள்மதியே
சுத்த சுதந்த்ரஞான சித்திரமுத்தனே வா!
செந்தமிழ் அன்னைபெற்ற விந்தை மணிப்புதல்வா
தென்னிலங் கைத்தவத்தால் நண்ணிய நின்வரவைப் (போற்றி)

—பரமஹம்ஸதாஸன்.

## சுவாமிகளின் கொழும்பு விஜயத்தின் போது அளித்த வரவேற்புப் பாமாலை.

1. வருக, வருக, இனியதமிழ்
 மணியே, வருக! மாசகன் ரேய்,
 வருக, வருக! பேரன்பர்
 மனத்தோய் வருக, மாதவ நீ,
 வருக, வருக! அருளொளி நன்
 மன்றத் தலைவ, வருக! இங்கு
 வருக, வருக! எமதுதவ
 மாண்பே வருக, வருகவே!

2. அழகன் குளத்தில் மலர்ந்த புது
 அரவிந் தம்மே, வருக! உயர்
 எழிலார் மலயா தனில் கானம்
 இசைக்கும் ஞானக் குயில் வருக!
 வளரும் ஈழத் தமிழகத்தை
 மலர்த்த விழைந்த மதி வருக!
 குளிரும் கருணை பொழியும்விழிக்
 கொண்டால், வருக, வருகவே!

3. கருப்பாய் அம்மா தனுஷ் கோடி
 கருவில் புகுந்து தோன்றிய தும்
 நெருப்புக் கிரையாய்ப் பிறந்தகுடில்
 நீத்தாய்! எண்மா மதிக்குழ விப்
 பருவத் தே, தாய் தனையிழந்து
 பாட்டி அமுதப் பாலுண் டும்,
 வறுமைக் கனலில் வெந்து தினம்
 வளர்ந்து சிறந்த மாமணி யே!

4. பள்ளிப் படிப்பை முறையாகப்
 பயிலக் கிடையாப் பாவல னே!
 துள்ளும் காளைப் பருவமெலாம்
 துடித்துக் காம சுகம்துய்த் தோய்!

அள்ளும் எழிலார் சிவகாமி
அம்மை தன்னை மணந் தொருநற்
பிள்ளை தனையும் மற்றவர்போல்
பெற்று மனைவாழ் வுற்றனை நீ.

5. இருசப் பரெனும் நல்லார் பால்
இனிய நன்னூல் சில கற்று
அருள்நோக் குடனே, குருதீட்சை
ஆத்ம ஞான போதமெ லாம்
பெரியார் நற்செக நாதர் பால்
பெற்றாய்! எனினும் கட்டுடலைக்
கரும நோய்பற்றிட விழியிற்
காட்சி மங்கி மறைந்தது வே!

6. விரும்பு மனைவி, சுற்றமெலாம்
வெறுக்கப் பசிநோய் மிகவாட்ட,
துரும்பாய் இளைத்துப் பிச்சையெடுத்
துண்டும், துயரம் பொறுக் காமல்,
அரும் பொன் னுயிர் மாய்த் திடக்கருதி
ஆழ்ந்தாய் துயிலில்! ஒரு பெரியார்
கரும்பாய் வந்தார்; பின்பொருநாள்
கண்ணின் திரையும் விலகி யதே!

7. எல்லாம் ஈசன், திருவருளென்
றெண்ணி வியந்து, காவி யுடன்
விள்ளற் கரிய மனத் துறவும்
மேவப் பெற்றாய்! மென் மேலும்
தொல்லை கடந்த தவநெறியில்
தோய்ந்து, மாந்தர் சுகங் காண
வல்ல தெய்வப் பொன்மலர்கள்
மலர்த்தித் தொண்டு பல புரிந்தாய்!

8. கனவில் புனைந்த கற்பனையில்
காணும் சோகக் கதையை விட
நனவில் சொந்த வாழ்க்கையிலே
நவிலற் கரிய துயரை யெலாம்
அனுப வித்தும் தளராமல்,
அரிய ஆத்ம சோத னையில்
இணையில் சித்தி பெற்றெமக்கோர்
இனிய பாடம் கற்பித் தாய்!

9. குருமதி மாலை, பேரின்பக்
   குறளும் புலம்பல் திரவி யமும்
   மரண சிந்தனை மர்மம் நன்
   மௌன னந்த மணிமொழி கள்
   கருணைக் கண்ணீர் கிருபைப்ர
   காசப் பொக்கிஷம் எனப் போற்றும்
   அரிய நூல்கள் பலவற்றை
   ஆக்கிப் படைத்தாய், நீ வாழ்க!

10. துன்ப நெருப்பில் புடமிட்டுச்
   சுத்தத் தங்க மாக்கு வதே
   அன்புப் பரமன் அருட்செய லென்(று)
   றகிலம் உணரப், பெருவாழ்வால்,
   பண்பார் மொழியால், திருப்பணி யால்
   பட்டப் பகல் போல் காட்டி வரும்
   இன்பக் குருவே! சித்திரமுத்(து)
   தென்னும் பெருமான் நீ வாழ்க!

—பரமஹம்ஸதாஸன்.

## சாற்றுக்கவி

அழகங் குளத்தூ ரருண் மடத்து நம்பி
இலகு தமிழா லியற்றி—உலகில்
இருண்மார்க்கம் நீக்கிநல் லிறைமார்க்கங் கூட்டுங்
குருமதி மாலையாங் கூறு.

பண்டிட். நா. குருசாமி பிள்ளை,
கருங்குளம், 23—2—49.

## வாழ்த்துரை

சித்திரமுத்(து) அடிகளெனும் சீரியநல் லொழுக்கமுள
   சிறந்த ஞானி
முத்திநெறி யுணர்ந்ததனை முறையாக வுலகினரும்
   முயலும் வண்ணம்
புத்தகமொன் றியற்றியதோர் புண்ணியமாம் படிப்போர்க்கு
   புனித வாழ்வு
சித்திக்கும் பவமொழியும் திருவருளா லெஞ்ஞான்றும்
   சிறப்புண்டாமே!

இ. பச்சையப்பா இளையபெருமாள்,
மதுரை, 1—3—1949.

## சிறப்புரை

உண்மைக் குருவி லுரைதிறங் கொண்டுயர்
தன்மைக் குருமதி தன்மாலை—பண்மையார்
சித்திர முத்தார் சிறந்துலகுக் கீந்தனரால்
முத்திக்கு வித்தென்று முந்து.
அகமொன்றி ஆண்டவனி லானந்த மோனம்
மிகவொன்றி மெய்காக்கும் மாண்பைத்—தொகையார்
புகைப்படம் மூலம் புவிக்களித்தார் புண்யன்
மிகைப்படு ஞானம் மிகுத்து.

## கட்டளைக் கலித்துறை

மண்ணைத் துறந்து மயல்நீக்கு மாண்பூட்டு மெய்த்துறவாமல்
விண்ணை யணுகி யிடர்நீக்கி வாழும் வகைமிகுத்தும்
திண்ணைத்திரிந்த சிறுமைத் துறவதைத்திண்கடிந்தும்
கண்ணைத் துறந்து கருத்தூட்டிக் காட்டுபனுவலாமே!

எம். அருள்தாமஸ்,
திருப்பரங்குன்றம், 23—3—1949.

## குரு வணக்கம்

(1)

கங்கையெனுங் கடல்சூழ்பூ வுலகந்தன்னிற்
கருவில்வரு மக்களெலாங் கடவுள் தன்னைத்
துங்கமுடன் காணவழி யறியாராகித்
துன்பமெனும் இருளதனிற் சுழலல் கண்டே
தங்களிடத் துறுகடவுட் டன்மைகாட்டத்
தவசிகள்போல் அருளொளியிற் றழைத்து மேவுந்
திங்களணி யரனுருவா யமைந்த எங்கள்
சித்திரமுத்து அடிகள்சரண் சிரமேற்கொள்வாம்

(2)

ஓங்காரப் பிரணவப் பொருளாணை மேற்கொண்டு
உலகத்து லாவுகின்ற
ஓரேழுபிறவிகளில் உயர்பிறவி மனுவென்பர்
உண்மைநெறி யாளரந்தப்

பாங்கான பிறவிபெற் றுங்கன்ம சேடமது
பற்றித் தொடர்ந்த செயலாற்
பாதகக் கொலைகளவு சூது கட்காமங்கள்
பலவாறு செய்தலென்னுந்
தீங்கான வழிபுகுந் தேநரகிலுழல்கின்ற
ஜென்மமா யாக்குமிந்தத்
திறலுளோர் தம்மையாட் கொண்டுபர நீழலிற்
சேர்தற் பொருட்டிவ் வுலகிற்
றேங்கமழு கொன்றையணி வேணியர னேமனுத்
தேவனென வந்துதித்த
சித்திரப் பெயர்புனையு முத்தனும் அண்ணலிரு
செய்யதாள் சென்னி சேர்ப்பாம்

## வரவேற்புரை

நாவேதுதித்துக் களித்திலங்கும்
நல்லோர் மனத்துள் நடம்புரிந்து
நாளுங் கருணைப் பேரின்பம்
நல்கும் துணைத்தாள் நாயகனே!
கோவே! புனிதகுணக் குன்றே!
கொன்றை மலர்சேர் குழலானே!
குமரப் பெருமான் றனக்கன்று
கூர்வேலளித்த குருபரனே!
வாவே யெனயாம் வரவழைத்தோம்
வழக்கே யுரைக்க வழியுண்டோ?
மன்னுவருக! மதியணியும்
மணியே வருக! வரமளிக்குந்
தேவேவருக! எங்கள்மனம்
செழிக்கவருக! வருகவே
சித்தவடிவாம் சித்திரமுத்
தேயெங் குருவே வருகவே.

## பயன்

வாவா வெனக்கூவு மென்முன்னர் வந்தஉன்
மலரடிகள் தன்னை யன்பாய்
மறவாது சிரமீது வைத்தவென் பாவங்கள்
மாற்றியருள் வடிவு காட்டிச்

சாவாதிருக்கவுந், தன்னையறி தன்மையும்,
தவயோக சித்தி யுணர்வும்,
சற்குருவின் ஆணைவழி நிற்குநிலை யுந்தந்து
தமியனும் என்னை யாள்வாய்
பாவான மலர்கொண்டு பத்திப்பெருக்காற்
பணிந்தேத்தும் அன்ப ரகமாம்
பங்கயந் தனில்மருவி யெங்கணும் நிறைகின்ற
பகவனே பரம யோகி
தேவாதி தேவனே சிவபரம் பொருளான
செல்வமே சித்ரமுத்தே
திருமருவும் அருளொளியில் வருஞான
குருவான—தெய்வமே ஜோதி வடிவே

## வெண்பா

செப்புமுய ரிப்புவியிற் சித்திரமுத்தென்னவரு
நற்புகழ்சேர் சற்குருவை நாடினுல்—பொற்புயரும்
பத்திவரும் புத்திவரும் பாமரர்க்கும் ஞானநெறி
முத்திவரும் இத்தரையின் முன்.

கொழும்பு. அருளொளி நிலையத்தார்.
9—12—54.

## குரு வணக்கம்.

உலகமதில் உத்தமனுயுதித்த வேந்தன்
உயிர்களிடத் துள்ளன்பு கொண்ட வேந்தன்
சிறுவர் பெரியோர்கள் முதலறிஞர்க் கெல்லாம்
திக்கு புகழ் ஒளிவிடுத்த சித்ரமுத்தே!
மாந்தருளே மாணிக்கமான வேந்தன்
மண்ணுலகில் அஹிம்சை உருவான வேந்தன்
சாந்தமுட னெங்கள் தாய்நாட்டில் வந்தோன்
சத்தியமே உருவான சித்ரமுத்தன்.
உலகமதி லிருள்நீங்கி ஒளிகள்வீச
உனைநம்பி மாணவர்கள் ஒருங்கேசேர
உலகமெலாம் நலம்பெறுக கலகமேக
உபதேச கர்த்தனுயுதித்த தேவா

வாழிய நம் சித்ரமுத்து நாமமென்றும்
வாழிய இவ்வையகத்தில் வாழி வாழி
ஆழிபுடை சூழுலகில் அன்புமேவி
அருளொளி மா மலர்நூலும் வாழியாமே.

## அருளொளியாம் "ஜோதிக்கு வாழ்த்து"
### (தாயின் மணிக்கொடி பாரீர் என்ற இசை)

சுதந்திரத் தமிழ் மணி வீரா—ஜோதியை
ஏந்தி எல்லோரும் வணங்குவோம் வாரீர் (சுதந்திர)

ஆழ நமக்குள்ள நாடு—சுய
ஆட்சி செலுத்தலாம் வந்தொன்றுகூடு
வாழ நமக்கிது நாடு—ஜோதியை
வாழ்த்திப் பணிந்து புகழ்ந்து கொண்டாடு (சுதந்திர)

சென்றதையாவையும் விட்டு—ஜோதியில்
சேர்ந்து விட்டோமென செங்கரம் நீட்டு
ஒன்று பட்டோமென்று காட்டு—ஜோதி
உள்ளே பறக்க உயர் கம்பம் நாட்டு (சுதந்திர)

கம்பத்தின் உச்சியின் மீது—பலர்
கண்டு மகிழ்ந்து வணங்கமிப்போதே
நம்மருஞ் ஜோதியை ஏற்று—அதை
நாவால் துதித்து நறுமலர் சாற்று (சுதந்திர)

இந்து முஸ்லீம் சீன சிங்கள பேதம்—அதை
சிந்தையில் எண்ணாதே அந்த விவாதம்
மங்கள கீதங்கள் பாடி—ஜோதி
மங்கையை போற்றிப் புகழ்ந்து கொண்டாடு (சுதந்திர)

பாழும் பகை வன்மம் சூது—எந்த
நாளும் இருப்பது நாட்டிற் கொவ்வாது
வாழும் குடிமக்கள் மீது—அன்பின்
ஆர்வமிருந்தால் அதற்கிணையேது. (சுதந்திர)

கு. சா. குருசாமி,
கொடிக்குளம், இராமநாதபுரம் ஜில்லா.

பின்வரும் பாடல்கள்யாவும் சுவாமிகளிடம் தீட்சைபெற்ற
மாணுக்கர்கள், நயனத்திடை கண்ட நாட்டம்
பற்றி ஆனந்தமுடன் அருளியவைகளாகும்.

## தீட்சையின் காட்சி.

ஜோதிகண்டேன் காண்ஞானச்
ஜோதி கண்டேன்காண்.

1. அச்சமகற்றி அரனருள் சேர்ந்திட
இச்சகந் தன்னிலே இன்னல் களைந்திட
பச்சமுடன் நாளும் பரமனைப் போற்றிட (ஜோதி)

2. ஞானவழி பற்றி நமனை வென்றிட
ஈனப் பிறப்பினை இன்றே ஒழித்திட
தேனமிர்தந்தன்னை தின்று களித்திட (ஜோதி)

3. சத்திய வித்தைத் தரணிக் களித்திட
உத்தமர்கட் கென்று முண்மை புகன்றிட
நித்திய மானந்த நிட்டை புரிந்திட (ஜோதி)

4. அன்பைப் பொழிந்து அருளைப்பெருக்கிட
தன்மயமான தலத்திலிருந்திட
விண்ணுலகில் தேவர் காட்சிகள் கண்டிட (ஜோதி)

அருளொளிமடம் இங்ஙனம்,
அழகன்குளம் சி. மு. ஜெகந்நாதன்.

## குரு ஸ்துதிகள்.

ஆதியா யருவமாகி அருள் தருமடிகளாகி
ஜோதியாய் சுடராய்ஞானச் சொருபனும் சித்ரமுத்தன்
மேதினிதனிலே தோன்றி மெய்மய ஒளிகள்காட்டி
தீதிலாதியங்கு மெங்கள் தேவனின் பாதம்போற்றி.

மு. வைத்திலிங்கக்கவுண்டர்,
கம்பளிக்காரங்குப்பம்.

( விருத்தம் )

ஆனியாம் திங்களில் மங்கையர்க்கரசி யெம்
அண்ணலும தருளை நாடி
வேனியாம் திங்களினுதயமெனவென் மனம்
விரும்பியநற் சமயமதனில்
ஞானியாம் நினதுகரமெனது சிரமதிலிட்டு
நற்ஜோதி வடிவெழுப்பி
மேனியாமெனதுளமும் மெய்மறந்திடச் செய்த
மேன்மை மிகு சித்ரமுத்தே!

மங்கையர்க்கரசி, மதுரை.

அல்லலை யறவொழித்து அரனருளின்பந் தந்து
பல்லறு சமயத்தூடு பசுபதிபாசம் போக்கி
எண்ணிய கருமம்யாவு மெழில் பெறமுடியவேண்டி
அண்ணலா யெழுந்த யெங்களருந்தவத் தேவா போற்றி.

வே. ராஜம்மாள், மதுரை.

ஞானமணியே நல்ல ரெத்ன மணியே யெங்கள்
நலன்கருதி வந்த மணியே
வானமணியே வைரவச்ரமணியே யெங்கள்
வறுமை பிணிபோக்கும் மணியே
கானமணியே கருணைபொழியு மணியே யெங்கள்
கருத்திலுறைகின்ற மணியே
மோனமணியே சித்ரமுத்துமணியே யெங்கள்
முகமுன் நடமாடுகின்ற மணியே!

கோ. பார்த்தசாரதி நாயுடு,
கம்பளிக்காரங்குப்பம்.

உய்வதற்குரிய வழியதை யெமக்கு
உரைத்த சற்குருவேதேவா
தெய்வநன் மணியே தில்லை நடமிடுமரசே
திரிபுடையொளிருந்தேவா
கையதைக் கொண்டென் காரிருள் போக்கி
கருத்தினிலமர்ந்த தேவா
ஐயமதகற்றிய அருந்தவ முனியே யெங்கள்
அப்பனே சித்ரமுத்தே!

ஆ. வீரப்பமுதலியார், மதுரை.

(வெண்பா)

சித்திர முத்தென்னும் சிறப்புடைய மெய்ஞ்ஞானி
முத்தி வழிகாட்டும் மோனகுரு—நித்தியமாய்
உலகமதில் நிறைந்து உண்மையதைப் புகட்டி
கலக நிலையகற்றல் காண்.

கடல்மடை திறந்ததுபோற் காட்சி தந்தாய்
கடவுளடி சேரயெனை யழைக்க வந்தாய்
நிரந்தரமா யெவரிடமு மிருக்க வைத்தாய்
நிறமாறி யவதரித்த குருவே போற்றி.

ஆதியாய் அருளுருவாய் யவதரித்தாய்
அதிகாலை நேரமதில் தியானந் தந்தாய்
ஜோதிவடிவா யுலகி லிருக்காயப்பா
துதிசெய்தோ மெங்களைக் காப்பாற்று தேவா!

கலியுலக உழல்நிலைகளுணர்ந்த தேவா
பலிபவத்துற்செய லதனையழிக்குந் தேவா
சித்தர்களில் முத்தராய் வந்த தேவா
சித்ரமுத் தடிகளெனுங்குருவே போற்றி!

க. கிருஷ்ணன்,
ராமநாதபுரம் ஜில்லா.

நித்திய ஜோதியாக நிறைந்தகில முழுதுமே
நின்மயமாய் நின்ற குருவே
சத்தியாய் வந்துமிச் சகத்தினைக் காத்திடும்
சர்வமயமான குருவே
உத்தமர்க்கு உண்மைதனை உணர்த்திடுமேலான
உம்பர் பிரானான குருவே
இத்தரணிதனிலே நான் நினதடியைப் பற்றினேன்
இன்பநிலை யருள்வாய் குருவே.
அருள் ஞானப் பெருமைபெற அவனிதனிலவதரித்து
ஆனந்தந் தந்த குருவே
மருள்நீங்கி மகிதலமக்கள் கடைத்தேறவே
மார்க்கம தளித்த குருவே
உருவமதி லுண்மைதனை உணர்த்தியே திருவளர
உயர்கதி யளித்த குருவே
கிருபைஒளி காட்டியயெம் ஞானபிதாதிருவடியை
கீர்த்தியுடன் போற்றுவோமே.

சி. மு. ஜெகந்நாதன், அழகன்குளம்.

பார்க்குமிடமெங்கினும் ஒளிரோங்குகின்றசுக
பரிபூரணானந்தமே
துதிப்பார்க்கு இடர்நீக்கி இன்பமதையருள்கின்ற
தூயதற்பரவடிவமே
துஷ்டநிக்ரகசிஷ்ட பரிபாலனம் புரியும்
சுத்தசித்தாந்தபதியே
சின்மயானந்த வெளியாகி எமதுளமுறையும்
சித்திரமுத்தானகுருவே!!

ந. கருப்பையா, மலேசியா.

அருமறையின் முடிவிலுறும் பொருளைநன்கு
அறிந்து அனுபவித்த சுகபேரின்பத்தை
தருணமதில் மக்களெலாம் எய்திவாழ்வைத்
தருமநெறிதனில் செலுத்த வழிவகுத்து
கருணையொடு கிருபைப் பிரகாச மென்னுங்
கருதரிய பொக்கிஷமாகிய இந்நூலை
திருவுரை செய்தளித்த அருட்குருவே ஸ்ரீசத்
சித்திரமுத்தே எனையாள் தேவ தேவே.

வெற்றிவேலு, திருச்சி.

உலகமெலாம் நின்றொளிரும் ஒன்றே ஜோதி
பல்திறமாய் காக்ஷிதரும் ஒன்றே ஜோதி
நாதாக்கள் போற்றிவந்த ஒன்றே ஜோதி
ஆதாரமாகுமெல்லாம் ஒன்றே ஜோதி
உருவடிவில் தோன்றிநிற்கும் ஒன்றே ஜோதி
ஒருநிலை நிற்போரறிவ தொன்றே ஜோதி
அருளொளிமா சபைதனில் நின்றொளிரும் ஜோதி
அருள்வடிவிற்கடிகள் சித்ரமுத்தே ஜோதி!

ஆ. ஆறுமுகம், திருச்சி.

அகமதிலிருளைநீக்கி அருமறை முடிவுகாட்டி
ஜகமதிற்சகலபேத சங்கல்பவிகல்பம் போக்கி
சுகமது பெருகஞானச் சுடரொளி விளக்கமாக்கி
இகபரமதிலானந்த வரம்பிலாவின் பந்தேக்கி
புகழுடம் பெய்துமாறு போதனைபுரிந்த தேவா
பகலிரவறியாப்பேதை பங்கமுற்றழியா வண்ணம்
மிகமிக வரங்கள் வேண்டி யடிதொழும் அங்கம்மாளின்
முகமுன்னின்றரிய காட்சியருள்புரி சித்ரமுத்தே.

சு. அங்கம்மாள், திருச்சி.

என்சொல்வேன் குருநாதர் பெருமைதன்னை
ஈசனே தானாகி வந்தார் கண்டேன்
மன்னுயிரைத் தன்னுயிராய் மதித்துமிந்த
மானிலத்திலாசையற்று மதிதன்னாலே
துன்னுகின்ற விதிவென்று தூலத்தோடு
தொல்லுலகிலென்னாளுஞ் சுகித்துவாழ்வர்
கன்மவினை யுடையவர்கள் காணமாட்டார்
கருணைவடிவான குருசித்ரமுத்தை!

வெ. ரெங்கசாமி, திருச்சி

ஆதியே யரசே போற்றி
அருந்தவத் தருளே போற்றி
ஜோதியே சுடரே போற்றி
துலங்குமெய்ப் பொருளே போற்றி
நீதியே நிமலா போற்றி
நினதருள் தந்தாய் போற்றி
தீதிலா சித்ரமுத்தே நின்
திருவடி போற்றி போற்றி

கா. ப. ம. முருகையாசுவாமி, திருச்சி.

சித்தமதில் குடிகொண்ட சித்திர முத்தென்னும்
எனதப்பனே என்றுமுனைநான்
சீரிய நின்திருவடிகள் தொழுதழுதுதியானமதில்
திருவரு ளோடுறவாடியே
பவமகல நினதரிய தரிசனங்கள் கண்டடியேன்
கருணைவடிவாக அருள்வாய்
பார்தனிலே மெய்ஞ்ஞான மொழிகின்ற தெய்வமே
பரமபத நிபுணமணியே
அன்புடநின்னருளாசி வழிபற்றி நழுவாது
அரியதவம்புரிய அருள்வாய்
அண்மையி லிவ்வினையுலகில் அறியாமை
இருளுற்று அங்கமது தொடரலாமா
எத்திசைகள் திரும்பினும் நின் அருவஒளி
காணது இதயமது வாடல்தகுமா
பக்தனிடம் குடிகொண்டு திடந்தந்து ஆள்குவாய்!
அழகு நகரெனதப்பனே!

சு. முனிசாமி மாயூரம்.

## அருந்தவப் புதல்விக் கருளிய குருவருளாசிப் பாடல்.

1. அழகநகரினிலே அன்னபூரணி—நம்
அருளொளி மடத்திலேதான் அன்னபூரணி

2. தீபதரிசனத்திலன்னபூரணி—நல்ல
திருநாமம் பெற்றுவந்தா யன்னபூரணி

3. உனக்குப் பெயரிட்டவரன்னபூரணி—சத்ய
உலகிற்குகந்தவர்தானன்னபூரணி

4. நம்குருதேவரம்மா அன்னபூரணி—நாட்டின்
நன்மார்க்க போதகர் தானன்னபூரணி

5. ஆத்மீக ஞானியவரன்னபூரணி—சிறந்த
சாத்மீக மாமுனிவரன்னபூரணி

6. சத்திய வீரரம்மா அன்னபூரணி—கொடிய
சண்டாளர்களறியாரன்னபூரணி

7. உத்தமத் தியாகியவ ரன்னபூரணி—பொல்லாத
உலுத்தருணர மாட்டா ரன்னபூரணி

8. பாமரமக்களுக்கு அன்னபூரணி—இறைவன்
பாதமலர் காட்டிடுவாரன்னபூரணி

9. கேட்டுத்தெளிய மாட்டாரன்னபூரணி—மிகக்
கேடுகெட்ட செய்கையாள ரன்னபூரணி

10. அவ்வாறு நாமிராமலன்னபூரணி—நமது
அரியகுருவருளாலன்னபூரணி

11. சைவ உணவுகளை யன்னபூரணி—அருந்தி
தெய்வநிதி பெறுவோமன்னபூரணி

12. ஆசனம் பயில்வதற்கு அன்னபூரணி—முதன்மை
ஆசைமிக வேண்டுமம்மா அன்னபூரணி

13. இருளும் விலகிடுமே அன்னபூரணி—மனதில்
இன்பநிலை யெய்திடுமே அன்னபூரணி

14. சித்திர முத்தனையு மன்னபூரணி—நமது
சிந்தையிலிருத்த வேண்டுமன்னபூரணி

15. நித்தந் துதிக்க வேண்டுமன்னபூரணி—புவியில்
நீண்டநாள் நீ வாழ வேண்டுமன்னபூரணி.

சி. வடிவேல்,
உச்சிப்புளி.

## ஏல ஏலோ என்ற இசை.

அன்னையினருள் வடிவமாகி ஒளியாகி
அகமலர வெகுவிரைவிலிருளதனை நீக்கி
உண்மைவழி நாடுங்களென் றுத்வேகமாக்கி
உலககுருவாய்வந்து உழல் நிலையைப்போக்கி
பொன்னையும் பொருளையுமே பொய்யென விட்டோட்டி
பொறுமையுடனாத்மீக சக்திநிலைநாட்டி
கண்ணையும் திறந்தருவக் கருணை நிழல்காட்டி
கடவுள் கடவுளரெனவே உபதேசமூட்டி.
முத்திநெறி யோடரியபக்தி வழிகண்டு
சத்திசிவம் நின்றுளிருகின்ற உடற்கூண்டு
சுத்திபெற ஆசனங்கள் செய்திடுங்களென்று
சித்திரமுத்தெங்கள்குரு சொன்னவழிநன்று.

மு. செல்லையா, உச்சிப்புளி.

## நாதர் முடிமீதிருக்கும் வெண்ணிலாவே யென்ற இசை.

1. அருந்தவத்தாற் கிடைத்த யெங்கள் குருவே —என்னை
ஆட்கொண்டரு ளளித்தீ ரெங்கள் குருவே
2. துக்கத்திலிருந்த என்னை யெங்கள் குருவே —பரஞ்
ஜோதிமயமாக்கி வைத்தீ ரெங்கள் குருவே
3. சித்தத்திடனளித்த யெங்கள் குருவே —என்னை
சிவமயமாக்கி வைத்தீ ரெங்கள் குருவே
4. கல்மனமெலாங் கரைத்தீ ரெங்கள் குருவே —எனக்கு
நல்வழி யுபதேசித்தீ ரெங்கள் குருவே
5. இன்பமொடு துன்பங்களை யெங்கள் குருவே —எனது
நண்பனெனக் காண்கவென்ற யெங்கள் குருவே
6. தன்னை யறிந்துணர யெங்கள் குருவே —ஒரு
தந்திரவகை யுரைத்தீ ரெங்கள் குருவே
7. கூற்றுவன் கண்டஞ்சும்படி யெங்கள் குருவே —ஸ்ரீசத்
குருமதிமாலை தந்தீ ரெங்கள் குருவே
8. மனமாசகல் வதற்கு யெங்கள் குருவே —இறுதி
மரணசிந்தனை தந்தீ ரெங்கள் குருவே
9. வெறுப்பு விருப்பறவே யெங்கள் குருவே —திரவிய
திருப்புகழ் நூலளித்தீ ரெங்கள் குருவே

10. மௌட்டிய மற்றுவிழ யெங்கள் குருவே —உயர்ந்த
மௌனமொழி நூலீந்தீ ரெங்கள் குருவே
11. சீரிய வாழ்வு பெற யெங்கள் குருவே —சிறந்த
பேரின்பக் குறளளித்தீ ரெங்கள் குருவே
12. பொறுமைக் கடலெனவா மெங்கள் குருவே —உயர்ந்த
கிருபைப் பிரகாசநந்தீ ரெங்கள் குருவே
13. சிவமயமாய்த் திகழும் எங்கள் குருவே —உலகில்
சித்திரமுத்தா யிலங்கு மெங்கள் குருவே!!

சோ. கிருஷ்ணன், மதுரை.

ஆதிபரம் பொருளாகி அமர்ந்த ஜோதி
அகில உலகாயோங்கி ஆளும் ஜோதி
ஊனக்கண்ணறியாத உயிராம் ஜோதி
ஞானக்கண் கண்டு களிகூரும் ஜோதி
சித்திரமுத்தானசிவ ஞான ஜோதி
சிறுவன் உடையாருதினம் போற்றும் ஜோதி.

மு. உடையார், அழகன்குளம்.

(கவி)

சிந்தையைத் திருத்திநாளும் திருவருள்தந்த தேவா
வந்தெனக்குனது பாதம தையுளம்பதிய வைத்தாய்
எந்தையே இனிநானுன்னை இடரறப்பிடித்தேனப்பா
விந்தையாய் வரங்கள்தந்து வினைதவிர் சித்ரமுத்தே.

ச. செந்தூரான், ராமநாதபுரம்.

சித்திர முத்தென்னுஞ் சீராள னிப்புவியில்
செப்புகின்ற சீர்திருத்த நற்பொருளைத் தீவிரமாய்
சிந்தைதனில் நாமிருத்தி சென்மமது ஈடேற
சீரியநல் லாசனங்கள் செய்துபய னெய்துகவே.
சிறியனெனை யாதரித்து சிந்தைதனில் நின்றிலங்கி
சித்தமிக உள்ளுறுதி பெற்றரிய நற்றவங்கள்
சின்மயம தாகும்வரை செய்து கடமீடேற
சித்திரமுத் தேயுனது சீர்கருணை தந்தருள்செய்.

இரா. சுப்பிரமணியம், மதுரை.

மானிலத்தி லவதரித்து மறை பொருளை மக்களுக்கு மாட்சியாக
தேனினிய மொழிபுகன்று திருவருளோடுறவாடித் தீட்சைதந்து
மேனிலையைக் கண்டு பரமெய்ஞ்ஞான மது உண்டு மௌனமாகி
கோனினருள் பெற வைத்திலிங்கமெனக் கருளீந்த குருவேபோற்றி!

மு. வைத்திலிங்கக்கவுண்டர்,
மதுரா.

(விருத்தம்)

சோமனெழும்பாடாகும் ஜோதி விம்மி
சொல்லொண்ணுமலர்தேயப் பரந்தவெள்ளை
நேமமுடன் சுழியாகும் நிலத்து நோக்கில்
நீள்விசும்புமதியமிர் தம் நிறைந்தகாலை
வாமமடைதிறந்தங்கு வடிந்தபோது
வருகுமேதத்வாதி வன்மையாவும்
காமனையும் வென்ற சித்ரமுத்தேமுத்தின்
கழலடியையென்னாளும், கருதுவோமே!!

பெருமாள், தோ-புதுப்பாளையம்.

(விருத்தம்)

வித்தை தந்து புத்திதந்து விக்கினங்கள் நீக்கு
மெங்கள் சித்ரமுத்து
பத்தர்கள் மனோரதத்துக் கனுகூலமான
எங்கள் சித்ரமுத்து
உத்தமர்கள் உள்ளமதில் விளையாடுகின்ற
எங்கள் சித்ரமுத்து!

வ. பஞ்சநாதன், கம்பளிக்காரங்குப்பம்.

(விருத்தம்)

திருநிறை யுலகம் வாழி தேவாதிதேவ வாழி
தருமமெந்நாளும் வாழி தழைத்தபைங்கூழ்கள் வாழி
குருதிருவடிகள் வாழி குணமுள்ள தொண்டர் வாழி
இருவினையகன்ற யெங்கள் சித்ரமுத்திருதாள் வாழி

வி. சம்பந்தன், கம்பளிக்காரங்குப்பம்.

(பல்லவி)

அச்சமகற்று மப்பனே மனதில் நல்ல
அமைதி யுண்டாக்கும் விற்பனே

(பாட்டு)

1. இச்சக வாழ்வினிலே
சச்சர வற்றிருக்க
உச்சிதவழிதனை
நிச்சயமாய்ப் புகன்று —(அச்)

2. சந்தைக் கூட்டமாமிந்த
விந்தையுலகினிலே
நிந்தனைபுரிவோரை
வந்தனை செய்திடென்று —(அச்)

3. சாந்தியெனும் கடலில்
தாந்திமிதோ மெனவே
நீந்தி விளையாடென்று
ஏந்தியழைத்தென்னாளும் —(அச்)

4. இம்சைபுரியுமந்த
வம்சபரம்பரையைத்
தும்சம் செய்யாதஹிம்சை
அம்சமடையச் செய்து —(அச்)

5. சித்திரமுத்தென்னுமெங்கள்
புத்திக்களஞ்சியமே
முத்திச் சாம்ராச்சியத்திலே
சத்தியாய் நின்றிலங்கி —(அச்)

வே. ராஜம்மாள், மதுரை.

(விருத்தம்)

அருந்தவத்தின் வழியறிந்த தேவா போற்றி!
அமருலகின் காக்ஷிதனைக் காண்பதற்காய்
குருமதி மாமாலைதந்த கோவே போற்றி!
குரங்கனைய மனமொடுங்க நன்னூலாய
மரணசிந்தனை மரும மளித்தாய் போற்றி!
மானிலத்தோர்க் குண்மை நெறி புகட்டும் ஞான
திருப்புகழ் நற்திரவிய மதீந்தாய் போற்றி!
தேசிகநின் கமலபதம் போற்றி போற்றி!

அருளமுதக் களஞ்சியமே அரசே போற்றி
ஆருயிருக் கொருதுணையே யறிவே போற்றி
கருமவினை யொழிக்கவந்த கருத்தே போற்றி
காருண்ய மோங்குகலைக் கடலே போற்றி
பருவமறிந் துப தேசந்தந்தாய் போற்றி
பாகனைய மணிமொழிகள் பணித்தாய் போற்றி
அருள்வடி விற்கடிய சித்ரமுத்தே போற்றி
ஆளவந்த குருதேவா போற்றி போற்றி.

வெற்றிவேலு, பாடியவை, திருச்சி.

## குரு வணக்கம்.

சித்திரமுத்தென்னு மௌனதப்பனேஇன்
றுனதுதெரிசனங்கண்டுமிக்க
சிந்தைமகிழ்கொண்டுனது திருவடிகள்
தொழுதுமே தியானமதுசெய்துநின்று
பக்தியுடனேயுனது கரமலரினலுதவு
பரிசுத்த நீறுபெற்றுப்
பாலன்தரித்த உயர்சீலத்தினலினிப்
பாருலகிலேயெனக்கு
நித்தமுனைமறவாதபத்தியொடு தீர்க்காயுள்
நிதிமனைவிமக்கள்வாழ்வு
நீங்காத திருவருட்கல்வி கலைக்ஞானமும்
நெடுநாளிருக்க அருள்வாய்
சுத்தசற்குணஞானயோகபரனேயருள்
சுரந்தன்பருக்களிக்கும்
தூயவிருசரணுடையதாயை நிகரண்ணலே
சுந்தரமிகுந்த குருவே.

சுப. அய்யாச்சாமி புலவர், (இந்தியா)

1. சீர்பூத்த சுத்தசை தன்யபரி பூரணச்
சின்மயா னந்தபரமே
சிதாகாச மாகவே எள்ளினுள் எண்ணெய்போல
திகழ்ந்துநிறை கின்றபதியே
ஏர்பூத்த துரியதுரி யாதீத நிலைநின்ற
ஏகாந்தபரப் பிரம்மமே
ஏற்றரிய துவிததுவி தாத்துவித போதமா
எழுந்தநற் ஜோதிவடிவே

வார்பூத்த சத்துசித் தானந்த முக்கோண
வட்டநடு தோன்றுபரனே
வரையறை யிலாதசுக வாரியே சிவபோக
வமுதமே ஞானமணியே
தார்பூத்து பல்வளஞ் செறிந்தோங்கு மழகநகர்
தன்னிலரு ளொளிமடம்வாழ்
தவராஜ யோகியே ஸ்ரீஸத்சித்ரமுத்து
தற்பரா னந்தகுருவே.

2. ஒப்புயர் விலாதசுக நிஷ்களா தீதமே
உற்றசற் குணசுகிர்தமே
ஓமெனுஞ் சித்தாந்த நாதாந்த போதமாய்
ஒளிர்கின்ற வேதாந்தமே
செப்பரிய கற்பகக் கனகநிதியே நித்ய
சிற்பரா கிருபாகரா
ஜெகமதனி லேசத்ய வித்தைவீ சிடவந்த
தேசுலா வியநாதனே
அப்பிலுப் பதுபோல வாக்கையு ளிருந்தனிய
அரசுபுரி தனிமுதல்வனே
ஆதரவு உனையன்றி வேறொருவ ரிலையிந்த
அடிமைதனை யாள்வதென்றோ
தப்பே திருப்பினும் பொறுத்தருள்செய் யழகநகர்
தன்னிலரு லொளிமடம்வாழ்
தவராஜ யோகியே ஸ்ரீஸத் சித்திரமுத்து
தற்பரா னந்தகுருவே.

3. சிந்தையி லினிக்கின்ற கன்னல்மக ரந்தமே
சிற்சுயம் பிரகாசமே
சித்தெலாந் தந்திடுஞ் சத்திச்சொ ரூபமே
தீனரட்சகக் செல்வமே
பந்தபா சங்களெனும் வலையினிற் சிக்கியே
பலநா ளுழன்றுஏங்கிப்
பதறித் தவித்துவிழு மேழையைக் கண்ணினுற்
பாரா திருப்பதென்னே
முந்தை வினையோ அலதுயான் செய்த கன்மமோ
மூண்டதினி யென்செய்குவேன்
முத்திக்கு வித்தா யுதித்தமௌ னனந்த
மூர்த்தியுன் தரிசனத்தைத்

தந்தாள்வ தற்குமன மில்லையோ வழகநகர்
தன்னிலரு ளொளிமடம்வாழ்
தவராஜ யோகியே ஸ்ரீஸத். சித்திரமுத்து
தற்பரா னந்தகுருவே.

4. உண்மையோர் சிறிதளவு மில்லாத வஞ்சரொடு
உறவாடி உயிர்வதைத்து
உண்டுலகைச் சதமென்று இழிதொழில் புரிந்தஎன்
உள்ளமினிக் கள்ளமின்றி
அண்ணலுன் பதமலரை மறவாத தியானமும்
அடியார்கள் சகவாசமும்
அனுதினமு முனதுதிரு நாமமதை யோதியே
அகமலரச் செய்பக்தியும்
கண்மூடித் தூங்காமல் தூங்கியைம் புலனொடு
கருத்து ஒருமித்து நித்தங்
காரணப் பொருள்கண்டு சச்சிதானந்தமயக்
காக்ஷிபெற வரமருளுவாய்
தண்டமிழ்ப் பாகொண்டு தொண்டர்தொழ வழகநகர்
தன்னிலரு ளொளிமடம்வாழ்
தவராஜ ஜோதியே ஸ்ரீஸத் சித்திரமுத்து
தற்பரா னந்தகுருவே.

5. அருளமுதச் செந்தேன் கொழிக்கின்ற கொண்டலே
அஞ்ஞான விருளகன்று
ஆத்மீக சக்திநின் ரேங்கிடச் சன்மார்க்க
அறிவுநூலீய்ந்துமக்கள்
மருள்நீங்கி சத்புருட ராய்த்திகழ மௌனமெழு
மணிமொழிக ளருளியமகா
மகத்துவ மிகுத்திலகு நின்மலா னந்தமெய்
மாமுனிவ நின்சிறந்த
கருணைப்பிர வாகக் சுகாதீத மாண்பையிக்
கலியுலகில் யாரறிகுவார்
கைகண்ட குலதெய்வ மேவெற்றி வேல்சதா
கண்டுகளி கூரவருவாய்
தருமகுண வழகேச னரசாண்ட அழகநகர்
தன்னிலரு ளொளிமடம்வாழ்
தவராஜ யோகியே ஸ்ரீஸத் சித்திரமுத்து
தற்பரா னந்தகுருவே.

வெற்றிவேலு, திருச்சிராப்பள்ளி.

ஓர்சில நிமிடந்தன்னில்
என் உள்ளமும் உயிரும் தன்பால்
வாரி இழுத்து அணைத்துக் கொண்ட
வள்ளலே போற்றி போற்றி
ஆர் உளர்? எம்மைத் தேற்றி
அருள் நெறி செலுத்த வென்றே
கூறியான் வெதும்புங் காலை
அருள் கூர்ந்த சற்குருவே போற்றி!
சொல்லொன்று செயலொன்று ஆகி தன்னை
சூழுகின்ற மாந்தர்களை ஏய்த்து வாழும்
புல்லர்கள் தாம் நிறைந்த இந்தப் புவிதனிலே
புண்ணியனே உன்னைக்காண எனது கண்கள்
எல்லையிலா தவமேதும் செய்ததுவோ!
இயம்புதலும் செய்தலும் ஒன்றதானோய்!
அள்ளி அள்ளிக் கொடுக்கின்ற வள்ளலே என்
ஆருயிரே அன்புருவே சித்ரமுத்தே!

ரா. பகவதி, மதுரை.

## திருத்தாண்டகம்.

குருபரனை ஞானமருட்கோனை மௌனங்
கொண்டவனைக் கோமானைக் கோதிலாத
நிருமலனை நித்யநிராமயனை ஞான
நிலையமதை நிறுவினனை நிமலமான
பெருமானை சித்ரமுத்துப்பிரானை வேதப்
பெருமைதனைப் பெற்றவனைப் பிரமானந்தம்
அருள்வானை அழகநகரானை என்றும்
அகமலர அஞ்சலித்தே அன்புசெய்வாம்.

ஞானநிலையத்தார்
கம்பளிக்காரங்குப்பம்.

வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணத்தைக்
கல்லாலநிழலின்கண் கருணையோடுரைத்தவாறு
பல்லோருமுய்யவேண்டி பரமமேவருள் சுரந்து
செல்வநற்சித்ரமுத்து சிவமதாய் வந்துதித்தார்.

அத்திருபரமனாரின் அருள் சத்திவயத்தால் பூத்த
இத்திருச்சபையுமின்னாள் எழிலுறத்திகழ்ந்துகாய்த்து
சத்தியநீழலன்ன தரணியோர்க்கருட்பிழம்பை
நித்தியம்நல்கும்ஞான நிலையமதாகிற்றின்றே.

உள்ளொளிகாணாதார்க்கு உயர்பரஞ்சுடரைத்தட்டிச்
சொல்லாமற்சொல்வானாகி சுடரொளிதீபம்நல்கி
எல்லோருமொருங்கமைந்து ஏற்றிடப்பணித்தஎந்தை
நல்லசற்குருவின்பாதம் நலமுடன்பணிந்துஉய்வோம்.

அருட்குருவருளால்வாய்த்த அருளொளிநிலையம்வாழ்க!
அரும்பணிசிரமேற்கொண்டு ஆக்கியோர் தாமும் வாழ்க!
திருப்பணிஇனிதுதோய செல்வமுமீய்ந்தோர் வாழ்க!
அருளொளிஞானத்தந்தை அவர்களும் வாழ்க! வாழ்க!

பு. ஸ்ரீனிவாசம் பிள்ளை,
காரணப்பட்டு.

ஆனந்தமானந்த மானந்தமே—பர
மானந்தமானந்த மானந்தமே (ஆ)

ஆனந்தமென்று மடையச்சிறந்தது
அருளொளிஞான நிலையந்திறந்தது
ஈனப்பிறப்பெலா மின்றேடிறந்தது
இம்மையில்நம்மை யீடேற்றப்பிறந்தது (ஆ)

சாதிச்சமயச் சழக்கையொழிந்திட
சமரசசன்மார்க்க வாழ்க்கைதிகழ்ந்திட
நீதியாய்யோக நெறியுள்மகிழ்ந்திட
நித்தியமுந்தவ போகம்விழைந்திட (ஆ)

உத்தமஞான முயர்வழிகற்றிட
உண்மைக்குருசித்ர முத்தன்ருள்பெற்றிட
சத்தியஜோதி தனில்கலப்புற்றிட
சாற்றும்வெற்றிவேல் மொழியைப்பின்பற்றிட (ஆ)

வெற்றிவேலு,
திருச்சி.



சுவாமிகள் சதோதய தரிசனமாகப் பெற்ற காட்சிகளில், பின்வரும் பாடலும் ஒன்று.

நரவடிவிலுள மனிதரறியாத காட்சிகளில்
யாம்கண்டதொன்று புகல்வோம்
கரவருடம் ஆனிமாதம் திகதி பத்தினில்
ககனவழி ஒளியிலிறங்கி
இரவு ரவிநாளிகை பதினேழரைக்குமேல்
எமதருகிலழகுமிளிர்க
வரமருள முருகனெடு விளையாடியானந்த
மதுதந்துறைந்த மயிலே!

சித்ரமுத்தன்.

* * *

உடலாகிய பம்பரத்தை உயிராகிய கயிற்றினல் சுற்றி வெட்டவெளியாகிய பொட்டலில் வேகமாகவீசி விளையாடுகிற வேதமுதல்வனே, உனது விவேக ஞானத்தினுல் உணர்ந்து கண்டுபிடி.

* * *

வானுலக வாசிகள் வசிக்கின்ற ஒளியுலகில் தானும் ஒருவனுகத் தங்கியிருக்கத் தகுதி உண்டானுல், சிந்தனைச் செல்வமாகிய இச்சிறிய சுவடி போதுமானது.

 

— சுபம் —